கொள்கைகளைக் கேட்டதையும், அக்கோட்பாடுகளெல்லாம் பொருத்தமில்லாமையால்தான் அவற்றை மனங்கொள்ளாததையும், பௌத்ததருமத்தைக் கேட்க விரும்பி அறவணவடிகளைத் தேடிக் கொண்டுவந்ததையும் சொன்னாள். இவற்றையெல்லாங் கேட்ட மாசாத்துவான், "உன்னை நான் கண்டது எனது நல்வினையாலேயே; உன் தந்தை கோவலனும் தாய் கண்ணகியும் அடைந்த வருத்தங்களும் மதுரையம்பதி அழிவுற்றதும் ஆகிய இவற்றைக் கேள்வியுற்று எல்லாவற்றையுந் துறந்து பௌத்தமதத்தைச்சார்ந்து தவஞ்செய்தலை மேற்கொண்டேன். கொண்ட யான் இங்கேவந்ததற்குக் காரணம் கேட்பாயாக:

"முற்காலத்தில் இந்நகரையாண்ட இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனென்னும் அரசன் தன் தேவிமாரோடும் இச்சோலையைச் சார்ந்து இருந்தபொழுது இலங்காதீவத்துள்ள சமனொளியென்னும்மலையை யடைந்து தரிசித்து வலங்கொண்டு ஆகாயவழியே மீள்வோராகிய சாரணர் இச்சோலையிலிறங்கி ஒரு சிலாதலத்திலிருந்தார். அங்ஙனம் இருக்கக்கண்ட அரசன் அவர்களை வணங்கி உபசரித்து அமுது செய்வித்துத் துதிக்க, அவர்கள்

> பிறப்பிற் றுன்பமும் பிறவா வின்பமும்
> அறத்தகை முதல்வ னருளிய வாய்மை
> இன்ப வாரமு திறைவன் செவிமுதல்
> துன்ப நீங்கச் சொரியு மந்நாள், (கககூ - உஉ.)

நின் தந்தைக்கு ஒன்பதுதலைமுறை முன்னோனாகிய கோவலனென்பவன் அவ்வரசனுக்குக் காதற்பாங்கனாதலால், இங்கே வந்திருந்து அச்சாரணர் அரசனுக்குக்கூறிய அறமொழிகளைக்கேட்டு, தான் ஈட்டிய பலகோடிதனங்களையும் முன்னோர்கள் தருமவழியேதேடிய பொருள்கள் பலவற்றையும் ஏழுதினத்துள் இரவலர்க்குக் கொடுத்துவிட்டுப் பின்பு தவஞ்செய்வானாயினன்; அவன் அக்காலத்திற்புத்ததேவனுக்குக் கட்டுவித்த சைத்தியத்தைத் தரிசித்தற்காகவே வந்தேன்; காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல்விழுங்கிவிடும் என்ற செய்தியை ஈண்டுள்ள முனிவர்கள் துணிந்துகூறக்கேட்டு அந்நகரஞ்செல்லாமல் இவ்விடத்திலேயே இருந்துவிட்டேன். தீவினையுடைமையாற் கொலையுண்டிறந்த உன் தந்தை, நல்வினையால் தெய்வயாக்கையைப் பெற்றுப் பின்னும் தீவினைப்பயனை அனுபவித்து, அப்பால் புத்ததேவன் அவதரித்துச் செய்யுந் தருமோபதேசத்தைக் கேட்டு

வீடடைவானென்று அறிந்தோர் கூறக்கேட்டேன்; நானும் அக்காலத்தில் அவ்வறமொழிகளைக் கேட்டேன்; உனது பிற்காலச் செய்திகளை நீ கந்திற்பாவையாலறிந்தாயென்று அறவணவடிகளாலறிந்தேன்; அம்முனிவர், உனக்குத் தருமோபதேசஞ் செய்தற்கு அமைந்தவிடம் காஞ்சிநகரமென்றெண்ணி இங்கிருந்து அங்கே சென்றார்; மாதவியும் சுதமதியும் அவருடன் அந்நகரம் போயினர். இன்னுங்கேட்பாயாக: மழையில்லாமையாற் காஞ்சிநகரத்தில் மிக்க வறுமையுண்டாயிற்று; பலவுயிர்கள் இறந்தன; அந்நகரில் ஐயமிடுவோர் இல்லாமற் போனமையால் அங்கேயிருந்த முனிவர்கள் இவ்விடம் வந்துவிட்டார்கள்; ஆதலால் அந்நகரமடைந்து எல்லாவுயிர்களையும் பாதுகாத்தல் உனக்குக் கடனாகும்" என்றுசொன்னான்.

அதனைக்கேட்ட மணிமேகலை அவனைவணங்கி அமுதசுரபியைக் கையிலேந்திக்கொண்டு வஞ்சிநகரத்தின் மேற்றிசையினின்று மேலேயெழுந்து ஆகாயவழியே வடதிசைக்கட்சென்று, மிக்க செல்வங்குன்றி வறுமையுற்று அழகுகெட்டுப் போயிருக்கும் காஞ்சிநகரத்தைக்கண்டு மனமிரங்கி வலம்வந்து அந்நகரின் நடுவேயிறங்கித் தொடுகழற்கிள்ளியின் துணைவனாகிய இளங்கிள்ளியால் அங்கே கட்டுவிக்கப்பட்டுள்ள புத்தாலயத்தை வணங்கி அதற்குத் தென்மேற்கிற் சென்று ஒரு சோலையில் தங்கினள். அச்செய்தியைத் தெரிந்த ஒருவன் விரைந்து சென்று அரசனை வணங்கி, "அரச! கோவலன்புதல்வி, சிறந்த தவஞ் செய்தொழுகுபவள்; இச்சம்புத்தீவில் எல்லாருள்ளுஞ் சிறந்தவள்; அவள் கையிலேந்திய அமுதசுரபியென்னும் பாத்திரத்தோடு இந்நகரில் வந்து தருமதவனத்தே உறைகின்றாள்" என்றான். அது கேட்ட அரசன் கந்திற்பாவை முன்பு நமக்குக்கூறியது உண்மையே யென்று மதித்து அத்தெய்வத்தை வந்தித்து மந்திரிகளுடன் விரைந்து சென்று மணிமேகலையையடைந்து அவளை நோக்கி,

> "செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ
> கொங்கவிழ் குழலார் கற்புக்குறை பட்டோ
> நலத்தகை நல்லாய் நன்னா டெல்லாம்
> அலத்தற் காலை யாகிய தறியேன் (கஅஅ - கூக)

இனிச் செய்வது யாதென்று மயங்கிக் கொண்டிருந்தேன்; இருந்தபொழுது ஒரு பெரியதெய்வம் எனக்கு முன்னேவந்து, 'நீ

வருந்தற்க; உனது நல்வினையால் ஒரு மடந்தை இங்கே தோன்றுவாள்; அவளுடையகையிலுள்ளதெய்வப்பாத்திரத்திலிருந்துஎடுக்க எடுக்கக் குறையாமல் மேன்மேலும் வளருகிற உணவால் இவ்வுலகமெல்லாம் உய்யும்; அவளுடைய கருணையால் மேகமும் மழைமிகப் பொழியும்; அவள் இந்நகரத்திற்கு வந்தபின்பு உண்டாகும் விசேடங்கள் பலவாம்; கார்வறங் கூரினும் நீர்வறங் கூராது; அவள் வந்திருத்தற்காகக் கோமுகி யென்னும் பொய்கையும் அதனையுடைய மணிபல்லவ மென்னுந்தீவும் இங்குவந்தனவென்று சொல்லும்படி, இந்நகர வீதியில் ஒரு பொய்கையையும் அதனைச்சூழ ஒரு சோலையையும் உண்டுபண்ணுக' என்று சொல்லிவிட்டுப் போயிற்று. அத்தெய்வம் போனபின்பு அது கட்டளையிட்டபடியே செய்துவைத்த இடம் இஃது" என்று சொல்லி அவ்விடத்தைக்காட்ட, மணிபல்லவம்போன்ற அச்சோலையையடைந்து அதனையும்பொய்கையையுங் கண்டு மகிழ்ச்சியுற்ற மணிமேகலை, தனது பழம்பிறப்பை அறிவுறுத்திய புத்தபீடிகையை அச்சோலையில் இயற்றுவித்துத் தீவதிலகையையும் மணிமேகலா தெய்வத்தையும் வழிபடுதற்குரிய கோயிலையும் அங்கே உண்டாக்கி நித்திய பூசையையும் திருவிழாவையும் அரசனைக்கொண்டு செய்வித்துத் தான் வந்தித்துத் துதித்து மேற்கூறிய புத்தபீடிகையில் ஆருயிர்மருந்தெனும் அமுதசுரபியை வைத்து உண்ணுதற்கு எல்லாவுயிர்களும் வருகவென்று அழைத்தனள்; அழைக்கவே,

> மொய்த்த மூவறு பாடை மாக்களிற்
> காணார் கேளார் கான்முட மாந்தோர்
> பேணா மாக்கள் பேசார் பிணித்தோர்
> படிவ நோன்பியர் பசிகோ யுற்றோர்
> மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்
> பன்னூ றுயிரம் விலங்கின் றொகுதியும்
> மன்னுயி ரடங்கலும் வந்தொருங் கீண்டி (உஉக - எ)

உண்ணஉண்ண அவ்வுணவு மேன்மேலும் பெருகிப்பசித்துன்பத்தை அகற்றி விளங்கியது. அப்புண்ணிய விசேடத்தால் எங்கும் மழை பெய்தது; வளங்கள் மிகுந்தன. அப்படி நிகழுங்காலத்தில் அறவணவடிகள் அந்நிகழ்ச்சிகளைக் கேட்டு மாதவியோடும் சுதமதியோடும் அறச்சாலையை அடைந்தனர். பின்பு மணிமேகலைவிரைந்து

சென்று அன்புடன் வணங்கி அவரடிகளை விளக்கி ஆதனத்திலிருத்தி அறுசுவைப்போனகம் அமுது செய்வித்து, "யான் செய்த புண்ணியம் தப்பாது பலித்திடுக" என்று சொல்லி மீட்டும் வணங்கினள்.

## உக.—தவத்திறம் பூண்டுதருமங்கேட்டகாதை.

வணங்கிய மணிமேகலையை வாழ்த்திச்சொல்லும் அறவணவடிகள், "பீலிவளைபெற்ற குழந்தையைக் கம்பளச்செட்டி கடலிற் கெடுத்தது தெரிந்த அரசன் வருத்தமுற்று அக்குழந்தையைத் தேடியலைந்தமையாற் காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரவிழாச் செய்யப்படாது போயிற்று. மணிமேகலாதெய்வம் அது தெரிந்து நகரைக் கடல்கொள்ளுக என்று சபித்தது; இந்திரனும் சபித்தான். அதனால் அந்நகரம் கடலால் விழுங்கப்பட்டது. அப்பால் உன் தாயரும் யானுமாக உன்பொருட்டு இந்நகரம் அடைந்தேம்" என்று கூறினர். கூறவே மணிமேகலை அவருடைய அடியிணையை வணங்கி, "மணிபல்லவத்திற் புத்தபீடிகையைக் காத்துக்கொண்டிருக்கும் தீவதிலகையென்பவளும் இச்செய்தியைச் செப்பினள். நான் வேற்றுருக்கொண்டு சென்று வஞ்சிநகரமடைந்து ஆங்குள்ள பலசமயவாதிகள் கூறிய கொள்கைகள் யாவும் மனத்திற்குப் பொருந்தாமையால் அவற்றையும் முன்புகொண்டிருந்த வேற்று வடிவத்தையும் துறந்து இந்நகரமடைந்து நம்மைச்சரண்புக்கேன். தேவரீர் அடிச்சிக்கு உண்மைப்பொருளை உணர்த்தியருள வேண்டும்" என்று பிரார்த்திக்க, அவர் பிரத்தியக்கம் அனுமானமென்னும் இரண்டு அளவைகளின் இலக்கணங்களையும் அவற்றின் போலிவகைகளையும் உண்மையறிவுண்டாவதற்குக் கருவியாக அவளுக்குக் கூறினர்.

## ௩௦.—பவத்திறமறுகெனப் பாவைநோற்றகாதை.

தானஞ்செய்தலை மேற்கொண்டு சீலத்தில் முதன்மையாக நின்று பழம்பிறப்பின் உணர்ச்சியையடைந்த மணிமேகலை, அப்பால் புத்தம்சரணங்கச்சாமி தர்மம்சரணங்கச்சாமி ஸங்கம் சரணங்கச்சாமி என்பவற்றை மூன்றுமுறை சொல்லி மும்மணிகளையும் மூன்றுமுறைவணங்கி அறவணவடிகளைச் சரணாகதியாக அடைந்தாள். அடையவே பௌத்ததருமத்தை உபதேசிக்கத் தொடங்கிய அவர், "இதனைக்கேட்பாயாக: உயிர்களெல்லாம் அறி

வில்லாமல் இருந்த காலத்தில் தேவர்கள் பிரார்த்திக்கத் துடிதலோகத்தினின்றும் இவ்வுலகிலவதரித்து அரசமரத்தினடியிலேயிருந்து தத்துவத்தை ஆராய்ந்தறிந்து மாரனைவென்று முக்குற்றங்களையும் அறுத்து விளங்கிய புத்ததேவன் அருளிச்செய்த இன்பமயமாகிய கட்டுரையாகும் இது; பண்டைக்காலத்தில் அவதரித்த அளவற்ற புத்தர்கள் கருணையிருந்து திருவாய்மலர்ந்தருளியதும் இதுவே'' என்றுசொல்லிப் பேதைமைமுதலிய பன்னிரு நிதானங்களின் தோற்றவொடுக்கங்களையும் பிறவற்றையும் முறையே விளங்க உபதேசித்து, ''உன்மனத்திருள் நீங்குக'' என்றுகூறி ஞானதீபத்தை நன்கு காட்டினர். மணிமேகலை அவ்வுபதேச மொழிகளைக்கேட்டு ஐயந்திரிபறவுணர்ந்து பிறவித்துன்பம் ஒழிவதாகவென்று அந்நகரிலேயே நோற்றுக்கொண்டிருந்தாள்.



உ

கணபதி துணை

# மணிமேகலை.

## பதிகம்.

*[கதைபொதிபாட்டு.]

இளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து
விளங்கொளி மேனி விரிசடை யாட்டி
பொன்றிகழ் நெடுவரை யுச்சித் தோன்றித்
தென்றிசைப் பெயர்ந்தவித் தீவத் தெய்வதஞ்
௫ சாகைச் சம்பு தன்கீழ் நின்று
மாநில மடந்தைக்கு வருந்துயர் கேட்டு
வெந்திற லரக்கர்க்கு வெம்பகை நோற்ற

---

௧. ஞாயிறு - சூரியன். எள்ளும் - இகழும்; உவமவுருபுமாம்.

௧ - ௨. "பொன்னிற் பொலிந்த நிறத்தா டோன்ற" மணி. ஊ: ௧௪௫.

௩. வரை - மேரு. உச்சி - உச்சியில்.

௪. இத்தீவம் - சம்புத்தீவு.

௫. சாகை - கிளை. சம்பு - நாவன்மரம்.

௭. வெம்பகைநோற்ற - வெவ்வியபகையாக நோற்ற.

(பிரதிபேதம்.) ௧. 'எள்ளுந்தோன்றல்' ௪. 'தென்றிசைபெயர்ந்த' ௫. 'சாய்கை' ௭. 'தோற்றச்'

* இதுவும், இதுபோல் இந்நூலின் ஒவ்வொருபகுதியின் தலைப்பில் இருதலைப் பகரத்துள் உள்ள வாக்கியங்களும், கிடைத்த கையெழுத்துப் பிரதிகளுள் மிகப் பழையதும் இந்நூற் பரிசோதனைக்கு இன்றியமையாதிருந்ததுமாகிய மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் வீட்டுப்பிரதியிற் காணப்பட்டன. இதனாலும், பதிகத்தினிறுதியில், "ஆறைம் பாட்டினு ளறிய வைத்தனனென்" என்றிருத்தலாலும் இந்நூற்பகுதிகளின் பெயர் பாட்டென்று வழங்கிவந்ததென்றும் தோன்றுகின்றது. † முதலிலுள்ள எண் காதையையும் பின்னுள்ளது அதனடியையும் குறிப்பன.

சம்பு வென்பாள் சம்பா பதியினள்
செங்கதிர்ச் செல்வன் றிருக்குலம் விளக்குங்
௧0 கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட
வமர முனிவ னகத்தியன் றனாது
கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை
செங்குணக் கொழுகியச் சம்பா பதியயற்
பொங்குநீர்ப் பரப்பொடு பொருந்தித் தோன்ற
௧௫ வாங்கினி திருந்த வருந்தவ முதியோ
ளோங்குநீர்ப் பாவையை யுவந்தெதிர் கொண்டாங்
காணு விசும்பி னாகாய கங்கை
வேணவாத் தீர்த்த விளக்கே வாவெனப்
பின்னிலை முனியாப் பெருந்தவன் கேட்டீங்
௨0 கன்னை கேளிவ் வருந்தவ முதியோ
ணின்னால் வணங்குந் தன்மையள் வணங்கெனப்
பாடல்சால் சிறப்பிற் பரதத் தோங்கிய

---

அ. சம்பாபதியினள் - சம்பாபதியினிடத்தேயிருந்தாள்; சம்பாபதியென்பது காவிரிப்பூம்பட்டினத்தின் பழைய பெயர்.

௯. செங்கதிர்ச்செல்வன் திருக்குலம் - சூரியகுலம்.

௧0. கஞ்சவேட்கையின் - நீருண்டாக்கும் விருப்பத்தையுடைய; கம் - நீர்; கஞ்சம் - நீருமாம்; "கஞ்சங் கலங்குவன" (நள. சுயம். ௧௫.) காந்தமன் - காந்தனாகிய மன்; காந்தனென்பது ஒரு சோழன்பெயர்; "கன்னி யேவலிற் காந்த மன்னவன்" மணி. ௨௨ : ௨௭.

௧௧. மூ. "அமர முனிவ னகத்தியன் றனாது" மணி. ௨௨ : ௩௫.

௧௨. கரகம் - குண்டிகை; "நீரற வறியாக் கரகத்து" (புறநா. ௧.) காவிரிப்பாவை - காவிரியாகிய மங்கை; "நீர்ப்பாவை" மணி. பதிகம், ௧௬.

௧௩. செங்குணக்கு - செவ்விய கிழக்கு; செம்மை - நேர்மை.

௧௭. ஆனு - நேயம்; "ஆனுப் பைங்கிளி யாண்டுப் பறந்ததே" (சீவக. ௧00௨.) ஆகாயகங்கை : பெயர்.

௧அ. வேணவா - வேட்கையாலாகிய அவா; தொல். உயிர். சூ. அ௬, பார்க்க.

௧௯. பின்னிலை முனியா - பின்நிற்றலை வெறாத. பெருந்தவன் - அகத்தியன்.

௨0. அன்னை : விளி; அன்னையென்றது, காவிரியை.

௨௨. மூ. மணி. ௧அ : 57. பரதத்து - பரதகண்டத்தில்.

(பி - ம்.) ௧0. 'கஞ்சை' ௧௧. 'முனிவரன்' ௧௨. 'கவிழ்ந்த' ௧௩. 'ஒழுகிய சம்பாபதி' ௧௭. 'ஆனாஉ' ௧௯. 'முனிவாய்' ௨0. 'முதியோளினி' ௨௧. 'தகைமையள்'

கோடாச் செங்கோற் சோழர்தங் குலக்கொடி
கோணிலை திரிந்து கோடை நீடினுந்
௨௫ தானிலை திரியாத் தண்டமிழ்ப் பாவை
தொழுதன ணிற்பவத் தொன்மூ தாட்டி
கழுமிய வுவகையிற் கவாற்கொண் டிருந்து
தெய்வக் கருவுந் திசைமுகக் கருவுஞ்
செம்மலர் முதியோன் செய்த வந்நா

---

௨௩. சோழர்தங்குலக்கொடி - வேற்றுவேந்தரனுகாமையால் சோழர்தங் குலக்கொடியாயுள்ளாள்; இப்படியே வையைநதி, "வையையென்ற பொய்யாக் குலக்கொடி" என்று கூறப்பட்டுள்ளது; சிலப். ௧௩ : ௧௭0.

௨௪. மணி. ௧ : ௩௪ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

௨௫. பாவை - காவிரி.

௨௬. தொழுதனள்நிற்ப - தொழுது நிற்ப.

௨௭. கழுமிய - கலந்த. கவான் - துடையின்மேல்.

௨௮ - ௯. தெய்வக்கரு - உலகம் முப்பத்தொன்றனுள் மகாராஜிகலோகமுதலிய தெய்வலோகம் ஆறினுமுள்ள அறுவகைத் தெய்வகணபிண்டங்கள்; தெய்வலோகம் ஆறாவன: (௧) மகாராஜிகலோகம், (௨) திரயத்திரிம்சலோகம், (௩) யாமலோகம், (௪) துஷிதலோகம், (௫) நிருமாணரதிலோகம், (௬) பரநிருமித வசவர்த்திலோகமென்பன; "இருமூவகையிற், பெருவனப் பெய்திய தெய்வதக் கணங்களும்" (மணி. ௬ : ௧௭௮ - ௯.) திசைமுகக்கரு - ப்ரஹ்மகாயிகலோகம் முதலிய ப்ரஹ்மலோகம் இருபதினுமுள்ள இருபது வகைப்பட்ட ப்ரஹ்மகணப்பிண்டங்கள்; ப்ரஹ்மலோகம் இருபதாவன: (௧) ப்ரஹ்மகாயிகலோகம், (௨) ப்ரஹ்மபுரோகிதலோகம், (௩) மஹாப்ரஹ்மலோகம், (௪) பரீத்தாபலோகம், (௫) அப்பிராமணாபலோகம், (௬) ஆபாஸ்வரலோகம், (௭) பரீத்தசுபலோகம், (௮) அப்பிராமணசுபலோகம், (௯) சுபகிருஸ்நலோகம், (௧0) பிரகத்பலலோகம், (௧௧) அஸம்ஞ்யாஸத்துலோகம், (௧௨) அப்பிரகலோகம், (௧௩) அதபலோகம், (௧௪) ஸுதர்சலோகம், (௧௫) ஸுதர்சிலோகம், (௧௬) அகநிஷ்டலோகம், (௧௭) ஆகாசானந்தியாயதனலோகம், (௧௮) விஞ்ஞானனந்தியாயதனலோகம், (௧௯) அகிஞ்சந்யாயதனலோகம், (௨0) நைவ ஸம்ஜ்ஞாயதனலோகமென்பன. இவற்றுள், பிரஹ்மகாயிகலோகம் முதலிய பதினாறையும் உருபப் பிரஹ்மலோகமென்றும், ஆகாசானந்தியாயதன லோகம்முதலிய நான்கையும் அருபப்பிரஹ்மலோகமென்றும் கூறுவர்; "நால்வகை மரபி னருபப் பிரமரு, நானால் வகையி னுருபப் பிரமரும்" (மணி. ௬ : ௧௭௬ - ௭.) மேற்கூறியவற்றுள், தெய்வலோகங்கள் ஆறும் ஸகாம லோகங்களென்றும், பிரஹ்மலோகங்கள் இருபதும் நிஷ்காமலோகங்களென்றும் கூறப்படும். இவை, பௌத்தநூலிற் காணப்பட்டன. செம்மலர் முதியோன் - மஹாப்ரஹ்மா. அந்நாள் - அந்நாளில்.

(பி - ம்.) ௨௪. 'கோணிலைதிரிந்து' ௨௬. 'தொன்மூதாட்டியைக்'

௩௦ ளென்பெயர்ப் படுத்தவிவ் விரும்பெயர் மூதூர்
நின்பெயர்ப் படுத்தே னீவா ழியவென
விருபாற் பெயரிய வுருகெழு மூதூ
ரொருநூறு வேள்வி யுரவோன் றனக்குப்
பெருவிழா வறைந்ததும் பெருகிய தலரெனச்
௩௫ சிதைந்த நெஞ்சிற் சித்திரா பதிதான்
வயந்த மாலையான் மாதவிக் குரைத்தது
மணிமே கலைதான் மாமலர் கொய்ய

---

௩௦. என்பெயர்ப்படுத்த - என்பெயர்ப்படச்செய்த ; என்றதனால், சம்பாபதி யென்னும் பெயர், சம்புத்தீவத்தெய்வத்திற்கு இயல்பாகவே உண்டென்பது பெறப்பட்டது. இதனை, "தகவிலை கொல்லோ சம்பா பதி" (மணி. ௬ : ௧௩௮) என்று வருதலாலுணர்க. சிலப்பதிகாரத்திலும் இந்நூலிலும் தென்மதுரையையும் அதன் அதிதேவதையையும் மதுராபதியென்று வழங்கியிருத்தல் காண்க. சோழர்களின் பழைய இராசதானியாதலின், இந்நகரம் மூதூரெனப்பட்டது. இப்படியே இந்நூலிற் பலவிடத்தும் இந்நகரை மூதூரென்று வழங்குவர் (௨ : ௩௪, ௪௦ ; ௩ : ௩௪ ; ௪ : ௨௮ ; ௧௮ : ௬௧ ; ௨௦ : ௨௮ ; ௨௧ : ௧௧௬) ; "ஆரங் கண்ணிச் சோழன் மூதூர்" (பதிகம், ௧௨) எனவும், "வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோ, டோங்கிப் பரந்தொழுகலான்" (சிலப். ௧ : ௧௧ - ௨) எனவும் வருதல் காண்க.

௩௨. இருபாற் பெயரிய - சம்பாபதி, காவிரிப்பூம்பட்டினம் என்னும் இருவகைப் பெயரினையுடைய. உருகெழு மூதூர் - பகைவர்க்கு அச்சத்தைச் செய்தல் பொருந்திய பழைய ஊர் ; மூ. மணி. ௪ : ௩௬.

௧ - ௩௨. விரிசடையாட்டி, தெய்வதம், சம்புவென்பாள், சம்பாபதியினள் ; அக்காலத்துக் காவிரிப்பாவை ஒழுகி அச்சம்பாபதியயலில் தோன்ற, ஆங்கிருந்த முதியோள் நீர்ப்பாவையை எதிர்கொண்டு விளக்கே வாவென, அதனைப் பெருந்தவன் கேட்டு வணங்கென, குலக்கொடி தண்டமிழ்ப்பாவை அம்முதியாளைத் தொழுதுநிற்ப, அம் மூதாட்டி, அவளைக் கவானிற் கொண்டிருந்து, அந்நாளில், என்பெயர்ப் படுத்த இம்மூதூரை நின்பெயர்ப் படுத்தேன், நீவாழியவென்றலால் இருபாற் பெயரியமூதூரென்க.

௩௩. நூறுவேள்வியுரவோன் - சதமகன் ; இந்திரன்.

௩௪. அலர்பெருகியதென; அலர்-பலரறியநிகழ்த்தும் பழிமொழி.

௩௫. சித்திராபதி-மாதவியின் நற்றாய் ; "எற்பயந்த, சித்திரா பதிக் குஞ் செப்புநீ" (மணி. ௨ : ௭௦ - ௭௧) என்று மாதவி கூறுதலாலுணர்க.

௩௬. வயந்தமாலை - மாதவியின் தோழி ; "தன்மக டோழி, வயந்த மாலையை வருகெனக் கூஉய்" (மணி. ௨ : ௭ - ௮); இவளைக் கூனியென்றும் வழங்குவர். மாதவி - மணிமேகலையின்தாய் ; நாடகக் கணிகை.

(பி - ம்.) ௩௧. 'பெயர்படுத்தேன்'

வணிமலர்ப் பூம்பொழி லகவயிற் சென்றது
மாங்கப் பூம்பொழி லரசிளங் குமரனைப்
௪0 பாங்கிற் கண்டவள் பளிக்கறை புக்கதும்
பளிக்கறை புக்க பாவையைக் கண்டவன்
றுளக்குறு நெஞ்சிற் றுயரொடும் போயபின்
மணிமே கலாதெய்வம் வந்துதோன் றியது
மணிமே கலையைமணி பல்லவத் துய்த்தது
௪௫ முவவன மருங்கினவ் வுரைசா றெய்வதஞ்
சுதமதி தன்னைத் துயிலெடுப் பியதூஉ
மாங்கத் தீவகத் தாயிழை நல்லா
டான்றுயி லுணர்ந்து தனித்துய ருழந்தது
முழந்தோ ளாங்கணே ரொளிமணிப் பீடிகைப்
௫0 பழம்பிறப் பெல்லாம் பான்மையி னுணர்ந்தது

---

௩௮. பொழில் - உபவனம். அகவயின் - உள்ளிடத்தே.

௩௯. பொழில் - பொழிலில். அரசிளங்குமரனை - உதயகுமரனை.

௪0. பளிக்கறை - பளிங்காலாகிய அறை. ௪௧. பாவை - மணிமேகலை.

௪௨. துளக்குறுநெஞ்சு - நிலைகலங்குதலுற்ற நெஞ்சு; "கடிமரந் துளங்கிய காவும்" புறநா. ௨௩.

௪௩. மணிமேகலாதெய்வம் - அரக்கர் வாதைபண்ணுதபடி இந்திரன் ஏவலாலே சில தீவுகளைப் பாதுகாத்துக்கொண்டிருத்தலையுடையது; கோவலனுடைய குலதெய்வம்.

௪௪. மணிபல்லவம் - ஒரு சிறுதீவு; சிறுதீவை அந்தரத்தீவென்று வழங்குவர்.

௪௫. உவவனம் - உண்டாக்கப்பட்டவனம்; உபவனமென்னும் வடமொழிச் சிதைவு; இதனை ஆராமமென்றும் வழங்குவர். உரைசால் - புகழமைந்த.

௪௬. சுதமதி - மாதவியின் தோழியாகிய ஒரு பார்ப்பனி. துயில் எடுப்பியதூஉம் - துயில் எழுப்பியதும்; "உரவுநீர்ப் பரப்பி னூர்துயி லெடுப்பி" சிலப். ௪ : ௭௯.

௪௭. நல்லாள் - மணிமேகலை.

௪௮. தனித்துயருழந்ததும் - ஒப்பற்ற துயரால் வருந்தியதும்; "அருந்துய ருழக்குநின் றிருந்திழை யரிவை" புறநா. ௧௪௬.

௪௯. ஒளிமணிப்பீடிகை - செவ்வொளியையுடைய மாணிக்கத்தாலாகிய புத்தனுடைய பாதபீடிகையால்.

(பி - ம்.) ௪௧. 'பாவை கண்டவன்' ௪௨. 'பெயர்ந்தபின்' ௪௪. 'மணிப் பல்லவம்' ௪௬. 'துயிலெழுப்பியதூஉம்' ௪௮. 'தான்றுயிலெழுந்து' ௪௯. 'உழந்தோண்முன்னர்'

முணர்ந்தோண் முன்ன ருயர்தெய்வந் தோன்றி
மனங்கவ லொழிகென மந்திரங் கொடுத்ததுந்
தீப திலகை செவ்வனந் தோன்றி
மாபெரும் பாத்திர மடக்கொடிக் களித்ததும்
௫௫ பாத்திரம் பெற்ற பைந்தொடி தாயரொ
டியாப்புறு மாதவத் தறவணர்த் தொழுதது
மறவண வடிக ளாபுத் திரன்றிற
நறுமலர்க் கோதைக்கு நன்கன முரைத்தது
மங்கைப் பாத்திர மாபுத் திரன்பாற்
௬0 சிந்தா தேவி கொடுத்த வண்ணமு

---

௫௧. உயர்தெய்வம் - மணிமேகலாதெய்வம்.

௫௨. கவல் - கவலுதல்; முதனிலைத் தொழிற்பெயர். மந்திரம் - வேற்றுரு அடைவிப்பதும், அந்தரத்தில் திரியச்செய்வதும், பசியை ஒழிப்பதுமாகிய மூன்று மந்திரங்கள். கொடுத்ததும் - உபதேசித்ததும்.

௫௩. தீபதிலகை - மணிபல்லவத்திலுள்ள புத்தனுடைய பாதபீடிகையை இந்திரனேவலாற் காவல்பூண்டு ஒழுகுபவள்; தீவுக்கு அலங்காரமாக உள்ளவளென்பது பொருள். செவ்வனம் - செவ்விதாக; "தீவ திலகை செவ்வன முரைக்கும்" (மணி. ௧௧ : ௨0) எனவும், "சிறந்தோர்க் கல்லது செவ்வனஞ் சுரவாது" (மணி. ௧௧ : ௧௨௧) எனவும் இம்மொழி இப்பொருளில் வழங்கிவருதல் காண்க.

௫௪. மாபெரும்பாத்திரம் - அமுதசுரபியென்னும் பெயருள்ள பிச்சைப் பாத்திரத்தை. மடக்கொடிக்கு - மணிமேகலைக்கு.

௫௫. தாயரொடு - மாதவி சுதமதியென்னும் இருவரோடு; "ஆங்கத் தாயரோ டறவணர்த் தேர்ந்து" (பதிகம், ௮௯), "பொற்றொடி தாயரு மப்பதிப் படர்ந்தனர்" (௨௮ : ௧௫௪), "நகர்கடல் கொள்ளநின் றாயரும் யானும்" (௨௯ : ௩௫) என இவ்விருவரையும் மணிமேகலையின் தாயரென இந்நூலுள்ளே வழங்கிவருதல் காண்க.

௫௬. யாப்பு - கட்டு. அறவணர் - புத்த சங்கத்தினரான ஒரு முதிய முனிவர்.

௫௭. ஆபுத்திரன் - ஓரந்தணன்; தன்னைப்பெற்றவுடன் தாய் நீங்கிவிட, எழுநாள் வரையில் ஒரு பசுவாற் பாலூட்டிக் காக்கப்பட்டமையின், இவன் இப்பெயர்பெற்றான். திறம் - வரலாறு.

௬0. சிந்தாதேவி-ஸரஸ்வதீதேவி; யாவருக்கும் சிந்தையிற் றோன்றிச் சொற்பொருளுணர்த்துபவளென்பது பொருள்; இந்நூலுள்ளே, "நாமிசைப் பாவாய்" (௧௪: ௧௮), "செழுங்கலைப் பாவாய்" (௨௫: ௧௩௯),

(பி - ம்.) ௫௨. 'ஒழியென' ௫௩. 'தீவதிலகை' ௫௭. 'அறவணரடிகள்' ௫௮. 'நறுமணக்கோதைக்கு' ௫௯. 'ஆங்கப்பாத்திரம்'

மற்றப் பாத்திர மடக்கொடி யேந்திப்
பிச்சைக் கவ்வூர்ப் பெருந்தெரு வடைந்ததும்
பிச்சை யேற்ற பெய்வளை கடிஞையிற்
பத்தினிப் பெண்டிர் பாத்தூ ணீத்ததூஉங்
௬௫ காரிகை நல்லாள் காயசண் டிகைவயிற்
றானைத் தீக்கெடுத் தம்பல மடைந்தது
மம்பல மடைந்தன ளாயிழை யென்றே
கொங்கலர் நறுந்தார்க் கோமகன் சென்றது
மம்பல மடைந்த வரசிளங் குமரன்முன்
௭௦ வஞ்ச விஞ்சையன் மகள்வடி வாகி
மறஞ்செய் வேலோன் வான்சிறைக் கோட்ட
மறஞ்செய் கோட்ட மாக்கிய வண்ணமுங்
காயசண் டிகையென விஞ்சைக் காஞ்சன

---

" உணர்விற் றோன்றி யுரைப்பொரு ளுணர்த்து, மணிதிக ழவிரொளி மடந்தை" (௨௫ : ௧௪௮) என வழங்குதலால் இஃது உணரப்படும்.

௬௧. மடக்கொடி - மணிமேகலை.

௬௨. பிச்சைக்கு - பிக்ஷைக்கு. அவ்வூர் - காவிரிப்பூம்பட்டினம்.

௬௩. கடிஞை - பிச்சைப்பாத்திரம்; "தோமறு கடிஞையும்" சிலப். ௧௦ : ௬௮.

௬௪. பத்தினிப்பெண்டிர் - ஆதிரை. பாத்தூண் - பகுத்துண்ணும் உணவு.

௬௫. காயசண்டிகை - ஒரு வித்தியாதரமகள்.

௬௬. ஆனைத்தீ - எதனாலும் தணியாத பெரும்பசியைச் செய்வதொரு வியாதி; இதனைப் பஸ்மகவியாதியென்பர் ஸ்ரீபுராணமுடையார்; இதனியல்பை, சீவக. ௪௦௦, ௪௦௩ - ஆம் பாடல்களாலுணர்க. அம்பலம்-உலகவறவி.

௬௮. கோமகன் - உதயகுமரன்.

௭௦. விஞ்சையன்மகள்வடிவு - காஞ்சனனென்னும் வித்தியாதரனுடைய மனைவியாகிய காயசண்டிகையினது உருவம்; மகள் - மனைவி; இந்நூலுள்ளே, "நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉ, மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம்" (௨௧ : ௨௯ - ௩௦) என்புழி மகளென்பது இப்பொருளதாதலுணர்க.

௭௧. வேலோன் - சோழன். சிறைக்கோட்டம் - சிறைச்சாலையை.

(பி - ம்.) ௬௩. 'பெருந்தகைக்கடிஞை' ௭௦. 'மகள் வடிவாய உதாம்' ௭௩. 'காஞ்சயன்'

ஞாயிழை தன்னை யகலா தணுகலும்
எரு வஞ்ச விஞ்சையன் மன்னவன் சிறுவனை
மைந்துடை வாளிற் றப்பிய வண்ணமு
மையரி யுண்க ணவன்றுயர் பொறாஅ
டெய்வக் கிளவியிற் றெளிந்த வண்ணமு
மறைகழல் வேந்த ஞாயிழை தன்னைச்
அ0 சிறைசெய் கென்றதுஞ் சிறைவீடு செய்தது
நறுமலர்க் கோதைக்கு நல்லற முரைத்தாங்
காய்வளை யாபுத் திரனா டடைந்தது
மாங்கவன் றன்னோ டணியிழை போகி
யோங்கிய மணிபல் லவத்திடை யுற்றது
அரு முற்றவ ளாங்கோ ருயர்தவன் வடிவாய்ப்
பொற்கொடி வஞ்சியிற் பொருந்திய வண்ணமு

---

எச. அணுகலும் - நெருங்குதலும்.

எகு. மைந்து - வலி. தப்பிய - வெட்டிய; "வாளிற் றப்பிய வல்வினை யன்றே" மணி. உக : கூ0.

எஅ. தெய்வக்கிளவி - கந்திற்பாவையாகிய தெய்வத்தின் மொழி.

எகூ. வேந்தன் - மாவண்கிள்ளி. அ0. வீடு - விடுதல்.

அக. நறுமலர்க் கோதைக்கு - இராசமாதேவிக்கு. நல்லறம் - பௌத்த தருமம்; இதனை அருளறமென்றுங் கூறுவர்.

அஉ. ஆபுத்திரன் நாடு - சாவகநாடு.

அங. ஆங்கவன்றன்னோடு - ஆபுத்திரனோடு.

அச. புத்தனுடைய பாதபீடிகையினையுடையதாதலின், 'ஓங்கிய மணிபல்லவம்' என்றார்.

அரு. உயர்தவன்வடிவாய் - மணிமேகலை உயர்ந்த முனிவன் வடிவங்கொண்டு; "மையறு சிறப்பிற் றெய்வந் தந்த, மந்திர மோதியோர் மாதவன் வடிவாய்" (உகூ : எ0 - எக) என்று பின் வருதல் காண்க.

அகூ. வஞ்சி - சேரனுடைய இராசதானி.

(பி - ம்.) எஎ - அஉ. 'நெடுநிலைக் கந்தி னின்ற பாவை, வருவ துரைத்து மயக்கொழி யென்றது, மகன்றுயர் பொறாஅ மன்னவன் மாதரைச், சினங்கொண் டாங்கோர் சிறையிடை யிட்டதுஞ், சிறைவீடு செய்த விராசமா தேவி, பொறைகொண் டிரப்பச் சீலங் கொடுத்ததுந், தாழ்கழல் வேந்தன் சாவக மன்னனுக், காயிழை தன்னை யகற்றிய வண்ணமும்' அக. 'நறுமலர்க்கோதை நல்லறம்' அகூ. 'பொற்கொடிமூதூர்', 'பொற்றொடிவஞ்சி.'

நவையறு நன்பொரு ளுரைமி னோவெனச்
சமயக் கணக்கர் தந்திறங் கேட்டது
மாங்கத் தாயரோ டறவணர்த் தேர்ந்து
௨0 பூங்கொடி கச்சி மாநகர் புக்கதும்
புக்கவள் கொண்ட பொய்யுருக் களைந்து
மற்றவர் பாதம் வணங்கிய வண்ணமுந்
தவத்திறம் பூண்டு தருமங் கேட்டுப்
பவத்திற மறுகெனப் பாவை நோற்றது
௨௫ மிளங்கோ வேந்த னருளிக் கேட்ப
வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்
மாவண் டமிழ்த்திற மணிமே கலைதுற

அஎ. நவையறு - குற்றமற்ற. நன்பொருள் - நல்லதத்துவங்களை.

அஅ. சமயக்கணக்கர் - சமயவாதியர்; "சமயக் கணக்கர் மதிவழி கூறாது", "மாறுகொண் டறையு மதிநூற் கடல்கிளர், சமயக் கணக்கர் தந்திறங் கடந்து" கல். கஎ, ௬௫.

அக. ஆங்கு - வஞ்சிநகரத்தில். ௨0. கச்சி - காஞ்சிநகரம்.

௨க. பொய்யுரு - முன்னங்கொண்ட முனிவன்வடிவு.

௨௨. அவர் - அறவணவடிகளது. ௨௩. தருமம் - பௌத்ததருமம்.

௨௫. இளங்கோவேந்தன் - சிலப்பதிகாரநூலாசிரியராகிய இளங் கோவடிகள். அருளிக்கேட்ப - அருள்புரிந்துகேட்ப; கேட்டருள வென விகுதிபிரித்துக் கூட்டினும் அமையும்.

௨௬. கூலவாணிகன் சாத்தன் - கூலவாணிகனான சாத்தன்; கூலம் எண்வகைத்து, நெல்லு, புல்லு, வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, இராகியென; பதினெண் வகைத்தென்பர் கூத்தநூலார்; "பதினெண் கூலமு முழவர்க்கு மிகுக" மதிவாணர் நாடகத்தமிழ்நூல்.

௨எ. தமிழ்த்திறம் - தமிழிலக்கணத்தின் பாகுபாட்டால். மணி மேகலை துறவு - மணிமேகலைதுறவென்னும் பெயருள்ள இந்நூலை; இந் நூலுக்கு மணிமேகலைதுறவென்னும் பெயருண்மை, நீலகேசியுரை முத லியவற்றிற் காணப்படும்; ஆயினும் மணிமேகலையென்னும் பெயர் இரு வகை வழக்கிலும் மிகுதியாக வழங்குதல்பற்றி, அப்பெயரே ஈண்டு எடுத் தாளப்பட்டது. இனி, மணிமேகலைதுறவென்பதனை நூற்பெயராகக் கொள்ளாமல் மணிமேகலை யென்பவளுடைய துறவென்று கொள்ளினும் பொருந்தும்.

(பி - ம்.) அக. 'தொழுது' ௨0. 'காஞ்சிமாநகர்' ௨௨, 'மற்றவன்' ௨எ. 'வண்டமிழத்தின் மணிமேகலை திறம்'

வாறைம் பாட்டினு ளறியவைத் தனனென்.

பதிகம் முற்றிற்று.

---

௧ † அரியேறு........ன்னுயர்த்த வாதியான் வண்டின்
புரியேறும் போதி நிழற்கீழ்ப் - பெரியோன்
அடித்தா மரைமலரை யன்போடுஞ் சென்று
பிடித்தார் பிறவார் பெயர்ந்து.

௨. பூத்தபுனற் பூம்பொய்கைப் பூம்புகார் மாதவிக்கு
வாய்த்த மணிமே கலைதுறவைச் - சாத்தன்
மணிமே கலை........ ........ ........
............ ............ ............

---

௯௮. ஆறைம்பாட்டினுள் - முப்பது பாட்டினுள். அறிய - தமிழகத்தாரறியும்படி. என்னென்னும் அசைச்சொல்லால் ஆசிரியப்பா முடிதல் சிறப்புடைத்தென்பர்; "ஞகாரை முதலா" (தொல். செய். சூ. உ௪௦) என்பதற்கு, 'ஞணநமனயரலவழள வென்னும் பதினொரு புள்ளியீற்றினுள் ஒன்றனை இறுதியாகச் செய்யுஞ்செய்யுள் பொருட்டொடராகவும் சொற்றொடராகவும் செய்வது இயைபெனப்படும் எ - று; இயைபென்றதனானே பொருளும் இயைந்து சொல்லும் இயைந்துவருமென்பது கருத்து. சீத்தலைச்சாத்தனாற் செய்யப்பட்ட மணிமேகலையும் கொங்குவேளாற் செய்யப்பட்ட தொடர்நிலைச்செய்யுளும் போல்வன; அவை னகார ஈற்றான் இற்றன' எனப் பேராசிரியரும், 'ஞ...ள என்னும் பதினொரு புள்ளியுள் ஒன்றனையீறாகக்கொண்டு செய்யுளைப்பொருட்டொடராகச்செய்வது இயைபெனப்படும் எ - று; இயைபென்றதனானே பொருளியைதல் பெற்றாம். பரந்த மொழியால் அடிநிமிர்ந்த தோல் உயிரீற்றவாயேவரும். னகரவீற்றான் இற்றுப் பொருள்தொடர்ந்தன மணிமேகலையும் உதயணன்கதையும்' என நச்சினார்க்கினியரும் எழுதியவை இங்கே அறிதற்பாலன.

௯௨ - ௯௮. மூதூர் விழாவறைந்ததுமுதற் பாவைநோற்றது ஈறாகவுள்ள மணிமேகலைதுறவை இளங்கோவேந்தன் கேட்பக் கூலவாணிகன் சாத்தன் ஆறைம்பாட்டினுள் அறிய வைத்தனனென்க.

எல்லாவடியும் நேரடியாய் வந்து முடிதலின், இப்பாட்டு நிலைமண்டில ஆசிரியப்பா.

* (பி - ம்.) பாயிரமுற்றும்.

† இந்த இரண்டு செய்யுட்களும், இந்த வண்ணமாக மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக்கவிராயரவர்கள் வீட்டுப் பிரதியில்மட்டுமிருந்தன.

# மணிமேகலை.

## முதலாவது
## விழாவறை காதை.

[முதலாவது விழாவறைந்தபாட்டு.]

உலகந் திரியா வோங்குயர் விழுச்சீர்ப்
பலர்புகழ் மூதூர்ப் பண்புமேம் படீஇய
வோங்குயர் மலயத் தருந்தவ னுரைப்பத்
தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்

---

க - ங. உலகம் - நன்மக்களுடைய ஒழுக்கம். திரியா - வேறுபடாத. ஓங்குயர் விழுச்சீர் - மிகவுமுயர்ந்த சீரியபுகழ். திரியாமூதூர், சீரினையுடைய மூதூரென்க; "உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீ, ராலவாய்" (முருகு. 1உ௪ - ரு.) பலர் புகழ் மூதூர் - பல தேசத்தாரும் கொண்டாடும் பழமையாகிய நகரம்; என்றது காவிரிப்பூம்பட்டினத்தை; பலரும்புகழ்தலை, "பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்" (சிலப். க : க0), "வாழியரோ.........புகழா லமைந்த புகார்" (சிலப். புகார்க்காண்டத்தினிறுதிச் செய்யுள்) என்பவற்றாலும் பிறவற்றாலும் உணர்க; பலர் - பல சமயத்தாருமாம். மூதூர்ப் பண்பு மேம்படீஇய - மூதூரின் தன்மைகள் மிகும்பொருட்டு. மலயம் - பொதியின்மலை. அருந்தவன் - அகத்தியன். மேம்படீஇய உரைப்பவென்க.

௪. தூங்கு எயில் .....செம்பியன் - தேவர்கட்குப் பகைவராகிய அசுரர்களுடைய, ஆகாயத்திலே அசைகின்ற மதில்களை அழித்த வீரவளையை யணிந்த தோளையுடையசோழன்; இவன் சோழருள் ஒருவன்; இவன் தூங்கெயிலழித்ததனை, "ஒன்னா ருட்குந் துன்னருங் கடுந்திறற், றூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர்" (புறநா. ௩௯), "தூங்கெயின் மூன்றெறிந்த சோழன்கா ணம்மானை, சோழன் புகார்நகரம் பாடேலோ ரம்மானை" (சிலப். உ௯ : 'வீங்குநீர்' என்னும் செய்யுள்), "வீங்கு தோட் செம்பியன் சீற்றம் விறல்விசும்பிற், றூங்கு மெயிலுந் தொலைத்தலால்" (பழ. ௪௯) என்பவற்றாலுணர்க.

(பி - ம்.) உ. 'மேம்படுதல்', 'மேம்படியர்.' ௩. 'ஆங்குயர் மலயத் தருந்தவ னுரைப்ப'

௫ விண்ணவர் தலைவனை வணங்கிமுன் னின்று
மண்ணகத் தென்றன் வான்பதி தன்னுண்
மேலோர் விழைய விழாக்கோ ளெடுத்த
நாலேழ் நாளினு நன்கினி துறைகென
வமரர் தலைவ னுங்கது நேர்ந்தது
௧௦ கவராக் கேள்வியோர் கடவா ராகலின்
மெய்த்திறம் வழக்கு நன்பொருள் வீடெனு
மித்திறந் தத்த மியல்பினிற் காட்டுஞ்
சமயக் கணக்கருந் தந்துறை போகிய
வமயக் கணக்கரு மகலா ராகிக்

---

௫. விண்ணவர் தலைவனை - இந்திரனை.

௩ - ௫. அருந்தவன் உரைப்பச் செம்பியன் வணங்கியென்க; உரைப்ப எறிந்தவெனவும் இயையும்.

௬. 'மண்ணகத்து' என்பதுமுதல் சோழன்வார்த்தை. வான்பதி தன்னுள் - நன்றாகிய காவிரிப்பூம்பட்டினத்தில்.

௭. விழாக்கோள் எடுத்த - விழாவெடுத்தலை மேற்கொண்ட.

௮. நாலேழ்நாளினும் - இருபத்தெட்டு நாளிலும்; "நாலேழ் நாளினும்" என்பர் மேலும்; ௧ : ௬௭.

௫ - ௮. முன்னின்று உறைகென; உறைகென - உறைகவென்று சோழன்வேண்ட.

௯. நேர்ந்தது - இந்திரன் உடன்பட்டது; இது பெயர்; விழாவை யென்றபடி.

௧௦. கடவார் - பிழையார்.

௧௧. மெய்த்திறம் - மெய்ம்மையையுணர்த்துவனவாகிய நூல்வகைகள்; வழக்கு - உலகியல்; நன்பொருள் - தத்துவம்; வீடு - முத்தி; "மெய்த்திறம் வழக்கென விளம்புகின்ற, வெத்திறத்தினும்" (௨௭: ௧௦௬ - ௭) என்பர்மேலும். இப்படியே, "அருமறை விதியு முலகியல் வழக்குங், கருத்துறை பொருளும் விதிப்பட நினைந்து" (௬௬) என்றார் கல்லாடத்தும்.

௧௨. இத்திறம் - இவ்வகைகளை.

௧௩. தம் துறைபோகிய - தம்முடைய வழியிற் கைதேர்ந்த.

௧௪. அமயக் கணக்கரும் - காலங்களை எண்ணிச்சொல்வோராகிய சோதிடரும்; கணக்கரென்பது கணகரென்னும் வடமொழிச்சிதைவு. அகலாராகி - இந்நகரை விட்டு நீங்காராகி.

(பி - ம்.) ௧௧. 'திறம்விளக்கும்' ௧௪. 'கவையக்கணக்கருங் கல்லென் பேரூர்க்'

கடு கரந்துரு வெய்திய கடவு ளாளரும்
பரந்தொருங் கீண்டிய பாடை மாக்களு
மைம்பெருங் குழுவு மெண்பே ராயமும்
வந்தொருங்கு குழீஇ வான்பதி தன்னுட்
கொடித்தேர்த் தானைக் கொற்றவன் றுயரம்
உ0 விடுத்த பூதம் விழாக்கோண் மறப்பின்

கடு. கரந்துரு எய்திய கடவுளாளரும் - மக்கள்கண்கள் காணப் பொருளென்று தமது மிக்க ஒளியையுடைய தெய்வ யாக்கையை மறைத்து அக்கண்கள் பொறுக்குமளவினவாகிய உருவங்களை நிருமித்துக்கொண்ட தேவரும். இதனை, "அந்தரத் துள்ளோ ரறியா மரபின், வந்து காண்குறூஉம் வானவன் விழவும்" (சிலப். சு : எஉ - ரு), "அவளுக்குப், பூவந்த வுண்கண் பொறுக்கென்று மேவித்தன், மூவா விளநலங் காட்டி" (சிலப். கூ : ருரு - கு) என வருவனவற்றாலும் அவற்றின் உரையாலும் உணர்க.

கசு. ஒருங்குராண்டிய - ஒன்றுபடத்திரண்ட. பாடை மாக்கள் - மொழி வேறுபட்டமாக்கள் ; இவர்கள், மரக்கலந்தருஞ் செல்வப் பொருட்டால் வந்த பரதேசிகள் ; இவரை, "புலம்பெயர் மாக்கள்" (சிலப். கு : கக), "மொழிபெயர் தேத்தோர்" (சிலப். சு : கசரு) எனவுங்கூறுவர்.

கஎ. ஐம்பெருங்குழு - அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், சாரணரென்னுமிவர்கள்; எண்பேராயம் - கரணத்தியலவர் முதலியோர் ; இவ்விவரத்தை, "அமைச்சர் புரோகிதர் சேனா பதியர், தவாத் தொழிற்றூதுவர் சாரண ரென்றிவர், பார்த்திபர்க் கைம்பெருங் குழுவெனப்படுமே", "கரணத் தியலவர் கரும விதிகள், கனகச் சுற்றங் கடைகாப்பாளர், நகர மாந்தர் நளிபடைத் தலைவர், யானை வீர ரிவுளி மறவ, ரினைய ரெண்பே ராய மென்ப" (திவாகரம்) என்பனவற்றாலுணர்க ; "ஐம்பெருங் குழுவு மெண்பே ராயமும்" சிலப். கு : கடுஎ ; பெருங். உ. கு : சு.

கஅ. ஒருங்கு குழீஇ - ஒன்றுபடக்கூடி. 'வான்பதிதன்னுள்' என்றது முதலியன, சமயக்கணக்கர் முதலியோர் வார்த்தை.

ககூ. கொற்றவன் - முசுகுந்தன். துயரம் - அவனுடைய கண்ணும் மனமும் இருளும்வண்ணம் அசுரர்விட்ட தாமதாத்திரத்தால் அவனுக்குளதாகிய துன்பம். துயரம் - துயரத்தை.

உ0. விடுத்தபூதம் - முசுகுந்தனுக்கு ஒரு மந்திரமுபதேசித்து அவ்விருளைப்போக்கிய, பட்டினப்பாக்கம் மருவூர்ப்பாக்கம் இரண்டற்கும் இடையேயுள்ள நாளங்காடியிடத்துப் பூதம்; "வெற்றிவேன் மன்னற் குற்றதை யொழிக்கென......பீடிகை" (சிலப். கு : சுகு - எ), "கடுவிசை யவுணர்......இடனுங் காண்கும்" (சிலப். சு: எ - கரு) என்பவற்றாலும் அவற்றின் உரையாலும் உணர்க. விழாக்கோள் - விழாவெடுத்தல்.

(பி - ம்.) கடு. 'கரந்தருவெய்திய' கஅ. 'குழீஇய' ககூ. 'துயரற', 'துயரிற.' உ0. 'மறைப்பின்'

மடித்த செவ்வாய் வல்லெயி றிலங்க
விடிக்குரன் முழக்கத் திடும்பை செய்திடுந்
தொடுத்த பாசத்துத் தொல்பதி நரகரைப்
புடைத்துணும் பூதமும் பொருந்தா தாயிடு
உரு மாயிரு ஞாலத் தரசு தலை யீண்டு
மாயிரங் கண்ணோன் விழாக்கால் கொள்கென
வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசங்
கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி
யேற்றுரி போர்த்த விடியுறு முழக்கிற்

---

உக. வல்லெயிறு - வலிய பல்.

உஉ. முழக்கத்து - முழக்கத்தோடு. இடும்பை - துன்பம்.

உ௦ - உஉ. மறப்பின், பூதம் இடும்பை செய்திடு மென்க.

உங - ச. தொடுத்த - கட்டிய. நரகர் - தம்மைப் பிறர்நம்புவதற்குத் தவவேடத்தில் மறைந்துநின்று அத்தவத்திற்கிழுக்கானவற்றின்கண் ஒழுகும் பொய்வேடத்தார் முதலிய அறுவகையோர். புடைத்து - அறைந்து. பூதம் - மேற்கூறிய பொய்வேடத்தார் முதலிய அறுவரைத் தன்பாசங்கட்டிவர அவரை அறைந்துண்ணும் சதுக்கப்பூதம்; இதனை, "மாதுய ரெவ்வமொடு மனையகம் புகாஅள்......சேயிழை யாற்றலும்" (மணி. உஉ : சகூ - ருசு), "தவமறைந் தொழுகுந் தன்மையி லாளர, ரவமறைந் தொழுகு மலவைப் பெண்டி, ரறைபோ கமைச்சர் பிறர்மனை நயப்போர், பொய்க்கரி யாளர் புறங்கூற் றாளரென், கைக்கொள் பாசத்துக் கைப்படு வோரெனக், காத நான்குங் கடுங்குர லெடுப்பிப், பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்", "பத்தினி யொருத்தி.......உயிர்முன்புடைப்ப", (சிலப். ரு : கஉஅ - ஙச, கரு : எசு - அசு) என்பவற்றானுணர்க.

உரு. மாயிருஞாலம் - மிகப் பெரிய பூமி. ஈண்டும் - கூடும்.

உசு. ஆயிரங்கண்ணோன் - இந்திரன். கால்கொள்கென-தொடங்குகவென்று சொல்ல; "கால்கோள் விழவின் கடைநிலை சாற்றி" சிலப். ரு : கசச.

உஎ. வச்சிரக்கோட்டம் - வச்சிராயுதம் நிற்குங்கோயில்; சிலப். ச: கஉ. மணங் கெழுமுரசம் - விழாமுரசு.

உஅ. கச்சை - கீழ்வயிற்றிற் கட்டும் கச்சை. பிடர்த்தலை - பிடரிடம்.

உஎ - அ. மூ. "வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசங், கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி" சிலப். ரு: கசக - உ.

உகூ - ஙக. ஏற்றுரிபோர்த்தமுரசு - வென்ற ஏற்றினது உரியைப் போர்த்தின முரசு; இக்கருத்தினைப் பின்வருவனவற்றானுணர்க: "நல்லேற் றுரிவை தைஇய......முரசம்" (அகநா. ஙஙச), "ஏறிரண் டுடன் மடுத்து, வென்றதன் பச்சை சீவாது போர்த்த,.....முரசம்" (புறநா. உஅஅ),

(பி - ம்.) உக. 'வல்லெயிறரும்ப' உஎ. 'மன்கெழு', 'மணமுழா வாங்கி' உகூ. 'இடியுருமுழக்கின்'

௩௦ கூற்றுக்கண் விளிக்குங் குருதி வேட்கை
முரசுகடிப் பிகூஉ முதுக்குடிப் பிறந்தோன்
றிருவிழை மூதூர் வாழ்கென் றேத்தி
வானமும் மாரி பொழிக மன்னவன்
கோணிலை திரியாக் கோலோ னகுக
௩௫ தீவகச் சாந்தி செய்தரு நன்னாள்

---

"ஏற்றுரி முரச நாண வெறிதிரை" (சீவக. உகசஉ), "சாற்றிடக் கொண்ட வேற்றுரி முரசம்" (பெருங். க. ௩அ : க௦௦), "எற்றுரி முரசி னிறைவன் மூதூர்க்கு" (ஷை. ஷை சங : கசரு.) இடியுறு முழக்கின் முரசு - இடியினது முழக்கம்போலும் முழக்கினையுடைய முரசு. உறு: உவமவுருபு ; "தோளுற்றொர்தெய்வந் துணையாய்த்துயர் தீர்த்தவாறும்" (சீவக. க௦.) கூற்றுக்கண் விளிக்கும் முரசு - கூற்றை அழைக்கு முரசு ; கண் : அசைநிலையுமாம் ; "மீன்க ணற்றதன் சுனையே" (புறநா. க௦கூ.) குருதிவேட்கைமுரசு - குருதிப் பலிகொள்ளும் விருப்பத்தையுடைய முரசு; "குருதி வேட்கை யுருகெழு முரசம்" (புறநா. ௫௦.) கடிப்பு - முரசடிக்குங் குறுந்தடி. இகூஉம் - அறையும் ; புறநா. கரு அ.

௩உ. திருவிழை மூதூர் : (மணி. ௩ : ௩ச.) வாழ்கென்று - வாழ்க வென்று.

௩௩. 'வானமும்மாரி' முதலியன முரசறைவோன் கூற்று. வானம் - மேகம். மாரி - மழை.

௩ச. கோன்நிலை திரியாக் கோலோன்ஆகுக - கோள்கள் நிற்கும் நிலை குலையாமைக்குக் காரணமாகிய செங்கோலையுடையோனாகுக ; "கோணிலை திரிந்திடிற் கோணிலை திரியும்" (எ : அ) என இந்நூலுள் ளும், "கோணிலை திரிந்து.........அரசுகோல் கோடி னென்றான்" (உருரு) எனச் சீவகசிந்தாமணியுள்ளும் வருதல் காண்க.

௩ரு. தீவகச்சாந்தி - தீபசாந்தி ; என்றது இந்திரவிழாவை ; சம்புத்தீவக் காவற்றெய்வம், முற்காலத்து இத்தீவினுள்ளார்க்கு அசுரரால் வரும் தீங்கைப் பரிகரித்தற்பொருட்டு இந்திரனுக்குச் செய்தமையால் இவ்விழா இப்பெயர் பெற்றது ; "நாவ லோங்கிய மாபெருந் தீவினுட், காவற் றெய்வதந் தேவர்கோற் கெடுத்த, தீவகச் சாந்தி" (மணி. உ: க - ௩) ; இனி, நகரத்திற்கு உளவாகுந் தீங்குகளைப் பரிகரித்தற் பொருட்டுச் செய்யப்படும் இவ்விழா, தீவிற்குச் செய்வதனோடொக்கு மென்பது பற்றித் தீவகச்சாந்தியெனப்பட்டதெனினுமமையும்; இவ்வூரம்பலத்தை, "உலகவறவி" (எ : கூ௩, கஎ : எஅ, அகூ) என இந்நூலுள்ளும், இவ் வூர்வாயிலை, "உலகவிடைகழி" (க௦: உஎ) எனச் சிலப்பதிகாரத்துள் ளும், இவ்வூராசனை, "உலகமன்னவன்" (௩ : சகூ) என இந்நூலுள்ளும் கூறியிருத்தல் காண்க.

(பி - ம்.) ௩க. 'கடிப்பிடூஉம்' ௩௩. 'வானமும் மாரியும்' ௩ரு. தீபசாந்தி', 'தீவகசாந்தி.'

ளாயிரங் கண்ணோன் றன்னோ டாங்குள
நால்வேறு தேவரு நலத்தகு சிறப்பிற்
பால்வேறு தேவரு மிப்பதிப் படர்ந்து
மன்னன் கரிகால் வளவனீங் கியநா
சo ளிந்நகர் போல்வதோ ரியல்பின தாகிப்
பொன்னகர் வறிதாப் போதுவ ரென்பது
தொன்னிலை யுணர்ந்தோர் துணிபொரு ளாதலிற்
றோரண வீதியுந் தோமறு கோட்டியும்
பூரண கும்பமும் பொலம்பா லிகைகளும்
சரு பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்
காய்க்குலைக் கமுகும் வாழையும் வஞ்சியும்
பூக்கொடி வல்லியுங் கரும்பு நடுமின்

---

ஙஎ. நால்வேறு தேவர் - முப்பத்து மூவர்; அவர் வசுக்களெண்மரும், திவாகரர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், மருத்துவரிருவரும்; முநத. 167.

ஙஅ. பால்வேறு தேவர் - பதினெண் கணங்கள்; பால் - பகுதி. படர்ந்து - நினைந்து.

ஙகூ. கரிகால் வளவன் - புகாரையாண்ட ஒரு சோழன். நீங்கிய நாள் - பகைவரை வெல்ல வடதிசையை நோக்கி அவன் போன நாளில்; "இருநில மருங்கின்............புண்ணியத் திசைமுகம் போகிய வந்நாள்" (ரு: அகூ - கூச) என்று சிலப்பதிகாரத்து வருதல் காண்க.

சக. பொன்னகர் - தேவலோகம். வறிதா - வறுமையையுடையதாக; தேவர் பலரும் விழாக்காண இந்நகர்க்கு வந்துவிடுதல்பற்றி, இவ்வாறு கூறப்பட்டது.

சo - சக. ஆகி வறிதாவென்க.

சங. கோட்டி - சபை; கோயில்வாயிலென்பர் சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர்; ஙo: கூஉ.

சச. பொலம் பாலிகை - பொற்பாலிகை.

சரு. பாவைவிளக்கு - பிரதிமை விளக்கு; "பாவை விளக்குப் பசும்பொற் படாகை" (சிலப். ரு: கருச.) உடன்பரப்புமின் - ஒருங்கு பரப்புமின்.

சசு. வஞ்சி - மரவிசேடம்; கொடிவிசேடமுமாம்; வஞ்சிநகரத்தை, "பொற்கொடிப் பெயர்ப்படூஉம் பொன்னகர்" (உசு: கூஉ) எனப் பின்பு கூறுதல்காண்க.

சஎ. பூக்கொடிவல்லி யென்றார், துகிற்கொடியை மாற்றுதற்கு; "கதலிகைக் கொடியுங் காழூன்று விலோதமும்" மணி. க: ருஉ.

(பி - ம்.) ஙஅ. 'இப்பதியடர்ந்து' சஉ. 'சொன்னிலை' சங. 'தோட்டியும்' சசு. 'வாழைக்கதலியும் வஞ்சியும்' சஎ. 'கரும்பொடு நடுமின்'

பத்தி வேதிகைப் பசும்பொற் றூணத்து
முத்துத் தாம முறையொடு நாற்றுமின்
௫௦ விழவுமலி மூதூர் வீதியு மன்றமும்
பழமணன் மாற்றுமின் புதுமணற் பரப்புமின்
கதலிகைக் கொடியுங் காழூன்று விலோதமு
மதலை மாடமும் வாயிலுஞ் சேர்த்துமி
னுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப்
௫௫ பதிவாழ் சதுக்கத்துத் தெய்வமீ றாக
வேறுவேறு சிறப்பின் வேறுவேறு செய்வினை
யாறறி மரபி னறிந்தோர் செய்யுமின்
றண்மணற் பந்தருந் தாழ்தரு பொதியிலும்
புண்ணிய நல்லுரை யறிவீர் பொருந்துமி

---

௪௮. பத்தி - வரிசை. வேதிகை - திண்ணை. தூணம் - தூண்.

௪௯. தாமம் - மாலை.

௫௦. மன்றம் - ஊர்க்கு நடுவாய் எல்லாருமிருக்கும் மரத்தினடி; “மன்றமும் பொதியிலும்” புறநா. ௨௨௬.

௫௨. கதலிகைக்கொடியும் காழூன்று விலோதமுமென்பன துகிற் கொடி விசேடங்கள்; காழ் - காம்பு.

௫௩. மதலை - கொடுங்கை; பற்றுக்கோடுமாம்.

௫௪. நுதல்விழி நாட்டத்திறையோன் - இறைவி கண்புதைத்த பொழுது நெற்றியிற் புறப்பட விட்ட கண்ணையுடைய தலைவன்; என்றது சிவபெருமானை; விழிநாட்டம்: வினைத்தொகை. இனி, நுதலில் இமையா நாட்டமென்றுமாம்; “நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்” சிலப். ௧௪: ௭.

௫௫. சதுக்கத்துத் தெய்வம் - சதுக்கப் பூதம்; என்றது, முன்னர்க்கூறிய அறுவகை நரகரைப் புடைத்துண்ணும் பூதத்தை; சதுக்கம் - நாற்றெருக்கூடுமிடம்.

௫௬. செய்வினை - செய்வினையை.

௫௭. ஆறறிமரபினறிந்தோர் - நிருத்தம் முதலிய ஆறங்கங்களையு முணர்ந்த முறைமையையுடைய அந்தணர்; “ஆறறியந்தணர்க்கு” (கலி. கடவுள்.); ஆறு - வழியுமாம். அறிந்தோர்: முன்னிலைப்பெயர்.

௫௮. பொதியில் - அம்பலம். ௫௯. புண்ணிய நல்லுரை - தரும பதம்.

(பி - ம்.) ௪௯. ‘முத்தத்தாம முகையொடு’ ௫௧. ‘பழமணற் பாற்றுமின்’ ௫௨. ‘கதலிக்கொடியும்’ ௫௫. ‘சதுக்கத்தெய்வம்’ ௫௮. ‘தண்மணப்பந்தர்’ ௫௯. ‘அறிந்தோர் பொருந்துமின்’

கூ0 ளொட்டிய சமயத் துறுபொருள் வாதிகள்
பட்டி மண்டபத்துப் பாங்கறிந் தேறுமின்
பற்று மாக்க டம்முட ளாயினுஞ்
செற்றமுங் கலாமுஞ் செய்யா தகலுமின்
வெண்மணற் குன்றமும் விரிபூஞ் சோலையுந்
கூரு தண்மணற் றுருத்தியுந் தாழ்பூந் துறைகளுந்
தேவரு மக்களு மொத்துடன் றிரிதரு
நாலேழ் நாளினு நன்கறிந் தீரென
வொளிறுவாண் மறவருந் தேரு மாவுங்
களிறுஞ் சூழ்தரக் கண்முர சியம்பிப்
எ0 பசியும் பிணியும் பகையு நீங்கி
வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி

---

கூ0. ஒட்டிய - சபதஞ்செய்த. பொருள் - தத்துவம்.

கூக. பட்டிமண்டபம் - வித்தியாமண்டபம்; ஓலக்கமண்டபமென்றுங் கூறுவர்; "பட்டி மண்டப மேற்றினை யேற்றினை" (திருவா. சதகம். சக); "பகைப்புறத்துக் கொடுத்த பட்டிமண் டபமும்" (சிலப். ரு: க0உ); "பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்" (கம்ப. நகர. கூஉ.) பாங்கு - உரிய இடம்.

கூஉ. பற்றுமாக்கள் - பகைவர்.

கூங. செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழும்கோபம்; "செற்ற நீக்கிய மனத்தினர்" (முருகு. கஙஉ.) கலாம் - போர்; "புலாற்களஞ் செய்த கலாஅத் தானையன்" புறநா. சுக.

கூரு. துருத்தி - ஆற்றிடைக்குறை. தாழ்பூந்துறைகள் - ஆழ்ந்த பொலிவினையுடைய நீர்த்துறைகள்.

கூஅ. ஒளிறுவாள் - விளங்கும்வாள்; "ஒளிறுவாண் மன்னர்" (புறநா. கஎஎ.) மறவர் - வீரர்.

கூகூ. கண்முரசு - முகத்தையுடைய முரசம்; "கடிப்பிகு கண்முரசம்" (நாலடி. க00); முரசின் முகத்தைக் கண்ணென்றல் மரபு.

எ0. பகை - உட்பகை.

எக. மழையும் செல்வமும் சுரக்கவென்று வாழ்த்தி.

எ0 - எக. மு. "பசியும் பிணியும் பகையு நீங்கி, வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி" சிலப். ரு: எஉ - ங.

(பி - ம்.) கூ0. 'ஒட்டிய துறபொரு ளுணர்ந்த வாதிகள்' கூஅ. 'வெளிறு வாண்மள்ளரும்' கூகூ. 'இயம்ப'

யணிவிழா வறைந்தன னகநகர் மருங்கென்.

க.—விழாவறைகாதை முற்றிற்று.

---

எஉ. அகநகர் - உள்நகர்; என்றது பட்டினப்பாக்கத்தை.

க - எஉ. அருந்தவன் உரைப்பச் செம்பியன் விண்ணவர்தலைவனை நாலேழ்நாளினும் வான்பதிதன்னுள் உறைகென அவனேர்ந்ததைக் கேள்வியோர் கடவாராதலின், சமயக்கணக்கர் முதலியோர் குழீஇ, 'மறப்பின் இடும்பைசெய்திடும், பொருந்தாதாயிடும், கால்கொள்க' என, முதுக்குடிப் பிறந்தோன் முரசத்தை ஏற்றி இயம்பி ஏத்திச் சுரக்கென வாழ்த்திப் பொழிக, ஆகுக, நன்கறிந்தீர், துணிபொருளாதலின் நாலேழ் நாளினும் பரப்புமின், நடுமின், நாற்றுமின், மாற்றுமின், பரப்புமின், சேர்த்துமின், செய்யுமின்; பொருந்துமின், ஏறுமின், அகலுமின் என அக நகர்மருங்கு விழாவை அறைந்தனனென்க.

(பி - ம்.) எஉ. 'அகனமர் மருங்கென்'



இரண்டாவது

# ஊரலருரைத்தகாதை.

---

[இரண்டாவது ஊரலருரைத்தபாட்டு.]

நாவ லோங்கிய மாபெருந் தீவினுட்
காவற் றெய்வதந் தேவர்கோற் கெடுத்த
தீவகச் சாந்தி செய்தரு நன்னாண்
மணிமே கலையொடு மாதவி யாராத்
ரு தணியாத் துன்பந் தலைத்தலை மேல்வரச்
சித்திரா பதிதான் செல்லலுற் றிரங்கித்
தத்தரி நெடுங்கட் டன்மக டோழி

---

க. நாவலோங்கிய மாபெருந்தீவு - சம்புத்தீவு; இது மகாத்வீபம் நான்கனுள் ஒன்றாதலின் மாபெருந்தீவெனப்பட்டது; இக்கருத்து, "நால்வகை மரபின் மாபெருந் தீவும்" (மணி. சு : கசுரு) என்பதனால் விளங்கும்.

ந. நாள்-நாளில். ழ. "தீவகச் சாந்தி செய்தரு நன்னாள்" மணி. க : நரு.

(பி - ம்.) ந. 'தீபசாந்தி செய்தரு மந்நாள்' ச. 'மாதவியாரா'

வயந்த மாலையை வருகெனக் கூஉய்ப்
பயங்கெழு மாநக ரலரெடுத் துரையென
க0 வயந்த மாலையு மாதவி துறவிக்
கயர்ந்துமெய் வாடிய வழிவின ளாதலின்
மணிமே கலையொடு மாதவி யிருந்த
வணிமலர் மண்டபத் தகவயிற் செலீஇ
யாடிய சாய லாயிழை மடந்தை
கரு வாடிய மேனி கண்டுளம் வருந்திப்
பொன்னே ரனையாய் புகுந்தது கேளா
யுன்னோ டிவ்வூ ருற்றதொன் றுண்டுகொல்
வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்துக்
கூத்தும் பாட்டுந் தூக்குந் துணிவும்

அ. கூஉய் - அழைத்து.

க. பயம் - பிரயோசனம். அலர் - பலரறிய நிகழ்த்தும் பழிமொழி. உரையென - அலரை மாதவிக்குச் சொல்லென்று சித்திராபதி சொல்ல.

க0. துறவிக்கு - துறவுக்கு.

கக. அயர்ந்து - மனந்தளர்ந்து. அழிவினள் - வருத்தமுடையாள்.

கஉ. மலர்மண்டபம்-பூத்தொடுக்கும்மண்டபம். அகவயிற்செலீஇ- உள்ளிடத்தேசென்று.

கச. சாயல் - மென்மை. மடந்தை - மாதவியினது.

கரு. வாடியமேனி - தவத்தால் வாடிய மேனியை.

கசு. பொன் - திருமகள்; 'பொன்னேரனையாய்' என்பது முதலியன வயந்தமாலைகூற்று. புகுந்தது - சம்பவித்ததை.

கஎ. உற்றதொன்றுண்டுகொல் - உற்றதாகிய பகைமை ஒன்றுண்டோ.

கஅ. வேத்தியல் - அரசர்க்காடுங் கூத்து; பொதுவியல் - எல்லார்க்கும் ஒப்ப ஆடுங்கூத்து; திறம் - வகை; "வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்து, மாத்திரை யறிந்து மயங்கா மரபி, னாடலும்" சிலப். கச: கசஅ - ௫0.

கசு. பாட்டு - இசை. தூக்கு - தாளங்களின் வழியே வரும் செந்தூக்கு முதலிய எழு தூக்குகள்; "ஒருசீர் செந்தூக் கிருசீர் மதலை, முச்சீர் துணிவு நாற்சீர் கோயி, லைஞ்சீர் நிவப்பே யறுசீர் கழாலே, யெழுசீர் நெடுந்தூக் கென்மனோர் புலவர்" என்பதனாலுணர்க. துணிவு - தாளவறுதி.

(பி - ம்.) அ. 'வசந்த' க. 'அகன்கெழு மன்னக ரலர்படுத் துரையென' க0. 'துறவிற்கு' கஎ. 'நின்னோ டிவ்வூர் நின்றதொன் றுண்டுகொல்'

உ0 பண்ணியாழ்க் கரணமும் பாடைப் பாடலுந்
தண்ணுமைக் கருவியுந் தாழ்தீங் குழலுங்
கந்துகக் கருத்து மடைநூற் செய்தியுஞ்
சுந்தரச் சுண்ணமுந் தூநீ ராடலும்
பாயற் பள்ளியும் பருவத் தொழுக்கமுங்
உரு காயக் கரணமுங் கண்ணிய துணர்தலுங்
கட்டுரை வகையுங் கரந்துறை கணக்கும்
வட்டிகைச் செய்தியு மலராய்ந்து தொடுத்தலுங்
கோலங் கோடலுங் கோவையின் கோப்புங்
காலக் கணிதமுங் கலைகளின் றுணிவு

---

உ0. யாழ்க்கரணம் - யாழுக்குரிய செய்கை. பாடைப் பாடல் - அகநாடகங்களுக்கும் புறநாடகங்களுக்கும் உரிய உருக்கள்.

உக. கருவி - வாச்சியம். குழல் - புல்லாங்குழல்.

உஉ. கந்துகம் - பந்து. மடைநூல் - பாகசாத்திரம்.

உங. சுந்தரச்சுண்ணம் - நிறத்தையுடைய வாசனைப்பொடி; "சுந்தரச் சுண்ணத்து" சிலப். ரு : கருரு.

உச. பாயற்பள்ளி - பாயலிடம். பருவத்தொழுக்கம் - காலங்கட்கேற்ப ஒழுகும் ஒழுக்கம்; பருவம் - இருது.

உரு. காயக்கரணம் - காயத்தாற்செய்யப்படும் அறுபத்து நான்கு வகைச்செய்கை. கண்ணியதுணர்தல் - பிறர் கருதியதை அறிந்துகொள்ளுதல்.

உசு. கட்டுரைவகை - தொடுத்துக்கூறும் சொல்வன்மை. கரந்துஉறை கணக்கு - மறைந்துறையும்வகை; "அடிசில் வினையும் யாழின்றுறையுங், கடிமலர்ச் சிப்பமுங் கரந்துறை கணக்கும், வட்டிகை வரைப்பும் வாக்கின் விகற்பமுங், கற்றவை யெல்லாங் காட்டுமி னமக்கென" பெருங். க. ருச : கசுசு - கூ.

உஎ. வட்டிகை - எழுதுகோல்; "வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவை" என்பர் பின்னும்; ச : ருஎ.

உஅ. கோலம் - அவ்வக்காலங்கட் கேற்பக்கொள்ளும் ஒப்பனை; "இரவிற்கோர், கோலங் கொடியிடையார் தாங்கொள்ள" (சிலப். கூ : ங - ச.) கோப்பு - கோத்தல்.

உகூ. காலக்கணிதம் - சோதிடம்; "ஆயுள் வேதருங் காலக் கணிதரும்" (சிலப். ரு: சச.) கலைகள் - பரத்தையர்க்குரியவென்று நூல்களிற் கூறப்பட்ட யாழ்வாசினைமுதலிய அறுபத்துநான்கினுள் இப்பாட்டில்

(பி - ம்.) உ0. 'பண்ணியாழ்க்கானமும்', 'பண்ணியாழ்த்தானமும்.' உக. 'தாழ்ந்தீங்குழலும்' உரு. 'கண்ணியதுரைத்தலும்' உஅ. 'கோவையுங் கோப்பும்'

௩௦ நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த
வோவியச் செந்நூ லுரைநூற் கிடக்கையுங்
கற்றுத்துறை போகிய பொற்றொடி நங்கை
நற்றவம் புரிந்தது நாணுடைத் தென்றே
யலகின் மூதூ ரான்றவ ரல்லது
௩௫ பலர்தொகு புரைக்கும் பண்பில் வாய்மொழி
நயம்பா டில்லை நாணுடைத் தென்ற
வயந்த மாலைக்கு மாதவி யுரைக்குங்
காதல னுற்ற கடுந்துயர் கேட்டுப்
போதல் செய்யா வுயிரொடு நின்றே
௪௦ பொற்கொடி மூதூர்ப் பொருளுரை யிழந்து

---

முன்னும் பின்னுங் கூறுதொழிந்த கலைகள்; பரத்தையர்க்குரிய கலைகள் அறுபத்து நான்கென்பதைப் பின்வருவனவற்றாலுணர்க: "யாழ்முத லாக வறுபத் தொருநான், கேரிள மகளிர்க் கியற்கையென் றெண்ணிக், கலையுற வகுத்த காமக் கேள்வி" (பெருங். க. ௩௫: அ௪ - ௬); "கலை வலார் நெஞ்சிற் காமமே போன்றும்" (சீவக உக௦எ); "பண்ணுங் கிளையும் பழித்த தீஞ்சொ, லெண்ணெண் கலையோ ரிருபெரு வீதியும்" (சிலப். க௪: கசுசு - எ); "எண்ணான் கிரட்டி யிருங்கலை பயின்ற... மடந்தையர்" சிலப். உஉ: க௩அ - கூ.

௩௦. நன்கனம்வகுத்த - நன்றாக வகுக்கப்பட்ட; "நாணமு முடையு நன்கன நீத்து" (௩: அஅ) எனவும், "நாவிடை நன்னூ னன்கன நவிற்றி" (க௩: உ௪) எனவும், "நாத்தொலை வின்றி நன்கன மறிந்த பின்" (க௩: உசு) எனவும் நன்கனமென்பது இப்பொருள்பட்டு இந்நூ லுள்ளே பயின்றுவருதல் காண்க.

௩க. ஓவியச்செந்நூல் - ஓவியநூல்; இப்பெயருள்ள நூல் ஒன் றுண்டென்பது, "ஓவியநூலுள் நிற்றல் இருத்தல் கிடத்தல் இயங்குத லென்னும் இவற்றின் விகற்பங்கள் பலவுள" (சிலப். அ: உ௩ - சு, அடி யார்.) என்பதனாலறியலாகும்.

௩உ. துறைபோகிய - கற்றவகைகளிற் கைதேர்ந்த.

௩௩ - ௫. நற்றவம்புரிந்தது நாணுடைத்தென்று பலர் கூடி உரைக் கும் வாய்மொழியென்க.

௩சு. நயம்பாடில்லை - அழகுண்டாதலில்லை.

௩அ. காதலன் - கோவலன் கடுந்துயர் - மிக்க துயர்; என்றது கொலையுண்டதை; "கணவற் குற்ற கடுந்துயர்" (உ: ௫௦), "காதல னுற்ற கடுந்துயர்" (உ: சு௩) என்பர் பின்னும்; "கண்டா ளவன்றன் னைக் காணக் கடுந்துயரம்" சிலப். கக: ௩அ.

௪௦. பொருளுரை - புகழுரை.

(பி - ம்.) ௩௪. 'அலகைமூதூர்' ௩சு. 'நலம்பாடில்லை' ௩௯. 'போதல் செல்லாவுயிரோடின்றே'

நற்றொடி நங்காய் நாணுத் துறந்தேன்
காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி
யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா
தின்னுயி ரீவ ரியா ராயி
சரு னன்னீர்ப் பொய்கையி னளியெரி புகுவர்

சக. நங்காயென்றது வயந்தமாலையை.

௬அ - சக. கேட்டு நின்று இழந்து துறந்தேனென்க.

சஉ. கனையெரி - மிக்கநெருப்பு; "கனையெரி யுரறிய மருங்கும்" (புறநா. உ௬.) பொத்தி - மூட்டி; "கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து" புறநா. உசஎ.

ச௩. ஊதுலைக் குருகின் உயிர்த்து - உலையினூதும் துருத்திமூக்கைப் போலவே அழலெழவுயிர்த்து; "காதலர்ப் பிரிந்த நோயோ டெங்கனன், றூதுலைக் குருகி னுயிர்த்தன ளொடுங்கி" (சிலப். ச: ௫அ-௬), "காதலற் கெடுத்த நோயோ டெங்கனள், றூதுலைக் குருகி னுயிர்த்தனள்" ஷை உஉ: க௫க - உ.

சச. இன்னுயிரீவர் - இனியஉயிரைக் கொடுப்பார்; என்றது, காதலரிறந்தமை கேட்டபொழுதே இறப்பரென்றபடி; பாண்டியன் நெடுஞ்செழியனிறப்ப அவன் மனைவியாகிய பெருங்கோப்பெண்டும் உடனே இறந்த சரித்திரம் இங்கே அறியத்தக்கது; அதுவருமாறு: "அரிமா னேந்திய வமளிமிசை யிருந்த, திருவீழ் மார்பிற் றென்னர் கோமான், றயங்கிணர்க் கோதை தன்றுயர் பொறாஅன், மயங்கினன் கொல்லென மலரடி வருடித், தலைத்தா ணெடுமொழி தன்செவி கேளாள், கலக்கங் கொள்ளாள் கடுந்துயர் பொறாஅண், மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத், தன்னுயிர் கொண்டவ னுயிர்தே டினள்போற், பெருங்கோப் பெண்டு மொருங்குடன் மாய்ந்தனள்" (சிலப். உ௫: எஅ - அ௬); இவ்வாறிறத்தலை மூதானந்தமென்பர்; "கயலேர் கண்ணி கணவனொடு முடிய, வியனெறிச் செல்வோர் வியந்துரைத் தன்று", "ஒருயி ராக வுணர்க வுடன்கலந்தோர்க், கிருயி ரென்ப ரிடைதெரி யார் - போரில், விடனேந்தும் வேலோற்கும் வெள்வளையி னாட்கு, முடனே யுலந்த துயிர்" பு - வெ. உ௬உ.

சஉ - ௫. நளியெரி-செறிந்தநெருப்பு; "நன்மா னளிய நறுந்தண் சாரல்" (புறநா. க௫0.) காதலரிறப்பிற் பொய்கையிற் புகுவதுபோலச் செறிந்த நெருப்பிற் புகுவர் பத்தினிப்பெண்டிர்; "பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற, வள்ளித ழவிழ்ந்த தாமரை, நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே" (புறநா. உசசு); கணவரை யிழந்த பத்தினிப்பெண்டிர்க்குப் பொய்கையுந் தீயும் ஒரு தன்மையின வென்றபடி.

சச - ௫. பின்வரும் வாக்கியத்தில் இவ்வடிகளின்கருத்து அமைந்திருத்தல் காண்க: "காதலன் வீயக் கடுந்துய ரெய்திப், போதல் செய்யா வுயிரொடு புலந்து, நளியிரும் பொய்கை யாடுநர் போல, முளியெரி புகூஉ முதுக்குடிப் பிறந்த, பத்தினிப் பெண்டிர்" மணி. கஅ: கக - ௫.

(பி - ம்.) ச௫. "பொய்கையினரி னியவெ

கனியெரி புகாஅ ராயி னன்பரோ
டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர் பரப்புநீர் ஞாலத்
தத்திறத் தாளு மல்லளெம் மாயிழை
௫௦ கணவற் குற்ற கடுந்துயர் பொறாஅண்
மணமலி கூந்தல் சிறுபுறம் புதைப்பக்
கண்ணீ ராடிய கதிரிள வனமுலை
திண்ணிதிற் றிருகித் தீயழற் பொத்திக்
காவலன் பேரூர் கனையெரி மூட்டிய
௫௫ மாபெரும் பத்தினி மகண்மணி மேகலை
யருந்தவப் படுத்த லல்ல தியாவதுந்
திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅ

௪எ. நோற்றுடம்படுவர் - கைம்மை நோன்பை நோற்று உடம்பை வருத்துவார். கைம்மைநோன்பு இன்னதென்பதைப் பின்வரும் மேற்கோள்களாலுணர்க: "வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட, வேளை வெந்தை வல்சி யாகப், பாற்பெய் பள்ளிப் பாயின்று வதியு, முயவற் பெண்டிர்" (புறநா. உ௪௬); "இன்புறு தங்கணவ ரிடரெரி யகமூழ்கத், துன்புறு வனநோற்றுத் துயருறு மகளிரைப்போல்" சிலப். கஅ : ௩௪ - ௫.

௪அ. பரப்புநீர் - கடல்.

௪௯. ஆயிழை - கண்ணகி.

௫க. சிறுபுறம் - பிடர்; "செயத்தகு கோவையிற் சிறுபுற மறைத்து" (சிலப். ௯ : க௦உ.) புதைப்ப - மறைப்ப. கூந்தல் அவிழ்ந்து கிடப்ப வென்றபடி.

௫உ - ௩. முலைதிருகி - இடமுலையை வலக்கையாற்றிருகி; "இட முலை கையாற் றிருகி" (சிலப். உக : ௪௩.) அழற்பொத்தி-அழலைமூட்டி.

௫௪. காவலன் பேரூர் - பாண்டியனது பெரிய ஊராகிய மதுரையை.

௫௫. மாபெரும்பத்தினி - கண்ணகி.

௫௬. அருந்தவப்படுத்தலல்லது - செய்தற்கரிய தவவழியிற் சேர்த்தலையன்றி. யாவதும் - சிறிதும்.

௫எ. திருந்தாச்செய்கைத் தீத்தொழில் - பரத்தைமைத்தொழில்; "கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையு, முள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை, தலைமையாக் கொண்டநின் றன்மையில் வாழ்க்கை" (உ௪ : எஎ - ௯) என்று சித்திராபதியை நோக்கி இராசமாதேவி பரத்தைமையை இழித்துச் சொல்லியதாகப் பின்னுங் கூறுவர்.

௫௫ - எ. மணிமேகலை தவவழியிற் சேர்க்கப்படுவாளன்றிப்பரத்தை (பி - ம்.) ௪எ. 'நோற்றுடன்படுவர்.' ௫உ. 'கண்ணீராட்டிய' ௫௬. 'அருந்தவம்படுத்தலல்லது'

ளாங்கண மன்றியு மாயிழை கேளா
யீங்கிம் மாதவ ருறைவிடம் புகுந்தேன்
சு0 மறவண நீத்த மாசறு கேள்வி
யறவண வடிக ளடிமிசை வீழ்ந்து
மாபெருந் துன்பங் கொண்டுள மயங்கிக்
காதல னுற்ற கடுந்துயர் கூறப்
பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
சுரு பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
தற்றோ ருறுவ தறிகென் றருளி

---

மைத் தொழிலிற் சேர்க்கப்படுவாளல்லள்; "மணிமே கலையை வான்றுய ருறுக்கும், கணிகையர் கோலங் காணா தொழிக" சிலப். உஎ: க0ரு - சு.

ருக. மாதவர் - பௌத்த சங்கத்தார்.

சு0. மறவணம் நீத்த - பாவத்தன்மைகளைத் துறந்த; பாவங்கள் பத்துவகைப்படும்; காயத்திற்றோன்றுவன மூன்றும், சொல்லிற்றோன்றுவன நான்கும், உள்ளத்திற் றோன்றுவன மூன்றுமென; இதனை, "தீவினை யென்பது யாதென வினவின்,...........கொலையே களவே காமத் தீவிழை, வுலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும், பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில், சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும், வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென், றுள்ளந் தன்னி னுருப்பன மூன்றுமெனப், பத்து வகையால்" (மணி. உச: கஉ௩ - ௩க; ௩0 : சுச - எஉ) என்பதனுலுணர்க.

சு௩. கூற - அறவணவடிகட்குக்கூற.

இனி, துக்கம், துக்கநிவாரணம், துக்கோற்பத்தி, துக்கநிவாரண மார்க்கமென்னும் வாய்மைகள் நான்கும் முறையே கூறப்படும்.

சுச. பிறந்தோருறுவது பெருகிய துன்பம் - துக்கம்.

சுரு. பிறவாருறுவது பெரும்பேரின்பம் - துக்க நிவாரணம்.

சுசு. பற்றின் வருவது முன்னது - துக்கோற்பத்தி; "பற்றெனப் படுவது பசைஇய வறிவே" மணி. ௩0: கஉ.

சுசு - எ. பின்னது அற்றோர் உறுவது - துக்கநிவாரணமார்க்கம்.

சுஎ. அறிகென்றருளி - துக்கமுதலிய வாய்மை நான்கினையும் அறிந்து கொள்வாயென்று உபதேசித்து: "துன்பந் தோற்றம் பற்றே காரண, மின்பம் வீடே பற்றிலி காரண, மொன்றிய வுரையே வாய்மை நான் காவது" (மணி. ௩0: கஅசு - அ.) வாய்மை, சத்தியமென்று வழங்கப்படும்.

(பி - ம்.) ருக. 'உறைவிடம்புகுந்து' சுக. 'அறவணரடிகளடியிணை'

யைவகைச் சீலத் தமைதியுங் காட்டி
யுய்வகை யிவைகொளென் றுரவோ னருளினன்
௭0 மைத்தடங் கண்ணார் தமக்குமெற் பயந்த
சித்திரா பதிக்குஞ் செப்பு நீயென
வாங்கவ ளுரைகேட் டரும்பெறன் மாமணி
யோங்குதிரைப் பெருங்கடல் வீழ்த்தோர் போன்று
மைய னெஞ்சமொடு வயந்த மாலையுங்
௭௫ கையற்றுப் பெயர்ந்தனள் காரிகை திறத்தென்.

உ.—ஊரலருரைத்தகாதை முற்றிற்று.

---

௬௮. ஐவகைச்சீலம் - காமம், கொலை, கள், பொய், களவு என்னும் இவ்வைந்தையும் முற்றத்துறத்தல்; "கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையு, முள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை" (உ௪ : ௭௭ - ௮) என்பர் பின்னும்; "சீல நீங்காச் செய்தவத் தோர்க்கு" (உக : ௫௭), "சீலந் தாங்கித் தானந் தலைநின்று" (உ௪ : க௩௭), "தானந் தாங்கிச் சீலந் தலைநின்று" (௩0 : க) என இந்நூலுள்ளே சீலமென்பது பயின்றுவருதல் காண்க.

௬௯. உய்வகை இவைகொள்என்று - பிறப்பிறப்பினின்றும் தப்பும் வகை நால்வகைவாய்மையும் ஐவகைச் சீலமுமாகும்; இவற்றைக் கொள்வாயாகவென்று. உரவோன் - அறவணவடிகள்; உரம் - அறிவு.

௬௪ - ௯. வாய்மையும் சீலமும் இன்றியமையாதன வென்பதை, "வழுவாச் சீலம் வாய்மையிற் கொண்ட, பான்மையின்" (மணி. உக : உ0 - உக) என்பதனுலுணர்க.

௭0. மைத்தடங்கண்ணார் - ஆயத்தார்.

௭உ - ௩. பெறுதற்கரிய மாணிக்கத்தைப் பெரியகடலில் வீழ்த்தியவர்களை யொத்து; "அதுகேட்ட வாசனு நகரமு, மோங்கிய நன்மணி யுறுகடல் வீழ்த்தோர், தம்மிற் றுன்பந் தாநனி யெய்த" (சிலப். ௩0 : உக - ௩0.) மாமணி - நீலமணியுமாம்.

௭௫. கையற்று - செயலற்று. காரிகைதிறத்து - மாதவியிடத்தினின்றும்.

க - ௭௫. நன்னாளில் மாதவிவாராத்துன்பம் மேல்வரச் சித்திராபதி இரங்கி வயந்தமாலையைக்கூவி அலரை மாதவிக்கு உரையென்று சொல்ல, வயந்த மாலை, மாதவியிருந்த மண்டபத்துச்சென்று கண்டு, வருந்தி, அனையாய், கேளாய், உண்டுகொல்! பண்பில்வாய்மொழி நாணுடைத்தென்ற வயந்தமாலைக்கு உரைக்கும் மாதவி, கேட்டுநின்று இழந்து நாணுத்துறந்தேன்; மணிமேகலை தீத்தொழிற் படாஅள்; இன்னுங்கேள்: புகுந்து வீழ்ந்து மயங்கித் துயரைக்கூற, உரவோன் அறிகென்றருளிக் காட்டி இவற்றைக் கொள்ளென்றருளினன்; இதனைக் கண்ணார்தமக்கும் சித்திராபதிக்கும் நீ செப்பென்றுசொல்ல, வயந்த மாலையும்கேட்டு மணியைக் கடலில்வீழ்த்தோர்போன்று கையற்றுப் பெயர்ந்தனளென முடிக்க.

(பி - ம்.) ௬௮. 'சீலத்தமைவுங்' ௭உ. 'ஆங்கவருரை'

மூ ன் றா வ து

# ம ல ர் வ ன ம் பு க் க கா தை.



[மூன்றாவது மலர்வனம்புக்கபாட்டு.]

வயந்த மாலைக்கு மாதவி யுரைத்த
வுயங்குநோய் வருத்தத் துரைமுன் றோன்றி
மாமலர் நாற்றம் போன்மணி மேகலைக்
கேது நிகழ்ச்சி யெதிர்ந்துள தாதலிற்
௫ றந்தையுந் தாயுந் தாநனி யுழந்த
வெந்துய ரிடும்பை செவியகம் வெதுப்பக்
காத னெஞ்சங் கலங்கிக் காரிகை
மாதர் செங்கண் வரிவனப் பழித்துப்

---

௧ - ௨. உரைத்த உரைமுன் தோன்றி - சொல்லிய சொல்லினிடமாக உதித்து.

௪. கன்மங்களாகிய காரணங்கள் தத்தம் பயனைக்கொடுத்தற்குத் தோற்றுதலை, 'ஏது நிகழ்ச்சி' என்பது பௌத்தநூல் வழக்கு; இதனை ஹேதுப்ரபவ தர்மமென்பர்; "ஏது நிகழ்ச்சி யீங்கின் றாதலின்" (௯ : ௫௧), "ஏது நிகழ்ச்சி யாவும் பலவுள" (௧௨ : ௧௦௫), "ஏது நிகழ்ச்சி யாவும் பலவுள" (௨௧ : ௧௬௦) என இந்நூலுள்ளே இப்பெயர் பின்பும் வருதல் காண்க. இஃது 'ஏது' எனவும் வழங்கும். எதிர்ந்துளதாதலின் - தோற்றியதாதலால்; "சுணங்கெதிரிளமுலை" மதுரை. ௪௧௬.

௨ - ௪. மணிமேகலைக்கு ஏது நிகழ்ச்சி மலர்நாற்றம்போல் தோன்றி எதிர்ந்துளதாதலினென இயைக்க.

௫. தந்தையும் தாயும் - கோவலனும் கண்ணகியும். உழந்த - வருந்திய.

௬. வெதுப்ப - சுட. ௭. காரிகை - மணிமேகலை.

௮. மாதர் - காதல்; உரிச்சொல்; "மாதர்காதல்" (தொல். உரி. சூ. ௩௦.) வரிவனப் பழித்து - மையெழுதிய அழகைச்சிதைத்து; "வரி வனப் புற்ற" புறநா. ௩௩.

(பி - ம்.) ௪. 'ஏதுநிகழ்ச்சி செய்திரந்துளது' ௫. 'தாயருந்தாந் துயருழந்த', 'தாழ்துயருழந்த.' ௮. 'வனப்பழிந்து'

புலம்புநீ ருருட்டிப் பொதியவிழ் நறுமல
க௦ ரிலங்கிதழ் மாலையை யிட்டுநீ ராட்ட
மாதவி மணிமே கலைமுக நோக்கித்
தாமரை தண்மதி சேர்ந்தது போலக்
காமர் செங்கையிற் கண்ணீர் மாற்றித்
தூநீர் மாலை தூத்தகை யிழந்தது
கரு நிகர்மலர் நீயே கொணர்வா யென்றலு
மதுமலர்க் குழலியொடு மாமலர் தொடுக்குஞ்
சுதமதி கேட்டுத் துயரொடுங் கூறுங்
குரவர்க் குற்ற கொடுந்துயர் கேட்டுத்
தணியாத் துன்பந் தலைத்தலை யெய்து
உ௦ மணிமே கலைதன் மதிமுகந் தன்னு
ளணிதிகழ் நீலத் தாய்மல ரோட்டிய
கடைமணி யுகுநீர் கண்டன ளுயிற்
படையிட்டு நடுங்குங் காமன் பாவையை

---

க. புலம்புநீருருட்டி - வருத்தத்தால் உண்டாகிய கண்ணீரை உதிர்த்து; தனித்து வீழ்கின்றகண்ணீர்த்துளியுமாம்.

எ - க௦. காரிகை அழித்து மாலையை நீராட்ட.

கஉ. தாமரை: எழுவாய். மதி - மதியை. தாமரைமலர் மாதவி கைக்கும், மதி மணிமேகலை முகத்திற்கும் உவமை.

கங. காமர் - விருப்பம்.

கச. தூய நீர்மையையுடைய மாலையானது கண்ணீரில் நனைந்து தூயதன்மையையிழந்தது.

கரு. நிகர்மலர் - ஒளியையுடைய மலர்; "நீர்வார் நிகர்மலர் கடுப்ப" (அகநா. கக), "அரும்பவிழ் முல்லை, நிகர்மலர் நெல்லொடு தூஉய்" சிலப். க : க - உ.

கசு. மதுமலர்க்குழலி - மணிமேகலை.

கஅ. குரவர்க்கு - தாய் தந்தையர்க்கு.

உஉ. கடைமணி உகுநீர் - கண்மணிக் கடையினின்றும் உகுகின்ற நீர்; "ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுட" சிலப். உ௦ : ருச.

உங. படையை எறிந்துவிட்டுக் காமன் நடுங்குவான்.

(பி - ம்.) க. 'புலம்புநீரூட்டி' க௦. 'இலங்குதண்மாலையை யிடு நீராட்ட', 'இந்நீராட்ட.'

யாடவர் கண்டா லகறலு முண்டோ
௨௫ பேடிய ரன்றோ பெற்றியி னின்றிடி
ளுங்கன மன்றியு மணியிழை கேளா
யீங்கிந் நகரத் தியான்வருங் காரணம்
பாரா வாரம் பல்வளம் பழுநிய
காராளர் சண்பையிற் கௌசிக னென்போ
௩0 னிருபிறப் பாள னொருமக ளுள்ளே
ளொருதனி யஞ்சே னோரா னெஞ்சமோ
டாரா மத்திடை யலர்கொய் வேன்றனை
மாருத வேகனென் பானோர் விஞ்சையன்
றிருவிழை மூதூர் தேவர்கோற் கெடுத்த
௩௫ பெருவிழாக் காணும் பெற்றியின் வருவோன்
றாரன் மாலையன் றமனியப் பூணினன்

---

௨௪. உண்டோ; ஓ: எதிர்மறை.

௨௫. பெற்றியின் - தம் இயற்கைத்தன்மை திரியாமல். நின்றிடின் - இவளை விரும்பாது நிற்பாராயின்.

௨௬. ஏ. மணி. ௨ : ௫அ.

௨௬ - எ. யான்வருங் காரணத்தைக் கேளாய்.

௨அ - ௯. பாராவாரம் - கடல். பழுநிய - முதிர்ந்த; "பெரு வளம் பழுநி" (புறநா. ௧௧௩.) காராளர் - பூவைசியர். சண்பை - ஒரு நகரம்; சீகாழியுமாம்; அங்கநாட்டிற் கங்கைக்கரையிலுள்ளதாகிய சம்பையென்னும் நகரமுமாம்; இவ்வுரைக்குக் காராளரென்பதனைக் காராளரென்பதன் விகாரமாகக் கொள்க; கராளர் - ஒரு சாதியார்.

௨௯. மு. மணி. எ : ௧0௨.

௩௧. ஒருதனி - ஒப்பில்லாததனி; மிக்க தனிமை.

௩௨. ஆராமம் - உபவனம். ௩௩. விஞ்சையன் - வித்தியாதரன்.

௩௪. மூதூர் - காவிரிப்பூம்பட்டினம்.

௩௬ - எ. தாரன் - பூமாலையை யுடையவன். மாலையன் - மணி மாலையையுடையவன். 'தார மாலையன்' எனப் பாடமோதி, மந்தார மாலையையுடையவனெனினுமமையும். தமனியப் பூணினன் - பொற் பூணியையுடையவன். பாரோர் காணு - மக்கள் கண்ணிற்குப்புலப்படாத. பலர் தொழுபடிமையன் - தேவர் பலருந் தொழும் தெய்வவடிவையுடையன். படிமை - தெய்வ வடிவு; மு. "தாரன் மாலையன் றமனியப் பூணி னன், பாரோர் காணுப் பலர்தொழு படிமையன்" சிலப். ௯௫ : ௧௫௭ - அ.

(பி - ம்.) ௨அ. 'பாராவாரப்பல்வளம்' ௨௯. 'காரானசண்பை' ௩௨. அலர்கொய்வேனை'

பாரோர் காணுப் பலர்தொழு படிமைய
னெடுத்தன னெற்கொண் டெழுந்தனன் விசும்பிற்
படுத்தன னாங்கவன் பான்மையே னாயினே
௪௦ னாங்கவ னீங்கெனை யகன்றுகண் மாறி
நீங்கினன் றன்பதி நெட்டிடை யாயினு
மணிப்பூங் கொம்பர் மணிமே கலைதான்
றனித்தலர் கொய்யுந் தகைமைய ளல்லள்
பன்மல ரடுக்கிய நன்மரப் பந்த
௪௫ ரிலவந் திகையி னெயிற்புறம் போகி
னுலக மன்னவ னுழையோ ராங்குளர்

---

௩௩ - ௭. வருவோனும் படிமையனுமாகிய விஞ்சையன்.

௩௮. எடுத்தனன் - எடுத்து. விசும்பிலெழுந்தனனென்க.

௩௯. படுத்தனன் - அகப்படுத்திக்கொண்டான். அவன் பான்மையேனாயினேன் - அவனுடைய இன்பத்தின் பகுதியையுடையேனாயினேன்; "பனியிரு விசும்பிற் றேவர் பான்மையிற் றென்று சொன்னான்" சீவக. ௫௫௩.

௪௦ - ௪௧. ஆங்கவன் - மாருதவேகன். ஈங்கு - இந்நகரத்திடத்து, கண்மாறி எனை அகன்று நீங்கினன் - விழித்த கண் இமைக்கும் அளவிலே மறைந்து என்னைவிட்டு நீங்கினன்; கண்மாறல் - விழித்த கண் இமைக்குமளவிலே மறைதல்; "கண்மா றாடவ ரொடுக்க மொற்றி" (மதுரை. ௬௪௨.) தன்பதி நெட்டிடையாயினும் நீங்கினனெனக் கூட்டுக. சுதமதியை மாருதவேகன் இந்நகரத்தில்விட்டு நீங்கினானென்பதை, "அஞ்செஞ் சாய லராந்தா ணத்துளோர், விஞ்சைய னிட்ட விளங்கிழை யென்றே, கல்லென் பேரூர்ப் பல்லோ ருரையினை" (மணி. ௫: ௨௩ - ௫) என்று உதயகுமரன் கூறியவாற்றானுமுணர்க.

௪௨. மணிப்பூங் கொம்பர் மணிமேகலை - மாணிக்கப் பூங்கொம்பு போலும் மணிமேகலை; எழுவாய்.

இனிப் பூக்கொய்தற்குரிய இடங்கூறுகின்றாள்.

௪௪ - ௫. பலமலர்களை நிரைத்த நல்ல மர நிழலையுடைய இலவந்திகையினது மதிலின் புறத்தே சென்றால்; மரப்பந்தர் - சோலையுமாம். இலவந்திகை - யந்திர வாவி; "நிறைக்குறி னிறைத்துப் போக்குறிற் போக்கும், பொறிப்படை யமைந்த பொங்கில வந்திகை" (பெருங். ௧. ௪௦: ௩௧௧ - ௨); "இலவந்திகை - நீராவியைச் சூழ்ந்த வயந்தச்சோலை; அஃது அரசனும் உரிமையுமாடும் காவற்சோலை" (சிலப். ௧௦ : ௩௦-௩௧) என்பர் அடியார்க்கு நல்லார்.

௪௬. உலகமன்னவன் - சோழன். உழையோர் - பக்கத்திலுள்ளோர்.

(பி - ம்.) ௩௯. 'பான்மையளானேன்' ௪௦. 'ஆங்கவனென்னை' ௪௩. 'கொய்யுந்தன்மையளல்லள்' ௪௪. 'நன்மலர்ப்பந்தர்'

விண்ணவர் கோமான் விழாக்கொ ணன்னாண்
மண்ணவர் விழையார் வானவ ரல்லது
பாடுவண் டிமிரா பன்மரம் யாவையும்
௫0 வாடா மாமலர் மாலைக டூக்கலிற்
கைபெய் பாசத்துப் பூதங் காக்குமென்
றுய்யா னத்திடை யுணர்ந்தோர் செல்லார்
வெங்கதிர் வெம்மையின் விரிசிறை யிழந்த
சம்பாதி யிருந்த சம்பாதி வனமுந்
௫௫ தவாநீர்க் காவிரிப் பாவைதன் றாதை
கவேரனங் கிருந்த கவேர வனமு
மூப்புடை முதுமைய தாக்கணங் குடைய

---

சஎ. நன்னாள் - நன்னாளில்.

சஅ. வானவரல்லது - தேவர் விரும்புதலையன்றி. அல்லது மண்ணவர் விழையாரெனை இயைக்க.

சகூ. தேவர்கள் விரும்பினமையால் மரங்களில் வண்டுகள் இமிரா வாயின; "சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்" முருகு. சங.

சகூ - ௫0. மரம் யாவையும் மாலைகளைத் தூக்கலின்; தூக்குதல்-தொங்கவிடல். வாடாத மலர்மாலைகள் தேவர்களால் நிருமிக்கப்பட்டன; "வாடாமாலை வார்தளிர்ப் பிண்டி வாம" சீவக. ந0கஅ.

௫க. கைபெய்பாசம் - கையினிடத்துக் கொண்டபாசம். மரங்கள் வாடாமாலைகளைத் தூக்குதலால் பூதங்காத்தல் உணரப்பட்டது.

௫உ. உய்யானம் - உத்தியானம்; அரசர் விளையாடுங் காவற்சோலை; "உய்யா னத்தி னுறுதுணை மகிழ்ச்சியும்" சிலப். கச: கஉஎ.

௫ங. வெங்கதிர் - சூரியன்.

௫ச. சம்பாதி - சடாயுவினுடன்பிறந்தவன். காவிரிப்பூம் பட்டினத்திற்கு அருகிலுள்ளதும் சம்பாதிபுரமென்று வழங்கப்படுவதுமாகிய புள்ளிருக்கு வேளூரிறைவனை, ஒரு யோசனை தூரத்திலிருந்து பூக்கொணர்ந்து சம்பாதி பூசித்தானென்று தெரிதலால் அவன்பூக்கொய்தவனம் இந்தச் சம்பாதிவனமாக இருத்தல் கூடுமென்று ஊகிக்கப்படுகின்றது.

௫௫ - சா. தாதையாகிய கவேரன்; "கவேர கன்னிப் பெயரொடு விளங்கிய, தவாக்களி மூதூர்" கூ: ௫உ - ந. என்பர் பின்னும்

௫எ. மூ. அகநா. எ: ச. முதுமைய - முதுமையையுடைய. தாக்கணங்கு - தீண்டிவருத்துந் தெய்வம்; "தாக்கணங்கு, தானைக்கொண்டன்ன துடைத்து" (குறள். க0அஉ), "வெம்முது பேய்க்கென் னுயிர் கொடுத்தேன்" என்று பின்னும் வருதல் காண்க; கூ: கந0.

௫ச - எ. சம்பாதிவனமும் கவேரவனமும் தாக்கணங்குடையன.

(பி - ம்.) ௫உ. 'சம்பாவனமும்'

யாப்புடைத் தாக வறிந்தோ ரெய்தா
ரருளு மன்பு மாருயி ரோம்பு
௬௦ மொருபெரும் பூட்கையு மொழியா நோன்பிற்
பகவன தாணையிற் பன்மரம் பூக்கு
மூவவன மென்பதொன் றுண்டத னுள்ளது
விளிப்பறை போகாது மெய்புறத் திடூஉம்
பளிக்கறை மண்டப முண்டத னுள்ளது
௬௫ தூநிற மாமணிச் சுடரொளி விரிந்த
தாமரைப் பீடிகை தானுண் டாங்கிடி
னரும்பவிழ் செய்யு மலர்ந்தன வாடா

௫௮. யாப்புடைத்தாக - உறுதியுடைத்தாக; யாப்பு - உறுதி; "யாப்பறை மாக்க ளியல்பிற் கொள்ளார்" சிலப். ௧௪ : ௩௦.

௫௯. அருள் - அன்புகாரணத்தால் தோன்றும் அளி. அன்பு - அருட்கு முதலாகி மனத்தின்கண் நிகழும் நேயம்.

௬௦. பூட்கை - மேற்கோள்; "அறத்தாறு நுவலும் பூட்கை" புறநா. ௯.

௬௧. பகவனது ஆணையின் - புத்தனது கட்டளையினாலே.

௬௨. உள்ளது - உள்ளிடத்தது.

௬௪. அதனுள்ளது - அம்மண்டபத்தின் உள்ளிடத்தது.

௬௩ - ௪. விளிப்பு அறைபோகாது - ஓசை வெளிப்போகாமல். மெய் புறத்து இடூஉம் - தன்னைச்சார்ந்தாருடம்பைமட்டும் புறத்தே தோன்றுவிக்கும். பளிக்கறைமண்டபம் - பளிக்குமண்டபம். தன்னுட் புகுந்தவர்களுடைய ஓசையை வெளிப்படுத்தாமல் அவர்களுருவத்தை மட்டும் வெளிப்படுத்துவதென்று அப்பளிங்கு மண்டபத்தின் தன்மை கூறியவாறு. விளிப்பறை: இருபெயரொட்டுமாம்; அறை - ஓசை.

௬௨ - ௪. அதன் உள்ளதாகிய மண்டபமெனக் கூட்டுக.

௬௫ - ௬. மணிச்சுடரொளிவிரிந்ததாமரைப்பீடிகை - மாணிக்கச் சோதி பரந்த பதுமபீடம்; என்றது புத்தன் பாதபீடத்தை; புத்தன் பாதத்தை மணிபத்மமென்றலும், அதனை வழிபடுவோர் அதுபற்றி, 'ஓம் மணிபத்மேஹூம்' என்ற மந்திரத்தை ஜபித்தலும் பௌத்தசமய மரபு.

௬௬. ஆங்கு இடின் - அப்பீடத்தே இட்டால்.

௬௪ - ௬. உள்ளதாகிய பீடிகையென்க.

௬௭. அவிழ்செய்யும் - மலர்தலைச் செய்யும்.

௬௭ - ௮. தொல்யாண்டு கழியினும் வாடா மூசா வென்க. காலம் தொன்மையதாதலின், 'தொல்யாண்டு' என்றார்.

(பி - ம்.) ௬௨. 'அதினுள்ளது'

சுரும்பின மூசா தொல்யாண்டு கழியினு
மறந்தே னதன்றிற மாதவி கேளாய்
எ0 கடம்பூண்டோர் தெய்வங் கருத்திடை வைத்தோ
ராங்கவ ரடிக்கிடி னவரடி தானுறு
நீங்கா தியாங்கணு நினைப்பில ராயிடி
னீங்கிதன் காரண மென்னை யென்றியேற்
சிந்தை யின்றியுஞ் செய்வினை யுறுமெனும்
எரு வெந்திற னோன்பிகள் விழுமங் கொள்ளவுஞ்
செய்வினை சிந்தை யின்றெனின் யாவது
மெய்தா தென்போர்க் கேது வாகவும்
பயங்கெழு மாமல ரிட்டுக் காட்ட
மயன்பண் டிழைத்த மரபின ததுதா
அ0 னவ்வன மல்ல தணியிழை நின்மகள்
செவ்வனஞ் செல்லுஞ் செம்மை தானிலண்

---

எ0. கடம்பூண்டு - முறைமையால் மேற்கொண்டு; "நிழல்வாய் நேமி, கடம்பூண் டுருட்டுங் கௌரியர்" (சிலப். கரு : க - உ.) ஓர் தெய்வம் - ஒரு தெய்வத்தை.

எக. அவர் - அத்தேவருடைய. அடிக்கு ஆங்கு இடின் - அடியின் பொருட்டு (மலரை) அப்பீடத்தே இட்டால். அவரடிதானுறும் - (அம் மலர்) அத்தேவருடைய அடியை அடையும்.

எஉ. நினைப்பிலராய் இடின் யாங்கணும் நீங்காது.

எச - ரு. சிந்தையின்றியும் செய்வினை யுறுமெனும் வெந்திறல் நோன்பிகள் - மனமில்லாதிருக்கவும் அறமும் பாவமுமுளவாகுமென்று சொல்லுகின்ற வெவ்விய திறலையுடைய விரதிகள். விழுமங்கொள்ளவும் - வருத்தங்கொள்ளவும்.

எசு - எ. சிந்தை யின்றெனிற் செய்வினை யாவதும் எய்தாது என்போர்க்கு ஏதுவாகவும் - மனமில்லையாயின் அறமும்பாவமும் சிறிதும் உளவாகாவென்று கூறுவோர்க்குக் கருவியாகவும்.

எச - எ. மனமுளதாயவழி வினையுமுளதாமென்பதும், மனமிலதாய வழி வினையுமிலதாமென்பதுமாகிய இவற்றை, ௩கசு, ௩கஎ-ஆம் திருக்குறள்களாலும் அவற்றிற்குப் பரிமேலழகரெழுதிய உரையாலும் உணர்க.

எஅ. பயம் - பயன். எகூ. அது - அப்பீடிகை.

அக. செவ்வனஞ் செல்லும் - நேராகச் செல்லும்; வேறாகச் செல்லுமென்றுமாம்; "திருமக ளிருக்கை செவ்வனங் கழிந்து" சிலப். சு : கஉஎ.

(பி - ம்.) சுஅ. 'சுரும்புமூசா' சுகூ. 'மறந்தேனிதன்றிறமாதவி மகள் கேள்' எக. 'ஆங்கவனடிக்' எஅ. 'பைங்கெழுமாமலரிட்டுக் காட்டி'

மணிமே கலையொடு மாமலர் கொய்ய
வணியிழை நல்லா யானும் போவலென்
றணிப்பூங் கொம்ப ரவளொடுங் கூடி
௮௫ மணித்தேர் வீதியிற் சுதமதி செல்வுழிஇச்
சிமிலிக் கரண்டைய னுழைகோற் பிரம்பினன்
றவலருஞ் சிறப்பி னராந்தா ணத்துளோ
ஞணமு முடையு நன்கன நீத்துக்
காணு வுயிர்க்குங் கையற் றேங்கி
௯0 யுண்ணு நோன்போ டுயவ லியானையின்
மண்ணு மேனியன் வருவோன் றன்னை
வந்தீ ரடிகளும் மலரடி தொழுதே
னெந்த மடிக ளெம்முரை கேண்மோ
வழுக்குடை யாக்கையிற் புகுந்த நும்முயிர்

௮௪. அவளொடும் - மணிமேகலையோடும்.

௮௬. சிமிலிக்கரண்டையன் - உறியிலே வைத்த குண்டிகையை யுடையன்; "கல்பொளிந் தன்ன விட்டுவாய்க் கரண்டைப், பல்புரிச் சிமிலி நாற்றி" (மதுரை. ௪௮௨ - ௩.) நுழைகோற் பிரம்பினன் - நுண்ணிதாகத் திரண்ட பிரம்பையுடையன்.

௮௭. தவலருஞ் சிறப்பின்அராந்தாணத்துளோன் - கேடில்லாத மேன்மையையுடைய அராந்தாணத்தேயுள்ளான்; அராந்தாணம் - அருகத்தானம்; என்றது சினாலயத்தை; "அஞ்செஞ் சாய லராந்தா ணத்துள்" மணி. ௫ : ௨௩.

௮௯. காணுவுயிர்க்குங் கையற்றேங்கி - நுண்ணிய உடம்பையுடைய உயிர்கட்கும் நடத்தல் இருத்தல் கிடத்தல் நிற்றல் முதலிய தன் றொழில்களால் துன்பமிகழுமோவென்று செயலற்று ஏங்கி.

௯0. உயவல் - வருந்துதலையுடைய; "உயவற் பாண" புறநா. ௬௯.

௯௧. மண்ணுமேனியன் - கழுவாத மேனியையுடையன்; "கழுவா வுடலம்" (ஆளுடைய பிள்ளையார்திருவந். ௬, ௨௮); "மண்ணுவுடம்பு" (தக்க. ௨௧௧.) வருவோன் றன்னைநோக்கி.

௯௩. கேண்மோ - கேளும்; ஓ: அசைநிலை; "முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ", "மாமறை மாக்கள் வருங்குலங் கேண்மோ" (௧௩ : ௫௬, ௯௩) என இந்நூலுள்ளே பின்பு வருதல் காண்க.

௯௪. அழுக்குடையாக்கையென்றான், மண்ணுமேனியாதலால்.

(பி - ம்.) ௮௬. 'நீர்மலி கரண்டைய னுழைத்தோற் பிரம்பினன்'. ௮௭. 'அராந்தாணம்', 'அராந்தானம்.' ௯௪.'புகுந்தது', 'புகுந்து.'

கூரு புழுக்கறைப் பட்டோர் போன்றுளம் வருந்தா
இம்மையு மறுமையு மிறுதியி லின்பமுந்
தன்வயிற் றருஉமென் றலைமக னுரைத்தது
கொலையுமுண்டோ கொழுமடற் றெங்கின்
விளைபூந் தேறலின் மெய்த்தவத் தீரே
கoo யுண்டு தெளிந்திவ் யோகத் துறுபயன்
கண்டா லெம்மையுங் கையுதிர்க் கொண்மென
வுண்ணு நோன்பி தன்னொடுஞ் சூளுற்
றுண்மென விரக்குமோர் களிமகன் பின்னருங்

---

கூரு. புழுக்கறைப்பட்டோர் - புழுங்கச்செய்யும் அறையில் அகப் பட்டோர்.

கூச - ரு. நம்முயிர் பட்டோர்போன்று உளம் வருந்தாதவண்ணம்.

கூசு - எ. இம்மைப்பயன் முதலிய மூன்றையும் தன்வயிற்றருஉந் (கூஎ) தேறலெனவும் (கூக), உரைத்ததாகிய (கூஎ) தேறலெனவும் (கூக) இயைக்க; தருஉந் தலைமகனென இயைப்பினுமமையும்.

கoo. யோக - மருந்து; சேர்க்கையுமாம்.

கoக. எம்மையும் கையுதிர்க்கொண்மென - தேறலையன்றி எம்மையும் அகற்றிவிடுமென்று. சீலமில்லாதவரைக்காணின், அவரோடு பேசாமல் அவரைப் போகும்படி கையசைத்துக் குறிப்பித்தல் சைனமுனிவர்க்கு இயல்பு; இப்படியே ''மையறு படிவத்து மாதவர் புறத்தெனைக், கையுதிர்க் கோடலின்'' (ரு : ருச - ரு) எனப் பின்னும் வருதல் காண்க.

கoஉ. உண்ணுநோன்பி - இரண்டு உவாவும் அட்டமியும் முட்டுப் பாடும் பட்டினிவிட்டுண்ணும் விரதி; என்றது சைனமுனிவனை; '' பட்டினி நோன்பிகள் '' (சிலப். கரு : கசுச.) சூளுற்று - சபதஞ்செய்து.

கoந. உண்மென - உண்ணுமென்று. ஓர்களிமகன் பின்னரும் - ஒரு கட்குடியன்பின்னே நிற்போரும்.

அசு - கoந. கரண்டையன், பிரம்பினன், உளோன் என்பன உண்ணு நோன்பிக்கு அடை; '' துறக்கங் கூடினுந் துறந்திவ ணீங்கும், பிறப்போ வேண்டேன் யானெனக் கூறி, யார்த்த வாய னூர்க்களி மூர்க்கன், செவ்வழிக் கீதஞ் சிதையப் பாடி, யவ்வழி வருமோ ரந்த ணாளனைச், செல்ல லாணை நில்லிவ ணீயென, வெய்தச் சென்று வைதவண் விலக்கி, வழுத்தினே முண்ணுமிவ் வடிசுறுந் தேறலைப், பழித்துக் கூறுநின் பார்ப்பனக் கணமது, சொல்லா யாயிற் புல்லுவென் யானெனக், கையலைத் தோடுமோர் களிமகற் காண்மின் '' பெருங். க. சo : அஅ - கூஅ.

(பி - ம்.) கூரு. ' போன்று வருந்தா ' கூஎ. ' தன்மையிற்றருஉம் ' கoக. ' கைவிதிர்க்கொண்மென ' கoஉ. ' நோன்பியைத் '

கணவிர மாலையிற் கட்டிய திரள்புயன்
௧௦௫ குவிமுகி ழெருக்கிற் கோத்த மாலையன்
சிதவற் றுணியொடு சேணோங்கு நெடுஞ்சினைத்
ததர்வீழ் பொடித்துக் கட்டிய வுடையினன்
வெண்பலி சாந்த மெய்ம்முழு தூரீஇப்
பண்பில் கிளவி பலரொடு முரைத்தாங்
௧௧௦ கழூஉம் விழூஉ மரற்றுங் கூஉந்
தொழூஉ மெழூஉஞ் சுழலலுஞ் சுழலு
மோடலு மோடு மொருசிறை யொதுங்கி
நீடலு நீடு நிழலொடு மறலு
மைய லுற்ற மகன்பின் வருந்திக்
௧௧௫ கையறு துன்பங் கண்டுநிற் குநருஞ்
சுரியற் றாடி மருள்படு பூங்குழற்
பவளச் செவ்வாய்த் தவள வாணகை
யொள்ளரி நெடுங்கண் வெள்ளிவெண் டோட்டுக்
கருங்கொடிப் புருவத்து மருங்குவளை பிறைநுதற்

---

௧௦௪. கணவிரமாலை - அலரிமாலை; "கணவிர மாலை கைக்கொண் டென்ன" மணி. ௫ : ௫௮.

௧௦௬. சிதவற்றுணி - சிதரினசீரை.

௧௦௬ - ௭. சினைத் ததர் வீழ்பு - கிளைகளிலுள்ள செறிந்த சுள்ளிகள்; வீழ்பு - சுள்ளிகளுக்கு ஆகுபெயர்; ததர் - கொத்துமாம்; "சிதர்நனை முருக்கின் சேணோங்கு நெடுஞ்சினைத், ததர்" சிறுபாண். ௨௫௪ - ௫.

௧௦௮. வெண்பலி - வெண்ணீறு. சாந்தம் - சந்தனம். உரீஇ - உருவி; பூசி.

௧௧௧. சுழலலுஞ் சுழலும் - சுழலுதலையுஞ் செய்வன். இவ்வாறு பின்வருவனவற்றிற்கும் இப்படியே பொருள் கொள்க; "இயங்கலு மியங்கு மயங்கலு மயங்கும்" சிலப். ௨௨ : ௧௫௪.

௧௧௪. மையலுற்றமகன் - பித்தன். ௧௧௬. தாடி - மோவாய்.

௧௧௮. வெள்ளிவெண்டோடு - சங்கினாற்செய்த காதணி.

௧௧௯. கருங்கொடிப் புருவம் - கரிய ஒழுங்காகிய புருவம்; "கருங்கொடிப் புருவ மேரு" (சீவக. ௬௫௮); இதனை, வடமொழியில் ப்ரூலதா என்பர்.

(பி - ம்.) ௧௦௪. 'கணவிரை', 'கணவிரிமாலை கட்டியதிரணையன்.' ௧௦௭. 'பொழித்துக்' ௧௦௮. 'உதீஇ' ௧௧௦. 'அரற்றினுமரற்றும்' ௧௧௧. 'சுழலினுஞ்சுழலும்' ௧௧௨. 'ஓடினுமோடும்' ௧௧௩. 'நீடினுநீடும்' ௧௧௪. 'மையலுற்று' ௧௧௮. 'வெள்ளைவண்டோட்டுக்'

௧௨0 காந்தளஞ் செங்கை யேந்திள வனமுலை
யகன்ற வல்கு லந்நுண் மருங்கு
லிகந்த வட்டுடை யெழுதுவரிக் கோலத்து
வாணன் பேரூர் மறுகிடைத் தோன்றி
நீணில மளந்தோன் மகன்முன் னாடிய
௧௨௫ பேடிக் கோலத்துப் பேடுகாண் குநரும்
வம்ப மாக்கள் கம்பலை மூதூர்ச்
சுடும ணோங்கிய நெடுநிலை மனைதொறு
மையறு படிவத்து வானவர் முதலா

௧௨௧. அந் நுண் மருங்குல் - அழகிய நுண்ணிய இடை.

௧௨௨. வட்டுடை - முழந்தாளளவாக உடுக்கும் உடை விசேடம்; "வட்டுடைப் பொலிந்த வண்ணக் கலாபமொடு, பட்டுச்சுமந் தசைந்த பரவை யல்குல்...வாசவ தத்தையை" (பெருங். ௨. ௪: ௧௨௨ - ௯.) எழுதுவரிக் கோலம் - கொங்கை முதலியவற்றில் எழுதிய பத்திக்கீற்று; "எழுதுவரிக் கோல முழுமெயு முறீஇ" சிலப். ௫: ௨௨௯.

௧௨௩ - ௪. வாணன் - வாணாசுரன்; ஊர் - சோநகரம்; நீணில மளந்தோன் - கண்ணன்; மகன் - காமன்; பிரத்தியும்நன்; "வாணன் பேரூர் மறுகிடை நடந்து, நீணில மளந்தோ னாடிய" சிலப். ௬: ௫௪ - ௫.

௧௨௫. பேடு - புறநாடகம் பதினொன்றனுள் ஒன்று; அப்பதினொன்றையும் அவற்றை நிகழ்த்தியவர்களையும் பின்வரும் வெண்பாவா லுணர்க: "கடையமயி ராணிமரக் கால்விந்தை கந்தன், குடைதுடிமா லல்லியமற் கும்பஞ் - சுடர்விழியாற், பட்டமதன் பேடுதிருப் பாவை யரன் பாண்டரங்கங், கொட்டியிவை காண்பதினோர் கூத்து." இப் பேடு உழை காரணமாக வாணனாற் சிறைவைக்கப்பட்ட தன் மகன் அநிருத்தனைச் சிறைமீட்டுக் காமன் சோநகரத்தாடிய ஆடல். உழை - வாணன்மகள்.

௧௧௬ - ௨௫. "ஆண்மை திரிந்த பெண்மைக் கோலத்துக், காம னாடிய பேடி யாடலும்" (சிலப். ௬: ௫௬ - ௭), "சுருளிடு தாடி மருள்படு பூங்குழ, லரிபரந் தொழுகிய செழுங்கய னெடுங்கண், விரிவெண் டோட்டு வெண்ணகைத் துவர்வாய்ச், சூடக வரிவளை யாடமைப் பணைத் தோள், வளரிள வனமுலைத் தளரியன் மின்னிடைப், பாடகச் சீறடி யாரியப் பேடி" சிலப். ௨௭: ௧௮௧ - ௬.

௧௨௬. வம்பமாக்கள் - புதியோர்; "வம்ப மாக்க டம்பெயர் பொறித்த" (சிலப். ௫: ௧௧௧.) கம்பலை - முழக்கம். மூதூர் - மூதூரில்.

௧௨௭. சுடுமண் ஓங்கிய - செங்கலாற் செய்யப்பட்டு உயர்ந்த; "சுடும ணோங்கிய நெடுநகர் வரைப்பு" (பெரும்பாண். ௪0௫); "சுடும ணெடுமதில்" (பு - வெ. 113); "சுடும ணேறா......கடிமனை" சிலப். ௧௪: ௧௪௯ - ௭.

௧௨௮. படிவம் - தெய்வவடிவம்.

(பி - ம்.) ௧௨௫. 'பேடிகாண்குநரும்'

வெவ்வகை யுயிர்களு முவமங் காட்டி
௧௩0 வெண்சுதை விளக்கத்து வித்தக ரியற்றிய
கண்கவ ரோவியங் கண்டுநிற் குநரும்
விழவாற்றுப் படுத்த கழிபெரு வீதியிற்
பொன்னுண் கோத்த நன்மணிக் கோவை
யையவி யப்பிய நெய்யணி முச்சி
௧௩௫ மயிர்ப்புறஞ் சுற்றிய கயிற்கடை முக்காழ்
பொலம்பிறைச் சென்னி நலம்பெறத் தாழச்
செவ்வாய்க் குதலை மெய்பெறா மழலை
சிந்துபு சின்னீ ரைம்படை நனைப்ப

---

௧௨௯ - ௩௧. சுதை - சுண்ணச்சாந்து. வித்தகர் - சிற்பாசாரிகள்; "வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச், சித்திரச் செய்கைப் படாம்" (மணி: ௩: ௧௬௭ - அ.) விளக்கத்தையுடைய சுதையாலியற்றிய ஓவியம்; ஓவியம் - சித்திரம். "எவ்வகைச் செய்தியு முவமங் காட்டி, நுண்ணிதி னுணர்ந்த நுழைந்த நோக்கிற், கண்ணுள் வினைஞரும்" (மதுரை. ௫௧௬ - அ); "மயனெனக் கொப்பா வகுத்த பாவையி, னீங்கே னியான்" மணி. ௨௧: ௧௩௨ - ௩.

௧௩௨. விழவு ஆற்றுப்படுத்த - விழவை வழிப்படுத்தின; நடத்திய என்றபடி; "முருகாற்றுப் படுத்த வுருகெழு வியனகர்" முருகு. ௨௪௪.

௧௩௪. ஐயவி அப்பிய நெய்யணி முச்சி - வெண்சிறுகடுகையப்பிய நெய்யையணிந்த மயிர்முடி; பேய்தீண்டி வருத்தாவண்ணம் குழந்தைகளின் மயிர்முடியில் நெய்யணிந்து வெண்சிறுகடுகை அப்புதல் மரபு. வெண்சிறுகடுகிற்குக் கடிப்பகையென்னும் பெயர்வந்ததற்குக் காரணம் இதுவே; கடி - பேய்; "குறுநடைப் புதல்வர்க்குக், காவற் பெண்டிர் கடிப்பகை யெறிந்து, தூபங் காட்டித் தூங்குதுயில் வதியவும்" (௭: ௫௭ - ௯) எனவும், "அரவாய்க் கடிப்பகை யையவிக் கடிப்பகை" (௭: ௭௩) எனவும் பின்பு வருதல் காண்க. சந்திராபீடனென்பவனது தலையில் வெண்சிறுகடுகு அப்பியிருந்ததாக, காதம்பரி என்னும் வடநூலினும் கூறப்பட்டுள்ளதென்பர். முச்சி - உச்சியில்.

௧௩௫ - ௬. கயிற்கடை - கொக்குவாய்; கோக்கும் வாயுமாம்; (கொக்கியென்று வழங்குகின்றது); "கயிற்கடை யொழுகிய காமர் தூமணி, செயத்தகு கோவை" (சிலப். ௬: ௧0௧ - ௨.) முக்காழ் - மூன்று கோவையாகிய முத்துவடம். பிறைச்சென்னி - பிறை வடிவமாகிய ஆபரணத்தின் இரண்டு கோடுகளில். முக்காழ் தாழவென்க.

௧௩௭. 'மெய்பெறா மழலை' என்று ஈண்டுக்கூறியதுபோல, "வினையாமழலை" என்று பின்னுங்கூறுவர்; ௪: ௯௯.

௧௩௮. ஐம்படை-ஐம்படைத்தாலி; காத்தற்கடவுளான திருமாலின் சங்கம் சக்கரம் கதை கட்கம் சார்ங்கம் என்னும் ஐந்து ஆயுதங்களின்வடிவமாகஅமைப்பது; இதனைப்பஞ்சாயுதமென்றும், ஐந்தாவது நாளில் பிள்ளை

வற்றங் காவாச் சுற்றுடைப் பூந்துகி
௧௪௦ ன்றுடுத்தமணிக் கோவை யுடுப்பொடு துயல்வரத்
தளர்நடை தாங்காக் கிளர்பூட் புதல்வரைப்
பொலந்தேர் மீமிசைப் புகர்முக வேழத்
திலங்குதொடி நல்லார் சிலர்நின் றேற்றி
யாலமர் செல்வன் மகன்விழாக் கால்கோள்
௧௪௫ காண்மி னோவெனக் கண்டுநிற் குநரும்
விராடன் பேரூர் விசயனும் பேடியைக்
காணிய சூழ்ந்த கம்பலை மாக்களின்

---

களுக்கு இதனைத் தாரணஞ் செய்தல் மரபென்றும் கிருஹ்யசூத்ரம் என்னும் வடநூலில் இதற்குவிதி உள்ள தென்றுங் கூறுவர். "அம ளித் துஞ்சு மைம்படைத் தாலிக், குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல் வர்" (எ: ௫௬ - எ) என்பர் பின்னும்; இது தாலியெனவும் தாலி யைம்படை யெனவும் வழங்கும்; "தாலி களைந்தன்று மிலனே பால் விட், டயினியு மின்றயின் றனனே" (புறநா. ௭௭); "எழிலார் திரு மார்பிற் கேற்கு மிவையென், றழகிய வைம்படையு மாரமுங் கொண்டு, வழுவில் கொடையான் வயிச்சிரவணன், றொழுதுவனாய் நின்றான் றாலேலோ, தூமணி வண்ணனே தாலேலோ" (பெரியாழ்வார்திரு மொழி, ௧. ௩: ௫); "தாலி யைம்படை தவழு மார்பிடை" கம்ப. நாடு. ௫அ.

௧௪௧ - ௩. பொற்றேரின் மேலுள்ள யானையிற் புதல்வரை யேற்றி; "பொற்சிறு தேர்மிசைப் பைம்பொற் போதக, நற்சிறா ரூர் தலின்" சீவக. அ௬.

௧௪௪. ஆலமர் செல்வன் - சிவபெருமான்; மகன் - முருகக்கட வுள்; "ஆலமர் செல்வன் புதல்வன் வரும்" (சிலப். ௨௪: 'செறிவளை') சிறாரை முருகக்கடவுளாக எண்ணினர். விழாக் கால்கோள் - விழா வின் தொடக்கம்.

௧௪௫. என - என்று சொல்ல.

௧௩௨ - ௪௫. வீதியில் நல்லார்சிலர், கோவையையும் முச்சியையும் குதலையையும் மழலையையும் பூணையுமுடைய புதல்வரை வேழத்து மூக் காழ் தாழச் சின்னீர் நனைப்பத் துகில் துயல்வர ஏற்றிக் காண்மினோ வென்றுசொல்ல, அதனைக்கண்டு நிற்பவர்களும் என்க.

௧௪௬. பேரூர் - பேரூரில். விசயனும் பேடியை - அருச்சுனனாகிய பேடியை.

௧௪௭. காணிய - காண. கம்பலைமாக்கள் - வேறுசிலகாட்சி கண்டு முழங்கித் திரியுமவர்; "கம்பலை மாக்கள் கணவனைத்தாங் காட்ட" சிலப். ௧௯: ௨௧.

(பி - ம்.) ௧௪௦. 'எடுப்பொடு' ௧௪௨. 'தேரதன்மிசை' ௧௪௩. 'சிலர் நன்றேற்றி' ௧௪௬. 'விசயப்பேடியை' ௧௪௭. 'கம்பலமாக்களின்'

மணிமே கலைதனை வந்துபுறஞ் சுற்றி
யணியமை தோற்றத் தருந்தவப் படுத்திய
கரு௦ தாயோ கொடிய டகவில ளீங்கிவண்
மாமலர் கொய்ய மலர்வனந் தான்புகி
னல்லிள வன்ன நாணு தாங்குள
வல்லுந கொல்லோ மடந்தை தன்னடை
மாமயி லாங்குள வந்துமுன் னிற்பன
கருரு சாயல்கற் பனகொலோ தைய றன்னுடன்
பைங்கிளி தாமுள பாவைதன் கிளவிக்
கெஞ்சல கொல்லோ விசையுந வல்ல
வென்றிவை சொல்லி யாவரு மினைந்துகச்
செந்தளிர்ச் சேவடி நிலம்வடு வுறுமற்
கசு௦ குரவமு மரவமுங் குருந்துங் கொன்றையுந்
திலகமும் வகுளமுஞ் செங்கால் வெட்சியு
நரந்தமு நாகமும் பரந்தலர் புன்னையும்

---

கசஅ. வந்து புறஞ்சுற்றி - பின்னரும் கண்டுநிற்குநரும் காண்குநரும் கண்டுநிற்குநரும் கண்டுநிற்குநரும் வந்துபுறத்தேசூழ்ந்து.

கசக - ரு௦. அணி அமை தோற்றத்து - ஆபரணங்களில்லாத தோற்றத்தையுடைய; "உப்பமை காமத்துப்பின்" (க௦எ) எனவும், "நிகரமைந்த முழந்தாளும்" (கஎரு) எனவும் சீவகசிந்தாமணியில் 'அமை' என்பது இப்பொருளில் வருதல்காண்க. அருந்தவப் படுத்திய - அரிய தவநெறியிற் சேர்த்த. தாயோ - மாதவியோ. "மணிமேகலை, யருந்தவப் படுத்த லல்லதி யாவதுந், திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள்" (உ: ருரு - எ) என்று மாதவி முன்பு கூறியிருத்தல் காண்க.

கரு௧. இவள் - மணிமேகலை.

கருஉ - ந. ஆங்குள அன்னம் நாணுது மடந்தை தன்னடை வல்லுந கொல்லோவென இயைக்க.

கருஎ. இசையுந அல்ல - ஒப்பனவல்ல.

கருஅ. இனைந்து உக - வருந்திச்சிந்த.

கருகூ. சேவடியும் நிலமும் வடுவுறுமல்; மெல்ல நடந்தாளென்றபடி.

கசு௦. குரவம் - குராமரம். மரவம் - வெண்கடப்பமரம்.

கசுக. திலகம் - மஞ்சாடிமரம். வகுளம் - மகிழ்.

கசுஉ. நரந்தம் - நாரத்தை. நாகம் - சுரபுன்னை; "நனைசினையன நகுவிரையன நலனுடையன நாகம்" நீலகேசி, பதி. கக.

(பி - ம்.) கரு௦. 'கொடியவள்' கருரு. 'சாயல கொல்லோ' கசு௦. 'குந்தமுங் கொன்றையும்'

பிடவமுந் தளவமு முடமுட் டாழையுங்
குடசமும் வெதிரமுங் கொழுங்கா லசோகமுஞ்
௧௬௫ செருந்தியும் வேங்கையும் பெருஞ்சண் பகமு
மெரிமல ரிலவமும் விரிமலர் பரப்பி
வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச்
சித்திரச் செய்கைப் படாம்போர்த் ததுவே
யொப்பத் தோன்றிய வுவவனந் தன்னைத்
௧௭௦ தொழுதனள் காட்டிய சுதமதி தன்னொடு
மலர்கொய்யப் புகுந்தனண் மணிமே கலையென்.

௩.—மலர்வனம்புக்ககாதை முற்றிற்று.

---

௧௬௩. பிடவம் - குட்டிப்பிடவமென்னுங்கொடி. தளவம் - செம்முல்லை (குறிஞ்சி. ௮௦, ௩.); "பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை" (ஐங்குறு. ௪௪௭); "புதன்மிசைத் தளவி னிதன்முட் செந்நனை, நெருங்குகுலைப் பிடவமோ டொருங்குபிணி யவிழ" (அகநா. ௨௩); "குருதிக் கூரெயிறு கூத்தியர்கட் கொண்ட கொடித்தளவமே" (சீவக. ௧௬௫௧.) முடம் - வளைவு.

௧௬௪. குடசம் - வெட்பாலை விசேடம்; வெதிரம் - மூங்கில்; "குடசமும் வெதிரமுங் கொழுங்கொடிப் பகன்றையும்" சிலப். ௧௩: ௧௫௭.

௧௬௬. எரிமலர்இலவம்-நெருப்பைப்போலச் சிவந்த பூவையுடைய இலவமரம்; "எரியுரு வுறழ விலவ மலர" கலி. ௩௩.

௧௬௮. சித்திரச் செய்கைப்படாம் - சித்திரத்தொழில் அமைந்த துகில்.

௧௭௦. தொழுதனள் காட்டிய - வனதேவதையைத் தொழுது உவவனத்தைக் காட்டிய; புத்தனது பாதபீடிகையுள்ள வனமாதலால் அதனைத் தொழுதனளென்றுமாம்.

௧ - ௧௭௧. மாதவியுரைத்த உரைமுன்றோன்றி மணிமேகலைக்கு ஏது நிகழ்ச்சி எதிர்ந்துளதாதலின் அக்காரிகை வெதுப்பக் கலங்கி அழித்து உருட்டி ஆட்ட மாதவி நோக்கி மாற்றிக் கொணர்வாயென்றலும் அதனைக்கேட்டுத் துயரொடுகூறும் சுதமதி, 'கண்ணீரைக் கண்டனனாயிற்காமன் நடுங்கும்; ஆடவர் அகறலுமுண்டோ; நின்றிடிற் பேடியரன்றோ; அன்றியும், யான் இந்நகரத்துவருங்காரணம் கேளாய்; கொய்வேனை விஞ்சையன் எடுத்தனன்; எழுந்தனன், படுத்தனன், ஆயினேன்; அவன் ஈங்கு என்னையகன்று தன்பதிநீங்கினன்; ஆதலால், மணிமேகலை தன்மையளல்லள்; போகின், உழையோராங்குளர்; செல்லார், எய்தார்; உவவனமென்பதொன்றுண்டு; உண்டு; உண்டு; மாபினது அதுதான்; செம்மைதானிலள்; யானும் போவல்' என்று கூடிச்செல்வுழி, பின்னரும் நிற்குநரும் காண்குநரும் நிற்குநரும் நிற்குநரும் மணிமேகலையைச் சுற்றி இனைந்துக, மணிமேகலை சுதமதிதன்னொடு மலர்கொய்யப் புகுந்தனளென முடிக்க.

நான்காவது

# பளிக்கறைபுக்ககாதை.

[நான்காவது மணிமேகலை உதயகுமரனைக்கண்டு
பளிக்கறைபுக்கபாட்டு.]

பரிதியஞ் செல்வன் விரிகதிர்த் தானைக்
கிருள்வளைப் புண்ட மருள்படு பூம்பொழிற்
குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட
மழலை வண்டினம் நல்லியாழ் செய்ய
ரு வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்
மயிலா டரங்கின் மந்திகாண் பனகாண்
மாசறத் தெளிந்த மணிநீ ரிலஞ்சிப்

---

க. செல்வனுடைய கதிர். கதிர்த்தானைக்கு - கிரணங்களாகிய சேனைக்கு.

ங. தும்பி குழலிசை கொளுத்திக் காட்ட - தும்பிகள் வேய்ங்குழலின் ஓசையைப் பொருத்திக்காட்ட; தும்பி - வண்டின் கிளைகளுள் ஒரு சாதி.

ங - ச. இவ்வடிகளின் பொருள், "கொம்பர்த் தும்பி........நல்லியாழ் செய்ய" (கக : ருஎ - அ) என்று இந்நூலுட் பின்பு வந்திருத்தல் காண்க.

ரு. வெயில் நுழைபு அறியாப் பொதும்பர் - ஞாயிற்றின் கதிர் தோன்றிய காலத்தும் படுகின்றகாலத்தூமுட்படச் சிறிதும் செல்லுதலறியாத இளமரக்கா; குயில் நுழை பொதும்பர் - இலை நெருக்கத்தாலே குயில்கள் நுழைந்து செல்லும் இளமரக்கா. மு. "வெயினுழைபறியாக் குயினுழை பொதும்பர்" பெரும்பாண். ஙஎச.

க - சு. பொழிலிற் காட்டச் செய்யமயில் ஆடுகின்ற பொதும்பராகிய அரங்கில் இருந்து காண்பனவாகிய மந்திகளைக் காண்பாயாக.

எ. மணிநீரிலஞ்சி - பளிங்குபோலும் நீரையுடைய பொய்கை; நீல மணிபோலும் நீரையுடைய இலஞ்சியென்றுமாம். இலஞ்சி - இலஞ்சியில்.

(பி - ம்.) க. 'பருதி' உ. 'வளைவுண்டன', 'வளைப்புண்டென மருள்படும்.' ங - ச. 'கொழுந்திக்காட்ட மழலைவரிவண்டினம்' சு. 'மந்திகாண'

பாசடைப் பரப்பிற் பன்மல ரிடைநின்
றொருதனி யோங்கிய விரைமலர்த் தாமரை
௧0 யரச வன்ன மாங்கினி திருப்பக்
கரைநின் ருலு மொருமயி றனக்குக்
கம்புட் சேவற் கனைகுரன் முழவாக்
கொம்ப ரிருங்குயில் விளிப்பது காணா
யியங்குதேர் வீதி யெழுதுகள் சேர்ந்து
௧௫ வயங்கொளி மழுங்கிய மாதர்நின் முகம்போல்
விரைமலர்த் தாமரை கரைநின் றோங்கிய
கோடுடை தாழைக் கொழுமட லவிழ்ந்த
வால்வெண் சுண்ண மாடிய திதுகாண்
மாதர் நின்கண் போதெனச் சேர்ந்து
௨0 தாதுண் வண்டின மீதுகடி செங்கையி

---

௧. ஒரு தனி - ஒப்பிலாததனி ; "ஒப்புடைய தானையு ளொரு தனியனாகி" (சீவக. ௨அ0) ; "ஒருதனி நின்றாய்" (௪ : ௬௬), "விரை... ஒருதனி யிருந்த திரு" (௬௯ : ௩௩ - ௪), "உலக வறவியி னொருதனி யேறி" (௧௭ : அ௬), "ஒருதனி...மன்னவன்" (௨௫ : ௨0௪) என, 'ஒரு தனி' என்பது இந்நூலுள்ளே பயின்றுவருதல் காண்க.

அ - ௯. "குளனணி தாமரைக் கொழுமலர் நாப்ப, ணொருதனி யோங்கிய திருமலர்" மணி. ௧௫ : ௭௫ - ௬.

௧௧. ஆலும் - ஆடும் ; ஆரவாரித்தழைக்குமென்றுமாம் ; "மால்வரைச் சிலம்பின் மகிழ்சிறந் தாலும், பீலி மஞ்ஞையின்" பெரும்பாண். ௩௩0 - ௩௧.

௧௨. கம்புள் - சம்பங்கோழி. சேவலினது குரல் முழவொலியாக.

௧௩. கொம்பர் - கொம்பரில். இருங்குயில் - கரியகுயில். விளிப்பது - பாடுதல் ; "விளியாதான் கூத்தாட்டு" (திரி. ௧௧), "விளித்த வின்னமிர் துறழ்கீதம்" (சீவக. ௧௬௪௧) என்புழி விளித்தல் இப்பொருள் பட்டு வருதல் காண்க.

௧௪. எழுகின்ற துகள். ௧௫. மாதர் - அழகையுடைய.

௧௭. சங்குடைந்தாற் போலுந் தாழையின் ; சூளா. நாடு. ௧௪.

௧அ. வால்வெண்சுண்ணம் - தூய வெள்ளிய சுண்ணம் ; "ஊர்தி வால்வெள் ளேறே" (புறநா. ௧.) இது - இத்தாமரைமலரினை.

௧௪ - அ. துகள் சேர்ந்து ஒளி மழுங்கிய நின்முகம்போற் சுண்ண மாடியதாகிய இத்தாமரைமலரினைக் காண்பாயாக.

(பி - ம்.) ௯. 'இருமலர்த்' ௧௧.'கரைநின்றாடும்' ௧௭.'தோடுடைத்தாழைக் கொழுமடல் வீழ்ந்த'

னஞ்சிறை விரிய வலர்ந்த தாமரைச்
செங்கயல் பாய்ந்து பிறழ்வன கண்டாங்
கெறிந்தது பெறாஅ திரையிழந்து வருந்தி
மறிந்து நீங்கு மணிச்சிரல் காணெனப்
௨௫ பொழிலும் பொய்கையுஞ் சுதமதி காட்ட
மணிமே கலையம் மலர்வனங் காண்புழி
மதிமருள் வெண்குடை மன்னவன் சிறுவ
னுதய குமர னுருகெழு மீதூர்
நீயா னடுங்க நடுவுநின் றோங்கிய
௩௦ கூம்புமுதன் முறிய வீங்குபிணி யவிழ்ந்து
கயிறுகால் பரிய வயிறுபாழ் பட்டாங்
கிதைசிதைந் தார்ப்பத் திரைபொரு முந்நீ
ரியங்குதிசை யறியா தியாங்கணு மோடி
மயங்குகா லெடுத்த வங்கம் போலக்

---

௨௩. அது : சாதியொருமை. இரை - முன்பு கௌவியிருந்த உணவு.

௨௧ - ௩. அஞ்சிறைவிரிய எறிந்தெனஇயைக்க.

௨௪. மணிச்சிரல் - நீலமணிபோன்ற சிச்சிலிப்பறவை ; “புலவுக் கயலெடுத்த பொன்வாய் மணிச்சிரல்” சிறுபாண். ௧௮௧.

௧௯ - ௨௪. நின்கண்ணைப் போதென்றெண்ணி உண்ணவருகின்ற வண்டினங்களைக் கடியும் நின்செங்கைபோலத் தாமரைமலரிற்பாய்ந்து பிறழ்வனவாகிய செங்கயல்களைக்கண்டு எறிந்து அவற்றைப்பெறாமல் இரையையுமிழந்து வருந்தி மீண்டு நீங்கும் சிரலைக் காண்பாயாக.

௨௭. மருள் : உவமவுருபு ; “மதிமருள் வெண்குடை” (புறநா. ௧௭௪.) மன்னவன் - சோழன்.

௨௮ - ௯. உருகெழுமீது ஊர் நீயான் - அச்சம்பொருந்திய மேலிடத்தே ஊர்ந்திருக்கின்ற மாலுமி ; நீயானென்பதற்குப்பொருள் மாலுமியென்பதை, “ஆழ்கடற் பௌவத் தருங்கல மியக்கு, நீயான் போல” (பெருங். ௧. ௪௯ : ௯ - ௧௦) என்பதனாலுணர்க.

௩௦. கூம்பு முதல் முறிய - பாய்மரம் அடியிலே முறியும்படி.

௩௦ - ௩௧. வீங்கு பிணி அவிழ்ந்து கயிறு கால் பரிய - இறுகின பிணிப்பவிழ்ந்து பாய்கட்டின கயிறு அறுபட.

௩௧ - ௨. வயிறு பாழ்பட்டு இதை சிதைந்து ஆர்ப்ப - நடுவிடம் பாழாகிப் பாய் கிறண்டு ஒலிப்ப.

௩௪. சுழல்காற்றினால் அலைக்கப்பட்ட மரக்கலம்.

(பி - ம்.) ௨௧.‘இரிய’ ௨௮.‘மூதூர்’ ௨௯. ‘மீயான்’ ‘நனி தானடுங்க’ ௩௦. ‘முரிய’

௩௫ காழோர் கையற மேலோ ரின்றிப்
பாகின் பிளவையிற் பணைமுகந் துடைத்துக்
கோவியன் வீதியுங் கொடித்தேர் வீதியும்
பீடிகைத் தெருவும் பெருங்கலக் குறுத்தாங்
கிருபாற் பெயரிய வுருகெழு மூதா
௪௦ ரொருபாற் படாஅ தொருவழித் தங்காது
பாகும் பறையும் பருந்தின் பந்தரு
மாதுல மாக்களு மலவுற்று விளிப்ப
நீல மால்வரை நிலனொடு படர்ந்தெனக்
கால வேகங் களிமயக் குற்றென

---

௩௫. காழோர் - குத்துக்கோற்காரர்; "காழோர், கடுங்களிறு கவ ளங் கைப்ப" (மதுரை. ௬௫௮ - ௯.) கையற - செயலற. மேலோரின்றி- பாகரின்றி; என்பது பாகரை வீசியென்றபடி.

௩௬. பாகின் பிளவையிற் பணைமுகம் துடைத்து - பாகனாலுண் டாகிய பிளவையினையுடைய பரியமுகத்தைக் கையாற்றுடைத்து; பிளவை - அங்குசத்தாற் பிளக்கப்பட்ட புண்; பாகனுடைய உடற்பிள வாலென்றுமாம்; சூ௱ம. பாயிரம், ௧௦.

௩௭. கோவியன்வீதி - இராசப்பெருந்தெரு. கொடித்தேர்வீதி - கொடியணிந்த தேரோடும் வீதி.

௩௮. பீடிகைத்தெரு - கடைத்தெரு. பெருங்கலக்கு உறுத்து - பெரிய கலக்கத்தையுண்டாக்கி.

௩௭ - ௮. மு. சிலப். ௫ : ௪௦ - ௪௪. ௩௯. மு. மணி. பதி. ௩௨.

௪௧. பாகு - பாகன். பறை - பறையடிப்போர்; யானைக்குமுன்பு பறை அடிக்கப்படுதல் மரபு; இதனை, "நிறையழி கொல்யானை நீர்க் குவிட் டாங்குப், பறையறைந் தல்லது செல்லற்க வென்னா, விறையே தவறுடை யான்" (கலி. ௫௬) என்பதனாலுணர்க.

௪௨. ஆதுல மாக்கள் - மிக்க வறுமையையுடையார். அலவுற்று - சுழன்று; "நறையும் விரையு மோச்சியு மலவுற்று" (குறிஞ்சி. ௭.) விளிப்ப - கூப்பிட.

௪௩. இல்பொருளுவமை. நிலனொடு - பூமியில்.

௪௪. காலவேகமென்பது அவ்யானையின் பெயர்; கட்டியங்கார னுடைய பட்டத்துயானையை அசனிவேகமென்றும், தடமித்தன் பட் டத்து யானையை வளையசுந்தரமென்றும் சீவகசிந்தாமணியிற் கூறி யிருத்தல் காண்க. களிமயக்குற்றென - மதமயக்குற்றுத் திரிந்ததாக; களி : மதத்திற்கு ஆகுபெயர்.

௨௯ - ௪௪. நீயான் நடுங்கக் கூம்புமுதல்முறியக் கயிறுகால்பரிய

(பி - ம்.) ௩௬. 'பாகின விழவிற்' ௩௭. 'கோவியல்' ௪௨. 'வாதுலமாக்களும்' ௪௪. 'காலமேகம்'

சரு விடுபரிக் குதிரையின் விரைந்துசென் றெய்திக்
கடுங்கண் யானையின் கடாத்திற மடக்கி
யணித்தேர்த் தானையொ டரசிளங் குமரன்
மணித்தேர்க் கொடிஞ்சி கையாற் பற்றிக்
காரலர் கடம்ப னல்ல னென்ப
ருo தாரங் கண்ணியிற் சாற்றினன் வருவோ

---

இதைசிதைந்தார்ப்ப முந்நீரில் யாங்கணும் ஓடி மயங்குகின்ற வங்கம்போலக்காழோர்கையறப் பாகன்முதலியோர் அலவுற்று விளிப்ப மூதூரில் மேலோரின்றித் துடைத்துப் பெருங்கலக்குறுத்து ஒருபாற்படாது ஒருவழித்தங்காது நீலமால்வரை படர்ந்தெனக் காலவேகம் களிமயக்குற்றதாகவென முடிக்க.

வங்கம் யானைக்கும் காற்று மதத்திற்கும் உவமை. வங்கம்போலக் காலவேகம் களிமயக்குற்றென வெனவியையும். இப்படியே, "வீங்குபிணி நோன்கயி றரீஇயிதை புடையூக், கூம்புமுதன் முருங்க வெற்றிக் காய்ந்துடன், கடுங்காற் றெடுப்பக் கல்பொரு துரைஇ, நெடுஞ்சுழிப் பட்ட நாவாய் போல, விருதலைப் பணில மார்ப்பச் சினஞ்சிறந்து, கோலோர்க் கொன்று மேலோர் வீசி, மென்பிணி வன்றொடர் பேணாது காழ்சாய்த்துக், கந்துநீத் துழிதருங் கடாஅ யானையும்" (மதுரை. ௩எஅ - அ௩) எனவந்திருத்தல் காண்க.

சரு. பரிக்குதிரை; பரி - செலவு; "பகைப்புலங் கவர்ந்த பாய்பரிப்புரவி" மதுரை. கூஅக.

சகூ. கடுங்கண் - தறுகண்மை; அது கடுகக் கொல்லுதல்; "நெடுஞ்சுழிப் பட்ட கடுங்கண் வேழத், துரவுச்சினந் தணித்து" (மலைபடு. ௩உரு - கூ.) கடாத்திறம் - மதத்தின்கூறுபாடுகள்.

சஅ. 'கொடிஞ்சி - தாமரைப்பூவடிவமாகப்பண்ணித் தேர்த்தட்டின் முன்னே நடுவது' என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்; "கொடிஞ்சி நெடுந்தேர்" (மதுரை. எருஉ): "நெடுந்தேர்க் கொடிஞ்சி" (புறநா. எஎ); இதுதாமரைமொட்டு வடிவமுள்ள தென்றும் கூறுவர்.

சகூ. காரலர் கடம்பன் அல்லனென்பதை - கார்காலத்து அலர்கின்ற கடம்பின் அலராற்றொடுக்கப்பட்ட மாலையையுடைய முருகக்கடவுளல்லனென்பதை; "கார்நறுங் கடம்பின்" (புறநா. உ௩) என்பதனாற் கடம்பு கார்காலத்திற்கு உரியதென்பதும், "பராஅரை மராஅத், துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்" (முருகு. கo - கக) என்பதனால் முருகக்கடவுள் கடப்பமாலையையுடையரென்பதும் அறியப்படும்.

ருo. ஆரங்கண்ணி - ஆத்திமாலை; இது சோழர்களுக்குரிய அடையாளமாலை; "ஆரங் கண்ணிச் சோழன்" சிலப். பதிகம், கஉ.

சகூ - ருo. அழகாலும் ஆண்மையாலும் உதயகுமரனை முருகக்கடவுளென்றெண்ணிக் கடப்பமாலையின்மையானும் ஆத்திமாலையுண்மையானும் அவனைச் சோழன்மகனென்று கண்டோர்துணிந்தமையின் இவ்வாறு கூறப்பட்டது.

உஎ-ருo. மன்னவன்சிறுவன், உதயகுமரன், அரசிளங்குமரன், சென்

ளுடக மடந்தையர் நலங்கெழு வீதி
யாடகச் செய்வினை மாடத் தாங்கட்
சாளரம் பொளித்த கால்போகு பெருவழி
வீதி மருங் கியன்ற பூவணைப் பள்ளித்
௫௫ தகரக் குழலா டன்னொடு மயங்கி
மகர யாழின் வான்கோடு தழீஇ
வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவையி
னெட்டி குமர னிருந்தோன் றன்னை
மாதர் தன்னொடு மயங்கினை யிருந்தோ

றெய்தி அடக்கிப் பற்றி அல்லனென்பதைச்சாற்றித் தானையொடு வருவோனென்க.

௫௧. நாடகமடந்தையர் - நாடகக்கணிகையரது. வீதி - வீதியில்.

௫௨. ஆடகம் - நால்வகைப் பொன்னுள் ஒன்று. செய்வினை - செய்தொழில். மாடத்தாங்கண் - மாடத்திடத்தே.

௫௩. கால்போகுபெருவழி - காற்றுச்செல்லும் பெரியவழி, கால் போகு பெருவழியாகிய பொளித்தசாளரம்.

௫௪. வீதி மருங்கு இயன்ற - வீதியின் பக்கத்தே இயற்றிய. பூ அணைப்பள்ளி - மலரணையாகிய படுக்கையில்.

௫௫. தகரம் - மயிர்ச்சாந்து. தகரக்குழலாளென்றது, ஒருகணிகையை.

௫௬. மகரயாழ் - நால்வகையாழுள் ஒன்று; அது பதினேழு நரம்புடையது. கோடு - யாழ்த்தண்டு; "அங்கோட்டுச் செறிந்த வவிழ்ந்து வீங்கு திவவு" (சிறுபாண். ௨௨௨); "கருங்கோட்டுச் சிறியாழ்" (நெடு நல். ௭௦.) தழீஇ - தழுவி.

௫௭. வட்டிகை - எழுதுகோல்; "வட்டிகைச் செய்தியும்" (௨ : ௨௭) என்றார் முன்னும்.

௫௮. எட்டி - வைசியர்பெறும் பட்டப் பெயர்; "எட்டிப் பூப்பெற் றிருமுப் பதிற்றியாண், டொட்டிய செல்வத் துயர்ந்தோ னாயினன்" (௨௨ : ௧௧௩ - ௪) என்பர் பின்னும்; "எட்டி குமர னினிதி னியக்கு, மின்னொலி வீணைப் பண்ணொலி வெரீஇ" (பெருங். ௧. ௪௦ : ௧௧௬ - ௭); "எட்டி காவிதிப் பட்டந் தாங்கி" (ஷை ௨. ௩ : ௧௪௪); "எட்டி சாயல னிருந்தோன் றனது" (சிலப். ௯ : ௧௬௩); "எட்டி காவிதி யென்பன தேய வழக்காகிய சிறப்புப் பெயர்" (தொல். தொகை. சூ. ௧௨) என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

௫௯. மயங்கினை இருந்தோய் - மயங்கியிருந்தோய்.

(பி - ம்.) ௫௩. 'சாளரமொழித்த', 'சாரளமொழிந்த.' ௫௫. 'தாதவிழ் குழலாள்' ௫௬. 'மாதர்வீணையின்'

சுo யாதுநீ யுற்ற விடுக்க ணென்றலு
மாங்கது கேட்டு வீங்கிள முலையொடு
பாங்கிற் சென்று தான்றொழு தேத்தி
மட்டவி ழலங்கன் மன்ன குமரற்
கெட்டி குமர னெய்திய துரைப்போன்
சுரு வகைவரிச் செப்பினுள் வைகிய மலர்போற்
றகைநலம் வாடி மலர்வனம் புகூஉ
மாதவி பயந்த மணிமே கலையொடு
கோவல னுற்ற கொடுந்துயர் தோன்ற
நெஞ்சிறை கொண்ட நீர்மையை நீக்கி
எo வெம்பகை நரம்பி னென்கைச் செலுத்திய

---

சுo. இடுக்கண் - துன்பம்.

ருo - சுo. அங்ஙனம் வருவோன் வீதியில் மாடத்துப் பள்ளியிற் குழலாடன்னெடு மயங்கித் தழீஇப் பாவையினிருந்தோன்றன்னே, இருந்தோய், நீயுற்ற இடுக்கண் யாதென்றலுமென்க.

எட்டிகுமரன் வீதிமருங்கியன்ற சாளரச்சேக்கையிலிருந்தமையின் உதயகுமரன் அவனைக்கண்டான்.

சுஉ. பாங்கு - முறைமை ; பக்கமெனலுமாம். தொழுது - பணிந்து.

சுங. மட்டு - தேன். சுச. எய்தியது - நேர்ந்ததை.

சுo - சுச. என்றலும் அதுகேட்டு எட்டிகுமரன் கணிகையொடுஞ் சென்று தொழுது ஏத்தி மன்னகுமரற்கு உரைப்போன்.

சுரு. செப்பினுள் வைகியமலர் புழுக்கத்தால் வாடும் ; "மடை மாண் செப்பிற் றமிய வைகிய, பெய்யாப் பூவின் மெய்சா யினளே" (குறுந். க); "வகைவரிச் செப்பினுள் வைகிய கோதையேம்" (கலி. சுஅ : கரு); பெருங். க. நங : எஅ - ஆம் அடியின் குறிப்பைப்பார்க்க.

சுசு. தகைநலம் - மிக்கவழகு.

சுஎ - அ. பயந்த - பெற்ற. மணிமேகலையைக் கண்டவுடன் எட்டி குமரனுக்குக் கோவலனடைந்ததுன்பம் நினைவிற்கு வந்தமையின், 'மணிமே கலையொடு, கோவல னுற்ற கொடுந்துயர் தோன்ற' என்றாள்; இப்படியே, "இளங்கோன் கண்ட விளம்பொற் பைங்கொடி..........உருவி லாளனெ டுருவம் பெயர்ப்ப" (ரு : க - சு) என்பர் பின்னும்.

சுகூ. நெஞ்சு இறைகொண்ட நீர்மையை - மனம் தங்குதல் கொண்ட தன்மையை ; "வண்டிறை கொண்ட கமழ்பூம் பொய்கை" மதுரை. உருங.

எo. பகைநரம்பு - நின்றநரம்பிற்கு ஆருவதும் மூன்ருவதுமாகிய நரம்புகள் ; "நின்ற நரம்பிற் காறு மூன்றுஞ், சென்றுபெற நிற்பது கூட மாகும்" (சிலப். அ : நங - ச, உரை,மேற்.) ; கூடம் - பகை.

திதுயா னுற்ற விடும்பை யென்றலு
மதுமலர்த் தாரோன் மனமகிழ் வெய்தி
யாங்கவ டன்னையென் னணித்தே ரேற்றி
யீங்கியான் வருவே னென்றவற் குரைத்தாங்
௭௫ கோடுமழை கிழியு மதியம் போல
மாட வீதியின் மணித்தேர் கடைஇக்
காரணி பூம்பொழிற் கடைமுகங் குறுகவத்
தேரொலி மாதர் செவிமுத லிசைத்தலுஞ்
சித்திரா பதியோ டுதய குமரனற்
௮௦ றன்மேல் வைத்த வுள்ளத் தாளென
வயந்த மாலை மாதவிக் கொருநாட்
கிளந்த மாற்றங் கேட்டே ளாதலி
னாங்கவன் றேரொலி போலு மாயிழை

---

௬௪ - ௭௧. உரைப்போன் மலர்போல் நலம்வாடி வனம்புகூஉம் மணிமேகலையொடு கோவலனுற்ற துயர்தோன்ற அத்துயரம் நீர்மையை நீக்கி என் கையைப் பகைநரம்பிற் செலுத்தியது; யானுற்ற இடும்பை இதுவென்றலு மென்க.

௭௨. தாரோன் - உதயகுமரன். முனிவருடைய உறைவிடத்தை நீங்கி மலர்வனத்திற்குச் சென்ற மணிமேகலையை இனி எளிதிற் பெறலா மென்று மகிழ்ந்தான்.

௭௩. அவள்தன்னை - மணிமேகலையை.

௭௪. அவற்கு - எட்டிகுமரற்கு.

௭௫. கிழியுமதியம் - கிழிதற்குக் காரணமாகிய மதியம். மதியம் போல - சந்திரன்போல; கலைநிரம்பினமையின், உதயகுமரனுக்கு மதி உவமையாயிற்று; "நாள்வாய் நிறைந்த நகைவெண்மதி செல்வ தொத்தான்" (சீவக. ௪௫௪.) மாடங்கட்கு மழையையும், தேருக்கு மதியத்தையும் உவமையாக்கினும் பொருந்தும்.

௭௬. கடைஇ - செலுத்தி; "காலியக் கன்ன கதழ்பரி கடைஇ" மதுரை. ௪௪0.

௭௭. கடைமுகம் - வாயிலிடம். குறுக - அடைய.

௭௮. மாதர் - மணிமேகலை. செவிமுதல் - செவியிடம்.

௭௧ - ௮. என்றலும் மகிழ்வெய்தி, 'அவளை என் தேரேற்றி இங்கு வருவேன்' என்று அவனுக்குரைத்து மதியம்போலத் தேரைக் கடைஇப் பொழிலின் கடைமுகங்குறுக, அத்தேரொலி செவிமுதலிசைத்தலு மென்க.

௮௨. கிளந்த - சொல்லிய. ௮௩. ஆயிழை : விளி.

(பி - ம்.) ௭௫. 'கிழிக்கும்'

யீங்கென் செவிமுத லிசைத்ததென் செய்கென
அரு வமுதுறு தீஞ்சொ லாயிழை யுரைத்தலுஞ்
சுதமதி கேட்டுத் துளக்குறு மயில்போற்
பளிக்கறை மண்டபம் பாவையைப் புகுகென்
றொளித்தறை தாழ்கோத் துள்ளகத் திரீஇ
யாங்கது தனக்கோ ரைவிலின் கிடக்கை
கூ௦ நீங்காது நின்ற நேரிழை தன்னைக்
கல்லென் றானையொடு கடுந்தேர் நிறுத்திப்
பன்மலர்ப் பூம்பொழிற் பகன்முளைத் ததுபோற்
பூமரச் சோலையும் புடையும் பொங்கருந்
தாமரைச் செங்கண் பரப்பினன் வரூஉ
கூரு மரசிளங் குமர ருருமி லொருசிறை
யொருதனி நின்று யுன்றிற மறிந்தேன்

அச. என்செய்கு - யாதுசெய்வேன்.

அரு. அமுதுறு தீஞ்சொ லாயிழை - மணிமேகலை.

எக - அரு. உதயகுமரன் என்மேல் வைத்த உள்ளத்தானென்று வயந்தமாலை சித்திராபதியோடுற்று முன்னொருநாள் மாதவிக்குக் கிளந்த மாற்றத்தை நான் கேட்டேன்; ஆதலின், ஆயிழாய், என் செவிமுத லிசைத்த ஒலி, அவன் தேரொலிபோலும்; இதற்கு யான் யாதுசெய்வே னென்று மணிமேகலை யுரைத்தலுமென்க.

அகா. துளக்குறுமயில் - தளர்ச்சியுற்ற மயில்.

அஎ. மண்டபத்தில். பாவையை - மணிமேகலையை. புகுக என்று.

அஅ. இரீஇ - இருக்கச்செய்து.

அகூ. ஐந்துவிற்கிடை நீளத்தே நிற்றல் மரபு; "ஐவிலி னகல நின் றங் கடிதொழு திறைஞ்சி ஞற்கு" (சீவக. கஎ௦ச), "இருந்த மன்னவற் கெழுகோ லெல்லையுட், பொருந்தல் செல்லாது புக்கவ னிறைஞ்ச" (க. சஎ: ௩ - ச) என்று எழுகோலெல்லைகூறுவர், பெருங்கதை நூலாசிரியர்.

அகூ - கூ௦. கேட்டு மண்டபத்திற் புகுகவென்று பாவையையொளித்துத் தாழ்கோத்து இருத்தி அதுதனக்கு ஐந்துவிற்கிடக்கையில் மயில் போல நின்ற நேரிழையாகிய சுதமதிதன்னை.

கூக. கடுந்தேர்: கடுமை - விரைவு. கூஉ. பகல் - சூரியன்.

கூ௩. பொங்கர் - சண்டுக் கட்டுமலை; மரக்கிளையென்றுமாம்.

கூச. பரப்பினன் - பரப்பி.

கூரு. ஒருசிறை - ஒருபக்கம்; "வானவ ருறையும் பூசா னொரு சிறை" சிலப். க௦: கஅ.

கூகா. திறம் - இயல்பு.

(பி - ம்.) அரு. 'அமுதூறு' அஅ. 'தாட்கோத்து', 'தாட்கட் கோத்து.'

வளரிள வனமுலை மடந்தை மெல்லிய
றளரிடை யறியுந் தன்மையள் கொல்லோ
விளையா மழலை விளைந்து மெல்லியன்
௧௦௦ முளையெயி றரும்பி முத்துநிரைத் தனகொல்
செங்கய னெடுங்கண் செவிமருங் கோடி
வெங்கணை நெடுவேள் வியப்புரைக் குங்கொன்
மாதவ ருறைவிட மொரீஇமணி மேகலை
தானே தமியளிங் கெய்திய துரையெனப்
௧௦௫ பொதியறைப் பட்டோர் போன்றுளம் வருந்தி
மதுமலர்க் கூந்தற் சுதமதி யுரைக்கு
மிளமை நாணி முதுமை யெய்தி
யுரைமுடிவு காட்டிய வுரவோன் மருகற்

---

௯௭. மெல்லியல் - மணிமேகலை.

௯௮. தளரிடை - ஆடவர் காமத்தாற்றளர்ந்த சமயத்தை ; இடை-காலம் ; "உடையோர் போல விடையின்று குறுகி" புறநா. ௫௪.

௯௯. "விளையா மழலையின் விரித்துரை யெழுதி" சிலப். ௮: ௯௭.

௧௦௦. "முளைவள ரிளநகையே முழுமதி புரைமுகமே" (சிலப். ௭ : ௧௯), "முளையிள வெண்பன் முதுக்குறை நங்கை" ஷை ௧௫: ௨௦௨.

௧௦௨. வெங்கணை - விருப்பத்தைச செய்யும் அம்பு.

௧௦௩. மாதவர் - சங்கத்தார் ; அறவணவடிகளென்றுமாம். ஒரீஇ-நீங்கி.

௧௦௪. தமியள் - தனித்தவளாய்.

௯௦ - ௧௦௪. தாணையொடு தேரைப் புறத்தே நிறுத்திப் பொழிலிற் பகல் முளைத்ததுபோல் வருங்குமரன், சுதமதியைக் கண்டு, 'ஒருசிறை தனி நின்றாய், உன்றிறமறிந்தேன் ; மணிமேகலை அறியுந்தன்மையள் கொல்லோ ; அவள் முளையெயிறு முத்துநிரைத்தனகொல் ; அவள்கண்கள் வேள் வியப்புரைக்குங்கொல் ; அவள் மாதவருறைவிடத்தை யொரீஇத் தமியளாய் இங்கு எய்தியதற்குக் காரணமுரை' என்று கேட்ப வென்க.

௧௦௫. பொதியறைப்பட்டோர் - துவாரமில்லாத கீழறையில்அகப் பட்டோர் ; "பொதியறைப் பட்டோர் போன்றுமெய் வருந்தி" (மணி. ௧௯ : ௮) ; "போதார் பிறவிப் பொதியறை யோரென" சிலப். ௧௦ : ௧௧௧.

௧௦௭ - ௮. இளமைநாணி முதுமையெய்தி உரைமுடிவுகாட்டிய உரவோன் - இளமைப்பருவத்தைநாணி முதுமைப்பருவத்தையடைந்து, தம்முட் பகைமைகொண்டு வந்தாரிருவருடைய சொல்லை ஆராய்ந்து அவற்றின் முடிவை அவர்களுக்கு விளக்கிய அறிவுடையோனாகிய கரிகாற்பெருவளத்தானென்னுஞ் சோழன் ; இவ்வரலாற்றை அடியில்வரும்

(பி - ம்.) ௯௮. 'தளர்நடையறியுந்தன்மையைகொல்லோ' ௧௦௫. போன்றுமெய்வருந்தி' ௧௦௮. 'மருமாற்கு'

கறிவுஞ் சால்பு மரசியல் வழுக்குஞ்
கக0 செறிவளை மகளிர் செப்பலு முண்டோ
வனைய தாயினும் யானொன்று கிளப்பல்
வினைவிளங்கு தடக்கை விறலோய் கேட்டி
வினையின் வந்தது வினைக்குவிளை வாயது
புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது
ககரு மூப்புவிளி வுடையது தீப்பிணி யிருக்கை
பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம்
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை

---

பழமொழி வெண்பாவாலும் அதன் உரையாலுமுணர்க; "உரைமுடிவு காணா னிளமையோ னென்ற, நரைமுது மக்க ளுவப்ப - நரைமுடித்துச், சொல்லான் முறைசெய்தான் சோழன் குலவிச்சை, கல்லாமற் பாகம் படும்" (உக), என்பது — 'தம்முள் மறுதலையாயினா ரிருவர் தமக்கு முறைமைசெய்யவேண்டி வந்து சில சொன்னால் அச்சொன்முடிவு கண்டே ஆராய்ந்து முறைசெய்ய அறிவு நிரம்பாத இளமைப்பருவத்தா னென்றிகழ்ந்த நரைமுதுமக்களுவக்கும் வகை நரைமுடித்து வந்து முறைவேண்டிவந்த இரு திறத்தாரும் சொல்லிய சொற்கொண்டே ஆராய்ந்தறிந்து முறைசெய்தான் கரிகாற்பெருவளத்தானென்னுஞ் சோழன்; ஆதலால், தத்தம் குலத்துக்குத்தக்க விச்சைகள் கற்பதற்கு முன்னே செம்பாகமுளவா மென்றவாறு'; இவ்வரலாறு, "முதியோர், ரவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவும்" (கஅஎ - அ) என்று பொருநராற்றுப்படையிலும் கூறப்பட்டிருக்கின்றது. உரவோன் மருகற்கு-கரிகாற்பெருவளத்தான் வழித்தோன்றலாகிய உனக்கு; மருகன்-வழித்தோன்றல்; "உலக மாண்ட வுயர்ந்தோர் மருக" மதுரை. உ௩.

க0க. சால்பு - அமைதி. அரசியல் வழுக்கு - அரசநீதி.

க0க - க0. ஒப்பு: மணி. கஅ: கச0 - சக.

க0ரு - க0. அதுகேட்டு உளம்வருந்தியுரைக்குஞ் சுதமதி மருகற்கு அறிவு முதலியவற்றை மகளிர்செப்புதலும் உளவாகுமோவென்றா ளென்க.

ககக. கிளப்பல் - சொல்லுவேன். ககஉ. வினை - போரில்.

இனி, மணிமேகலையை அவன் விரும்பாமலிருத்தற்கு உடம்பின் தூய்து அன்மையைச் சொல்லுவாள்.

கக௩. வினையின்வந்தது - கன்மத்தால் வந்தது. வினைக்கு விளைவாயது - கன்மத்திற்கு விளைநிலமாகவுள்ளது.

ககச. புனைவன - சந்தனம் மலர்முதலியவை.

ககரு. மூப்புவிளிவுடையது - முதுமையையும் சாதலையுமுடையது. தீப்பிணி யிருக்கை - கொடியநோய்களுக்கு இருப்பிடமாகவுள்ளது.

ககஎ. அரவு அடங்கு புற்றினென இயைக்க. செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழ்வதாகிய சினம். சேக்கை - தங்குமிடம்.

(பி - ம்.) ககஉ. 'கேண்மீ' ககரு. 'மூத்தா'

யவலக் கவலை கையா றழுங்க
றவலா வுள்ளந் தன்பா லுடையது
கஉ0 மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து
மிக்கோ யிதனைப் புறமறிப் பாரா
யென்றவ ளுரைத்த விசைபடு தீஞ்சொல்
சென்றவ னுள்ளஞ் சேரா முன்னர்ப்
பளிங்குபுறத் தெறிந்த பவளப் பாவையி
கஉரு னிளங்கொடி தோன்றுமா லிளங்கோ முன்னென்.

ச.—பளிக்கறைபுக்க காதை முற்றிற்று.

---

ககஅ. அவலம் - வருத்தந்தோன்றி நிற்றல். கவலை - யாது செய்வ லென்றல். கையாறு - மூர்ச்சித்தல். அழுங்கல் - வாய்விட்டழுதல்; இஃது அரற்றெனப்படும்.

ககஅ - கூ. அவலம் முதலியவைகள் நீங்காததாகிய உள்ளத்தினைத் தன்னிடத்தே உடையது.

கஉ0. யாக்கை இதுவென - யாக்கை இத்தன்மையதென்று; இது வென்றது, 'வினையின் வந்தது' என்றது முதலியவற்றை.

கஉக. இதனை - இவ்வுடம்பை. புறமறிப்பாராய் - புறமறியாகப் பார்ப்பாயாக; பார்ப்பின், இதன் தூய்து அன்மை விளங்குமென்றபடி; "மற்றதனைப் பைம்மறியாப் பார்க்கப் படும்" (நாலடி. சஉ); "பைம் மறியா நோக்கப் பருந்தார்க்குந் தகைமைத்து" இறை. சூ. க, உரை.

கஉஉ. அவள் - சுதமதி.

கஉச. "பளிங்குபுறத் தெறிந்த பவளப் பாவை" (மணி. கஅ: எஅ); "பளிக்கறைப் பவழப் பாவை பரிசெனத் திகழுஞ் சாயல்" சீவக. ககஉஉ.

கஉரு. தோன்றும் - தோன்றாநின்றாள்.

கஉஉ - ரு. என்று அவள் உரைத்தசொல் அவனுள்ளம் சென்று சேராமுன்னர், இளங்கொடி பாவைபோல இளங்கோமுன் தோன்று மென்க.

க - கஉரு. காண்பனகாண் காணாய் காண் காண் காணெனச் சுதமதி காட்ட மணிமேகலை வனங்காண்புழி, மன்னவன்சிறுவன் உதயகுமரன் அரசிளங்குமரன் வருவோன், இருந்தோன்றன்னை, இருந்தோய், யாதென்றலும், உரைப்பேன், என்றலும், மகிழ்வெய்தி உரைத்துக் கடைஇக் குறுகத் தேரொலி இசைத்தலும் என் செய்கெனவுரைத்தலும் கேட்டு இரீஇ நின்ற சேரிழைதன்னை, நின்றாய், அறிந்தேன்; தன்மையள்கொல்லோ, நிரைத்தனகொல், உரைக்குங்கொல், உரையென, சுதமதி, செப்பலுமுண்டோ; கிளப்பல்; கேட்டி என்று உரைத்தசொல் சேராமுன்னர் இளங்கொடி தோன்றுமெனமுடிக்க.

(பி - ம்.) ககஅ. 'கையாற்றழுங்கல்'

ஐந்தாவது

# மணிமேகலாதெய்வம் வந்துதோன்றிய காதை.

[ஐந்தாவது மணிமேகலை உதயகுமரன்பால் உள்ளத்தானென மணிமேகலை தனக்கு மணிமேகலாதெய்வம் வந்துதோன்றியபாட்டு.]

இளங்கோன் கண்ட விளம்பொற் பூங்கொடி
விளங்கொளி மேனி விண்ணவர் வியப்பப்
பொருமுகப் பளிங்கி னெழினி வீழ்த்துத்
திருவின் செய்யோ ளாடிய பாவையின்
௫ விரைமல ரைங்கணை மீன விலோதனத்
துருவி லாளனொ டுருவம் பெயர்ப்ப

---

க. இளங்கோன் - உதயகுமரன். பொற்பூங்கொடி - காமவல்லி போன்ற மணிமேகலை.

உ. விளங்கொளி மேனி விண்ணவர் - தேவர்; மணி. ௬: ௯ - ௧0.

௩. பொருமுகப் பளிங்கின் எழினி - பளிங்காகிய பொருமுக வெழினியை; எழினி - திரைச்சீலை; பொருமுகவெழினி - மூவகைத் திரைச்சீலைகளுள் ஒன்று; "ஒருமுக வெழினியும் பொருமுக வெழினியுங், கரந்துவர லெழினியும் புரிந்துடன் வகுத்து" சிலப். ௩: ௧0௯-௧0.

௪. திருவின் செய்யோள் - இலக்குமி; இன்: சாரியை; "செம் மலர்த் திருவின் பாவாய்" (சீவக. ௩௧௫) என்புழிப்போல. பாவை - பதினோராடலுள் ஒன்று; அது, போர்செய்தற்குச் சமைந்த கோலத்தோடு அசுரர் மோகித்துவிழும்படி கொல்லிப்பாவைவடிவாய்த் திருமகள் ஆடியது; இதனை, "செருவெங் கோல மவுணர் நீங்கத், திருவின் செய்யோ ளாடிய பாவையும்" (சிலப். ௬: ௬0 - ௬௧) என்பதனாலுணர்க; "பாவை திருமக ளாடிற் றதற்குறுப், போவாம லொன்றுடனே யொன்று." பாவையின் - பாவைபோல; பாவையாடிய திருமகள்போல வெனினும் பொருந்தும்.

௫. மலரைங்கணை-மலராகிய ஐந்துபாணம். விலோதனம்-கொடி.

௬. உருவிலாளன் - அநங்கன்; 'உருவி லாளனொ டுருவம் பெயர்ப்ப' என்பதற்கு இவளுருவத்தைக் காண்பவர்களுக்கு உடனே மன்மத பாதை உண்டாகின்றதென்பது கருத்தாகக்கொள்க; மணி. ௪: ௬௭-௮, பார்க்க.

(பி - ம்.) ௫ - ௬. 'விலோதத்துருவிலாளனுருவம்'

வோவிய னுள்ளத் துள்ளியது வியப்போன்
காவியங் கண்ணி யாகுத றெளிந்து
தாழொளி மண்டபந் தன்கையிற் றடைஇச்
க0 சூழ்வோன் சுதமதி தன்முக நோக்கிச்
சித்திரக் கைவினை திசைதொறுஞ் செறிந்தன
வெத்திறத் தாளின் னிளங்கொடி யுரையெனக்
குருகுபெயர்க் குன்றங் கொன்றோ னன்னநின்
முருகச் செவ்வி முகந்துதன் கண்ணாற்
கரு பருகா ளாயிற் பைந்தொடி நங்கை

---

க - சு. பூங்கொடி, பாவையின் உருவிலாளஞெடு உருவம் பெயர்ப்ப வென்க.

எ. ஓவியன் - சித்திரமெழுதுவோன்; உள்ளியது - சித்திரம் எழுதுவதற்காக நினைந்ததை; மணிமேகலையுருவத்தைச் சித்திரமென்று கருதினுனென்றவாருயிற்று; இது, "மேவிய பளிங்கின் விருந்திற் பாவையிஃது, தோவியச் செய்தியென் ருெழிவேன் முன்னர்" (கஅ: சுசு - எ), "ஈங்கிம் மண்ணீட் டியாரென வுணர்கேன்" (கஅ: கருசு) எனப் பின் வருவனவற்ருல் துணியப்படும். வியப்போன் - ஆச்சரிய மடைவோன்; இது பெயர்; இனி, 'ஓவியன்' என்பதற்கு உதயகுமரன் ஆச்சரியத்தால் சித்திரம் போன்றவனாய் நின்றென்றும், 'அது' என் பதற்கு அவ்வடிவத்தையென்றும் பொருள் கூறினும் பொருந்தும்.

அ. காவியங்கண்ணியாகுதல் - மணிமேகலையாதலை.

எ - அ. வியப்போன் தெளிந்தென்க.

கூ. தாழ் ஒளி மண்டபம் - தங்கிய ஒளியையுடைய பளிங்குமண்ட பத்தை. தடைஇ - தடவிப்பார்த்து; மண்டபத்துள்ளே செல்லக் கருதியவன் வாயில் காணுதற்கு முயலுகின்ருன்.

கஉ. எத்திறத்தாள் - என்ன இயல்பையுடையாள்; நின் இளங் கொடி எத்திறத்தா ளென்க.

க0 - கஉ. சூழ்வோன் நோக்கி உரையென.

கங. குருகுபெயர்க்குன்றம் - கிரவுஞ்சகிரி. கொன்றோன் - முரு கக்கடவுள்; "குருகுபெயர்க் குன்றங் கொன்ற நெடுவேலே" (சிலப். உச: 'சரவண'), "குருகுபெயர்க் குன்றங் கொன்ருன் மடவன்" டை டை 'ஆய்வளை'

கச. முருகச்செவ்வி - இளமைப் பருவத்தினழகை.

கரு. ஆயின் - ஆராயுமிடத்து.

கச - ரு. நங்கை நின் செவ்வியைப் பருகாளென இயைக்க.

(பி - ம்.) கூ. 'தாளொலி' கக - உ. 'சிறந்தன வொத்தாளின்' கச. 'முருகற்செவ்வி' கரு. 'பருகாளாயினிப்'

யூழ்தரு தவத்தள் சாப சரத்தி
காமற் கடந்த வாய்மைய ளென்றே
தூமலர்க் கூந்தற் சுதமதி யுரைப்பச்
சிறையு முண்டோ செழும்புனன் மிக்குழீஇ
௨௦ நிறையு முண்டோ காமங் காழ்க்கொளிற்
செவ்விய ளாயினென் செவ்விய ளாகென
வவ்விய நெஞ்சமொ டகல்வோ னாயிடை
யஞ்செஞ் சாய லராந்தா ணத்துளோர்
விஞ்சைய னிட்ட விளங்கிழை யென்றே
௨௫ கல்லென் பேரூர்ப் பல்லோ ருரையினை
யாங்கவ ருறைவிட நீங்கி யாயிழை
யீங்கிவ டன்னோ டெய்திய துரையென

---

௧௬. ஊழ் - முறை; பௌத்தர்களுக்கு ஊழ்வினை உடன்பாடாகலின், ஊழ்வினையால் தரப்பட்ட தவத்தையுடையளென்றுமாம். சாப சரத்தி - சாபமாகிய அம்பையுடையாள்; சாபம் - சபித்தல்; வில்லையும் அம்பையும் உடையாளென்றும் ஒருபொருள் தோன்றிற்று. தவத்தினரைச் சாபசரரென்பர் வடநூலார்.

௧௯. செழும்புனல் மிக்குழீச் சிறையுமுண்டோ - வளவியபுனல் மிக்கவிடத்து அதனைத் தாங்கும் அரணுமுண்டோ; இல்லையென்றபடி; "நீர்மிகிற் சிறையு மில்லைத் தீமிகின், மன்னுயிர் நிழற்று நிழலு மில்லை" (புறநா. ௫௧); "நீர்மிகி னில்லை சிறை" பழ. ௧௯௦.

௧௯ - ௨௦. "சிறையென்ப தில்லைச் செவ்வே செம்புனல் பெருகு மாயி, னிறையென்ப தில்லைக் காம நேர்நின்று சிறக்கு மாயின்" சூளா. கல்யாண. ௧௫௫.

௨௦. காமம் காழ் கொளின் நிறையும் உண்டோ - காமம் அடிப்படின் அதனை நிறுத்துந்தன்மையும் உளதாகுமோ; காழ் - வைரம்; நிறை - நிறுத்துந் தன்மை; "பிறிது மாகுப காமங்காழ்க் கொளினே" குறுந். ௧௭.

௨௨. ஔவியம் - பிறர்க்கு இவள் உரியளாதல் கூடுமோவென்பதால் உளதாகிய பொறாமை. ஆயிடை - அப்பொழுது.

௨௩. அஞ்செஞ்சாயல்: விளி; என்றது சுதமதியை. அராந்தாணம்: மணி. ௩: ௮௭; பெருங். ௨. ௨: ௧௩௮, ௭: ௧௬௧, ௫. ௪: ௧௫௧.

௨௪. விஞ்சையன் - வித்தியாதரன்; என்றது மாருதவேகனை.

௨௫. உரையினை - சொல்லையுடையாய்.

௨௩ - ௫. அராந்தாணத்திற் சுதமதி மாருதவேகனால் இடப்பட்டாளென்பதை, "என்மக ளிருந்த விடமென் றெண்ணித், தன்னுறு துன்பந் தாங்காது புகுந்து, சமணீர் காணுஞ் சரணென் றோனை" (மணி. ௫: ௫௦ - ௫௨) என்பதனாலுமுணர்க.

௨௭. உரையென - சொல்லென்று உதயகுமரன்சொல்ல.

(பி - ம்.) ௧௬. 'தவத்தர் சாபச்சாதகி', 'தவத்தான சாபதி சாத்தி.' ௧௮ 'தூஉமலர்' ௨௦. 'காழ்கொளிற்' ௨௧. 'ஆயினின்ன செவ்விய ளாக்கென' ௨௨. 'ஆயிழை'

வார்கழல் வேந்தே வாழ்கநின் கண்ணி
தீநெறிப் படரா நெஞ்சினை யாகுமதி
௩0 யீங்கிவ டன்னை யெய்திய காரணம்
வீங்குநீர் ஞால மாள்வோய் கேட்டருள்
யாப்புடை யுள்ளத் தெம்மனை யிழந்தோன்
பார்ப்பன முதுமகன் படிம வுண்டியன்
மழைவளந் தரூஉ மழலோம் பாளன்
௩ரு பழவினைப் பயத்தாற் பிழைமண மெய்திய
வெற்கெடுத் திரங்கித் தற்றக வுடைமையிற்
குரங்கு செய்கடற் குமரியம் பெருந்துறைப்
பரந்துசென் மாக்களொடு தேடினன் பெயர்வோன்
கடன்மண்டு பெருந்துறைக் காவிரி யாடிய



உஅ. " வாழ்க நுங் கண்ணி மாதோ " சீவக. கஅகு0.

உக. படரா - செல்லாத. நெஞ்சினையாகுமதி - நெஞ்சையுடையாயாக ஆகக்கடவாய்; மதி: முன்னிலையசை.

௩0 - ௩க. காரணம் கேட்டருள்.

௩உ. யாப்பு - உறுதி. எம்மனை - எம் அன்னை; " எம்மனை காணாய் " (கூ: கஉக) என்பர் பின்னும்; "எம்மனை தமியையாகி" சீவக. ௩கரு.

௩௩. படிமவுண்டி - நோற்றுப் பட்டினிவிட்டுண்ணும் உணவு; " படிம வுண்டிப் பார்ப்பன மகனே " குறுந். கருகூ.

௩ரு. மாருதவேகனுக்குத் தான் சிலநாள் உரியளானதுபற்றி, 'பிழைமண மெய்திய' என்றாள்; " ஓத லந்தணர்க் கொவ்வே னாயினும் " (ரு: சு௩) என்று பின்வருதல் காண்க.

௩சு. எற் கெடுத்து இரங்கி - என்னைக் காணப்பெறாது இரங்கி; " அரசுகெடுத் தலம்வரு மல்லற் காலை " (சிலப். சு: அ.) தன் தக உடைமையின் - தன்னைத் தக்கிருக்கும்படி உடைமையினாலே.

௩எ. குமரி - கன்னியாகுமரி.

௩எ - அ. குற்றமுற்ற குலமகளிர் அக்குற்றத்தைப் போக்குதற் பொருட்டுக் குமரியாடச் செல்லுதல் மரபாதலால், இவன் கன்னியாகுமரியாற்றிற்குச் செல்பவர்களோடு சேர்ந்து சுதமதியைத் தேடிச் சென்றான்; " பார்ப்பனி சாலி காப்புக்கடை கழிந்து, கொண்டோற் பிழைத்த தண்ட மஞ்சித், தென்றிசைக் குமரி யாடிய வருவோள் " மணி. க௩: ரு - எ.

௩கூ. கடன்மண்டு பெருந்துறைக்காவிரி - சங்கமுகத்துறை.

(பி - ம்.) ௩உ. 'யாப்பிடை' ௩எ. 'குரங்குசெய் கடற்றுறை', குரங்கிகுசெய்கடற்குமரி.' ௩கூ. 'ஆடிட'

சo வடமொழி யாளரொடு வருவோன் கண்டீங்
கியாங்கனம் வந்தனை யென்மக ளென்றே
தாங்காக் கண்ணீ ரென்றலை யுதிர்த்தாங்
கோத லந்தணர்க் கொவ்வே னாயினுங்
காதல னாதலிற் கைவிட லீயா
சரு னிரந்தூண் டலைக்கொண் டிந்நகர் மருங்கிற்
பரந்துபடு மனைதொறுந் திரிவோ னொருநாள்
புனிற்றுப் பாய்ந்த வயிற்றுப் புண்ணினன்
கணவிர மாலை கைக்கொண் டென்ன
நிணநீடு பெருங்குடர் கையகத் தேந்தி
ருo யென்மக ளிருந்த விடமென் றெண்ணித்
தன்னுறு துன்பந் தாங்காது புகுந்து
சமணீர் காணுஞ் சரணென் றோனை
யிவணீ ரல்லவென் றென்னொடும் வெகுண்டு
மையறு படிவத்து மாதவர் புறத்தெனைக்
ருரு கையுதிர்க் கோடலிற் கண்ணிறை நீரே

சo. வடமொழியாளர் - பார்ப்பார்; பார்ப்பனியை, "வடமொழியாட்டி" (கங: எங) என்று பின்னர்க்கூறுவர்.

சக. மகள் : விளிப்பெயர்.

சச. கைவிடலீயான் - கைவிடான்; "காவலன் மகனோ கைவிடலீயான்" (கக: ௩உ) என்பர் பின்னும்; "காட்டிய தாதலிற் கைவிடலீயான்" சிலப். கங: அரு.

சஎ. புனிற்று - ஈன்ற அணிமையையுடைய பசு.

சஅ. கணவிரமாலை - அலரிமாலை; மணி. ௩: கoச.

ருஉ. சமணீர்காள் - சமணர்களே.

ருங. இவண் நீர் அல்ல என்று - இவ்விடத்திற்குரிய தன்மையன் றென்று.

ருச. படிவம் - தவவேடம். மாதவர் - சைனமுனிவர்.

ருரு. கையுதிர்க்கோடலின் - கையசைத்துப் போய்விடுகவென்று குறிப்பித்தலால்; "காண மிலியெனக் கையுதிர்க் கோடலும்" (கசு : கo) என்று பின்னும்வரும்; இவ்வழக்கம் மலைநாட்டில் மிகுதியாகவுள்ளது. கண் நிறை நீரேம் - கண்களில் நிறைந்த நீரையுடையேமாய்.

(பி - ம்.) சக. 'இயனமவந்தனையேமகளென்றே' சஉ. 'உகுத்தாங்கு' சச. 'காதலினுதலிற்' சசு. 'திரிவேனொரு' சஎ. 'வயிற்றுறு' சஅ. 'கணவீரமாலை கைக்கொண்டன்ன' சகூ. 'அடக்கி' ருங. 'இவணீரல்ல' ருச. 'படிமத்' ருரு - சு. 'கண்ணறை நீரென, மறவோரருளி லாருமிலோவென'

மறவோ ருளீரோ வாருமி லோமெனப்
புறவோர் வீதியிற் புலம்பொடு சாற்ற
மங்குலேய் மாட மனைதொறும் புகூஉ
மங்கையிற் கொண்ட பாத்திர முடையோன்
௬௦ கதிர்சுடு மமயத்துப் பனிமதி முகத்தோன்
பொன்னிற் றிகழும் பொலம்பூ வாடைய
னென்னுற் றனிரோ வென்றெமை நோக்கி
யன்புட னளைஇய வருண்மொழி யதனா
லஞ்செவி நிறைத்து நெஞ்சகங் குளிர்ப்பித்துத்
௬௫ தன்கைப் பாத்திர மென்கைத் தந்தாங்
கென்றைக் குற்ற விடும்பை நீங்க
வெடுத்தனன் றழீஇக் கடுப்பத் தலையேற்றி
மாதவ ருறைவிடங் காட்டிய மறையோன்
சாதுயர் நீக்கிய தலைவன் றவமுனி
௭௦ சங்க தருமன் றானெமக் கருளிய

௫௬. ஆரும் இலோம் - பாதுகாப்போர் யாரையுமில்லேம்.

௫௭. புறவோர் - புறத்திலுள்ளோராகு.

௫௯. பாத்திரம் - பிச்சைப்பாத்திரம். இதனைக் கோரகை யென்பர்.

௬௦. இல்லறத்தோர் எல்லாருமுண்டபின்பு, பௌத்தசந்நியாசிகள் பகலில் உச்சிப்பொழுதிற் பிச்சைக்குச்செல்ல வேண்டுவது விதியாதலின், 'கதிர்சுடு மமயத்து' என்றார். இப்படியே, "வெங்கதிரமயத்து வியன்பொழி லகவயின், வந்து தோன்றலும்" (௧௦ : ௨௭ - ௮), "வெயில்விளங் கமயத்து விளங்கித் தோன்றிய, சாது சக்கரன் றன்னையா னூட்டிய" (௧௧ : ௧௦௨ - ௩) எனப் பின்னர் வருதல் காண்க.

௬௧. மருதந்துவரில் தோய்க்கப்பட்டு மஞ்சள்நிறமுள்ளதாதலால், 'பொன்னிற் றிகழும் பொலம்பூ வாடை' எனப்பட்டது; இதனைச் சீவரமென்பர்.

௬௩. அளைஇய - கலந்த; "அன்புடை நன்மொழி யளைஇ" (புறநா. ௨௯௨); "இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ், செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்" குறள். ௯௧.

௭௦. சங்கதருமன் : பெயர்; புத்ததர்ம சங்கமென்னும் மூன்றனுள் சங்கத்திற்குரிய தருமத்தை அனுசரித்து நடப்பவனென்று பொருள்.

(பி - ம்.) ௫௭. 'சேர' ௬௦. 'கதிர்சூட்டமைத்து' ௬௩. 'அளைஇய ருண்மொழி' ௬௪. 'நிரைத்து......குளிர்ந்து' ௬௬. 'இடும்பைகணீங்க' ௭௦. 'தானெனக் கருளிய'

வெங்கோ னியல்குண னேதமில் குணப்பொரு
ளுலக நோன்பிற் பலகதி யுணர்ந்து
தனக்கென வாழாப் பிறர்க்குரி யாள
னின்பச் செவ்வி மன்பதை யெய்த

௭௧. எங்கோன் - எம்முடையசுவாமி. இயல் குணன் - இயல்பாகவே தோன்றின குணங்களையுடையோன்; "இறைவன் குரவ னியல்குண னெங்கோன்" சிலப். ௧௦ : ௧௮௪.

௭௨. உலகநோன்பு - உலகசீலம் (மணி. ௫ : ௬௬.) பலகதி உணர்ந்து - பல பிறப்புக்களிலும் பிறந்து பிறந்து உணர்ந்து; கதி - பிறப்பு. "புத்தன் கைவந்த முத்தியைவிட்டுக் கன்மவசத்தாலன்றிக் கருணையாற் பரிசுத்த ஞானத்துடன் பலவிலங்கிற் பிறந்தும் இறந்தும் பிணிப்பட்டும் மூத்தும் தர்மோபதேசம் பண்ணி ஒழியாமல் உலகுய்யக் கொண்டான்" என்றும், "கன்மவசத்தாற்பிறந்தானெனில், விலங்காய்ப் பிறந்து பேசுதலும், யானையாய் மருப்பீதலும், முயலாய் மாம்ஸமீதலும் பிறவும் நிகழா" (நீல. சமய.) என்றும் கூறுவர்; புத்தன் கருணையாற் பலவகைப் பிறப்பும் எடுத்தானென்பதைப் புத்தஜாதககதைகளிற் பரக்கக்காணலாம்: "எறும்புகடை யயன்முதலா வெண்ணிறந்த வென்றுரைக்கப், பிறந்திறந்த யோனிதொறும் பிரியாது சூழ்போகி, யெவ்வுடம்பி லெவ்வுயிர்க்கும் யாதொன்று மிடரெய்தி, னவ்வுடம்பி னுயிர்க்குயிரா யருள்பொழியுந் திருவுள்ளம்", "மீனுருவாகி மெய்ம்மையிற் படிந்தனை, மானுரு வாகியே வான்குண மியற்றினை" (வீர. யாப்பு. ௧௧, உதாரணங்கள்); "வானுடும் பரியாயு மரிண மாயும் வன்கேழற் களிறாயுந் மென்காற் புண்மான், றானுயும் பணையெருமை யொருத்த லாயுந் தடக்கையிளங் களிறாயுஞ் சடங்க மாயு, மீனாயு முயலாயு மன்ன மாயு மயிலாயும் பிறவாயும் வெல்லுஞ் சிங்க, மானாயுங் கொலைகளவு கட்பொய் காமம் உரைத்தவர்தா முறைந்தபதி மானு ஆரே" நீல. சமய.

௭௩. தான்சீவித்திருத்தல் தனக்கென்று நினையாமல் பிறர்க்கே உரிமை பூண்டொழுகுபவன்; "மூன்றான் பெருமைக்க ணின்றான் முடிவெய்துசாறு, நன்றே நினைந்தான் குணமேமொழிந் தான்றனக்கென், றேன்றானு மின்னான் பிறர்க்கேயுறு தீர்த்துழந்தா, னன்றே யிறைவ னவன் றாள்சர ணங்க ளன்றே" (குண்டல. கடவுள்); "இருட்பார வினைநீக்கி யெவ்வுயிர்க்குங் காவலென, வருட்பாரந் தனிசுமந்த வன்றுமுத லின்றளவு, மதுவொன்று மலரடிக்கீழ் வந்தடைந்தோர் யாவர்க்கும், பொதுவன்றி நினக்குரித்தோ புண்ணியநின் றிருமேனி", "தீதியல் புலியது பசிகெட வகைநின திருவுரு வருளிய திறமலி பெருமையை" (வீர. யாப்பு. ௧௧, உதாரணங்கள்); "பிறர்க்கற முயலும் பெரியோய் நின்னடி" (௧௧ : ௬௩), "தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பு, மன்னுயிர் முதல்வன்" (௨௫ : ௧௧௬-௭) என்பர் பின்னும்; மு.அகநா.௫௪:௧௩.

௭௪. நிருவாணமடைதற்குரிய பருவத்தை உயிர்ப்பன்மைகள் அடையும்படி; மன்பதை - உயிர்ப்பன்மை; "மன்பதை காக்குநின் புரைமை" புறநா. ௨௧௦.

(பி - ம்.) ௭௨. 'பலகெதியிழந்து' ௭௩. 'பிறர்க்குரை யாளன்'

எரு வருளறம் பூண்ட வொருபெரும் பூட்கையி
னறக்கதி ராழி திறப்பட வுருட்டிக்
காமற் கடந்த வாமன் பாதந்
தகைபா ராட்டுத லல்ல தியாவது

எரு. காருணியத்தைப் பூண்ட ஒப்பற்ற பெரிய மேற்கோளினாலே: அருளறம், நல்லறம், காருண்யம், தயாதருமம் என்பன ஒருபொருட் சொற்கள்; இதனை, "அஹிம்ஸா பரமோதர்ம:" என்பதிற்காண்க. கீதகோவிந்தத்தில் திருமாலின் தசாவதாரத்தை எடுத்துச் சொல்லிய, "வேதா நுத்தரதே" என்னும் சுலோகத்திற் பௌத்தாவதாரத்தின் பெருமையைப்பற்றி, "காருண்யமாதந்வதே" என்று ஸ்ரீஜயதேவர் பாராட்டியிருக்கின்றனர்.

எச - ரு. எய்தப் பூண்டவென்க. உயிர்ப்பன்மைகள் இன்பச் செவ்வியை அடையும்படி புத்தன் அருளறம்பூண்டமையை, "உயிர்க ளெல்லாம்...நீயோ தோன்றினை நின்னடி தொழுதேன்" (௧0 : எ - ௧௨), "மாறுய ரெவ்வ மக்களை நீக்கி,...குன்றக மருங்கில்" (௧0 : ௬௨- ௬) என இந்நூலுள்ளே பின்னர் வருவனவற்றாலுமுணர்க.

எ௬. அறக்கதிர் ஆழி திறப்பட உருட்டி - தருமசக்கரத்தை உலகத்திற் பலவகையாக உருளச்செய்து; தருமத்தைச் சக்கரமாகக் கூறியதற்கேற்ப, 'உருட்டி' என்றார். 'திறப்பட' என்றதனால், பல வகையாக அவன் தருமோபதேசஞ்செய்தமை கூறியவாறாயிற்று. இது பற்றியே புத்தனைத் தருமசக்கரப் பிரவர்த்தனாசாரியனென்பர்; "ஆதி முதல்வ னறவாழி யாள்வோன்" (௧0 : ௬௧) என்பர் பின்னும்; "அரு ளாழி நயந்தோய்நீ, யறவாழி பயந்தோய்நீ, மருளாழி துரந்தோய்நீ, மறையாழ் புரந்தோய்நீ" வீர. யாப்பு. ௧௧, உதாரணம்.

எஎ. காமற்கடந்த - மாரனைவென்ற; மாரன் - தர்மவிரோதி களான இச்சைகளை மனத்தில் உண்டாக்கும் ஒருதேவன்; மகாபோதி விருட்சத்தின்கீழ் தவவொழுக்கம்பூண்டு நோற்றிருக்கையில் இவனாற் செய்யப்பட்ட இடையூறுகளையெல்லாம் வென்றுமேம்பட்டு விளங்கின மையால், புத்தனை, 'காமற் கடந்த வாமன்' என்றார்; "மாரனை வெல் லும் வீர நின்னடி" (௧௧ : ௬௧), "போதி... .....மாரனை வென்று வீர னாகி" (௩0 : ௧0 - ௧௧) எனப் பின்னர் வருதல்காண்க. 'மாரன்' என்பதற்குப்பொருள் மன்மதனன்றென்பது பௌத்தசமய மரபாத லால், இந்நூலிற் காமனென்று வருமிடமெல்லாம் மாரனென்று பொருள்கொள்க. வாமன் - புத்தன்; அழகுள்ளவனென்று பொருள். பாதம் - பாதத்தை.

எ0 - எ௬. அருளிய பாதம்.

எஅ. தகை பாராட்டுதல் என்பன, ஒரு சொன்னீரவாய்த் துதித்த லென்ற பொருளில்வந்தன. யாவதும் - சிறிதும்.

(பி - ம்.) எரு - ௬. 'பூட்கை, யறக்கதிர்' எஅ. 'அல்லதை யாவதும்'

மிகைநா வில்லேன் வேந்தே வாழ்கென
௮௰ வஞ்சொ லாயிழை நின்றிற மறிந்தேன்
வஞ்சி நுண்ணிடை மணிமே கலைதனைச்
சித்திரா பதியாற் சேர்தலு முண்டெனன்
றப்பொழி லாங்கவ னயர்ந்து போயபின்
பளிக்கறை திறந்து பனிமதி முகத்துக்
௮௫ களிக்கயல் பிறழாக் காட்சிய ளாகிக்
கற்புத் தானில ளற்றவ வுணர்விலள்
வருணக் காப்பிலள் பொருள்விலை யாட்டியென்
றிகழ்ந்தன னாகி நயந்தோ னென்னாது
புதுவோன் பின்றைப் போனதென் னெஞ்ச
௯௰ மிதுவோ வன்னாய் காமத் தியற்கை
யிதுவே யாயிற் கெடுகதன் றிறமென
மதுமலர்க் குழலாண் மணிமே கலைதான்
சுதமதி தன்னொடு நின்ற வெல்லையு
ளிந்திர கோடணை விழாவணி விரும்பி

---

௭௯. மிகைநா - மிகைக்கின்ற நா ; மிகைத்தல் - வேறுபொருள்களைச் சொல்லுதல் ; "காமனை வென்றோ னாயிரத் தெட்டு, நாம மல்லது நவிலா தென்னா" சிலப். ௰ : ௧௧௯ - ௭.

௮௰. நின்திறம் - நின்வரலாறு.

௮௩. அப்பொழில் - அப்பொழிலில். அயர்ந்து - தன்னைமறந்து; விரும்பியென்றுமாம் ; மணி. ௫ : ௧௨௩.

௮௫. களிக்கயலென்றது கண்களை.

௮௭. வருணக்காப்பு - வருணத்திற்கேற்ற காவல் ; வருணமாகிய காவலென்றுமாம். பொருள் விலையாட்டி - விலைமாது.

௮௮. நயந்தோன் - விரும்பினேன்.

௯௧. தன்னென்றது, காமத்தை.

௯௪. இந்திர கோடணை விழா (இந்திர கோடணையாகிய விழா) - இந்திரவிழா. பலவகைப்பட்ட முழக்கங்களையுமுடைமையின் விழா, கோடணை யெனப்பட்டது ; கோடணை - முழக்கம் ; அலங்காரமென்றுங் கூறுவர் ; "இந்திர கோடணை யிந்நகர்க் காண, வந்தேன்", "இந்திர கோடணை விழவணி வருநாள்" மணி. ௭ : ௧௭ - ௮, ௧௭ : ௯௧.

(பி - ம்.) ௭௯. 'நாவில்லவென வேந்தே' ௮௪. 'பகர்மதிமுகத்து' ௮௬. 'நற்றவப்புணர்விலள்' ௮௭. 'வருளக் காப்பிளம் பொருண்முலையாட்டி' ௮௯. 'பின்னர்ப்போன' ௯௧. 'கெடுகவிதன்றிறமென'

சுரு வந்து காண்குறூஉ மணிமே கலாதெய்வம்
பதியகத் துறையுமோர் பைந்தொடி யாகி
மணியறைப் பீடிகை வலங்கொண் டோங்கிப்
புலவன் றீர்த்தன் புண்ணியன் புராண
னுலக நோன்பி னுயர்ந்தோ யென்கோ
க00 குற்றங் கெடுத்தோய் செற்றஞ் செறுத்தோய்
முற்ற வுணர்ந்த முதல்வா வென்கோ
காமற் கடந்தோ யேம மாயோய்
தீநெறிக் கடும்பகை கடிந்தோ யென்கோ
வாயிர வாரத் தாழியந் திருந்தடி
க0ரு நாவா யிரமிலே னேத்துவ தெவனென்
றெரிமணிப் பூங்கொடி யிருநில மருங்குவந்
தொருதனி திரிவதொத் தோதியி னோதுங்கி
நிலவரை யிறந்தோர் முடங்குநா நீட்டும்

---

சுசு. மூ. மணி. சு: கங. ஓர் பைந்தொடியாகி - ஒரு பெண்வடிவு கொண்டு.

சுஎ. மணியறைப் பீடிகை - பளிக்கறையிலுள்ள பாதபீடத்தை.

சுக. உலகநோன்பு : மணி. ரு: எஉ.

க00. குற்றம் - காமவெகுளி மயக்கங்கள் ; "யாமே லுரைத்த பொருள்கட் கெல்லாங், காமம் வெகுளி மயக்கங் காரணம்" (ந0 : உருஉ - ந) என்று பின்னர்க் கூறுவர் ; "பூமகனே முதலாகப் புகுந்தமர ரெண்டிசையுந், தாமலரா லடிமலரைத் தொழுதிரந்து வினவியநாட், காமமுங் கடுஞ்சினமுங் கழிப்பரிய மயக்கமுமாய்த், தீமைசால் கட்டினுக் குத் திறற்கருவி யாய்க்கிடந்த நாமஞ்சார் நமர்களுக்கு நயப்படமொ ழிநி துரைத்துச், சேமஞ்சார் நன்னெறிக்குச் செல்லுமா றருளினையே" வீர. யாப்பு. கக, மேற்.

க0க. முற்றவுணர்ந்த முதல்வர் - சர்வஜ்ஞர்.

க0உ. ஏமமாயோய் - பாதுகாவலாக உள்ளோய் ; ஏமம் - இன் பமுமாம்.

க0ங. தீநெறியாகிய கடும்பகை ; தீநெறி - கெட்டவழி.

க0ச. இவனுடைய பாதத்தில் ஸகஸ்ராரசக்கரரேகையுண்டென் பர்.

க0ரு. ஏத்துவது எவன் - துதிப்பது எத்தன்மையது ; என்னுவில் அடங்குவதன்று என்றபடி ; மணி. கக : எச - உ.

க0எ. ஓதியின் - மெய்ஞ்ஞானத்துடன்.

க0அ. நிலவரை இறந்து - நிலவெல்லையைக் கடந்து. ஓர் : இடைச்சொல். நீட்டும் - நீட்டுகின்றாள் ; சொல்லுகின்றாளென்றபடி.

(பி - ம்.) சுரு. 'மணிமேகலைதான்' சுக. 'உலவாநோன்பின்' க00. 'குற்றங்கடிந்தோய்' க0ங. 'கடந்தோயென்கோ' க0ச. 'நாமத்தாழியன் றிருந்தபடி' க0ரு. 'நாவாயிரமிலமேத்தவஃதெவ னென' க0எ. 'திரிவதொததியினொதுங்கி', 'திரிவதோதியினேதி.' க0அ. 'முடங்குணநீட்டும்'

புலவரை யிறந்த புகாரெனும் பூங்கொடி
௧௧௦ பன்மலர் சிறந்த நன்னீ ரகழிப்
புள்ளொலி சிறந்த தெள்ளரிச் சிலம்படி
ஞாயி லிஞ்சி நகைமணி மேகலை
வாயின்மருங் கியன்ற வான்பணைத் தோளி
தருநிலை வச்சிர மெனவிரு கோட்ட
௧௧௫ மெதிரெதி ரோங்கிய கதிரிள வனமுலை
யார்புனை வேந்தற்குப் பேரள வியற்றி
யூழி யெண்ணி நீடுநின் றோங்கிய
வொருபெருங் கோயிற் றிருமுக வாட்டி
குணதிசை மருங்கி னாண்முதிர் மதியமுங்
௧௨௦ குடதிசை மருங்கிற் சென்றுவீழ் கதிரும்
வெள்ளிவெண் டோட்டொடு பொற்றோ டாக
வெள்ளறு திருமுகம் பொலியப் பெய்தலு

இனி, நிலவெல்லையைக் கடந்தோராகிய தேவர்தலைகுனிவதற்குக்காரணமாகிய தனது நாவை நீட்டுகின்றாளென்றுமாம்.

௧௦௯. புலவரையிறந்த - அறிவின் எல்லையைக் கடந்த; "புலவரை யிறந்தோய் போகுதல் பொறேஎன்" (சிலப். உ௮: ௧௭௪.) புகார் - காவிரிப்பூம்பட்டினம்.

௧௧௨. ஞாயில் - மதிலுறுப்புக்களில் ஒன்று; அஃது, எப்புழைக்கு நடுவாய் எய்து மறையுஞ் சூட்டென்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர் (சீவக. ௧௦௫); குருவித்தலையென்பர் அடியார்க்குநல்லார் (சிலப். ௧௫: உ௧௭.) இஞ்சி - மதில்.

௧௧௩. பணை - மூங்கில்; இது தோரணகம்பமெனப்படும்.

௧௧௦ - ௧௩. அகழியாகிய அடியினையும், இஞ்சியாகிய மேகலையையும், பணையாகிய தோளினையுமுடையாள்.

௧௧௪. தருநிலை - கற்பகதரு நிற்குங்கோயில்; வச்சிர (நிலை) - வச்சிராயுதம் நிற்குங்கோயில்.

௧௧௬. வேந்தன் - சோழன். "பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து" நெடுநல். ௭௮.

௧௧௪ - ௮. இருகோட்டமாகிய கொங்கைகளையும், சோழன் கோயிலாகிய திருமுகத்தையுமுடையாள்.

௧௧௯. குணதிசை - கீழ்த்திசை. ௧௨௧. தோடு - காதணிவிசேடம்.

௧௨௨. எள்ளறு - இகழ்ச்சியற்ற. பெய்தலும் - அணிந்துகொள்ளவும்.

(பி - ம்.) ௧௧௦. 'நன்மலர் துறந்த' ௧௧௨. 'மணமணிமேகலை' ௧௧௬. 'நெடுநகர்க்கு' ௧௧௭. 'நீடுகின்று' ௧௧௯. 'குணறிசை'

மன்னச் சேவ லயர்ந்துவிளை யாடிய
தன்னுறு பெடையைத் தாமரை யடக்கப்
௧௨ரு பூம்பொதி சிதையக் கிழித்துப் பெடைகொண்
டோங்கிருந் தெங்கி னுயர்மட லேற
வன்றிற் பேடை யரிக்குர லழைஇச்
சென்றுவீழ் பொழுது சேவற் கிசைப்பப்
பவளச் செங்காற் பறவைக் கானத்துக்
௧௩0 குவளை மேய்ந்த குடக்கட் சேதா
முலைபொழி தீம்பா லெழுதுக ளவிப்பக்
கன்றுநினை குரல மன்றுவழிப் படர
வந்தி யந்தணர் செந்தீப் பேணப்
பைந்தொடி மகளிர் பலர்விளக் கெடுப்ப
௧௩ரு யாழோர் மருதத் தின்னரம் புளரக்
கோவலர் முல்லைக் குழன்மேற் கொள்ள
வமரக மருங்கிற் கணவனை யிழந்து

---

௧௧௯ - ௨௨. மதியமும் கதிரும் முறையே வெள்ளித்தோடும் பொற்றோடுமாகத் திருமுகத்திற்பெய்தலும்.

௧0௯ - ௨௨. பூங்கொடி தோளி முகவாட்டி அவள், திருமுகம் பொலியப் பெய்தலும்; சூரியன் அத்தமிக்கவுமென்றபடி.

௧௨௩. அயர்ந்து - மெய்ம்மறந்து; விரும்பியென்றுமாம்.

௧௨௩ - ௬. அன்னச்சேவல் பெடைகொண்டு தெங்கின் மடலேற.

௧௨எ. அரிக்குரல் - மெல்லிய குரலால். அழைஇ - அழைத்து.

௧௨எ - அ. பேடை, அழைஇப் பொழுதைச் சேவற்கு இசைப்ப.

௧௨௯. செங்காற் பறவை - அன்னப்புள். கானமென்றார் மிகுதி பற்றி.

௧௩0. சேதா - செவ்விய பசு. ௧௩௨. குரல - குரலவாய்.

௧௩0 - ௩௨. சேதா பால் துகளையவிப்பக் குரலவாய்ப் படர; "ஆன்கணங், கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதர" (குறிஞ்சி. ௨௨எ - அ); "கறவைதம் பதிவயிற், கன்றமர் விருப்பொடு மன்றுநிறை புகுதர" (கலி. ௧௧௯); "மதவுநடை நல்லான், வீங்குமாண் செருத்த தீம்பால் பிலிற்றக், கன்றுபயிர் குரல் மன்றுநிறைபுகுதரு, மாலையும்" அகநா. ௧௪.

௧௩௬. முல்லை - முல்லைப்பண்; "குழல்வளர் முல்லையிற் கோவலர் தம்மொடு மழலைத் தும்பி வாய்வைத் தூத" சிலப். ௪ : ௧௫ - ௬.

௧௩எ. அமரகம் - போர்க்களம்.

(பி - ம்.) ௧௨ரு. 'பூம்பொறிசிதையக்' ௧௨௬ - எ. 'ஏறி, யன்றிற் பேடை யரிகுரலளைஇ' ௧௩௨. 'குரன்மன்று' ௧௩௬. 'முல்லை குழன் மேல்வைப்ப'

தமரகம் புகூஉ மொருமகள் போலக்
கதிராற்றுப் படுத்த முதிராத் துன்பமோ
௧௪0 டந்தி யென்னும் பசலைமெய் யாட்டி
வந்திறுத் தனளான் மாநகர் மருங்கென்.

ரு.—மணிமேகலாதெய்வம் வந்துதோன்றியகாதை முற்றிற்று.

---

௧௩௮. தமரகம் - தம்மவர்களிடம்.

௧௩௯. கதிராற்றுப்படுத்த - சூரியனைப்போக்கிய.

௧௪0. அந்திப்பொழுதாகிய மங்கை. பசலை மெய்யாட்டியென்ருர், கணவனைப் பிரிந்தாளென்பது புலப்பட.

௧௪௧. இறுத்தனள் - தங்கினுள்.

௧௪0 - ௪௧. பசலை மெய்யாட்டி மாநகர்மருங்கு வந்திறுத்தனள்.

௧ - ௧௪௧. இளம்பொற்பூங்கொடி உருவம் பெயர்ப்ப, சூழ்வோன் சுதமதி முகநோக்கி உரையென, உரைப்ப, அகல்வோன் எய்தியது உரையென, கேட்டருள்; சங்கதருமனருளிய வாமன்பாதத்தைப் பாராட்டுதலல்லது மிகைநாவில்லேனென, அவன் போயபின், மணிமேகலை சுதமதியொடு நின்ற வெல்லையுள், மணிமேகலாதெய்வம், பைந்தொடியாகிப் பீடிகையை வலங்கொண்டு ஓங்கி ஒதுங்கி நாநீட்டும்; நீட்டப் புகாரெனும் பூங்கொடி பெய்தலும், பசலைமெய்யாட்டி முதிராத் துன்பமொடு நகர்மருங்கு வந்திறுத்தனளென்று முடிக்க.

---

ஆறுவது

# சக்கரவாளக்கோட்டமுரைத்தகாதை.

[ஆறுவது மணிமேகலைதனக்கு
மணிமேகலாதெய்வம் சக்கரவாளக்கோட்டமுரைத்து
அவளை மணிபல்லவத்துக் கொண்டுபோனபாட்டு.]

அந்தி மாலை நீங்கிய பின்னர்
வந்து தோன்றிய மலர்கதிர் மண்டிலஞ்
சான்ருேர் தங்க ணெய்திய குற்றந்

---

௨. மலர்கதிர் மண்டிலம் - சந்திரமண்டிலம்.

௩. சான்ருேர் - உயர்ந்த குடியிற்பிறந்த மேன்மக்கள். எய்திய - உண்டாகிய.

(பி - ம்.) ௧௪0. 'பூட்டி' ௨. 'மண்டலம்'

தோன்றுவழி விளங்குந் தோற்றம் போல
௫ மாசறு விசும்பின் மறுநிறங் கிளர
வாசற விளங்கிய வந்திந் தண்கதிர்
வெள்ளிவெண் குடத்துப் பால்சொரி வதுபோற்
கள்ளவிழ் பூம்பொழி லிடையிடைச் சொரிய
வுருவு கொண்ட மின்னே போலத்
௧௦ திருவி லிட்டுத் திகழ்தரு மேனிய
ளாதி முதல்வ னறவாழி யாள்வோன்
பாத பீடிகை பணிந்தன ளேத்திப்
பதியகத் துறையுமோர் பைந்தொடி யாகிச்

---

௪. தோன்றுவழி - தோன்றுமிடத்து.

௫. மாசு - குற்றம். விசும்பு - ஆகாயம். மறு - களங்கம். நிறம் கிளர் - நிறம் விளங்கித் தோன்ற; நிறம் - மார்பிலென்றுமாம்.

௩ - ௫. சந்திரனிடத்துள்ள தூய்மையாலும், தான் அதற்குமாறாக இருத்தலாலும், களங்கம், சான்றோரிடத்துண்டாகிய குற்றம்போல்விளங்கித் தோன்றியதென்பதாம்; இது, "குடிப்பிறந்தார்" (௯௫௭) என்னும் குறளின் கருத்தை ஒருவாறு தழுவி, ஆண்டுள்ள பொருளையும் உவமத்தையும் முறையே உவமமாகவும் பொருளாகவும் பெற்றுவந்தமை காண்க; "அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந், திங்களுஞ் சான்றோரு மொப்பர்" நாலடி. ௧௫௧.

௬. ஆசு - குற்றம். தண்கதிர் - நிலாவை.

௭. சந்திரனுக்கு வெள்ளிக்குடமும், நிலாவிற்குப் பாலும் உவமை.

௨ - ௮. மண்டிலம் மறுநிறங்கிளரப் பால்சொரிவதுபோல் தண்கதிரை இடையிடையே சொரியாநிற்க.

௯. இல்பொருளுவமம்.

௧௦. இந்திரவில்லைப்போல ஒளிவிட்டு அழகைத்தருகின்ற திருமேனியையுடையளாய்; "திருவி லிட்டுத் திகழ்தரு மேனியன்" (சிலப். ௧௦: ௧௯௬.) இந்திரவில் இன்னவாறு தோன்றுமெனப் புலப்படாமையினால், அங்ஙனம் தோன்றுகின்ற தெய்வங்கட்கு அஃது உவமமாயிற்று; "மற்றவன் றேவ னாகி வானிடு சிலையிற் றோன்றி" (சீவக. ௯௫௪); "வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற், கானிலந் தோயாக் கடவுளை" நாலடி. கடவுள்.

௧௧. பூ. மணி. ௧௦: ௬௧. அறவாழியாள்வோன் - புத்தன்.

௧௨. பாதபீடிகை - உவவனத்திற் பளிக்கறையிலுள்ள பாதபீடம். பணிந்தனளேத்தி - பணிந்தேத்தி.

௧௩. பூ. மணி. ௫: ௯௬.
(பி - ம்.) ௪. 'விளக்கும்' ௭. 'குடத்திற்பால்' ௮. 'பூம்பொழிலிடையே சொரிய' ௯ - ௧௦. 'உருவுகண்டமின்னே போன்று, திரு'

சுதமதி நல்லாண் மதிமுக நோக்கி
௧௫ யீங்கு நின்றீ ரென்னுற் றீரென
வாங்கவ ளாங்கவன் கூறிய துரைத்தலு
மரசிளங் குமர னாயிழை தன்மேற்
றணியா நோக்கந் தவிர்ந்தில னாகி
யறத்தோர் வனமென் றகன்றன னாயினும்
உ0 புறத்தோர் வீதியிற் பொருந்துத லொழியான்
பெருந்தெரு வொழித்துப் பெருவனஞ் சூழ்ந்த
திருந்தெயிற் குடபாற் சிறுபுழை போகி
மிக்க மாதவர் விரும்பின ருறையுஞ்
சக்கர வாளக் கோட்டம் புக்காற்
உரு கங்குல் கழியினுங் கடுநவை யெய்தா
தங்குநீர் போமென் றருந்தெய்வ முரைப்ப

---

௧௫. நின்றீரென்றது, மணிமேகலையையும் உளப்படுத்தி. என்னுற்றீர் - யாது துன்பமுற்றீர். என - என்று மணிமேலாதெய்வம்கேட்ப.

௧௪ - ௧௫. மேனியள், எத்தி ஆகி நோக்கி என்னுற்றீரெனவென்க.

௧௬. அவள் - சுதமதி. அவன் - உதயகுமரன். கூறியது - "சித்திரா பதியாற் சேர்தலு முண்டு" (மணி. ௫: ௮௨) என்றது.

௧௭. ஆயிழைதன்மேல் - மணிமேகலையிடத்து.

௧௯. அறத்தோர் வனமென்று-முனிவர்கள்உறைகின்ற வனமென்று நினைந்து.

உ0. புறத்தோர்வீதியில் - புறத்திலுள்ளவர்களுடைய வீதியினிடத்தே.

௧௭ - உ0. குமரன் தவிர்ந்திலனாகி அகன்றனன்; ஆயினும் வீதியிற் பொருந்துதலொழியானென்க.

௧௯ - உ0. மணி. ௫: ௫௬ - ௭.

உ௧. பெருந்தெருவென்றது முன்புகூறிய புறத்தோர்வீதியை.

உஉ. பு. மணி. ௭: ௮௧. எயில் - மதில். குடபாற் சிறுபுழை-மேற்றிசையினிடத்தேயுள்ள சிறியநுழைவாயில்.

உ௩ - ௪. மணி. ௧௫: ௩௧ - உ, ௧௭: ௭௫ - ௬, உஉ: ௫ - ௬.

உ௫. கடுநவை யென்றது உதயகுமரனாற் பற்றப்படுதலை.

உ௬. அங்கு - சக்கரவாளக்கோட்டத்திடத்தே.

௧௬ - உ௬. அவள் உரைத்தலும், அருந்தெய்வம், அரசிளங் குமரன் பொருந்துத லொழியான்; ஆதலாற் போகிப் புக்காற் கடுநவை யெய்தாது; நீர் அங்குப்போம் என்றுரைப்பவென்க.

(பி - ம்.) ௧௪. 'நல்லாடன்முகம்' ௧௮. 'தவிர்விலனாகி', 'தணிந்திலனாகி.' ௧௯. 'வனமென...னாயினும்' உ௧.'ஒழித்துப்பெருவளஞ்' உ௫ - ௬. 'எய்தாவங்குநீர்போ மெனவருந்'

வஞ்ச விஞ்சையன் மாருத வேகனு
மஞ்செஞ் சாய னீயு மல்லது
நெடுநகர் மருங்கி னுள்ளோ ரெல்லாஞ்
ங0 சுடுகாட்டுக் கோட்ட மென்றல துரையார்
சக்கர வாளக் கோட்ட மஃதென
மிக்கோய் கூறிய வுரைப்பொரு ளறியே
னீங்கிதன் காரண மென்னை யோவென
வாங்கதன் காரண மறியக் கூறுவன்
ஙரு மாதவி மகளொடு வல்லிருள் வரினு
நீகே ளென்றே நேரிழை கூறுமிந்
நாமப் பேரூர் தன்னொடு தோன்றிய
வீமப் புறங்கா டிங்கித னயல
தூரா நற்றே ரோவியப் படுத்துத்
ச0 தேவர் புகுதரூஉஞ் செழுங்கொடி வாயிலு
நெல்லுங் கரும்பு நீருஞ் சோலையு
நல்வழி யெழுதிய நலங்கிளர் வாயிலும்
வெள்ளி வெண்சுதை யிழுகிய மாடத்
துள்ளுரு வெழுதா வெள்ளிடை வாயிலு
சரு மடித்த செவ்வாய்க் கடுத்த நோக்கிற்
றொடுத்த பாசத்துப் பிடித்த சூலத்து

---

ஙக. அஃது சக்கரவாளக்கோட்டமென்று.

ஙங. என்னையோவென - யாதென்று சுதமதி கேட்ப.

ஙச. கூறுவல் - கூறுவேன்.

ஙரு - கூ. மாதவிமகளொடு நீ கேள். நேரிழை - மணிமேகலா தெய்வம்.

ஙஅ. ஈமப்புறங்காடு - மயானம்; ஈமம் - பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு; "கரிபுற விறகி னீம வொள்ளழல்" (புறநா. உஙக.) இதன் - இந்த உவவனத்தின். புறங்காடு இதன் அயலிடத்துள்ளது.

ஙகூ. ஊராநற்றேர் - விமானம். ஓவியப்படுத்து - சித்திரம்போல ஆகாயத்தே நிற்கும்படி செய்து.

சங. வெள்ளிவெண்சுதை - மிக்க வெண்மையையுடைய சுண்ணச் சாந்து. இழுகிய - பூசிய.

சச. உரு - வடிவங்கள். வெள்ளிடை - வெளியான இடம்.

சரு. கடுத்தநோக்கு - கோபித்துப்பார்த்த பார்வை.

சகூ. தொடுத்த பாசம் - பிறரைக் கட்டிய கயிறு; மணி. க: உங.

(பி - ம்.) உஅ. 'சாயனீயும்' ஙக. 'கோட்டமீதென' ஙங. 'என்கொலோவென' ஙஅ. 'ஈமப்பெருங்காடு' ஙகூ. 'ஓவியகப் படுத்து' சஉ. 'நல்லவழி யொழுகியநலங்' சங. 'எழுதியமாடத்'

நெடுநிலை மண்ணீடு நின்ற வாயிலு
நாற்பெரு வாயிலும் பாற்பட் டோங்கிய
காப்புடை யிஞ்சிக் கடிவழங் காரிடை
௬0 யுலையா வுள்ளமோ டுயிர்க்கட னிறுத்தோர்
தலைதூங்கு நெடுமரந் தாழ்ந்துபுறஞ் சுற்றிப்
பீடிகை யோங்கிய பெரும்பலி முன்றிற்

---

சஎ. நெடுநிலை மண்ணீடு - நீண்ட தோற்றத்தையுடைய பூத வடிவம்; என்றது மயானத்தைப் பாதுகாப்பதொரு தெய்வவிசேட வடிவமென்பர். மண்ணீடென்பதற்குச் சுதையாற் செய்யப்பட்ட பாவையென்று பொருள்; "பாங்குற மண்ணீட்டிற் பண்புற வகுத்து" (சு: உ00), "ஈங்கிம் மண்ணீட் டியாரென வுணர்கேன்" (கஅ: கருக) என இந்நூலுள்ளும், "கண்ணுள் வினைஞரு மண்ணீட் டாளரும்" (ரு: ௩0) எனச் சிலப்பதிகாரத்துள்ளும் வருதல் காண்க. மண் - சுதை; "மண்மாண் புனைபாவை யற்று", "மண்ணோ டியைந்த மரத்தனையர்" குறள். ச0எ, ௬எசு.

சஅ. நாற்பெருவாயிலும் - செழுங்கொடிவாயிலும் நலங்கிளர்வாயிலும் வெள்ளிடைவாயிலும் நின்றவாயிலுமாகிய நான்கு பெரியவாயிலும். பாற்பட்டு - பகுதிப்பட்டு.

சசு. காப்பு - காவல். கடி வழங்கு ஆரிடை - பேய்கள் உலவுகின்ற அரிய இடம்; என்றது மயானத்தை.

சஅ - சுு. ஓங்கிய ஆரிடையென்க.

௬0. உலையாவுள்ளமோடு - தளராத உள்ளத்தோடு. உயிர்க்கடனிறுத்தோர் - உயிராகிய கடனைக்கொடுத்தோர்; உயிர்க்கடனிறுத்தலை, சிலப். ரு: அஎ - அ - ஆம் அடிகளின் உரையிற்காண்க. இவர்களை, மயானவாசினியது மந்திரசாதகரான பைரவவேஷதாரிகளென்றும், காபாலிகமதத்தினரென்றும் கூறுவர்; இஃது அவிப்பலியெனப்படும்; "சிரந்தெரிந்தன வறிந்தரிந்துருவை செய்த பைரவர்கள் செந்நிலம், பரந்தெ ரிந்துபொடி செய்ய மற்றவை பரிக்க வந்தவர் சிரிப்பரே" தக்க. ௬க.

௬க. தலைதூங்குநெடுமரம் - உயிர்க்கடனிறுத்தோருடைய தலைகள் தொங்கப் பெற்ற நீண்ட மரங்கள். பலிகொடுப்போர் சிகையை மரத்தில் முடிந்துவிட்டுத் தலையையரிந்து துர்க்கைக்குப் பலிகொடுத்தல் மரபாதலால் இங்ஙனங்கூறினர்; "வீங்குதலை நெடுங்கழையின் மிசைதோறுந் திசைதோறும் விழித்து நின்று, தூங்குதலை சிரிப்பன கண் டுறங்குதலை மறந்திருக்குஞ் சுடர்க்கட் சூர்ப்பேய்" (கலிங்க. கோயில். உக.) இதுபோன்ற ஒழுக்கம், வடநூலில் தசகுமார சரிதத்தில் உபகாரவர்மாவின் சைசவவிருத்தாந்தத்திற் சொல்லப்பட்டுள்ளதென்பர்.

௬உ. பீடிகை - பீடம். பெரும்பலிபீடிகையோங்கிய முன்றிலென்க.

(பி - ம்.) சஎ. 'நெடுநிலைநிறைமண்ணீடுநின்றவாயிலும்' சசு. 'கடிவழங்கா' ௬0 - ௬க. 'உயிர்க்கடவததொர்தலைதாங்கு'

காடமர் செல்வி கழிபெருங் கோட்டமு
மருந்தவர்க் காயினு மரசர்க் காயினு
ருரு மொருங்குடன் மாய்ந்த பெண்டிர்க் காயினு
நால்வேறு வருணப் பால்வேறு காட்டி
யிறந்தோர் மருங்கிற் சிறந்தோர் செய்த
குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன
சுடுமண் ணோங்கிய நெடுநிலைக் கோட்டமு
சுo மருந்திறற் கடவுட் டிருந்துபலிக் கந்தமு
நிறைக்கற் றெற்றியு மிறைக்களச் சந்தியுந்

---

ருங. காடமர்செல்வி - துர்க்காதேவி ; சண்டிகை யென்றுங் கூறுவர் (மணி. கஅ : ககரு) ; கானநாடியென்பர் (தக்க. ருச, அo.) கோட்டம் - கோயில். "கோளி யாலமுங் கோழரை மரங்களுங் குழுமித், தாளி யார்த்தெழு சுடலையு முடலமுந் துவன்றி, மீளி யாக்கையதாக்கியுண் பேய்க்கண மிகைசூழ் ; கூளி தாய்க்கென வாக்கிய கோட்டமொன் றுளதே" என்னும் நீலகேசிச் செய்யுளாலும் பரணிச் செய்யுள்களாலும் மயானத்தில் துர்க்கையாலயம் இருந்ததாகத் தெரிகின்றது.

சுo - ருங. இறந்தோருடைய தலைகள் தூங்குகின்ற மரங்களாற் சுற்றப்பட்டுப் பலிபீடிகை ஓங்கிய முன்றிலையுடைய கோட்டம்.

ருரு. ஒருங்குடன்மாய்ந்த பெண்டிர்-கணவனுடன் இறந்தமகளிர்.

ருச - ரு. ஆயினும் : ஓர் எண்ணிடைச்சொல் ; "பொதியி லாயினு மிமய மாயினும்,..................புகாரே யாயினும்" (சிலப். க : கச - சு) என்புழிப்போல.

ருசு. நால்வேறுவருணம் - அந்தணர், அரசர், வணிகர், வேளாளர்.

ருஎ. இறந்தோர்மருங்கில்-இறந்தவருடம்பைப் புதைத்தவிடத்தே.

ருஅ. குறியவும்நெடியவுமாகிய சிறிய மலைகளைக் கண்டாலொத்த; சிலப். உஎ ; கருங.

ருகூ. சுடுமண் - செங்கல். கோட்டம் - அறை ; "ஈமப் புறங்காட், டரசர்க் கமைந்தன வாயிரங் கோட்டம்" (சு : கசுரு - சு) என்பர் பின்னும்.

ருஅ - கூ. கண்டன்ன கோட்டம்.

சுo. பெறுதற்கரிய திறலையுடைய தெய்வங்களையுடைய, திருந்திய பலியிடுதற்குரிய தூண்கள் . கந்தம் : ஸ்கந்தமென்னும் வடமொழிச் சிதைவு ; "இலகொளிக் கந்தமும்" (மணி. உச : ககஉ) ; "கலிகெழு கடவுள் கந்தங் கைவிட" புறநா. ருஉ.

சுக. நிறைக்கற்றெற்றி - நிறுத்திய கல்லாலாகியதிண்ணை. மிறைக்களச்சந்தி - வளைந்த இடத்தினையுடைய பலவழிகளுங் கூடினசந்து ; மிறை - வளைவு ; "மிறைக்கொளி திருத்தி னனே" சீவக. உஅச.

(பி - ம்.) ருரு. 'பெண்டீர்க்' ருகூ. 'சுடுமணோங்கிய' சுக. 'நிறைகற் றெற்றியு மிறைகளச்'

தண்டு மண்டையும் பிடித்துக் காவல
ருண்டுகண் படுக்கு முறையுட் குடிகையுந்
தூமக் கொடியுஞ் சுடர்த்தோ ரணங்களு
௬௫ மீமப் பந்தரு மியாங்கணும் பரந்து
சுடுவோ ரிடுவோர் தொடுகுழிப் படுப்போர்
தாழ்வயி னடைப்போர் தாழியிற் கவிப்போ
ரிரவும் பகலு மிளிவுடன் றரியாது
வருவோர் பெயர்வோர் மாறுச் சும்மையு
எ௦ மெஞ்சியோர் மருங்கி னீமஞ் சாற்றி

---

௬௨. மண்டை - உண்ணுதற்குரிய ஒருவகை மண்கலம்; ஏற்கும் பாத்திரமென்றுங்கூறுவர்; "கவிழ்த்த மண்டை மலர்க்குநர் யாரென", "பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்", "ஏலாது கவிழ்ந்தவெ னிரவன் மண்டை" (புறநா. ௧0௩, ௧௧௫, ௧௭௬.) காவலர் - மயானங்காப்போர்.

௬௩. குடிகை - பர்ணசாலை; 'குடிகா' என்னும் வடமொழிச் சிதைவென்பர்; இஃது இக்காலத்துக் குடிசையென வழங்குகின்றது.

௬௪. தூமக்கொடி - புகையொழுங்கு; "மீன்சுடு புகையிற் புலவு நாறு நெடுங்கொடி" புறநா. ௫௨.

௫௩ - ௬௫. கழிபெருங்கோட்டமும், நெடுநிலைக் கோட்டமும், பலிக்கந்தமும், தெற்றியும், சந்தியும், குடிகையும், கொடியும், தோரணங்களும், பந்தரும் யாங்கணும் பரந்தென்க.

௬௬. சுடுவோர் - பிணங்களைச்சுடுவோர். இடுவோர் - கொணர்ந்து அவற்றைச் சும்மா போகடுவோர். தொடுதல் - தோண்டுதல்; மணி. ௧௬ : ௨௫.

௬௭. தாழ்வயின் அடைப்போர் - பள்ளமாகிய இடங்களிற் பிணங்களை அடைத்துவைப்போர்; தாழ்வயின் - தாழ்ந்த இடம். தாழியிற் கவிப்போர் - பிணங்களைத் தாழியினுலே கவிப்போர்; இதனை, "தேவருலக மெய்தின னாதலி, னன்றேற் கவிக்குங் கண்ணகன் றாழி" (௨௨அ), "கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த" (௨௩அ), "ஈமத் தாழி யகலி தாக வனைமோ" (௨௫௬), "தாழிய பெருங்கா, டெய்திய ஞான்றே" (௩௬௪) எனவரும் புறநானூற்றுப் பாடல்களாலுணர்க; இத்தாழி, முதுமக்கட்டாழி யெனவும் வழங்கும்.

௬அ. இளிவுடன் - அருவருப்புடன். ௬௯. சும்மை - ஒலி.

எ0. எஞ்சியோர் - சீவித்திருப்போர். ஈமஞ் சாற்றி - ஈமமுண்டென்பதைச் சொல்லி.

(பி - ம்.) ௬எ. 'காழ்வயினடைப்' ௬அ. 'இரவும் பகலுமேயாவீடினறிவரு' எ0. 'எஞ்சினர்மருங்கினேமஞ்சாற்றி'

நெஞ்சு நடுக்குறூஉ நெய்த லோசையுந்
துறவோ ரிறந்த தொழுவிளிப் பூசலும்
பிறவோ ரிறந்த வழுவிளிப் பூசலு
நீண்முக நரியின் றீவிளிக் கூவுஞ்
எ௫ சாவோர்ப் பயிருங் கூகையின் குரலும்
புலவூண் பொருந்திய குராலின் குரலு
மூண்டலை துற்றிய வாண்டலைக் குரலு
நன்னீர்ப் புணரி நளிகட லோதையி
னின்னா விசையொலி யென்றுநின் றறாது

எக. நெய்தலோசையும் - சாப்பறையின் ஓசையும்; "ஓரி னெய்தல் கறங்க வோரி, லீர்ந்தண் முழவின் பாணி ததும்ப" (புறநா. ௧௯௪); "பல்லவர்க் கிரங்கும் பாடிமிழ் நெய்தல், கல்லென வொலிக் குங் காடு" பு - வெ. உஎச.

எஉ. தொழுவிளிப் பூசல் - துதிமுழக்கம்; துறவோராதலால், தொழுதல் கூறப்பட்டது.

எ௩. பிறவோர் - இல்லறத்தோர்.

எ௫. இறப்போரை அழைக்கும் பேராந்தையின் ஒலியும்; பேராந்தை செத்தோரை அழைக்குமென்றும் கூறுவர்; "போழ்வாய்க் கூகை, சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிருங், கள்ளியம் பறந்தலை" புறநா. உ௪0.

எ௬. குரால் - கோட்டான்.

எஎ. உணவாகத் தலைமூளையைக் கடித்துண்ட ஆண்டலைப்பறவை களின் குரலும்; ஆண்டலைப் பறவை - ஆண்மகனது தலைபோன்ற வடிவ முள்ள ஒருவகைப் பறவை; இதனை, "நீண்டபலி பீடத்தி லரிந்து வைத்த நெடுங்குஞ்சிச் சிரத்தைத்த.னினமென் றெண்ணி, யாண்டலைப் புளருகணைந்து பார்க்கு மாலோ வணைதலுமச் சிரமச்ச முறுத்துமாலோ" (கலிங்க. கோயில்பாடியது, ௧௬) என்பதனாலுணர்க; "அழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவும்" (பட்டின. உ௫அ); "ஆண்டலை யாட" (முத்ததிருப். ௩); "ஈமத் தாமமு மெரியினு மிருளொடு விளக்கா, லூமைக் கூகையு மோரியு முறமுறழ் கதிக்கும், யாமத் தீண்டிவந் தாண்டலை மாண்பில வழைக்குந், தீமைக் கேயிட னயதோர் செம்மலை யுடைத்தே" (நீல. தரும. ௩); தக்க. உ௩௪-ஆந்தாழிசைக் குறிப்பைப்பார்க்க.

எஅ. புணரி நளி கடல் - அலைகள் செறிந்த கடல். ஓதையின் - ஓசையைப்போல.

எக. இன்னா இசை ஒலி - துன்பத்தை இசைக்கின்ற ஒலிகள்.

௬௬ - எக. மாறுச் சும்மையும், நெய்தலோசையும், தொழுவிளிப்

(பி - ம்.) எ௩. 'வாழுவிளிப் பூசலும்' எச. 'வீழ்முகநரியின்றீ விளிக்குரலும்' எ௬. 'புலாலூண்பொருந்திய குராலூண்குரலும்' எஎ. 'ஊன்றலைதுற்றிய' எஅ. 'நளிர் கடல்'

அ0 தான்றியு மொடுவையு முழிஞ்சிலு மோங்கிக்
காஞ்சியுஞ் சூரையுங் கள்ளியு மடர்ந்து
காய்பசிக் கடும்பேய் கணங்கொண் டீண்டு
மாலமர் பெருஞ்சினை வாகை மன்றமும்
வெண்ணிணந் தடியொடு மாந்தி மகிழ்சிறந்து
அரு புள்ளிறை கூரும் வெள்ளின் மன்றமுஞ்
சுடலை நோன்பிக ளொடியா வுள்ளமொடு
மடைதீ யுறுக்கும் வன்னி மன்றமும்
விரத யாக்கைய ருடைதலை தொகுத்தாங்
கிருந்தொடர்ப் படுக்கு மிரத்தி மன்றமும்

---

பூசலும், அழுவிளிப்பூசலும், கூவும், குராலும், குராலும், குராலும் ஆகிய இன்னாவிசைகள் அறாதிருக்கப்பெற்று.

அ0 - அக. தான்றி முதலிய மரவிசேடங்கள் நெருங்கப்பெற்று.

அஉ. காய்பசி - மிக்கபசி (மணி. சு: ககஎ, ஷை. கக: நரு.) கணம் - கூட்டம்.

அங. மால் - மேகம். சினை - கிளை. பல பேய்கள் கூட்டங் கொண்டிருத்தற்கு இடமானதுபற்றி வாகையடி, மன்றமெனப்பட்டது. பின் வருவனவற்றையும் இப்படியே கொள்க. ஊருக்கு நடுவாய் எல்லாருமிருக்கும் மரத்தடியை மன்றமென்பர் நச்சினார்க்கினியர்; முருகு. உஉசு.

அச. தடி - தசை. மாந்தி - உண்டு.

அரு. புள் - பேராந்தை, கோட்டான், கழுகு, பருந்து, காக்கை, ஆண்டலைப்புள் முதலியவை. இறைகூரும் - தங்குதல் மிக்க. வெள்ளில் - விளாமரம்.

அசு. சுடலை நோன்பிகள் - காபாலிகர்; "இறைவி கோட்டத்து ளீரிரு திங்கள தகவை, யுறையு ளாகவவ் வுறையருங் காட்டகத் துறைவான், பொறையு மாற்றலும் பூமியு மேருவு மனையான், சிறைசெய் சிந்தையா னந்தயில் பொருள்களைத் தெரிந்தான்" (தருமை. எ) என்னும் நீலகேசிச் செய்யுளால் முனிசந்திரனென்ற ஒரு முனிவன் மயானத்திலிருந்து தவஞ்செய்தானென்று தெரிகிறது. ஒடியாவுள்ளம் - தளராதஉள்ளம்.

அஎ. மடை - சோறு. வன்னி - வன்னிமரம்.

அஅ. உடைதலைகளைச் சேர்த்து.

அகூ. இருந்தொடர்ப்படுக்கும் - பெரியமாலைகளாகச் செய்யும். இரத்திமன்றம் - இலந்தைமரம்நிற்கும்மன்றம்; "இரத்தி நீடிய வகன்றலை மன்றத்து" புறநா. நசு.

(பி - ம்.) அ0. 'ஒடுழையு முழிஞ்சிலு மொடுங்கிக்' அக. 'கள்ளியும் படர்ந்து' அங. 'ஆலம் பெருஞ்சினை வாகை மன்றமும்' அச. 'வெண்ணிணக் குடியொடுமாந்தி' அரு. 'வெள்ளிடை மன்றம்' அகூ. 'இருந்துடிபடுக்கும்'

௯0 பிணந்தின் மாக்க ணிணம்படு குழிசியில்
விருந்தாட் டயரும் வெள்ளிடை மன்றமு
மழற்பெய் குழிசியும் புழற்பெய் மண்டையும்
வெள்ளிற் பாடையு முள்ளீட் டறுவையும்
பரிந்த மாலையு முடைந்த கும்பமு
௯௫ நெல்லும் பொரியுஞ் சில்பலி யரிசியும்
யாங்கணும் பரந்த வோங்கிரும் பறந்தலை
தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வ
ரீற்றிளம் பெண்டி ராற்றுப் பாலகர்
முதியோ ரென்னு னிளையோ ரென்னுன்
௧00 கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்பவிவ்
வழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டுங்

௯0. குழிசி - பானை.

௯௧. வெள்ளிடைமன்றம் - வெளியான இடத்தையுடையமன்றம்; "உள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும்" சிலப். ரு: ௧௧எ.

௯௨. புழல் - ஒருவகைச்சிற்றுண்டி.

௯௩. வெள்ளிற் பாடை: இருபெயரொட்டு. உள்ளீட்டறுவை-உள்ளே பண்டங்கள்இடுதலைப்பெற்ற உறி; "சுவன்மே லறுவையும்" (சிலப். ௧0: ௯அ.) அறுவை - சீலையெனின், உள்ளீட்டையுடைய கிழியுமாம்.

௯௪. பரிந்த மாலை - பாடையிற்கட்டி அறுத்தெறியப்பட்ட மாலை; "வெள்ளின் மாலையும் விரிந்தவெண் டலைகளுங் கரிந்த, கொள்ளி மாலையுங் கொடிபடு கூறையு மகலும், பள்ளி மாறிய பாடையு மெலும்புமே பரந்து, கள்ளி யாரிடைக் கரந்ததோர் தோற்றமுங் கடிதே" நீல. ஞரும. ச.

௯௫. சில்பலி யரிசி - சிறுபலியாகிய அரிசி; "தூவெள் ளரிசி, சில் பலிச் செய்து" புறநா. ௨௩௩ - ச.

௯௬. பறந்தலை - பாழிடம்.

அ௩ - ௯௬. வாகைமன்றமும், வெள்ளின்மன்றமும், வன்னிமன்றமும், இரத்திமன்றமும், வெள்ளிடை மன்றமும் ஆகிய இம்மன்றங்கள் யாங்கணும் அழற்பெய்குழிசி முதலியவைகள் பரந்த பறந்தலையென்க.

௬௫ - ௯௬. பரந்து அருது பரந்த பறந்தலையென்க.

௯அ. மூ. மணி. எ : அ௧. ௧00. கொடுந்தொழிலாளன் - காலன்.

ச௧ - ௧0௧. ஆரிடை பறந்தலை சுடலை தின்னக்கண்டும்.

(பி - ம்.) ௯0. 'பிணந்தீன்மாக்கணிணம்படுகுழிசியின்' ௯௨. 'பிறழ் பெய்மண்டையும்', 'பிழல்.' ௯௯.'இளையோரென்னுன்முதியோரென்னுன்'

கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழு
மக்களிற் சிறந்த மடவோ ருண்டோ
க0ரு வாங்கது தன்னையோ ரருங்கடி நகரெனச்
சார்ங்கல னென்போன் றனிவழிச் சென்றோ
னென்புந் தடியு முதிரமு மியாக்கையென்
றன்புறு மாக்கட் கறியச் சாற்றி
வழுவொடு கிடந்த புழுவூன் பிண்டத்
கக0 தலத்தக மூட்டிய வடிநரி வாய்க்கொண்
டுலப்பி லின்பமோ டுளைக்கு மோதையுங்
கலைப்புற வல்குல் கழுகுகுடைந் துண்டு
நிலைத்தலை நெடுவிளி யெடுக்கு மோதையுங்
கடகஞ் செறித்த கையைத் தீநா
ககரு யுடையக் கவ்வி யொடுங்கா வோதையுஞ்
சாந்தந் தோய்ந்த வேந்திள வனமுலை

---

க0உ. மிகப்பெரியசெல்வமாகிய கள்ளையுண்டு விளையாடுதலைச் செய்து.

க0ச. மடவோர் - மூடர்.

க0ரு. அது தன்னை - அம்மயானத்தை. கடி - காவல்.

க0சு. தனிவழிச்சென்றோனாகிய சார்ங்கலன்.

க0அ. அன்புறு மாக்கட்கு - உடம்பினிடத்தே அன்புமிகுந்த மனிதர்கட்கு. மாக்களென்றார், ஐம்புலவுணர்ச்சியேயன்றி மனவுணர்ச்சியில்லாதவரென்றற்கு; "மாவு மாக்களு மையறி வினவே" தொல். மரபு. சூ. ௩௨.

க0எ - அ. யாக்கை, என்புமுதலியனவாமென்று மாக்கட்குச்சாற்றி.

க0கூ. வழு - தாதுவிசேடம்; வழுவொடு - வழுவுதலுடனென்றுமாம். பிண்டமென்றது உடம்பை.

க0அ - கூ. சாற்றிக் கிடந்தவென்க; இனி, சாற்றி வாய்க்கொண்டு உளைக்கும் நரியோதை யெனினுமமையும்.

கக0. அலத்தகம் - செம்பஞ்சுக்குழம்பு.

ககக. உலப்பு இல் இன்பமோடு - கேடில்லாத இன்பத்தோடு.

ககச. தீநாய் - மயானத்திற்றிரியும் ஒருவகைநாய்.

(பி - ம்.) க0ரு. 'தன்னை யொருங்குகடிநகரென' க0எ. 'அன்புந்தடியும்' க0கூ. 'வழுவொடு தோன்றியபுழுவூண்பிண்டத்து' ககங. 'நிலத்தலை' ககரு. 'கதுவி'

காய்ந்தபசி யெருவை கவர்ந்தூ ணோதையும்
பண்புகொள் யாக்கையின் வெண்பலி யரங்கத்து
மண்கணை முழவ மாக வாங்கோர்
கஉ0 கருந்தலை வாங்கிக் கையகத் தேந்தி
யிரும்பே ருவகையி னெழுந்தோர் பேய்மகள்
புயலோ குழலோ கயலோ கண்ணோ
குமிழோ மூக்கோ விதழோ கவிரோ
பல்லோ முத்தோ வென்னா திரங்காது
கஉரு கண்டொட் டுண்டு கவையடி பெயர்த்துத்
தண்டாக் களிப்பி னாடுங் கூத்துக்
கண்டனன் வெரீஇக் கடுநவை யெய்தி

---

ககஎ. காய்ந்தபசி - மிக்க பசி (மணி. சு: அஉ, ஷை. கக: ௩௩.) எருவை - தலைவெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து; கழுகுமாம்; "விசும்பா டெருவை பசுந்தடி தடுப்ப" புறநா. கூச.

ககஅ. வெண்பலி அரங்கத்து - சாம்பற்குவையாகிய அரங்கத்திலே.

ககக. மண் கணை முழவமாக - மார்ச்சனை யமைந்த திரண்ட தண்ணுமையாக; தண்ணுமை - ஆடற்குரிய ஒருவகைத் தோற்கருவி.

ககக - கூ. உளைக்குமோதையும், எடுக்குமோதையும், ஒடுங்கா வோதையும், கவர்ந்தூணோதையும் ஆகிய இவைகள் முழவமாகவென்க.

கஉ0. கருந்தலையென்றது, ஒரு பெண்பிணத்தின் தலையை.

கஉக. பேய்மகள் - பெண்பேய்.

கஉ௩. குமிழ் - குமிழம்பூ. கவிர் - முள்ளுமுருக்கம்பூ.

கஉச. என்னாது - என்று கருதாமல்.

கஉரு. கண் தொட்டு உண்டு - கண்ணைத் தோண்டி உண்டு; "கண்டொட் டுண்ட" (புறநா. ருரு.) கவை அடி பெயர்த்து - கவைத்த அடிகளைப்பெயர்த்து; "கருமறிக் காதிற் கவையடிப் பேய்மகள்" சிறுபாண். ககஎ.

கஉசா. தண்டாக் களிப்பு - தணியாத களிப்பு; "தண்டா வீகைத் தகைமாண் குடுமி" புறநா. சு.

ககக - உசா. உளைக்கு மோதை முதலியன முழவமாக வெண்பலியரங்கத்தில் ஒரு பேய்மகள் கவையடி பெயர்த்து ஆடுங் கூத்தை யென்க.

கஉஎ. கண்டனன் - கண்டு. கடுநவை எய்தி - அப்பேயாற் பிடிக்கப்பட்டு; "கழல்கட் கூளிக் கடுநவைப் பட்டோர்" சிலப். ரு: உகரு.

க0கூ - உஎ. சென்றோனாகிய சார்ங்கலனென்போன் கண்டு.

(பி- ம்.) கஉ௩. 'அதரோ கவிரோ' கஉரு. 'கவையடிப் பெயர்த்து', 'கையடிபெயர்த்து.' கஉசா. 'களிப்பினொடாடுங்'

விண்டோர் திசையின் விளித்தனன் பெயர்ந்தீங்
கெம்மனை காணா யீமச் சுடலையின்
கஙo வெம்முது பேய்க்கென் னுயிர்கொடுத் தேனெனத்
தம்மனை தன்முன் வீழ்ந்துமெய் வைத்தலும்
பார்ப்பான் றன்னொடு கண்ணிழந் திருந்தவித்
தீத்தொழி லாட்டியென் சிறுவன் றன்னை
யாருயி ருண்ட தணங்கோ பேயோ
கஙரு தாருயி ருண்ட தணங்கோ பேயோ
துறையு மன்றமுந் தொல்வலி மரனு
முறையுளுங் கோட்டமுங் காப்பாய் காவாய்
தகவிலை கொல்லோ சம்பா பதியென

கஉஅ. விண்டு - நீங்கி. விளித்தனன் பெயர்ந்து - கூப்பிட்டுக் கொண்டு பெயர்ந்து.

கஉகூ. எம்மனை - என்தாயே.

கஙக. தன் தாயின்முன்னே இறக்கவும். மெய்வைத்தல்: மணி. உரு: கசுஎ.

கoகூ - ஙக. சார்ங்கலனென்போன் வீழ்ந்து மெய்வைத்தலும்.

கஙஉ. பார்ப்பானென்றது சார்ங்கலன் தந்தையை; "பார்ப்பான் றன்னொடு கண்ணிழந் திருந்த" என்று இங்கே சொல்லுதலாலும், "கண்ணில் கணவனை" (கூ: கருரு) என்று பின்பு வருதலாலும், சார்ங்கலனுடைய தந்தை தாயிருவரும் கண்ணையிழந்தோரென்பது பெறப்பட்டது.

கஙச. மணி. கூ: கசகூ.

கஙரு. அணங்கோ பேயோ; மணி. கூ: கசஅ, கருo. அணங்கு-காமநெறியான் உயிர்கொள்ளுந் தெய்வமகளென்பர்; குறள். ககஅ, பரிமேல்.

கஙங - ரு. சிறுவன்றன்னை ஆருயிருண்டது.

கஙசு. துறை - நீர்த்துறைகள். தொல்வலி மரன் - பழைய வலியையுடைய மரம்.

கஙஎ. உறையுள் - தங்குமிடம். காவாய் - காவாமலிருந்தாய்.

கஙசு - எ. புறநா. உஉக - கூ; கலி. கoக: கங - ச.

கஙஅ. தகவிலை கொல்லோ - தகவின்மையை யுடையாயோ; தகவு நின்னிடமில்லையோ என்றுமாம்.

(பி - ம்.) கஉஅ. 'விளிந்தனன்' கஉகூ. 'காணுவீமச்' கஙo. 'பேய்க்கே முன்னுயிர்' கஙக. 'தம்முன்வீழ்ந்து மெய்வைப்பப்' கஙஉ - ங. 'ஒழிந்த, விதித்தொழி' கஙச. 'யாருமிறமியோனென் பதுநோக்கா' கஙசு. 'தொல்பதி மானும்'

மகன்மெய் யாக்கையை மார்புறத் தழீஇ
௧௪0 யீமப் புறங்காட் டெயிற்புற வாயிலிற்
கோதமை யென்பாள் கொடுந்துயர் சாற்றக்
கடிவழங்கு வாயிலிற் கடுந்துய ரெய்தி
யிடையிருள் யாமத் தென்னையீங் கழைத்தனை
யென்னுற் றனையோ வெனக்குரை யென்றே
௧௪௫ பொன்னிற் பொலிந்த நிறத்தா டோன்ற
வாருயி லாட்டியென் னறியாப் பாலக
னீமப் புறங்காட் டெய்தினோன் றன்னை
யணங்கோ பேயோ வாருயி ருண்ட
துறங்குவான் போலக் கிடந்தனன் காணென
௧௫0 வணங்கும் பேயு மாருயி ருண்ணா
பிணங்குநூன் மார்பன் பேதுகந் தாக
வூழ்வினை வந்திவ னுயிருண்டு கழிந்தது
மாபெருந் துன்பநீ யொழிவா யென்றலு
மென்னுயிர் கொண்டிவ னுயிர்தந் தருளிலென்
௧௫௫ கண்ணில் கணவனை யிவன்காத் தோம்பிடு
மிவனுயிர் தந்தென் னுயிர்வாங் கென்றலு
முதுமூ தாட்டி யிரங்கினள் மொழிவோ

---

௧௪௧. கோதமை யென்பது அவள்பெயர். கொடுந்துயர் - தன் மகன் இறந்தானென்பது.

௧௪௨. மணி. ௬ : ௪௧.

௧௪௩. இருளையுடைய இடையாமத்தில்.

௧௪௫. பொன்னிற் பொலிந்த நிறத்தாள் - சூரியனைப்போல் விளங்கிய நிறத்தினையுடைய சம்பாபதி; பொன் - சூரியன்; "இளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து, விளங்கொளி மேனி விரிசடை யாட்டி" (௧ - ௨) என்று இந்நூற் பதிகத்தில் வருதல்காண்க.

௧௪௯. மணி. ௬ : ௧௩௪. ௧௪௯. என - என்று கோதமைசொல்ல.

௧௫௧. மார்பன் - சார்ங்கலன். பேதுகந்தாக - அறியாமை காரணமாக.

௧௫௩. என்றலும் - என்று சம்பாபதி சொல்லலும்.

௧௫௫. கண்ணில் கணவனை : மணி. ௬ : ௧௩௨. ஓம்பிடும் - பாதுகாப்பான்.

௧௫௬. என்றலும் - என்று கோதமை சொல்லலும்.

௧௫௭. முதுமூதாட்டி - சம்பாபதி.

(பி - ம்.) ௧௩௯. 'யாக்கைமார்புற' ௧௪௩. 'அழைத்தாய்' ௧௪௬. 'அறியாப்பார்ப்பான்' ௧௪௭. 'எய்தியோன்' ௧௫௧. 'பேயனுகந்தாக' ௧௫௩. 'துன்ப மொழிவாய்' ௧௫௪. 'உயிர்தந்தாலென்'

ஐய முண்டோ வாருயிர் போஒற்
செய்வினை மருங்கிற் சென்றுபிறப் பெய்துத
௧௬௦ லாங்கது கொணர்ந்துநின் னாரிடர் நீக்குத
லீங்கெனக் காவதொன் றன்றுநீ யிரங்கல்
கொலையற மாமெனுங் கொடுந்தொழின் மாக்க
ளவலப் படிற்றுரை யாங்கது மடவா
யுலக மன்னவர்க் குயிர்க்குயி ரீவோ
௧௬௫ ரிலரோ விந்த வீமப் புறங்காட்
டரசர்க் கமைந்தன வாயிரங் கோட்ட
நிரயக் கொடுமொழி நீயொழி யென்றலுந்
தேவர் தருவர் வரமென் றொருமுறை
நான்மறை யந்தணர் நன்னூ லுரைக்கு
௧௭௦ மாபெருந் தெய்வ நீயரு ளாவிடின்
யானோ காவே னென்னுயி ரீங்கென
வூழி முதல்வ னுயிர்தரி னல்ல

---

௧௫௮ - ௯. பிறப்பெய்துதலில் ஐயமுண்டோ; "செய்வினை வழித்தா யுயிர்செலு மென்பது, பொய்யில் காட்சியோர் பொருளுரை யாதலின்" சிலப். ௨௮ : ௧௬௭ - ௮; புறநா. ௧௯௨.

௧௬௦. அது - அவ்வுயிரை. ஆரிடர் - தீர்த்தற்கரிய துன்பம்.

௧௬௧. எனக்கு ஆவதொன்றன்று - எனக்கு இயலுவதான ஒரு காரியமன்று.

௧௬௪. அவலப்படிற்றுரை - கேட்டைத் தருகின்ற பொய்யுரை. அது அவலப் படிற்றுரை யென்க.

௧௬௫. இலரோ - உளரென்றபடி. புறங்காட்டில்.

௧௬௬. ஆயிரம் கோட்டம் அமைந்தன; ஆயிரம் - அநேகம்; "இறந்தோர் மருங்கிற் சிறந்தோர் செய்த, குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன, சுடுமண் ணோங்கிய நெடுநிலைக் கோட்டமும்" (௬ : ௫௭ - ௯) என்றார் முன்னும்.

௧௬௭. நிரயக் கொடுமொழி - நரகவேதனையைத்தரும் கொடிய வார்த்தை; என்றது, "இவனுயிர் தந்தென்னுயிர்வாங்கு" (மணி. ௬ : ௧௫௬) என்றதை. என்றலும் - என்று சம்பாபதி சொல்லலும்.

௧௬௯. நூல் - வேதம். ௧௭௦. தெய்வமாகிய நீ.

௧௭௧. யான் என்னுயிரைத் துறப்பேன் என்று கோதமை சொல்ல.

௧௭௨. ஊழிமுதல்வன் - மஹாப்ரஹ்மா; "தெய்வக் கருவுந்

(பி - ம்.) ௧௬௪. 'அலவலைப்படிற்றுரை', 'அவலை படிற்றுரை.' ௧௬௫. 'புறங்காட்டின்' ௧௬௭. 'நிரையத்தொடு' ௧௬௯. 'சென்னூலுரைக்கு' ௧௭௧. 'என்னுயிரென்றபின்'

தாழித் தாழி யகவரைத் திரிவோர்
தாந்தரின் யானுந் தருகுவன் மடவா
௧எ௫ ளீங்கெ ளுற்றலுங் காண்பா யென்றே
நால்வகை மரபி னரூபப் பிரமரு
நானால் வகையி னுரூபப் பிரமரு
மிருவகைச் சுடரு மிருமூ வகையிற்
பெருவனப் பெய்திய தெய்வத கணங்களும்

---

திசைமுகக் கருவுஞ், செம்மலர் முதியோன் செய்த வந்நாள்" (மணி. பதிகம்,உஅ - க.) இகரத்தை அசைநிலையாக்கி ஊழ்வினையாகிய முதல்வ னெனக் கூறினும் பொருந்தும்.

௧எ௩. சக்கரவாளமாகிய தாழியினுடைய உள்ளிடத்தே சஞ்சரிப் பவர்.

௧எ௪. தரினெனவே தரவின்மை பெறப்பட்டது.

௧எ௩ - ௪. இறந்துபோன உயிரை மீட்டுக்கொடுக்குமாற்றல் இந் தச் சக்கரவாளத்திலுள்ள தேவர்களுக்கு எங்ஙனமில்லையோ அங்ஙனமே எனக்குமில்லை யென்றபடி.

௧எ௫. ஆற்றல் - வலி. என்று - என்று சம்பாபதிசொல்லி.

௧எ௬. நால்வகை மரபின் அரூபப் பிரமரும் - உலகம் முப்பத் தொன்றனுள் இருபத்தெட்டாவதாகிய ஆகாசாநந்தியாயதன லோகம் முதலிய நான்கு உலகங்களிலுமுள்ள அரூபப்பிரஹ்ம சாதியாராகிய நால் வகையினரும். இவர்களைத் தியானம் ஐந்தனுள் அவிசேஷமென்னும் ஐந்தாவதில் தேறியவர்களென்பர்.

௧எஎ. நால் நால்வகையின் உரூபப் பிரமரும் - மேற்கூறிய உல கங்களுள் பன்னிரண்டாவதாகிய பிரஹ்மகாயிகலோகம் முதலாகிய உலகம் பதினாறிலுமிருக்கிற உரூபப்பிரஹ்ம சாதியாராகிய பதினாறு வகையினரும்; இவர்களில் ௧௨, ௧௩, ௧௪-ஆம் உலகங்களிலுள்ளவர்களை ஸ்ரோதாபத்தி என்னும் முதலாவது தியானத்தில் தேறியவர்களென் றும், ௧௫, ௧௬, ௧எ-ஆம் உலகங்களிலுள்ளவர்களை ஸ்கிருதாகாமி என் னும் இரண்டாவது தியானத்தில் தேறியவர்களென்றும், ௧அ, ௧௯, ௨௦-ஆம் உலகங்களிலுள்ளவர்களை அநாகாமி என்னும் மூன்றாவது தியானத் தில் தேறியவர்களென்றும், ௨௧-ஆவது முதலிய எழுலகங்களிலுள்ளவர் களை அர்ஹத் என்னும் நான்காவது தியானத்தில் தேறியவர்களென்றும் பௌத்தநூல் கூறும்.

௧எ௬ - எ. இருவகைப் பிரஹ்மலோகங்கள் இருபதின் பெயர் களையும் இந்நூற்பதிகத்தின் ௨அ - க - ஆம் அடிகளின்உரையிற்காண்க.

௧எஅ. இருவகைச்சுடர் - சந்திர சூரியர்கள்.

௧எஅ - ௯. மேற்கூறிய உலகம் முப்பத்தொன்றனுள் ஆறாவதா கிய மஹாராஜிகலோகம் முதலிய உலகம் ஆறினுமுள்ள அறுவகைத்

(பி - ம்.) ௧எ௩. 'அகவயிற்றிரிவோர்' ௧எ௪. 'மடவோயீங் கெனுலுற்றலும்' ௧எ௬. 'பிடமரும்.' ௧எஎ 'உருபிதப்பிரமரு', 'உருபப் பிடமரு.'

கஅ0 பல்வகை யசுரரும் படுதுய ருறாஉ
மெண்வகை நரகரு மிருவிசும் பியங்கும்
பன்மீ னீட்டமு நாளுங் கோளுந்
தன்னகத் தடக்கிய சக்கர வாளத்து
வரந்தரற் குரியோர் தமைமுன் னிறுத்தி
கஅ௫ யரந்தை கெடுமிவ ளருந்துய ரிதுவெனச்
சம்பா பதிதா னுரைத்தவம் முறையே
யெங்குவாழ் தேவரு முரைப்பக் கேட்டே
கோதமை யுற்ற கொடுந்துயர் நீங்கி
யீமச் சுடலையின் மகனையிட் டிறந்தபின்
கக0 சம்பா பதித னுற்ற ளென்ற
வெங்குவாழ் தேவருங் கூடிய விடந்தனிற்

---

தெய்வகணங்கள். இந்த உலகங்களின் பெயரைப் பதிகத்து உஅ - கூ-ஆம் அடியின் உரையிற்காண்க. 'பெருவனப்பெய்திய' என்றார், விளங்கொளி மேனியராதலின்.

கஅ0. படுதுயர் - மிக்க துன்பம்.

கஅக. எண்வகை நரகர் - மேற்கூறிய உலகம் முப்பத்தொன்ற னுள்முதலாவதாகிய நரகலோகத்தின் பகுதிகளான மஹாநிரயம், ரௌரவம், காலஸூத்ரம், ஸஞ்சீவனம், மஹாவீசி, தபனம், ஸம்பிரதாபனம், ஸம்ஹதம் என்னும் எட்டு நரகங்களிலுமுள்ளவர்கள்.

கஅஉ. ஈட்டம் - கூட்டம். நாள் - இருபத்தேழு நட்சத்திரங்கள்.

கஅங. மேற்கூறிய அருபப்பிரஹ்மகணலோகம் முதலியவற்றைத் தன்னுள் அடக்கிய கோளத்தைச் சக்கரவாளமென்பர்; "சக்கர வாளத்துத் தேவ ரெல்லாம்" (மணி. கஉ: எஉ), "எண்ணருஞ் சக்கர வாள மெங்கணும்" (ஷை. உகூ: ௫உ) என வருதல் காண்க.

கஅச. வரந்தரற்குரியோர் - தேவர். முன்னிறுத்தி - கோதமைக்கு முன்னே நிறுத்தி.

கஅ௫. அரந்தை - துன்பம். கெடும் - கெடுமின். என - என்று சம்பாபதி சொல்ல.

கஅகூ - எ. சம்பாபதி உரைத்த முறையினை, மணி. கூ: கஎங - சஉ-ஆம் அடிகளிற் காண்க.

கஅஅ. இறக்கத் துணிந்தமையால் கோதமை கொடுந்துயர் நீங்கினள். இதுபோன்ற நிகழ்ச்சியைச் சிலப்பதிகாரம், உ௫: அஉ - ஆம் அடி முதலியவற்றிற் காண்க.

கஅக. ஈமம் - பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு.

கக0 - கக. தோன்றக்கூடிய விடமென்க.

(பி - ம்.) கஅஉ. 'பண்பினீட்டமு' கஅச - ௫. 'உரந்தரற் குரியோர் தம்மைமுன் னிறுத்தீங், காக்கை' ககக. 'அங்குவாழ் தேவருங் கூட்டிய'

சூழ்கடல் வளைஇய வாழியங் குன்றத்து
நடுவு நின்ற மேருக் குன்றமும்
புடையி னின்ற வெழுவகைக் குன்றமு
௧௯௫ நால்வகை மரபின் மாபெருந் தீவு
மோரீ ராயிரஞ் சிற்றிடைத் தீவும்
பிறவு மாங்கத னிடவகை யுரியன
பெறுமுறை மரபி னறிவுவரக் காட்டி
யாங்குவா ழுயிர்களு மவ்வுயி ரிடங்களும்
௨00 பாங்குற மண்ணீட்டிற் பண்புற வகுத்து

௧௯௨. சூழ்கடல் - பெரும்புறக்கடல். ஆழியங்குன்றத்து - சக்கரவாளகிரியின் உட்பட்ட இடத்தில்.

௧௯௩. நடுவிடத்தே நின்றதாகிய, எண்பத்தீராயிரம் யோசனை உயரமும் அவ்வுயரத்திற்குத் தக்க பருமையும் அமைந்துள்ள மேருமலையும்.

௧௯௪. அம்மேருவின் பக்கத்தே அதிலிருந்து உயரத்தில் ஒன்றற்கொன்று வரவரப் பாதிப் பாதியளவு குறைந்து குறைந்து ஒன்றைச்சுற்றியொன்றாகச் சூழ்ந்துள்ள எழு குலகிரிகளும்.

௧௯௫. மேற்கூறிய மேருவும் அதனைச் சூழ்ந்துள்ள எழுகுலகிரிகளும் அக்குலகிரிகளுள் ஒவ்வொன்றனையும் சூழ்ந்து அவ்வக்கிரியின் உயர அளவுள்ள ஆழமும் அகலமுமமைந்த எழு கடல்களும் ஆகிய இவற்றையெல்லாம் சூழ்ந்து கிடக்கும் பெரும்புறக்கடலிலுள்ள சம்புத்தீவு முதலிய நான்கு மகாத்வீபங்களும். இந்த நான்கினுள் தெற்கேயுள்ளது சம்புத்தீவு; இது நாவலந்தீவு என்றுங் கூறப்படும்; இதனை, "நாவ லோங்கிய மாபெருந் தீவு" (மணி. ௨: ௧), "நாவலொடு பெயரிய மாபெருந் தீவத்து" (ஷை. ௧௧: ௧0௭) என்பவற்றாலுணர்க.

௧௯௬. மஹாத்வீபம் நான்கினுள் ஒவ்வொன்றையும் தனித்தனியே ஐந்நூறு ஐந்நூறாகச் சூழ்ந்துள்ள இரண்டாயிரம் சிறு தீவுகளும்; இச்சிறு தீவுகள் அந்தரத்தீவுகளென்றுஞ் சொல்லப்படும்.

௧௯௫ - ௬. "அந்தரத் தீவினு மகன்பெருந் தீவினும்" (௨௫: ௨௨௪) என்று பின்வருதல் காண்க.

௧௯௩ - ௬. இவ்வடிகளிலுள்ள வரலாறுகள் பர்மாதேசத்துப் புத்த நூலிலிருந்து தெரிந்துகொள்ளப்பட்டன.

௧௯௭ - ௮. உரியனவற்றைக்காட்டி.

௧௯௯. உயிர்களென்றது அவ்வவ்வுயிர்கள் வாழுகின்ற உடம்புகளை.

௨00. பாங்கு - பகுதித்திரள்; "அடியோர் பாங்கு மாயமு நீங்கி" (சிலப். ௧௬: அ௫); அழகுமாம். மண்ணீட்டின் - சுதையாற் செய்யப்பட்டுள்ள பாவைவடிவமாக.

(பி - ம்.) ௧௯௨. 'ஆழிக்குன்றத்து' ௨00. 'மண்ணிடிற்'

மிக்க மயனு லிழைக்கப் பட்ட
சக்கர வாளக் கோட்டமீங் கிதுகா
ணிடுபிணக் கோட்டத் தெயிற்புற மாதலிற்
சுடுகாட்டுக் கோட்ட மென்றல துரையா
௨௦௫ ரிதன்வர விதுவென் றிருந்தெய்வ முரைக்க
மதனி னெஞ்சமொடு வான்றுய ரெய்திப்
பிறந்தோர் வாழ்க்கை சிறந்தோ ளுரைப்ப
விறந்திருள் கூர்ந்த விடையிருள் யாமத்துத்
தூங்குதுயி லெய்திய சுதமதி யொழியப்
௨௧௦ பூங்கொடி தன்னைப் பொருந்தித் தழீஇ
யந்தர மாறா வாறைந் தியோசனைத்
தென்றிசை மருங்கிற் சென்றுதிரை யுடுத்த
மணிபல் லவத்திடை மணிமேகலா தெய்வ
மணியிழை தன்னைவைத் தகன்றது தானென்.

௬.—சக்கரவாளக்கோட்டமுரைத்தகாதை முற்றிற்று.

---

௨௦௧. மயன் - தெய்வத்தச்சன்; அசுரத்தச்சனென்றுங் கூறுவர்.
௨௦௩. இடுதல் - போகடுதல். பிணக்கோட்டம் - மயானம்.
௨௦௪. மு. மணி. ௬: ௩௦. சுடுகாட்டுக் கோட்டம்: சீலப். ௯: ௨௦.
௨௦௫. இருந்தெய்வம் - மணிமேகலாதெய்வம்.

௨௦௬. மதனில் நெஞ்சமொடு - செருக்கற்ற மனத்துடனே; மதன்-வலியுமாம்.

௨௦௭. சிறந்தோள்-மணிமேகலை. வாழ்க்கையென்றது நிலையாமையை. வாழ்க்கையைச் சிறந்தோள் உரைப்ப.

௨௦௮. இடையிருள் யாமத்து - நடுயாமத்தில்; மணி. ௬: ௧௪௩.
௨௧௦. பூங்கொடிதன்னை - மணிமேகலையை.
௨௧௧. அந்தரம் ஆறா - ஆகாயமே வழியாக.
௨௧௧ - ௨. முப்பதுயோசனைதூரம் தென்றிசைக்கண்ணே சென்று.
௨௧௦ - ௧௪. மணி. ௯ : ௫௫ - ௭.

௧ - ௨௧௪. கதிர்மண்டிலம் சொரிய, மேனியள் எத்தி நோக்கி என்னுற்றீரென, அவள் உரைத்தலும், அருந்தெய்வமுரைப்ப, சுதமதி என்னையோவென, நேரிழை கூறும்; அங்ஙனங்கூறுகின்ற தெய்வம், இதன் வரவு இது வென்றுரைக்க, சிறந்தோளுரைப்ப, தெய்வம் இடையிருள் யாமத்துச் சுதமதியொழியப் பூங்கொடிதன்னைத் தழீஇச் சென்று மணிபல்லவத்தில் வைத்து அகன்றதென முடிக்க.

(பி - ம்.) ௨௦௪. 'என்பவாறியார்' ௨௦௫. 'இதுவெனவிருந்' ௨௧௦. 'பொருந்தினடழீஇ'

ஏழாவது

# துயிலெழுப்பியகாதை.

[ஏழாவது மணிமேகலாதெய்வம் உவவனம்புகுந்து சுதமதியைத் துயிலெழுப்பியபாட்டு.]

மணிமே கலைதனை மணிபல் லவத்திடை
மணிமே கலாதெய்வம் வைத்து நீங்கி
மணிமே கலைதனை மலர்ப்பொழிற் கண்ட
வுதய குமர னுறுதுய ரெய்திக்
௫ கங்குல் கழியிலென் கையகத் தாளெனப்
பொங்குமெல் லமளியிற் பொருந்தா திருந்தோன்
முன்னர்த் தோன்றி மன்னவன் மகனே
கோணிலை திரிந்திடிற் கோணிலை திரியுங்
கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரு
௧௦ மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை
மன்னுயி ரெல்லா மண்ணாள் வேந்தன
றன்னுயி ரென்னுந் தகுதியின் றாகுந்
தவத்திறம் பூண்டோ டன்மேல் வைத்த

---

௩. மலர்ப்பொழிற் கண்ட - உவவனத்திற்கண்ட.

௪. உறுதுயர் - மிக்க துன்பம்.

௫. கையகத்தாள் - கையினிடத்தே யுள்ளாள்.

௬. பொருந்தாது - துயிலாது. ௯. வறம் - வறுமை.

அ - ௧௨. இந்நூற் பதிகம், ௨௪ - ஆம் அடியைப் பார்க்க; "கோணிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கண் மிஞ்சி, நீணில மாரி யின்றி விளைவஃகிப் பசியு நீடிப், பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந் தறங்கண் மாறி, யாணையிவ் வுலகு கேடா மரசுகோல் கோடி னென்றான்" சீவக. ௨௫௫.

௧௧ - ௨. புறநா. ௧அ௬.

௧௩. தவத்திறம் - தவத்தின் கூறுபாடு.

(பி - ம்.) ௪. 'துயிலெய்தி' அ. 'திரிந்திடக் கோணிலை' ௧௨. 'தகுவையாயின்', 'தகுதியையாயிற்.' ௧௩. 'தவத்திற்பூண்டோ'

வவத்திற மொழிகென் றவன்வயி னுரைத்தபி
கரு னுவவனம் புகுந்தாங் குறுதுயில் கொள்ளுஞ்
சுதமதி தன்னைத் துயிலிடை நீக்கி
யிந்திர கோடணை யிந்நகர்க் காண
வந்தே னஞ்சன் மணிமே கலையா
ஞதிசான் முனிவ னறவழிப் படூஉ
உ0 மேதமு முதிர்ந்த திளங்கொடிக் காதலின்
விஞ்சையிற் பெயர்த்துநின் விளங்கிழை தன்னையோர்
வஞ்சமின் மணிபல் லவத்திடை வைத்தேன்
பண்டைப் பிறப்பும் பண்புற வுணர்ந்தீங்
கின்றேழ் நாளி லிந்நகர் மருங்கே
உரு வந்து தோன்று மடக்கொடி நல்லாள்
களிப்புமாண் செல்வக் காவற் பேரூ
ரொளித்துரு வெய்தினு முன்றிற மொளியா
ளாங்கவ ளிந்நகர் புகுந்த வந்நா

கச. அவத்திறம் - கேடுசெய்யுங்காரியம்; "தவஞ்செய்வார்.... அவஞ்செய்வா ராசையுட் பட்டு" (குறள், உசுசு) என்பதில், 'அவம்' என்பது இப்பொருளில் வருதல் காண்க.

சு - கச. மணி. கஅ : அ0 - அரு.

க - கச. மணிமேகலாதெய்வம் மணிமேகலையை மணிபல்லவத்திடை வைத்து நீங்கிப் பொருந்தாதிருந்தோனாகிய உதயகுமரன் முன்னர்த் தோன்றி அவத்திறம் ஒழிகவென்று உரைத்தபினென்க.

கஎ. இந்திரகோடணை - இந்திரவிழா.

கஅ. மூ. சிலப். கரு : ருரு. அஞ்சல் - அஞ்சாதே.

ககூ. ஆதிசால்முனிவன் - புத்தன்.

உ0. ஏது முதிர்ந்தது - ஏதுநிகழ்ச்சி முற்றியது.

உக. விஞ்சையின் - வித்தையினாலே.

உச. இன்றேழ்நாளில் - இற்றைக்கு ஏழாவதுநாளில்; மணி. கக : க உக.

உரு. தோன்றும் - தோன்றுவாள். நல்லாள் - மணிமேகலை.

உசு. பேரூர் - காவிரிப்பூம்பட்டினத்தில்.

உஎ. உருவை மறைத்து வருவாளாயினும்.

(பி - ம்.) கச. 'அவ்வயினுரைத்தபின்' கரு. 'நவவனம்' உக. 'குணர்ந்துநின்' உரு. 'வந்துகாண்குறும்' உசு. 'பெயரூர்' உஎ. 'உன்றிறமொழியாள்', 'ஊன்றிறமொழியாள்.'

## ௭.—துயிலெழுப்பியகாதை.

னீங்கு நிகழ்வன வேதுப் பலவுள
௩0 யாதவி தனக்கியான் வந்த வண்ணமு
மேதமி னெறிமக ளெய்திய வண்ணமு
முரையாய் நீயவ ளென்றிற முணருந்
திரையிரும் பௌவத்துத் தெய்வமொன் றுண்டெனக்
கோவலன் கூறியிக் கொடியிடை தன்னையென்
௩௫ னாமஞ் செய்த நன்னா ணள்ளிருட்
காமன் கையறக் கடுநவை யறுக்கு
மாபெருந் தவக்கொடி யீன்றனை யென்றே
நனவே போலக் கனவகத் துரைத்தே
னீங்கிவ் வண்ண மாங்கவட் குரையென்
௪0 றந்தரத் தெழுந்தாங் கருந்தெய்வம் போயபின்
வெந்துய ரெய்திச் சுதமதி யெழுந்தாங்
ககன்மனை யரங்கத் தாசிரியர் தம்மொடு

---

௨௯. நிகழ்வனவாகிய ஏதுக்கள்.

௩௧. ஏதமில் நெறி - குற்றமில்லாதவழி; அஃதாவது விசுத்தி மார்க்கம்.

௩௨. அவள் - மாதவி. என் திறம் உணரும்-என்வரலாற்றை உணர்வாள்.

௩௩. பௌவத்து - கடலினிடத்து. தெய்வம் ஒன்று உண்டெனஎனது குலமுதல்வனை விபத்தினின்று நீக்கிப் பாதுகாத்த தெய்வமொன்று உள்ளதென்று.

௩௫. நன்னாளிற் செறிந்த இருளிடத்தே.

௩௩-௫. சிலப். ௧௫ : ௨௮-ஆம் அடி முதலியவற்றின் பொருளை இவற்றுடன் ஒப்பிடுக.

௩௬-௭. சிலப். ௩0 : ௨௫-௬.

௧௫-௪0. மணிமேகலாதெய்வம் புகுந்து நீக்கி, 'இந்நகரில் இந்திர விழாக்காண வந்தேன்; யான் மணிமேகலாதெய்வம்; இளங்கொடிக்கு ஏது முதிர்ந்ததாதலால் அவளை மணிபல்லவத்தில் வைத்தேன்; அவள் இந்நகரில் இற்றைக்கு ஏழாநாளில் தோன்றுவள்; ஏதுப் பலவுள; மாதவிக்குரை; அவள் என்றிறமுணரும்; இவ்வண்ணம் அவட்கு உரை' என்று போயபினென்க.

௪௨. அகல் மனை அரங்கத்து - விசாலித்த வீடாகிய நடனசாலையில். ஆசிரியர் தம்மொடு-இயலாசிரியனும், ஆடலாசிரியனும், யாழாசிரியனும், இசையாசிரியனும், குழலோனும், தண்ணுமையோனுமாகிய இவர்களோடு நின்று.

(பி - ம்.) ௩௧. 'ஏதமினின்மக', 'ஏதமுனிமைக.' ௩௨. 'உரைப் பொருளுணரும்' ௩௩. 'பவ்வத் தெய்வ முண்டென' ௩௫. 'நல்லிருள்' ௩௬. 'கையாற் கடுநவை' ௪௧. 'எய்தியசுதமதி' ௪௨. 'தாசியர் தம்மொடு'

வகைதெரி மாக்கட்கு வட்டணை காட்டி
யாடல் புணர்க்கு மரங்கியன் மகளிரிற்
சரு கூடிய குயிலுவக் கருவிகண் டுயின்று
பண்ணுக்கிளை பயிரும் பண்ணியாழ்த் தீந்தொடை
கொளைவல் லாயமோ டிசைகூட் டுண்டு
வளைசேர் செங்கை மெல்விர லுதைத்த
வெம்மைவெய் துறுது தன்மையிற் றிரியவும்
ருo பண்பில் காதலன் பரத்தமை நோனா
துண்கண் சிவந்தாங் கொல்குகொடி போன்று
தெருட்டவுந் தெருளா தூடலொடு துயில்வோர்
விரைப்பூம் பள்ளி வீழ்துணை தழுவவுந்

---

சங. வகைதெரிமாக்கட்கு - அவிநயம் முதலிய கூறுபாடுகளைத் தெரிகின்ற மாந்தர்களுக்கு. வட்டணை காட்டி - கமல வர்த்தனையைக் காட்டி; கமலவர்த்தனையாவது கைத்தலங்காட்டல்; சீவக. கூஎரு.

சச. அரங்கியல் மகளிரின் - நாடகமளிரைப்போல; நாடக மகளிருடனென்றுமாம்.

சரு. கூடியகுயிலுவக்கருவி - சேர்ந்த குழல் யாழ் மத்தளம் குடமுழா இடக்கையென்பவை; "கூடிய குயிலுவக் கருவிக ளெல்லாங், குழல்வழி நின்ற தியாழே யாழ்வழித், தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப், பின்வழி நின்றது முழவே முழவொடு, கூடிநின் றிசைத்த தாமந் திரிகை" (சிலப். ங: கஙஅ - சஉ, உரை.) கண்டுயின்று - ஒலியாதடங்கி. 'மகளிரின்' (சச) என்றதனால் அவர்கள் துயின்றமையும் பெறப்பட்டது.

சசு. சிலப். உஉ: கசக.

சசு - கூ. பண்ணுக்கிளை - பண்ணின் வகைகளை. பயிரும் - இசைக்கும். தீந்தொடை - இனிய நரம்புகள். கொளைவல் ஆயமோடு - பாட்டில் வல்லமகளிர் கூட்டத்துடனே; கொளை - ஒற்றறுத்தலுமாம். கூட்டுண்டு - சேர்ந்தனுபவித்து. உதைத்த - தெறித்த. உறுது - உறுமையால். தொடை திரியவுமென்க; நெடுநல். சுஅ.

ருo - ருங. பரத்தமை-பரத்தன் தன்மை; பரத்தையை நுகர்வான் பரத்தன்; "பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர், நண்ணேன் பரத்தநின் மார்பு" (குறள். கஙகக); "வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு" (சிலப். கசு : சுங.) நோனாது - பொறாமல். துயில்வோர் - ஊடியமகளிர். வீழ்துணை - விரும்பியகணவன். துயில்வோர் தழுவவும்.

(பி - ம்.) சசு. 'பண்ணுக்கிழமைபிறமண்ணியாழ்' சஎ. 'கொளவல் லாய' சஅ. 'வளையார் செங்கை' சகூ. 'வேதுறுது' ருo. 'காதல் பார்த்தமை நோனாது' ருக. 'நுண்கண்' ருஉ. 'துயில்வோள்'

தளர்நடை யாயமொடு தங்கா தோடி
௫௫ விளையாடு சிறுதே ரீர்த்துமெய் வருந்தி
யமளித் துஞ்சு மைம்படைத் தாலிக்
குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்க்குக்
காவற் பெண்டிர் கடிப்பகை யெறிந்து
தூபங் காட்டித் தூங்குதுயில் வதியவு
௬0 மிறையுறை புறவு நிறைநீர்ப் புள்ளுங்
காவுறை பறவையு நாவுள் ளழுந்தி
விழவுக்களி யடங்கி முழவுக்கண் டுயின்று
பழவிறன் மூதூர் பாயல்கொ ணடுநாட்
கோமகன் கோயிற் குறுநீர்க் கன்னலின்
௬௫ யாமங் கொள்பவ ரேத்தொலி யரவமு
முறையுளின் னொடுங்கிய வுண்ணா வுயக்கத்து
நிறையழி யானை நெடுங்கூ விளியுந்
தேர்வழங்கு தெருவுஞ் சிற்றிடை முடுக்கரு
மூர்காப் பாள ரெறிதுடி யோதையு
௭0 முழங்குநீர் முன்றுறைக் கலம்புணர் கம்மியர்

---

௫௪. தளர்நடையாயம் - சிறார்கூட்டம்.

௫௬. ஐம்படைத்தாலி : மணி. ௩ : ௧௩௮, உரையைப்பார்க்க.

௫௮ - ௯. காவற் பெண்டிர் - செவிலித்தாயர். கடிப்பகை: மணி. ௭ : ௭௩. காவற்பெண்டிர் துயில்வதியவும்.

௬0. இறை - வீட்டின் இறப்பு. ௬௧. கா - சோலை.

௬௨. களி - களிப்பு ; கூத்துமாம். ௬௩. நடுநாள் - நடு இரவில்.

௫௧ - ௬௩. தன்மையிற் றிரியவும், வீழ்துணை தழுவவும், துயில் வதியவும், கருவி கண்டுயின்று நா உள்ளழுந்தி முழவுக்கண்டுயின்று ஊர் பாயல்கொள் நடுநாளிலென்க.

௬௪. கன்னலின் - நாழிகை வட்டிலால் ; முல்லை. ௫௮.

௬௫. யாமங்கொள்பவர் - நாழிகைக்கணக்கர் ; சிலப். ௫ : ௪௯.

௬௬. உண்ணா உயக்கம் - உண்ணாமையாலுண்டாகிய வருத்தம்.

௬௭. நெடுங்கூவிளி - நெடியகூப்பிடுதலின் முழக்கம் ; மணி. ௭ : ௧௧௫.

௬௮. சிற்றிடைமுடுக்கர் - சிறிய இடங்களையுடைய முடுக்குத் தெருக்கள்.

௬௯. துடி - ஒருவகைத் தோற்கருவி.

௭0. கலம்புணர் கம்மியர் - கப்பலிற் சேர்ந்து தொழில் செய்வோர்.

(பி - ம்.) ௫௪. 'தாங்காதோடி' ௬௨. 'களிப்படங்கி' ௬௪ - ௫. 'குறிநீர்க் கன்னல், யாமங்கொள்வோர்' ௬௬. 'ஓங்கிய'

தாழ்ந்தடு கள்ளின் ரூேப்பியுண் டயர்ந்து
பழஞ்செருக் குற்ற வனந்தர்ப் பாணியு
மரவாய்க் கடிப்பகை யையவிக் கடிப்பகை
விரவிய மகளி ரேந்திய தூமத்துப்
எரு புதல்வரைப் பயந்த புனிறுதீர் கயக்கந்
தீர்வினை மகளிர் குளனு டரவமும்
வலித்த நெஞ்சி னாடவ ரின்றியும்

எக. தாழ்ந்து அடு கள்ளின் தோப்பி உண்டு அயர்ந்து - தாழாவிச் சமைத்த கள்வகைகளில் நெல்லாற் சமைத்த கள்ளையுண்டு தம்மை மறந்து; "இல்லடு கள்ளின் ரூேப்பி பருகி" பெரும்பாண். கசஉ.

எஉ. அனந்தர் - கள்ளை உண்டமையாலுண்டாகிய செருக்கு; "அனந்தர் நடுக்க மல்ல தியாவதும்" பொருந. ௯௪.

எ௩. கடிப்பகை - பேய்க்குப் பகையாகவுள்ளதென்று பொருள்; அரவாய்க்கடிப்பகை - அரம்போன்ற வாயினையுடைய வேப்பிலை. ஐயவிக்கடிப்பகை - வெண் சிறுகடுகு; இவை பேய்க்குப்பகை யென்பதை, புறநா. உ௮௧ - ஆம் செய்யுளாலும் உணர்க. பேய்முதலியவைகள் அணுகாதிருத்தற்கு இருவகைக் கடிப்பகையும் கூறப்பட்டன; மணி. ௩: க௩௪, உரையைப் பார்க்க.

எ௪. தூமத்து - புகையுடன்.

எ௩ - ௪. மகளிரேந்திய அரவாய்க்கடிப்பகை ஐயவிக்கடிப்பகை விரவிய தூமம் ஆகிய இந்த இரண்டுடன் சென்று என ஒருசொல் வருவிக்க.

எ௫ - ௬. புனிறுதீர்மகளிர்; கயக்கந்தீர்மகளிரென்க; கயக்கம் - கயங்குதல். புதல்வரைப்பெற்றுப் புனிறுதீர்ந்த மகளிர் இரவிற்சென்று குளத்தில் நீராடுதலை, "கணவ ருவப்பப் புதல்வர்ப் பயந்து, பணைத்தேந் திளமுலை யமுத மூறப், புலவுப்புனிறு தீர்ந்து பொலிந்த சுற்றமொடு, வளமனை மகளிர் குளநீ ரயர" (மதுரை. ௬௦௦ - ௬௦௩) என்பதனாலுமுணர்க. புதல்வரைப்பெற்றமகளிர் எழுந்துசென்று பத்தாவது இரவில் நீராடவேண்டுமென்று ஆபஸ்தம்பக்ருஹ்யத்தின் கரு-ஆம் கண்டத்துள்ள அ - ஆம் ஸூத்திரத்தாலும், அந்நூலை அநுஸரித்துத் தோழப்பரென்று வழங்குகிற வைதிகஸார்வபௌமரியற்றிய க்ருஹ்யரத்னத்தில் ௬ - ஆம் கண்டத்தில் நாமகரணப் பிரகரணத்திலுள்ள, "தசமேஹநி" என்னும் ஸூத்திரத்தாலும் தெரிகின்றதென்பர்.

எஎ. வலித்த நெஞ்சின் ஆடவர் இன்றியும் - பகைமையைக் கருதிய நெஞ்சினையுடைய வீரர் இல்லாதிருக்கவும்.

(பி - ம்.) எக. 'தாழ்ந்தகள்ளின் தொப்பிரண்டயந்து' எ௩. 'நாவாய்க் கடிப்பகை' எ௪. 'இரவியன்மகளிர்' எ௫ - ௬. 'புதல்வர்ப்பயந்தபுனிறுதீருகத்து', 'விரிவியன்மகளிர்குளநாளரவமும்', 'புனிறுதீருயக்கந், தீர்வியன்.'

புலிக்கணத் தன்னோர் பூத சதுக்கத்துக்
கொடித்தேர் வேந்தன் கொற்றங் கொள்கென
௮0 விடிக்குரன் முழக்கத் திடும்பலி யோதையு
மீற்றிளம் பெண்டி ராற்றுப் பாலகர்
கடுஞ்சூன் மகளிர் நெடும்பு ணுற்றோர்
தந்துயர் கெடுக்கு மந்திர மாக்கண்
மன்றப் பேய்மகள் வந்துகைக் கொள்கென
௮டு நின்றெறி பலியி னெடுங்குர லோதையும்
பல்வே றோதையும் பரந்தொருங் கிசைப்பக்
கேட்டுளங் கலங்கி யூட்டிரு ளழுவத்து
முருந்தே ரிளநகை நீங்கிப் பூம்பொழிற்
றிருந்தெயிற் குடபாற் சிறுபுழை போகி
௯0 மிக்கமா தெய்வம் வியந்தெடுத் துரைத்த
சக்கர வாளக் கோட்டத் தாங்கட்
பலர்புகத் திறந்த பகுவாய் வாயி
லுலக வறவியி னொருபுடை யிருத்தலுங்

எ௮. புலிக்கணத் தன்னோர் - வீரர். பூத சதுக்கத்து - பூதத்தை யுடைய சதுக்கத்திலே; சதுக்கம் - நாற்சந்தி.

௮௧. பு. மணி. ௬: ௧௮.

௮௨. கடுஞ்சூல்மகளிர் - முதற்சூலையுடைய மகளிர்; "கடுஞ்சூன் முண்டகங் கதிர்மணி கழாஅலவும்" சிறுபாண். ௧௪௮.

௮எ. ஊட்டிருளழுவத்து - ஊட்டிறைற்போன்ற இருட்பரப்பில்.

௮௯. பு. மணி. ௬: ௨௨.

௯௨ - ௯௩. பு. மணி. ௧எ: எஎ - ௮. உலக அறவி - ஊரம்பலம்; எல்லாச்சாதியாரும் வந்து தங்குதற்குரிய தருமசாலை; இதனை, 'லோகோபகாரிகா' என்பர் வடநூலார்.

௪௧ - ௯௩. சுதமதியெழுந்து நடுநாளில் எத்தொலியரவமும், நெடுங்கூவிளியும், துடியோதையும், அனந்தர்ப்பாணியும், குளணுடரவமும், பலியோதையும், நெடுங்குரலோதையும் ஆகிய பல ஓசைகளையும் கேட்டு உளம்கலங்கி நீங்கிப் போகிச் சக்கரவாளக்கோட்டத்திடத்தே உலகவறவியின் ஒரு புடையிருத்தலுமென்க.

(பி - ம்.) எ௮. 'பூதச்சதுக்கத்து' ௮டு. 'புலியின்' ௮எ. 'பூட்டிருளழுவத்து' ௮௮. 'நீங்கிய பூம்பொழில்' ௯௩. 'உலகவிறைவியொருபுடை'

கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய
கூரு வந்தி லெழுதிய வற்புதப் பாவை
மைத்தடங் கண்ணாண் மயங்கினள் வெருவத்
திப்பிய முரைக்குந் தெய்வக் கிளவியி

---

கூச - ரு. நெடுநிலை உடைக்கந்து அந்தில் - நெடிய தோற்றத்தை யுடைய தூணாகிய அவ்விடத்தே. காரணம் காட்டிய - பழவினையாகிய காரணத்தை யாவருக்கும் காட்டுதற்பொருட்டு. எழுதிய - மயனென்னும் தெய்வத்தச்சனால் நிருமிக்கப்பட்ட. அற்புதப்பாவை - யாவருக்கும் ஆச்சரியத்தை உண்டுபண்ணுகின்ற பாவை; இது, மேற்கூறிய உலகவறவியிற் சம்பாபதி கோயிலின் கிழக்கேயுள்ள தூணொன்றில் தெய்வகணத்தோனாகிய துவதிகனென்பவனுடைய வடிவம்போல மயனால் நிருமிக்கப்பட்ட பாவை; முக்காலச்செய்தியையும், கேட்போர்க்குச் சொல்லும் இயல்பையுடையது; பேசுதல்பற்றி இது நாவுடைப்பாவையென்றுஞ் சொல்லப்படும். இவற்றை, "கந்துடை நெடுநிலைக் கடவு ளெழுதிய, வந்திற் பாவை யருளு மாயிடின்" (கரு : ஙங - ச), "கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய, தந்துணைப் பாவையை" (கஎ : அகூ - கூ0), "நெடுநிலைக் கந்தி னிடவயின் விளங்கக், கடவு ளெழுதிய பாவையாங் குரைக்கும்" (உ0 : கக0 - கக), "கடவு ளெழுதிய நெடுநிலைக் கந்தின், குடவயி னமைத்த நெடுநிலை வாயின், முதியாள் கோட்டம்" (உக : க - ங), "என்றிவை சொல்லி யிருந்தெய்வ முரைத்தலும்" (உக : ஙரு), "மன்பெருந் தெய்வ கணங்களி னுள்ளேன், றுவதிக னென்பேன் றொன்றுமுதிர் கந்தின், மயனெனக் கொப்பா வகுத்த பாவையி, னீங்கேன்" (உக : கங0 - ஙங), "நெடுநிலைக் கந்தி னின்ற பாவை" (உஉ : உ), "இலங்கொளிக் கந்தி னெழுதிய பாவாய்" (உஉ : கூக, "நாவுடைப் பாவை நங்கையை யெடுத்தலும்" (உஉ : கூச), "நாவுடைப் பாவையை நலம்பல வேத்தி" (உஉ : க0ச) என இந்நூலில் வருவனவற்றாலுணர்க. எழுதிய - பண்ணிய; "கடவு ளெழுதவோர் கற்றா ராமெனின்" (உரு : கங0), "கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்" (ஷை : கஙகூ), "கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது" (உகூ : கச) எனச் சிலப்பதிகாரத்து வருதல்காண்க.

கூசு. மைத்தடங்கண்ணாள் - சுதமதி.

கூஎ. திப்பியம் : இது, திவ்யமென்னும் வடமொழிச்சிதைவு ; தேவலோகத்திலிருப்பதென்று பொருள். இவ்வாறு இறந்தகால எதிர்காலச் செய்திகளைக் கூறுதல். பெரும்பாலும் இவ்வுலகவழக்கமன்மையின் இதனை, 'திப்பியம்' என்றார். "செங்கோல் காட்டிய தெய்வமுந் திப்பியம், பையர வல்குல் பலர்பசி களையக், கையி லேந்திய பாத்திரந் திப்பிய, முத்தை முதல்வி யடிபிழைத் தாயெனச், சித்திர முரைத்த விதூஉந் திப்பியம்" (ககூ : க0 - கச) என்று இந்நூலுள்ளே, 'திப்பியம்' என்பது இப்பொருளில் வருதல் காண்க. தெய்வக் கிளவியினால் திப்பிய முரைக்கும் ; தெய்வக்கிளவி - தெய்வத்தன்மையுள்ள சொல் ; வடசொல்லாலெனினுமமையும்.

னிரவி வன்ம னொருபெரு மகளே
துரகத் தானைத் துச்சயன் றேவி
௧00 தயங்கிணர்க் கோதைத் தாரை சாவுற
மயங்கி யானைமுன் மன்னுயிர் நீத்தோய்
காராளர் சண்பையிற் கௌசிகன் மகளே
மாருத வேகனோ டிந்நகர் புகுந்து
தாரை தவ்வை தன்னொடு கூடிய
௧0௫ வீரை யாகிய சுதமதி கேளா
யின்றேழ் நாளி லிடையிருள் யாமத்துத்
தன்பிறப் பதனொடு நின்பிறப் புணர்ந்தீங்
கிலக்குமி யாகிய நினக்கிவை யாள்வரு
மஞ்சலென் றுரைத்த தவ்வுரை கேட்டு

---

௯அ. இரவிவன்மன் - அசோதரநகரத்தரசன்; சுதமதியென்பவளுடைய முற்பிறப்பில் தந்தையா யிருந்தவன்.

௯அ - ௯. பூ. மணி. ௧௧: ௩௫-௪. துச்சயன்—துர்ஜயன் - பகைவர்களால் வருத்தமுற்று வெல்லப்படுபவனென்று பொருள்; இவன் அங்கநாட்டிலுள்ள கச்சயமென்னும் நகரத்தரசன்; சுதமதியென்பவளுடைய முற்பிறப்பிற் கணவனாக விருந்தவன்; மணி. ௧0: ௫0 - ௫௪.

௧00. தாரை - இவள் வீரைக்கு முன்னே பிறந்தவள்; வீரை யானையால் இறந்தது கேட்டு இவள் இறந்தமையால், 'சாவுற' என்றார்; மணி. ௧௨: ௪௫ - அ

௧0௧. மயங்கி - மதுவைக் குடித்தமையால் மயங்கி.

௧0௨. காராளர்சண்பை - அங்கநாட்டிற் கங்கைக்கரையிலுள்ளதாகிய சம்பாநகரம்; இப்பொருளில், 'காராளரென்பது கராளரென்பதன் விகார மென்றும், கொடுமையென்று பொருள்படுகின்ற கராளத்வம் அல்லது கராளதையென்பது இச்சொற்குப் பகுதியென்றும், இக்காராளர்கள் துர்க்காபூஜை செய்துநரபலிகொடுப்போரென்றும், இப்பெயர் இக்காலத்து மஹாராஷ்டிர தேசத்திற் கராடிகளென்று வழங்குகிறதென்றுங் கூறுவர்; மணி. ௩: ௨௧.

௧0௪. தாரை தவ்வை - தாரையாகிய தவ்வை; தவ்வை - முன்பிறந்தவள். தாரை யென்பது மாதவியென்பவளுடைய முற்பிறப்புப் பெயர்.

௧0௫. வீரையென்பது சுதமதியென்பவளுடைய முற்பிறப்புப்பெயர்.

௧0அ. இலக்குமியென்பது மணிமேகலையின் முற்பிறப்பின் பெயர்; தாரை, வீரை, இலக்குமி இம்மூவரும் சகோதரிகள்.

௧0௯. அஞ்சல் - அஞ்சாதே. தெய்வம் உரைத்தது.

(பி - ம்.) ௯எ - அ. 'இளவி யிரவிவன்மகளொரு' ௧0௧. 'மயங்கியல் யானை' ௧0௨. 'காராளகசண்பை' ௧0௪. 'தாரைதனவ்வை' ௧0௫. 'சுதைமதி' ௧0௯. 'இன்றேளாளிடையிடை' ௧0எ - அ. 'உன்பிறப் புணர்ந்தீங், கலக்குமியாகிய'

கக0 நெஞ்சு நடுக்குறாஉ நேரிழை நல்லாள்
காவ லாளர் கண்டுயில் கொள்ளத்
தூமென் சேக்கைத் துயில்கண் விழிப்ப
வலம்புரிச் சங்கம் வறிதெழுந் தார்ப்பப்
புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்கப்
ககரு புகர்முக வாரண நெடுங்கூ விளிப்பப்
பொறிமயிர் வாரணங் குறுங்கூ விளிப்பப்
பணைநிலைப் புரவி பலவெழுந் தாலப்
பணைநிலைப் புள்ளும் பலவெழுந் தாலப்
பூம்பொழி லார்கைப் புள்ளொலி சிறப்பப்
கஉ0 பூங்கொடி யார்கைப் புள்ளொலி சிறப்பக்
கடவுட் பீடிகைப் பூப்பலி கடைகொளக்
கலம்பகர் பீடிகைப் பூப்பலி கடைகொளக்

---

கக0. நல்லாள் - சுதமதி.

ககஉ. சேக்கைத் துயில் கண் - படுக்கையில் தூங்குகின்ற ஆடவர் மகளிரென்னும் இருபாலாருடைய கண்கள்.

ககங. வறிதெழுந்தார்ப்ப - பொருளின்றி முழங்க.

ககச. புலம் - அறிவு. சங்கம் - புலவர் கூட்டம்.

ககரு. வாரணம் - யானை. நெடுங்கூ விளிப்ப - நெடியகூப்பீட்டைச் செய்ய; மணி. எ: சுஎ. கூ - கூப்பீடு; "வினைபுனை நல்லி லினைகூஉக் கேட்பவும்" புறநா. சச.

ககசு. வாரணம் - கோழி.

ககஎ. பணை - குதிரைப்பந்தி. ஆல - ஆட.

ககஅ. பணை - கிளை. ஆல - முழங்க.

ககக. பூம்பொழில் ஆர்கைப் புள் ஒலி சிறப்ப - பொலிவு பொருந்திய சோலையினிடத்தே நிறைதலையுடைய பறவைகளின் முழக்கம் அதிகரிக்க.

கஉ0. பூங்கொடியார் - மகளிர். புள் - கைவளை; "புட்கை போகிய புன்றலை மகார்" மலைபடு. உருங.

கஉக. தெய்வங்களுக்குரிய பீடங்களிற் கொடுக்கப்படும் பொலிவு பெற்ற பலிகளானவை முடிவுகொள்ள.

கஉஉ. அணிகலங்கள் விற்கப்படுகின்ற அங்காடிவீதியில் மலராற் செய்யப்படும் அர்ச்சனைகளைக் கடையிடங்கள் கொள்ள; "பூப்பலி செய்து காப்புக்கடை நிறுத்தி" (சிலப். உஅ: உஙக.) வாயில்களில் இல்லுறை தெய்வங்களின் பொருட்டுக் காலையிற் பூவிடுதல் மரபு.

(பி - ம்.) ககங. 'வலம்புரிசங்கம்' ககச. 'புலம்புரிசங்கம்', 'பொலம்புரிச்சங்கம்.' ககஎ. 'ஆர்ப்ப' ககஅ. 'கணைநிலைப்புள்ளும்...ஆர்ப்ப' கஉக. 'கடிகொள' கஉஉ. 'பூப்பொலிகடிகொள'

குயிலுவர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழக்
கொடுப்போர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழ
கஉரு ஊர்துயி லெடுப்ப வுரவுநீ ரழுவத்துக்
காரிருள் சீத்துக் கதிரவன் முளைத்தலு
மேவுறு மஞ்ஞையி னினைந்தடி வருந்த
மாநகர் வீதி மருங்கிற் போகிப்
போய கங்குலிற் புகுந்ததை யெல்லா
கஙஂ0 மாதவி தனக்கு வழுவின் றுரைத்தலு
நன்மணி யிழந்த நாகம் போன்றவ
டன்மகள் வாராத் தனித்துய ருழப்ப
வின்னுயி ரிழந்த யாக்கையி னிருந்தன
டுன்னிய துரைத்த சுதமதி தானென்.

எ.—துயிலெழுப்பியகாதை முற்றிற்று.



---

கஉஙு. தோற்கருவி வாசிப்பாருடைய இடங்களிலெல்லாம் செவ்வை செய்யப்பட்ட வாத்தியங்கள் பரவியெழ; பண் - இசையென்றுமாம்.

கஉச. உபகாரிகளுடைய வாயில்கள்தோறும் கொடுத்தற்குரிய பல பண்டங்களும் பரவுதலுற்றுமிக.

கஉரு. எடுப்ப - எழுப்ப. உரவுநீரழுவத்து - கடற்பரப்பில்.

கஉகு. சீத்து - அழித்து.

கஉஎ. ஏ - அம்பு; "சுதமதி கேட்டுத் துளக்குறு மயில்போல்" (ச : அகு) என்றார் முன்னும்; மூ. மூல்லை. அச.

கஉகூ. போயகங்குலில் - சென்ற இரவில்.

கஙக. "மன்னவன் மகனுக் குற்றது பொறாஅ, னன்மணி யிழந்த நாகம் போன்று" (உரு : கககூ - ரு) என்று இவ்வுவமையே பின்னும் வரும்; "இருநிதிக் கிழவனும் பெருமனைக் கிழத்தியு, மருமணி யிழந்த நாகம் போன்றதும்" (சிலப். கங : ருஎ - அ.) அவள் - மாதவி.

கஙங. "இன்னுயி ரிழந்த யாக்கை யென்னத், துன்னிய சுற்றந் துயர்க்கடல் வீழ்ந்ததும்" (சிலப். கங : ருக - சுo) என்புழியும் இவ்வுவமை வருதல் காண்க.

க-கஙச. மணிமேகலாதெய்வம் நீங்கித் தோன்றி உரைத்தபின் புகுந்து நீக்கி உரையென்று போயபின், சுதமதி எழுந்து கேட்டு உளங் கலங்கி நீங்கிப் போகி ஒருபுடையிருத்தலும், பாவை உரைக்கும்; அது, 'வரும், அஞ்சல்' என்று உரைத்தது; அதனைக்கேட்டு நடுக்குறுநல்லாள், கதிரவன் முளைத்தலும் போகி மாதவிக்குரைத்தலும், அவள் துயருழப்பத் தான் உயிரிழந்த யாக்கை போல இருந்தனளென முடிக்க.

(பி - ம்.) கஉரு. 'எடுப்பிய', 'எழுப்பிய.' கஉகூ. 'போகியகங்குல்' கஙஉ. 'மகவாரா'

எட்டாவது

# மணிபல்லவத்துத்துயருற்றகாதை.

[எட்டாவது மணிமேகலை
மணிபல்லவத்துத்துயிலெழுந்து துயருற்றபாட்டு.]

ஈங்கிவ ளின்னண மாக விருங்கடல்
வாங்குதிரை யுடுத்த மணிபல் லவத்திடைத்
தத்துநீ ரடைகரைச் சங்குழு தொடுப்பின்
முத்துவிளை கழனி முரிசெம் பவளமொடு
௫ விரைமர முருட்டுந் திரையுலாப் பரப்பின்
ஞாழ லோங்கிய தாழ்கண் ணசும்பி
னாம்பலுங் குவளையுந் தாம்புணர்ந்து மயங்கி
வண்டுண மலர்ந்த குண்டுநீ ரிலஞ்சி
முடக்காற் புன்னையு மடற்பூந் தாழையும்
௧௦ வெயில்வர வொழித்த பயில்பூம் பந்த

---

௧. இவள் - சுதமதி.

௩. அடைகரையில். தொடுப்பு - விளாக்கொண்டு உழுதல்; "தொடுப்பே ருழவ ரோதைப் பாணியும்" சிலப். ௰ : ௱௩௰.

௩ - ௪. அடைகரையாகிய கழனியிலென்றுமாம்.

௫. விரைமரம் - சந்தனம் அகில் முதலியன; "விரைமர மென்றகில்" (௧௯ : ௧௨௨) என்பர்மேலும். "வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகின்" சிறுபாண். ௧௫௫.

௬. ஞாழல் - புலிநகக்கொன்றை; "பொன்னுறு ஞாழற் பூவுடன் கடுக்கும், பேழ்வாய்ப் புலியுகிர்" (கல். ௫௨.) அசும்பு - சேறு; "வாரசும் பொழுகு முன்றில்" புறநா. ௧௧௪.

௭. மயங்கி - கலந்து.

௮. குண்டு நீர் இலஞ்சி - ஆழமான நீரையுடைய பொய்கைக்கரை; இலஞ்சி : ஆகுபெயர்.

௯. முடம் - வளைவு. ௧௦. பந்தர் - நிழல்.

௯ - ௧௦. புன்னையும் தாழையும் வெயிலின் வரவையொழித்த பந்தர்.

(பி - ம்.) ௧. 'ஈங்கிவரிங்ஙனம்', 'ஈங்கிவரிஞ்ஞனம்.' ௪. 'முத்துவிளைகழனி' ௫, 'வரைமாமுருட்டு' ௬. 'தாழ்கண்ணசரும்பி'

ரறல்விளங்கு நிலாமண லறுமலர்ப் பள்ளித்
துஞ்சு துயிலெழூஉ மஞ்சி லோதி
காதற் சுற்ற மறந்து கடைகொள
வேறிடத்துப் பிறந்த வுயிரே போன்று
கரு பண்டறி கிளையொடு பதியுங் காணாள்
கண்டறி யாதன கண்ணிற் காணூ
நீல மாக்கட னெட்டிடை யன்றியுங்
காலை ஞாயிறு கதிர்விரித்து முளைப்ப
வுவவன மருங்கினி லோரிடங் கொல்லிது
உ0 சுதமதி யொளித்தாய் துயரஞ் செய்தனை
நனவோ கனவோ வென்பதை யறியேன்
மனநடுக் குறூஉ மாற்றந் தாராய்
வல்லிருள் கழிந்தது மாதவி மயங்கு
மெல்வளை வாராய் விட்டகன் றனையோ
உரு விஞ்சையிற் றோன்றிய விளங்கிழை மடவாள்
வஞ்சஞ் செய்தனள் கொல்லோ வறியே

கக. அறல் - நீர்அரித்து ஒழுகுதலால் உண்டாவது; "மட்டற னல்யாற்று" (புறநா. கஎஎ.) நிலாமணல் - நிலாவைப் போன்ற வெள்ளிய மணல். மலர்ப்பள்ளி - உதிர்ந்து கிடக்கும் மலராகிய படுக்கையில்.

கஉ. அஞ்சிலோதி-அழகிய சிலவானமயிரினையுடையாள்; "அஞ்சிலோதி யாசனுக் கொருநாள்" (உ௩ : உ௪) என்பர்மேலும்; "அஞ்சிலோதி" குறிஞ்சி. க௮0.

க - கஉ. மணிபல்லவத்திற் கரையிற் கழனியிற் பரப்பில் இலஞ்சிக் கரையில் மணலிற் பள்ளியில் துயிலெழுந்த மணிமேகலை யென்க.

க௩. கடைகொள - முடிவுகொள்ள. கரு. காணாள் - காணாளாகி.

க௬. கண்டறியாதனவற்றைக் கண்ணிற் கண்டு.

கஎ. நெட்டிடை - நெடிய இடம்.

க௯. 'உவவனம்' என்பது முதல் மணிமேகலை கூற்று.

உ0. சுதமதி: விளி. உக. இந்நிலை நனவோ கனவோ.

உ௩. மயங்கும் - மயங்குவாள்.

உ௪. மெல்லிய வளையினையுடையாய்; எல்வளையுமாம்.

உரு. விஞ்சையிற் றோன்றிய - வித்தையினாலே தோன்றிய.

(பி - ம்.) கக. 'நறல்விடங்கு நிலாமணற்றுமலர்' க௪. 'ஓதிடத்து' கரு. 'பதியங்காணாள்' க௬ - எ. 'காண, நீலமாகடல்' க௮. 'காலஞாயிறு' உ0. 'ஒழித்தாய்'

ஞெருதனி யஞ்சுவென் றிருவே வாவெனத்
திரைதவழ் பறவையும் விரிசிறைப் பறவையு
மெழுந்துவீழ் சில்லையு மொடுங்குசிறை முழுவலு
௩௦ மன்னச் சேவ லரச னாகப்
பன்னிறப் புள்ளினம் பரந்தொருங் கீண்டிப்
பாசறை மன்னர் பாடி போல
வீசுநீர்ப் பரப்பி னெதிரெதி ரிருக்குந்
துறையுந் துறைசூழ் நெடுமணற் குன்றமும்
௩௫ யாங்கணுந் திரிவோள் பாங்கினங் காணாள்
குரற்றலைக் கூந்தல் குலைந்துபின் வீழ
வரற்றினள் கூஉ யழுதனள் ளேங்கி
வீழ்துய ரெய்திய விழுமக் கிளவியிற்

உஎ. ஒருதனி - ஒப்பற்றதனிமையை. வாவென - வாவென்று சொல்லிக்கொண்டு.

உஅ - கூ. அலையில் தவழ்ந்துசெல்லும் பறவைமுதலிய நீர்வாழ் பறவைச்சாதிகள் நான்கும்.

உஅ - ௩க. திரைதவழ் பறவைமுதலியனவாகிய பன்னிறப் புள்ளினம்.

௩உ. போர்குறித்துவந்து படைவீடுகளில் விட்ட பகையரசரிருவருடைய படைகளிரண்டும் எதிரெதிரிருத்தல்போல. பாடி - படைவீடு.

உஅ - ௩௪. திரைதவழ்பறவை முதலியன, அன்னச்சேவல் அரசனாக நீர்ப்பரப்பில் எதிரெதிரிருக்குந் துறையென்க. இப்படியே, "கம்புட் கோழியுங் கனைகுர னாரையுஞ், செங்கா லன்னமும் பைங்காற் கொக்குங், கானக் கோழியு நீர்நிறக் காக்கையு, முள்ளு மூரலும் புள்ளும் புதாவும், வெல்போர் வேந்தர் முனையிடம் போலப், பல்வேறு குழூஉக் குரல் பரந்த வோதையும்" (க0 : ககசு - கூ) என்றார் சிலப்பதிகாரத்தாரும்.

௩௪ - ௫. துறையும் குன்றமுமாகிய யாங்கணும். திரிவோள் - மணிமேகலை. பாங்கினம் - பக்கத்திலுள்ள இனங்களை.

உஎ - ௩௫. திருவே வாவெனத் திரிவோள்.

௩௬. குரற்றலைக் கூந்தல் - பூங்கொத்தை இடத்தேயுடைய கூந்தல்; "குரற்றலைக் கூந்தல் குடசம் பொருந்தி" (சிலப். க௪ : அஎ); "குரற்றலைக் கூந்தல் குலைந்துபின் வீழ" ஷை. ௩0 : ௩அ.

௩எ. கூஉய் - கூவி.

௩அ. விழுமக்கிளவியின் - துன்பத்தைப் புலப்படுத்தும் சொற்களால்.

(பி - ம்.) உஎ. 'அஞ்சுவானறிவேவாவெனத்' உகூ. 'சிலாலையுமொடுங்கு சிறைமுழவலும்', 'ஒடுங்குசிறைமுயும்.' ௩க. 'புள்ளும் பரந்து' ௩௩. 'நெறி யெதிர்நிற்குந்', 'எதிரெதிர்நிற்கும்.' ௩௬. 'குரற்றலை கூந்தல்' ௩அ - கூ. 'விழுக்கிளவியற்றாழ்ந்து'

ருழ்துய ருறுவோ டந்தையை யுள்ளி
௪0 யெம்மிதிற் படுத்தும் வெவ்வினை யுருப்பக்
கோற்றொடி மாதரொடு வேற்றுநா டடைந்து
வைவா ளுழந்த மணிப்பூ ணகலத்
தையா வோவென் றழுவோண் முன்னர்
விரிந்திலங் கவிரொளி சிறந்துகதிர் பரப்பி
௪௫ யுரைபெறு மும்முழ நிலமிசை யோங்கித்
திசைதொறு மொன்பான் முழநில மகன்று
விதிமா ணாடியின் வட்டங் குயின்று
பதும சதுர மீமிசை விளங்கி
யறவோற் கமைந்த வாசன மென்றே
௫0 நறுமல ரல்லது பிறமரஞ் சொரியாது
பறவையு முதிர்சிறை பாங்குசென் றதிராது
தேவர்கோ னிட்ட மாமணிப் பீடிகை



---

௩௯. தந்தையையுள்ளி - கோவலனை நினைந்து.

௪0. எம்மிதிற்படுத்தும் வெவ்வினை - எம்மை இத்துன்பத்தினிடத்தே அகப்படுத்தும் வெவ்விய வினை; "என்னிதிற் படுத்த வேந்தல்" (சீவக. எகரு.) உருப்ப - முதிர; "ஊழ்வினை யுருத்தென்" (சிலப். கசு: உகஎ); கோபிக்கவென்றுமாம்.

௪௧. கோற்றொடிமாதர் - கண்ணகி. வேற்றுநாடு - பாண்டிநாடு.

௪௨. வைவா ளுழந்த - கூரியவாளால் வெட்டுண்டு வருந்திய. அகலம் - மார்பு.

௪௫. நிலமிசை மும்முழமோங்கி.

௪௬. ஒன்பான் முழம் - ஒன்பது முழம்.

௪எ. விதிமாண்-விதி மாட்சிமைப்பட்ட.ஆடியின் வட்டங்குயின்று-பளிங்கினால் வட்டஞ் செய்யப்பட்டு.

௪அ. பதுமத்தையுடைய சதுரம்; பதுமமென்றதற்குப் புத்தனுடைய பாதங்களெனினும் பொருந்தும். மீமிசை - மேற்பட்ட இடம்.

௪௯. அறவோற்கு - புத்தனுக்கு.

௪௪-௯. சிறந்து பரப்பி ஓங்கி அகன்று குயின்று விளங்கி அமைந்த ஆசனமென்க.

௫0, பிற - பிறவற்றை. மரம் நறு மலரையே சொரியும்.

௫௧. பறவையும் அப்பீடிகையின் பக்கத்திற்சென்று சிறையொலியைச் செய்யாது.

(பி - ம்.) ௪0. 'மெய்விதறபடுத்து', 'எம்மிகற்படுத்தும்.' ௪௩. 'ஐயாகோவென்றழுவாள்' ௪எ. 'விதிமாண்டாடியின் விட்டணை குயின்று' ௪அ-௯. 'விளங்கியச், சிறவோர்' ௫0. 'பிறமணஞ்' ௫௧. 'உதிராது'

பிறப்புவிளங் கவிரொளி யறத்தகை யாசனங்
கீழ்நில மருங்கி னாகநா டாளு
ருரு மிருவர் மன்னவ ரொருவழித் தோன்றி
யெமதீ தென்றே யெடுக்க லாற்றார்
தமபெரும் பற்று நீங்கலு நீங்கார்
செங்கண் சிவந்து நெஞ்சுபுகை யுயிர்த்துத்
தம்பெருஞ் சேனையொடு வெஞ்சமம் புரிநா
௬௦ ளிருஞ்செரு வொழிமி னெமதீ தென்றே
பெருந்தவ முனிவ னிருந்தற முரைக்கும்

---

ருங. பிறப்புவிளங்கு ஆசனம் - காண்போருடைய பழம்பிறப்புக்கள் அவர்களுக்கு விளங்குதற்குக் காரணமாகிய ஆசனம்.

ருச. கீழ்நிலம் - கீழ்த்திசையிலுள்ள இடம். நாகரென்னும் ஒருவகை மனிதர் வாழும் நாடு நாகநாடென்பர்; இந்நாட்டின் பெயர், "நாகநன் னட்டு நானூ றியோசனை" (௯: உக), "நாகநாடு நடுக்கின் றாள்பவன்" (உச: ருச), "நாக நன்னா டாள்வோன்" (உரு: கஎஅ), "நாகநா டாள் வோன்" (உ௯: ங) என இந்நூலிலுள்ளே பின்பும் வருதல் காண்க. நாக இலச்சினையை (பாம்பின் அடையாளத்தை) உடைமையின், இவர்களுக்கு இப்பெயரும் தக்ஷகரென்ற பெயரும் வந்தனவென்று ஊகிக்கின்றனர்.

ருசு. எடுக்கல் ஆற்றார் - எடுக்கும் வன்மை இலராய்.

ருஎ. தம பெரும்பற்று - தம்முடைய பெரிய விருப்பம். நீங்கலும் நீங்கார் - நீங்குதலையும் செய்யார்; "சுழலலுஞ் சுழலு, மோடலு மோடு மொருசிறை யொதுங்கி, நீடலு நீடும்" (ங: ககக - ௰) என்றார் முன் னும்; "கறைமிட றணியலு மணிந்தன்று" புறநா. க.

ருஅ. நெஞ்சு புகையுயிர்த்து - மனங்கொதித்து; "வஞ்சினஞ் சாற்றி நெஞ்சுபுகை யுயிர்த்து" (கஅ: ௩எ) என்பர் மேலும்; "ஊதுலை தோற்க வுயிர்க்குமென் னெஞ்சன்றே" (கஅ: க௩) என்றார் சிலப்பதிகாரத்தும்.

௬க. பெருந்தவ முனிவன் - புத்தன்; பொறிகளை யடக்கி நெடுநாள் மிக்க நியமத்தோடிருந்து அரியதவஞ்செய்தது பற்றி இவனைப் பெருந் தவ முனிவனென்றார்; "ஆதிசான் முனிவ னறவழி" (எ: க௯), "பொது வறி விகழ்ந்து புலமுறு மாதவன்" (க0: அசு), "போதி மாதவன் பூமியிற் றோன்றும்" (கரு: உ௯), "பிணிப்பறு மாதவன் பீடிகை" (உரு: ௩சு) என இந்நூலுள்ளே வருதல் காண்க; "பொருந்து போதியி, லிருந்த மாதவர். திருந்து சேவடி, மருந்து மாகுமே" (ங), "பூதலத்து ளெவ்வுயிர்க்கும் பொதுவாய திருமேனி, மாதவனீ" (கக), "மாதவரின் மாதவனீ வானவருள் வானவனீ" (கக) "மருளறுத்த பெரும்போதி மாதவரைக் கண்டிலமால்"(கரு)என்பன வீரசோழியம் யாப்புப்படல உதாரணங்கள்.

(பி - ம்.) ருஎ. 'பற்றி' ௬0. 'ஒளிமினெம' ௬க. 'பெருந்தகை முதல் வனந்தற முரைக்கும்.'

பொருவறு சிறப்பிற் புரையோ ரேத்துந்
தரும பீடிகை தோன்றிய தாங்கென்.

அ.—மணிபல்லவத்துத்துயருற்றகாதை முற்றிற்று.

---

௬௨. புரையோர் - ஈண்டு, பௌத்தரில் உயர்ந்தோர்; "புரையோர்ப் பேணிப் போகலும் போகுவை" (மணி. ௨௧ : அ௫), "அரசுவீற் றிருந்து புரையோர்ப் பேணி" (ஷை. ௨௫ : அ௧), "புரையோர் தாழுமிப் பூம்பொழி விழிந்து" ஷை. ௨அ : ௧௧௨.

௫௨ - ௬௫. மாமணிப் பீடிகை, அறத்தகையாசனம், தருமபீடிகை அங்கே தோன்றியது.

௪௫ - ௬௫. அழுவோள்முன்னர்த் தோன்றியதென்க.

௫௪ - ௬௫. இவ்வடிகளிற்கூறிய வண்ணமே, "வேக வெந்திறனாகநாட் டரசர்......திருந்தொளி யாசனம்" (௯ : ௫அ - ௬௨) என்று பின்னுங்கூறுவர்.

௧ - ௬௫. இவள் இன்னணமாக, மணிபல்லவத்திடைத் துயிலெழும் அஞ்சிலோதி, போன்று காணாளாய்க் கண்டு, திருவே வாவென்று அழுவோள் முன்னர்த் தருமபீடிகை ஆங்குத்தோன்றியதென்க.

---

ஒன்பதாவது

# பீடிகைகண்டுபிறப்புணர்ந்தகாதை.

[ஒன்பதாவது மணிமேகலை மணிபல்லவத்திடைப்
பீடிகைகண்டு பிறப்புணர்ந்தபாட்டு.]

---

ஆங்கது கண்ட வாயிழை யறியாள்
காந்தளஞ் செங்கை தலைமேற் குவிந்தன

---

௧. அதுகண்ட - புத்தபீடிகையைக்கண்ட. ஆயிழை - மணிமேகலையானவள். அறியாள் - தன்னை அறியாளாயினாள். இது பதுமை பற்றி வந்த மருட்கையென்னும் மெய்ப்பாடு.

(பி - ம்.) ௨. 'குவிந்த'

தலைமேற் குவிந்த கையள் செங்கண்
முலைமேற் கலுழ்ந்துமுத் தத்திர ளுகுத்தபி
௫ னிடமுறை மும்முறை வலமுறை வாராக்
கொடிமின் முகிலொடு நிலஞ்சேர்ந் தென்ன
விறுநுசுப் பலச வெறுநிலஞ் சேர்ந்தாங்
கெழுவோள் பிறப்பு வழுவின் றுணர்ந்து
தொழுதகை மாதவ துணிபொரு ளுணர்ந்தோய்
௧0 காயங் கரையினீ யுரைத்ததை யெல்லாம்
வாயே யாகுதன் மயக்கற வுணர்ந்தேன்
காந்தார மென்னுங் கழிபெரு நாட்டுப்
பூருவ தேயம் பொறைகெட வாழு
மத்தி பதியெனு மரசாள் வேந்தன்
௧௫ மைத்துன னாகிய பிரம தரும

---

௩ - ௪. செங்கண் கலுழ்ந்து - சிவந்த கண்கள் கலங்கி. முலைமேல் முத்தத்திரள் உகுத்து - கொங்கைகளின்மேலே நீர்த்துளிகளைச் சொரிந்து. அதின் - அப்பீடிகையினது.

௬. மின்கொடி மணிமேகலையினுடைய உருவத்திற்கும், முகில் அவள் கூந்தலுக்கும் உவமை.

௭. அலச - வருந்த; (தக்க. ௪௨.) நிலஞ்சேர்ந்து - வணங்கி.

௮. எழுவோள் தனது முற்பிறப்பின் செய்தியை நன்றாக அறிந்து.

௯. 'தொழுதகை மாதவ' என்பதுமுதல், 'என்றெடுத் தோதினை,' (௬௯) என்பதுஇறுதியாகவுள்ளவை, பிரமதருமனென்னுமுனிவன் முற்பிறப்பில் தனக்குக் கூறியவற்றைப் புத்தபீடிகைக் காட்சியாலறிந்து, அம்முனிவனை எதிர்பெய்து மணிமேகலை கொண்டுகூறுகின்றவை யெனக்கொள்க.

௧0. காயங்கரை யென்பது ஒரு நதியின்பெயர். உரைத்ததை; ஐ: சாரியை. எல்லாம் - முழுவதும்.

௧௧. வாயேயாகுதல் - உண்மையாதலை; வாய் - உண்மை; "பொய்யறியா வாய்மொழியால்" மதுரை. ௧௬.

௧௨. பலதேயங்களைத் தன்னுள்ளே பெற்றதென்பார், 'காந்தாரமென்னுங் கழிபெரு நாடு' என்றார்.

௧௩. பொறை - பாரம்; என்றது பாவத்தை.

௧௫. பிரமதருமன் : விளி.

(பி - ம்.) ௩. 'கையினள்' ௪ - ௫. 'கலிழ்ந்துமுத்தத்திரளுகுத்த ததடமுறை' ௬ - ௭. 'நிலஞ்சேர்ந்ததென்ன, விறுநுசப்பலைய' ௮. 'உணர்ந்தே' ௧௨ - ௩. 'கழிபெருநன்னாட்டுப், பூறுவதேசம்'

ஞங்கவன் றன்பா லணைந்தற னுரைப்போய்
தீங்கனி நாவ லோங்குமித் தீவிடை
யின்றேழ் நாளி லிருநில மாக்க
ணின்றுநடுக் கெய்த நீணில வேந்தே
௨0 பூமி நடுக்குறூஉம் போழ்தத் திந்நகர்
நாகநன் னாட்டு நானூ றியோசனை
வியன்பா தலத்து வீழ்ந்துகே டெய்து
மிதன்பா லொழிகென விருநில வேந்தனு
மாபெரும் பேரூர் மக்கட் கெல்லா
௨௫ மாவு மாவுங் கொண்டுகழி கென்றே
பறையிற் சாற்றி நிறையருந் தானையோ
டிடவய மென்னு மிரும்பதி நீங்கி
வடவயி னவந்தி மாநகர்ச் செல்வோன்
காயங் கரையெனும் பேரியாற் றடைகரைச்
௩0 சேயுயர் பூம்பொழிற் பாடிசெய் திருப்ப
வெங்கோ னீயாங் குரைத்தவ னாளிடைத்

௧௬. அவனென்றது அத்திபதியென்னும் அரசனை.

௧௭. சம்புத்தீவில்.

௧௮. மணி. ௭ : ௨௪.

௧௮ - ௨0. இன்றேழ்நாளில் பூமி நடுக்குறும்பொழுதில்.

௨0 - ௨௨. இந்த நகரும் நாகநாட்டில் நானூறு யோசனைப் பரப்பும் பாதலத்தில் விழுந்து கெடுதலுறும்.

௨௩. இதன்பால் ஒழிக என - இந்நகரினின்றும் புறத்தே செல்வா யாக வென்றுசொல்ல.

௨௫. ஆ - பசு. மா - மற்றை விலங்குகள். சிறிதும் தீங்குசெய் யத் தகாத சாதியாதலின் பசு முற்கூறப்பட்டது ; புறநா. ௯.

௨௬. நிறை அருந் தானையொடு - பகைமேற் செல்பொழுது நிறுத் துதலரியசேனையோடு ; " நிறையருந் தானை வேந்தனு நேர்ந்து " சிலப். ௨௫ : ௧௭௮.

௨௭. இடவயம் - அத்திபதியின் நகரம்.

௩0. பொழிலில்.

௨௮ - ௩0. செல்வோன் இருப்ப.

௩௧. எங்கோனென்றது பிரமதருமனை.

(பி - ம்.) ௧௬. 'தன்பாலனைந்தறமுரை' ௧௭. 'ஓங்குமத்தீவிடை' ௧௮. 'பின்றேழ்', 'மின்றேழ்.' ௨௬ - ௭. 'நிறையிருந்தானை யிடிவயம்' ௨௮. 'விடவயினவந்திம மானகர்', 'வசந்த மாநகர்.' ௨௯. 'பெயாற் றடைகரை' ௩0 - ௩௧. 'இருதோமுனங் கோனீயங்'

தங்கா தந்நகர் வீழ்ந்துகே டெய்தலு
மருளறு புலவநின் மலரடி யதனை
யரசொடு மக்க ளெல்லா மீண்டிச்
ங௫ சூழ்ந்தனர் வணங்கித் தாழ்ந்துபல வேத்திய
வருளறம் பூண்ட வொருபே ரின்பத்
துலகுதுயர் கெடுப்ப வருளிய வந்நா
ளரவக் கடலொலி யசோதர மாளு
மிரவி வன்ம னொருபெருந் தேவி
சO யலத்தகச் சீறடி யமுத பதிவயிற்
றிலக்குமி யென்னும் பெயர்பெற்றுப் பிறந்தே
னத்தி பதியெனு மரசன் பெருந்தேவி
சித்திபுர மாளுஞ் சீதரன் றிருமக
ணீல பதியெனு நேரிழை வயிற்றிற்
ச௫ காலை ஞாயிற்றுக் கதிர்போற் றோன்றிய
விராகுலன் றனக்குப் புக்கே னவனொடு

---

ஙஉ. நகர்கேடெய்தியது கூறவே நாகநாட்டில் நானூறு யோசனைப் பரப்பினதுகேடும் கூறியதாயிற்று.

ங௫. ஏத்திய - ஏத்த. ஙங - ௫. நின்மலரடியதனை ஏத்த.

ஙஎ. அருளிய - உபதேசித்த.

ஙசு - எ. இன்பத்தை அருளிய அந்நாளில்.

ஙஅ. கடலரவம்போன்ற ஒலியையுடைய அசோதர நகரம்; "மலி தேரான் கச்சியு மாகடலுந் தம்முள், ளொலியும் பெருமையு மொக்கும்" என்று வருதல் காண்க.

சO. அலத்தகம் = அலத்தம் - செவ்வரக்கு.

ஙகூ - சO. தேவியாகிய அமுதபதி.

சக. பிறந்து இலக்குமியென்னும் பெயர்பெற்றேனென விகுதி பிரித்துக் கூட்டுக.

சஉ - ச. பெருந்தேவியும் மகளுமாகிய நீலபதி.

சசு. இராகுலனென்பது புத்தனுடைய புத்திரன்பெயர்; அது புத்தனிடத்துள்ள பத்தியினால் இவனுக்கு இடப்பட்டதுபோலும்.

ச௫ - சு. மனிதர்களுடைய பிறப்பிறப்புக்களுக்கு முறையேசூரியனுடைய தோற்றம்மறைவுகளை உவமை கூறுதல் பௌத்த சமயமரபாதலால், 'காலை ஞாயிற்றுக் கதிர்போற் றோன்றிய விராகுலன்' என்றார்; இதனை, "குணதிசைத் தோன்றி............ஆங்கவன் றானென்"

(பி - ம்.) ஙங. 'மலரடிவணங்கி' ஙச. 'எல்லாம் வீழ்ந்து' ங௫ - கூ. 'ஏத்தி, யருளறம்' ஙகூ. 'ஒருபெருமகளேன்' சக. 'பெயர் பெறப்பிறந்தேன்' சங. 'சித்தபுரம்' சங - ச. 'சித்திரபுர மாளுஞ் சீதாருகன்மக, ணீலமதி'

பராவரு மரபினின் பாதம் பணிதலு
மெட்டிரு நாளிலிவ் விராகுலன் றன்னைத்
திட்டி விடமுணுஞ் செல்லுயிர் போனாற்
௫௦ தீயழ லவனொடு சேயிழை மூழ்குவை
யேது நிகழ்ச்சி யீங்கின் றாதலிற்
கவேர கன்னிப் பெயரொடு விளங்கிய
தவாக்களி மூதூர்ச் சென்றுபிறப் பெய்துதி
யணியிழை நினக்கோ ரருந்துயர் வருநாண்

---

(௧௪ : ௯௯ - ௧௦௪), "தேவி கேளாய்...வீழ்கதிர் போன்றேன்" (௨௪ : ௧௦௧ - ௨), "சாக்கா டென்ப தருவுருத் தன்மை, யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல்" (௩௦ : ௧௦௨ - ௩) என இந்நூலுள் வருவன வற்றாலுணர்க.

௩௭ - ௪௭. அந்நாளில்யான்இராகுலனோடு நின் பாதம் பணிதலும்.

௪௮. எட்டிருநாளில் - பதினாறுநாளில்.

௪௯. திட்டிவிடம் - கண்ணில் விடமுடையதொரு பாம்பு ; இதன் விழிக்கு எதிர்ப்பட்டோர் இறப்பர் ; இதனை, "திட்டி விடமுணச் செல்லுயிர் போவுழி" (௧௧ : ௧௦௦), "திட்டி விடமுண நின்னுயிர் போநாள்" (௨௧ : ௧௧), "திட்டி விடமுணச் செல்லுயிர் போயதும்" (௨௧ : ௪௦), "அழற்க ணாக மாருயி ருண்ண" (௨௩ : ௯௯), "நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி" (௨௩ : ௮௪) என இந்நூலுள்ளே வருவனவற்றாலும், "புத்தன் திருஷ்டி விஷமாய்ப் பிறந்த ஜாதகத்து.........கண்விழிப்பிற் பிராணிகள் சாமென்றறிந்து தன் கண்விழியாதேகிடந்தமையின்" எனவும், "நீ திருஷ்டிவிஷமானகாலத்து நினக்குக் கொலையுள்ளமில்லை யெனினும் கண்விழிக்கிற் பிராணிகள் சாமென்றறிந்து அதற்கஞ்சி விழியாது கிடந்தது என்றோ" எனவும் வரும் நீலகேசிவிருத்தி சமயதிவாகரத்தாலும் உணர்க; "கண்கிழித் துமிழ்விடக் கனலரா வரசு", "திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை" (கம்ப. தாடகை. ௧௦, கும்பகர்ண. ௮௦) ; "திட்டி விஷத்தை", "திட்டி விஷமாகிய ஒரு மகாநாகம்" தக்க. ௫௫௪, ௯௪௫, உரை.

௫௨. இராசரிஷியும் யோகிகளிற் சிறந்தவருமாகிய கவேரரென்பவர் முத்திபெறுதலைவிரும்பிப் பிரமதேவரைக்குறித்து அரிய தவம் செய்து அவரருளால் விஷ்ணுமாயையைத் தம் புத்திரியாக அடைந்து முத்தி பெற்றனரென்றும், பின்பு அக்கன்னி பிரமதேவர் கட்டளையின்படி நதிவடிவுகொண்டு சென்றமையால் அந்நதி கவேரகன்னியென்றும் காவேரியென்றும் பெயர்பெற்றதென்றும் ஆக்நேயபுராணத்தின் இரண்டாம்பாகத்துள்ள காவேரி மாகாத்மியத்தின் ௨௩-ஆம் அத்தியாயத்தால் தெரிகின்றதென்பர் ; மணி. ௩ : ௫௫ - ௯, பார்க்க.

௫௩. மூதூர் - காவிரிப்பூம்பட்டினம். எய்துதி - அடைவாய்.

௫௪. அருந்துயரென்றது, உதயகுமரனால் மணிமேகலைக்கு உண்டாகும் மனவேறுபாட்டை.

(பி - ம்.) ௪௭. 'பாராவருமரபிற்பாதம்' ௪௯. 'விடமுண்டு' 'விடமுணச்.'

௫௫ மணிமேகலாதெய்வம் வந்து தோன்றி
யன்றப் பதியி லாரிரு ளெடுத்துத்
தென்றிசை மருங்கிலோர் தீவிடை வைத்தலும்
வேக வெந்திற னாகநாட் டரசர்
சினமா சொழித்து மனமாசு தீர்த்தாங்
௬o கறச்செவி திறந்து மறச்செவி யடைத்துப்
பிறவிப்பிணி மருத்துவ னிருந்தற முரைக்குந்
திருந்தொளி யாசனஞ் சென்றுகை தொழுதி
யன்றைப் பகலே யுன்பிறப் புணர்ந்தீங்
கின்றியா னுரைத்த வுரைதெளி வாயெனச்
௬௫ சாதுயர் கேட்டுத் தளர்ந்துகு மனத்தேன்
காதலன் பிறப்புங் காட்டா யோவென
வாங்குனைக் கொணர்ந்த வரும்பெருந் தெய்வம்
பாங்கிற் றோன்றிப் பைந்தொடி கணவனை
யீங்கிவ னென்னு மென்றெடுத் தோதினை

---

௫௯. சினமாசு - கோபமாகிய குற்றம். மனமாசு - காமமும் மயக்கமும்.

௬o. அறச்செவி - அறத்தைக் கேட்டற்குரிய காது; திறந்தென்றார், கேட்பினும் கேளாத் தகையவாதலின் (குறள். ௪௧௮); "அறவுரை கேட்டுணர்ந் தஞ்ஞான நீக்கி, மறவுரை விட்ட செவி" (அறநெறி. க௬௪.) மறம் - பாவம்.

௬க. பிறவிப்பிணி மருத்துவன் - புத்தன்; மருத்துவன் - வைத்தியன்.

௫௮ - ௬௨. மணி. ௮ : ௫௪ - ௬௩.

௫௭ - ௬௨. வைத்தலும் சென்று ஆசனத்தைக் கைதொழுவாய்.

௬௪. என - என்று நீ சொல்ல.

௬௫. சாதுயர் கேட்டு - இராகுலன் இறப்பானென்னும் துன்ப மொழியைக் கேட்டு.

௬௬. காதலன் - கணவன். பிறப்பும்; உம்மை: இறந்ததுதழீஇய எச்சப்பொருளது.

௬௯. என்னும் - என்று சொல்லும்.

(பி - ம்.) ௫௮ - ௬o. 'வேக வெந்தீ நாகநன் னாடர், காய்சின மொழிதலுமாசு தீர்த்தாங், கறச்செவி துறந்து மறச்செவி யடைப்ப' ௬௨ - ௪. 'தொழு, தன்றைப் பகலே நின்பிறப் புணர்த்தி, யின்றுநா னுரைத்த வுரை தெளி வருகென' ௬௭ - ௮. 'வீங்கனைக் கொணர்ந்தவிரும்பெருந் தெய்வம், பாங்கினன்றோன்றி'

எO யாங்கத் தெய்வதம் வாரா தோவென
வேங்கின ளழூஉ மிளங்கொடி தானென்.

கூ.—பீடிகைகண்டு பிறப்புணர்ந்தகாதை முற்றிற்று.

---

எக. இளங்கொடி-மணிமேகலை. அழூஉம் - அழுவாள். இளங்கொடி அழூஉம்.

க - எக. அதுகண்ட ஆயிழை தன்னை அறியாளாயினாள்; அப்பொழுது அவள் கைகள் தலைமேற்குவிந்தன; அங்ஙனங் குவிந்த கையளாய் உகுத்து வந்து சேர்ந்து எழுவோள் பிறப்பையுணர்ந்து, "மாதவ, உணர்ந்தோய், நீ உரைத்ததையெல்லாம் மயக்கறவுணர்ந்தேன், பிரமதருமன், உரைப்போய், 'இத்தீவிடை இன்றேழ்நாளில் பூமிநடுக்குறூஉம் போழ்தத்து இந்நகரும் நாகநாட்டு நானூறு யோசனைப் பரப்பும் வீழ்ந்து கேடெய்தும், இதன்பாலொழிக' என்று சொல்ல, வேந்தனும் சாற்றி நீங்கிச் செல்வோன் இருப்ப,எங்கோன்,நீ உரைத்தநாளில் நகர் கேடெய்தலும், நின்மலரடியை எல்லாம் எத்த அருளிய அந்நாளில், புக்கேன் அவனொடு நின்பாதம் பணிதலும், 'மூழ்குவை, எய்துதி,. வருநாளில் வைத்தலும், கைதொழுதி, தெளிவாய்' என்று நீசொல்ல, காட்டாயோவென்று யான் கேட்ப ஓதினை; அத்தெய்வம் வாராதோ" என்று இளங்கொடி எங்கி அழுமென்க.

(பி - ம்.) எ0. 'ஆங்கத்தெய்வம்'

---

பத்தாவது

# மந்திரங்கொடுத்தகாதை.

[பத்தாவது மணிமேகலாதெய்வம் வந்துதோன்றி
மந்திரங்கொடுத்தபாட்டு.]

---

அறவோ னாசனத் தாயிழை யறிந்த
பிறவிய ளாயினள் பெற்றியு மைதென

---

க. அறவோன் - புத்தனது. ஆசனத்து - ஆசனத்தால்.

க - உ. அறிந்த பிறவியள் ஆயினள் - அறியப்பட்ட பிறவியை உடையளாயினாள்; என்றது முற்பிறப்பை அறிந்தாளென்றபடி. பெற்றியும ஐது - இவள் பெற்ற பேறும் அழகியது; பெற்றி - பேறு; "பிணிப்பறுத்

(பி - ம்.) உ. 'பிறவியாயினள் பெற்றியமைந்தென'

விரைமல ரேந்தி விசும்பூ டிழிந்து
பொருவறு பூங்கொடி பூமியிற் பொலிந்தென
ரு வந்து தோன்றிய மணிமே கலாதெய்வ
முந்தைப் பிறப்பெய்தி நின்றோள் கேட்ப
வுயிர்க ளெல்லா முணர்வுபா ழாகிப்
பொருள்வழங்கு செவித்துளை தூர்ந்தறி விழந்த
வறந்தலை யுலகத் தறம்பாடு சிறக்கச்
கo சுடர்வழக் கற்றுத் தடுமாறு காலையோ
ரிளவள ஞாயிறு தோன்றிய தென்ன
நீயோ தோன்றினை நின்னடி பணிந்தே
னீயே யாகிநிற் கமைந்தவிவ் வாசன
நாமிசை வைத்தேன் றலைமிசைக் கொண்டேன்

தோர்தம் பெற்றி யெய்தவும்'' (சிலப். கரு: கoo.) என - என்று மணிமேகலாதெய்வம் நினைந்து.

௩-ரு. பூங்கொடி ஏந்தி இழிந்து பூமியில் விளங்கினாற் போலத் தோன்றிய தெய்வமென்க.

சு. முந்தைப் பிறப்பு - முற்பிறப்பு. நின்றோள் கேட்ப - நின்ற மணிமேகலை கேட்கும்படி. ''அறிபிறப் புற்றனே'' (கo: எரு) என்பர் பின்னும்.

எ. 'உயிர்க ளெல்லாம்' என்பது முதல் புத்தனுடைய பாதபீடிகையை வணங்கும் மணிமேகலா தெய்வத்தின் கூற்று. உணர்வு பாழாகி - அறிவின்றி.

அ. பொருள் - தருமம்; ''பொருணீங்கிப் பொச்சாந்தார்'' (குறள், உசசு) என்பதிற்காண்க. தூர்ந்தென்றார், அறத்தைக் கேளாதொழிதலின்; முன்பு, ''அறச்செவி திறந்து'' (சு: சுo) என்றதும் இது பற்றிப் போலும்.

கூ. வறம் தலை உலகத்து - வறுமையைத் தன்னிடத்தேயுடைய உலகத்தில். அறம் பாடு சிறக்க - அறத்தின்றோற்றம் மிக; பாடு - படுதல்; உண்டாதல்; ''அறம்பா டறிந்தனை'' (கo: எரு) என்று பின்னும்வரும்; பாடு சிறக்க - பெருமை சிறக்கவென்றுமாம்.

கo. சுடர் - சூரியன். வழக்கு - வழங்குதல். காலை - காலத்தில்.

கக. இளவள ஞாயிறு - பால சூரியன்.

கஉ. பீடிகையைப் புத்தனாகவே பாவித்தமையால், 'நீயோ தோன்றினை' என்றாள்; ''நீயேயாகி'' என்று பின்னர்க் கூறுவதும் இக்கருத்துப் பற்றியே; பின்வருவனவற்றிற்கும் இஃது ஒக்கும்.

(பி - ம்.) அ. 'அறிவழிந்து' கo. 'சுடரவழகறுத்தடுமாறுகாலை' கஉ. 'நீயே தோன்றுதி நின்னடி தொழுதோன்' கங - சு. 'வாச, ஞமிசை வைத் தேன்றலைமிசைகொண்டேன்'

கரு பூமிசை யேற்றினேன் புலம்பறு கென்றே
வலங்கொண் டாசனம் வணங்குவோண் முன்னர்ப்
பொலங்கொடி நிலமிசைச் சேர்ந்தெனப் பொருந்தி
யுன்றிரு வருளா லென்பிறப் புணர்ந்தே
னென்பெருங் கணவன் யாங்குள னென்றலு
உo மிலக்குமி கேளா யிராகுலன் றன்னொடு
புலத்தகை யெய்தினை பூம்பொழி லகவயி
னிடங்கழி காமமொ டடங்கா னுயவன்
மடந்தை மெல்லியன் மலரடி வணங்குழிச்

கரு. புலம்பு - வருத்தம்; "புலம்புசே ணகலப் புதுவி ராகுவிர்" (மலைபடு. சகஉ.) என்று - என்று சொல்லி.

கசு. மானிடமகளாய் நிற்றலின், 'வணங்குவோள்' எனத் தெய்வத்தை உயர்திணையாற் கூறினார்; "யான் செய்த பாவமென்றாள்" (சீவக. நடகரு) என்புழிப்போல.

கஎ. பொலங்கொடி - பொற்கொடி; என்றது காமவல்லியை. பொருந்தி - வணங்கி.

கரு - கஎ. கேட்பப் புலம்பறுகவென்று ஆசனத்தை வலங்கொண்டு வணங்குவோண் முன்னர்ப் பொருந்தியென்க.

கஅ. அவளைத் தெய்வமாகவறிந்தே மணிமேகலை, 'உன்றிருவருளால்' என்றாள்.

கசு. என்றலும் - என்று மணிமேகலை கேட்பவும்.

உo. 'இலக்குமி' என்பதுமுதல் மணிமேகலா தெய்வத்தின் கூற்று. முந்தைப் பிறப்பெய்தி நின்றோளாதலின், மணிமேகலையை அத்தெய்வம் இலக்குமியென்றழைத்தது.

உக. புலத்தகையெய்தினை - ஊடினாய்; புலத்தல் - ஊடுதல். அகவயின் - உள்ளிடத்தே.

உஉ. இடங்கழி காமமொடு - வரம்பு கடந்து எழுதற்குக் காரணமாகிய காமமோடு; இப்படியே, உதயகுமரனைப்பற்றிச் சொல்லும் பொழுது, "இடங்கழி காமமொ டடங்கா னாகி" (கஅ: கககூ) என்பர் பின்னும்; "இடங்கழி மாண்மாலை" என்பதற்கு, 'இராகவேகத்தை யுண்டாக்கும் மயக்கமுடைய மாலைக்காலம்' (பு-வெ. நடகo, உரை) என்று பொருள் கூறுவர். "வம்பப்பரத்தை" என்பதற்கு, 'இடங்கழி காமத்தளாகிய குண்டக்கணிகை' (சிலப். கo: உகக) என்று பொருள் கூறுவர் அடியார்க்கு நல்லார்.

உநட. மின்னடியை வணங்கும்பொழுது.

(பி- ம்.) கரு. 'புலம்பறச்சென்று' உo. 'கேளிவ்விராகுலன்' உக. 'எய்திப்பூம்பொழிலகவையின்' உஉ. 'இடங்கடழிகாமமொடடங்கானுயவன்' உந. 'வணங்குழீஇச்'

சாது சக்கரன் மீவிசும்பு திரிவோன்
உரு தெருமர லொழித்தாங் கிரத்தின தீவத்துத்
தரும சக்கர முருட்டினன் வருவோன்

உச. சாதுசக்கரன்: காரணப்பெயர்; பெரியோர் கூட்டத்திலுள்ளவனென்றவாறு; சக்கரம் - மண்டலம்; இனி, 'ஓம்மணிபத்மேஹூம்' என்ற மந்திரம் சுற்றுப்பக்கத்தில் எழுதப்பட்டுள்ள உலோகத்தாலாகிய சக்கரமொன்றை வலக்கையில் வைத்து மேற்கூறிய மந்திரத்தை உருவேற ஜபித்துக்கொண்டேனும் ஜபியாமலேனும் அச்சக்கரத்தைச் சுழற்றிக் கொண்டிருத்தல் பௌத்தர்களிற் சிலருடைய வழக்கமாதலால், இவன் அங்ஙனம் செய்யப்பட்டுள்ள நல்ல சக்கரத்தைச் சுழற்றிக்கொண்டிருத்தலையுடையனென்று பொருள் கூறினும் பொருந்தும். இஃது இக்காலத்து, 'திபேத்' என்னும் தேசத்துப் புத்தர்களுடைய வழக்கமாகக் காணப்படுகின்றதென்றும், இம்மந்திரத்தை இங்ஙனம் ஜபித்தலால் வரும்பயன், நரகலோகமுதலியவற்றில் முறையே பிறவாமல் தாண்டிச் சென்று நிருவாணமடைதலென்றுங் கூறுவர். மீ விசும்பு திரிவோன் - மேலேயுள்ள ஆகாயத்திற் சஞ்சரிப்பவன்; பௌத்தரில் இருத்தி (வித்தி) பெற்றோர் ஆகாய வழியேசென்று அவ்வவ்விடங்களில் இறங்கிப் புத்தனுடைய பாதபீடிகை முதலியவற்றைத் தரிசித்தலும், பக்குவிகளுக்குத் தருமோபதேசஞ் செய்தலும், ஏனையோர்க்கு எண்ணியவற்றையளித்தலும் மரபு; இத்தன்மையையுடையோர் சாரணரென்றும் சொல்லப்படுவர். இதனை, "நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச், சலத்திற் றிரியுமோர் சாரணன் றோன்ற" (உச: சகூ - எ), "தரும சாரணர் தங்கிய குணத்தோர், கருமுகிற் படலத்துக் ககனத் தியங்குவோ, ரரசற் கேது வவ்வழி நிகழ்தலிற், புரையோர் தாமும் பூம்பொழி லிழிந்து" (உஅ: கஈக - கஉ) எனப் பின்வருவனவற்றாலுணர்க. இப்படியே சமணரில் இருத்தி பெற்றோரும் சாரணரென்று சொல்லப்படுவர்; "நீரினிற் பூவில் வானி னிலைத்துழி யொதுங்கு கின்ற, சாரண ரெண்மராவர் சமணரி லிருத்தி பெற்றோர்" (சூடாமணி. உ : ச) என்று வருதல் காண்க.

உரு. தெருமரல் - மனக்கவற்சி; "செய்யார் தேஎந் தெருமரல் கலிப்ப" (பொருந. கஅஅ.) இரத்தின தீவத்து - இரத்தினத்தீவில்; இது மணிபல்லவமென்னுந் தீவிற்கு அயலிலுள்ள சிறுதீவு. இதிற் புத்தனுடைய பாதக்குறிகள் பொருந்திய உச்சியையுடைய மலையொன்று உண்டு. இதன் பெயர் சமந்தமென்பது; "ஈங்கித னயலகத் திரத்தின தீவத், தோங்குயர் சமந்தத் துச்சி மீமிசை, யறவியங் கிழவோ னடியிணையாகிய, பிறவி யென்னும் பெருங்கடல் விடூஉ, மறவி நாவா யாங்குளது" மணி. கக : உக - ரு.

உசு. உருட்டினன் : வினையெச்சமுற்று. தருமம் முதலும் முடிவுமில்லாத நித்தியப்பொருளென்பார் தருமசக்கரமென்றும், அதனைத் தடையின்றிச் செலுத்துகின்றானென்பார் உருட்டினன் வருவோனென்றுங் கூறினர்; இப்படியே, "அறக்கதி ராழி திறப்பட வுருட்டி" (ரு : எசு) என்றார் முன்னும்; தருமத்தை ஸநாதனமென்று வடநூலார் கூறுவர்.

(பி - ம்.) உரு - சு. 'தீபத்துத்......முருட்டிய வருவோன்'

வெங்கதி ரமயத்து வியன்பொழி லகவயின்
வந்து தோன்றலு மயங்கினை கலங்கி
மெல்லியல் கண்டனை மெய்ந்நடுக் குற்றனை
௩௦ நல்கூர் நுசுப்பினை நாணினை யிறைஞ்சு
விராகுலன் வந்தோன் யாரென வெகுளாலும்
விராமலர்க் கூந்த லவன்வாய் புதையா
வானூ டிழிந்தோன் மலரடி வணங்காது
நாநல் கூர்ந்தனை யென்றவன் றன்னொடு
௩௫ பகையறு பாத்தியன் பாதம் பணிந்தாங்
கமர கேணின் றமரல மாயினு
மந்திந் தண்ணீ ரமுதொடு கொணர்கே

தல் காண்க. தருமத்தைச் சக்கரமாகவும், அதன் அங்கங்களைச் சக்கரத்திற்குரிய அங்கங்களாகவும் உருவகஞ்செய்து நூல்கள் கூறும்; இதனை, அச்வகோஷபோதி ஸத்துவரென்பவரால் வடமொழியிற் செய்யப்பட்டுள்ள புத்தசரிதகாவ்யமென்னும் நூலில் தர்மசக்ரப்பிரவர்த்தனத்தியேஷனை மென்னும் பதினைந்தாம் வர்க்கத்தினிறுதியிற் காண்க. இனி, முன்னர்க்கூறிய உலோகசக்கரத்தைக் கையில் வைத்துச் சுழற்றி வருவோனெனினும் பொருந்தும்; இப்பொருள் சாதுசக்கரனென்னும் பெயருக்குப் பொருத்தமுடைத்தாதல் காண்க.

உஎ. வெங்கதிரமயத்து - உச்சிப்பொழுதில்; மணி. ரு : கூo, கக : கoஉ.

உச - அ. சாதுசச்கரன் திரிவோன் வருவோன் வந்துதோன்றலுமென்க.

உகூ - ௩o. மெய்நடுக்குறுதல் முதலியன இறைபொருளாகப் பிறந்த அச்சமென்னும் மெய்ப்பாடு.

௩க. சாதுசக்கரனைத் தன் மனைவி இறைஞ்சக்கண்டு வெகுண்டமை குடிகோள்பற்றிவந்த வெகுளியென்னும் மெய்ப்பாடு.

௩ச. நா நல்கூர்ந்தனை - நா வறுமையுற்றாய்; என்றது, சாரணனைத் துதியாது வீணேயிருந்தாயென்று இகழ்ந்தபடி; "நாடாது நூணிந்து நாநல் கூர்ந்தனை" (கக : ச) என்பர் பின்னும்.

௩ரு. பாத்தியன் - (புத்தனுடைய) பாதத்திற்கு அன்பன்; "திருவாத ஆர்ச்சிவ பாத்தியன்" என்பதில், 'பாத்தியன்' என்பது இப்பொருளில் வருதல் காண்க; இது நம்பியாண்டார்நம்பிகள் திருவாக்கு.

௩கூ. நின் தமரலம் ஆயினும் - யாம் நினக்குச் சிறந்த அன்பரல்லேமாயினும்.

௩எ. அமுது - அன்னம்; அமிர்தமென்னும் வடமொழிச்சிதைவு. இதனை ஆருயிர் மருந்தென்று இந்நூலுள்ளே பலவிடத்துங்கூறுவர்.

(பி - ம்.) ௩o. 'நலங்கூர்' ௩க. 'இராகுலன்வந்நீர்', 'இராகுல வந்தோய்.' ௩க - உ. 'வெகுளாலு, மமலா' ௩ச. 'நாநலகூந்தனை' ௩ரு-கூ. 'பணிந்துநீங்கமரகேள்'

முண்டி யாமுன் குறிப்பின மென்றலு
மெம்மனை யுண்கே ளீங்குக் கொணர்கென
௪0 வந்தா ளவனும் டருளிய வவ்வற
நின்னுங் கொழியாது நின்பிறப் பறுத்திடு
மூவவன மருங்கி லுன்பாற் றோன்றிய
வுதய குமர னவனுன் னிராகுல
னுங்கவ னன்றியு மவன்பா லுள்ள
௪௫ நீங்காத் தன்மை நினக்குமுண் டாகலிற்
கந்த சாலியின் கழிபெரு வித்தோர்
வெந்துகு வெண்களர் வீழ்வது போன்மென

௩௮. உண்டி - உண்பாய். என்றலும் - என்று நீ சொல்லலும்.

௩௯. எம்மனை - தாயே. கொணர்க என - கொண்டுவருகவென்று சாதுசக்கரன் சொல்லி.

௪0. அவன் உண்டருளிய அவ்வறம் - சாதுசக்கரன் அமுதுசெய்தமையாலுண்டாகிய அந்தப்புண்ணியம்.

௪௧. நின்னுங்கொழியாது - நின்னைவிட்டு நீங்காது. நின்னுங்கு: மணி. கக : ௪௭.

௪0 - ௪௧. அவ்வறம் நின்பிறப்பை அறுத்திடும்.

௪௩. உதயகுமரனாகிய அவன்.

௪௪. அவனன்றியும் - அவன் உன்பால் நீங்காத விருப்பத்தைச் செலுத்துவதல்லாமலும்.

௪௪ - ௫. உதயகுமரனை மணிமேகலை இடைவிடாது நினைத்திருந்தாளென்பதை, உதயகுமரன் வெட்டுண்டு இறந்தபொழுது, "உவவன மருங்கி னின்பா லுள்ளந், தவிர்விலே னாதலின்" (மணி. உக: க௩ - ௪) என்று அவள் அவனைக்குறித்துக் கூறியவாற்றாலும் உணர்க.

௪௬. கந்தசாலி - சிறந்தவாசனையுள்ள ஒருவகை நெல்; இப்பெயரினதாகிய நெல்லொன்று உண்டென்பது, தசதுமாரசரிதத்தின் உத்தரார்த்தத்தில் ஆறுவது உச்சுவாசத்திலுள்ள கோமினிகதையால் புலப்படுமென்பர். இக்காலத்து இந்நெல் கன்னடதேசத்துள்ள மங்கலாபுரத்தில் (மங்களூரில்) மிகுதியாகவுள்ளது. மணிமேகலையின் உயர்வுபற்றி அவளுக்குக் கந்தசாலி உவமை கூறப்பட்டது. கழிபெருவித்து - மிகச் சிறந்தவிதை.

௪௭. களர் - உப்புநிலம். வீழ்வது போன்ம் - விதைக்கப்படுவதையொக்கும்; என்றது, தருமத்துக்கு மூலமாகிய நீ உதயகுமரனை விரும்புவாயாயின் உனதியல்பு களர்நிலத்தில் விதைக்கப்பட்ட கந்தசாலியின் விதையைப்போன்று பயனற்றுப்போமென்றபடி. என - என்று நினைந்து.

(பி - ம்.) ௩௮. 'உண்டியான்' ௩௯. 'உண்டுகேளீங்குக் குணர்கென' ௪0. 'அருளியவறலமுது', 'அருளியவவ்வமுது.' ௪௭. 'வெங்களர்'

வறத்தின் வித்தாங் காகிய வுன்னையோர்
திறப்படற் கேதுவாச் செயிழை செய்தே
௫௦ னின்னுங் கேளா யிலக்குமி நீநின்
றவ்வைய ராவோர் தாரையும் வீரையு
மாங்கவர் தம்மை யங்கநாட் டகவயிற்
கச்சய மாளுங் கழற்கால் வேந்தன்
றுச்சய னென்போ னொருவன் கொண்டன
௫௫ னவருட னாங்கவ னகன்மலை யாடிக்
கங்கைப் பேரியாற் றடைகரை யிருந்துழி
மறவண நீத்த மாசறு கேள்வி
யறவண னாங்கவன் பாற்சென் றோனை
யீங்கு வந்தீர் யாரென் றெழுந்தவன்
௬௦ பாங்குளி மாதவன் பாதம் பணிதலு
மாதி முதல்வ னறவாழி யாள்வோன்
மாதுய ரெவ்வ மக்களை நீக்கி

---

௪அ. தருமத்திற்கு மூலமாகிய உன்னை.

௪அ - ௯. ஓர்திறப் படற்கு ஏதுவாச்செய்தேன் - நின்மனம் ஒரு வழிப்படுதற்குக் காரணமாகச் செய்தேன்; ஒருவழி - வைராக்கியமார்க்கம்; "ஒருமன மெய்தி யிருவினைப் பிணிவிட, முப்பகை கடந்து நால் வகைப் பொருளுணர்ந்து" (வீர. யாப்பு. ௧௧, உதாரணம்) என்று வருதல்காண்க. செய்தேனென்றது, மணிமேகலையை உவவனத்திலிருந்து மணிபல்லவத்திற்குக் கொண்டுபோய்ப் புத்தனது பாதபீடிகையைக் காட்டி முற்பிறப்பின் செய்தியை அவள் அறிந்து உய்யும்படி செய்ததனை; மணி. ௨௧: ௧௩ - ௭.

௫௧. தவ்வையராவோர் - முன்பு பிறந்தோராவோர்.

௫௩. பு. மணி ௧௨: ௩௯. ௫௨ - ௪. அவர்தம்மைத் துச்சயன் மணஞ்செய்து கொண்டான்.

௫௫. அவருடன் - தாரை வீரையென்பவருடன். ஆடி - விளையாடி.

௫௮. அவன் - துச்சயன். சென்றோனை - சென்ற அறவணவடிகளை.

௫௭ - ௮. மணி. ௨: ௬௦ - ௬௧.

௫௯ - ௬௦. அவன் பாங்கு உள்ளி - அவனுடைய இயல்பை நினைந்து. பணிதலும் - துச்சயன் வணங்குதலும்.

௬௧. மணி. ௬: ௧௧. ஆதிமுதல்வனென்பது முதலியவை அறவண வடிகள் துச்சயனை நோக்கிக் கூறும் சொல்.

௬௨. மாதுயர் எவ்வம் - மிக்கதுன்பம்; என்றது பிறப்பிறப்புக்களை; துயரெவ்வம்: ஒருபொருட் பன்மொழி. நீக்கி - நீங்கச்செய்து.

(பி - ம்.) ௪௯. 'சேயிழைவந்தேன்' ௫௦. 'உன்றன்' ௫௧. 'தவ்வையராகிய', 'தவ்வையளாகிய.' ௫௨. 'அங்கநாடகவையிற்' ௫௫. 'அவனுடனுங் கவரகன்மலை' ௫௬. 'பெயராற்றிடைகரை'

விலங்குந் தம்முள் வெரூஉம்பகை நீக்கி
யுடங்குயிர் வாழ்கவென் றுள்ளங் கசிந்துகத்
௬௫ தொன்று காலத்து நின்றற முரைத்த
குன்ற மருங்கிற் குற்றங் கெடுக்கும்
பாத பங்கயங் கிடத்தலி னீங்கிது
பாதபங் கயமலை யெனும்பெயர்த் தாயது
தொழுதுவலங் கொள்ள வந்தே னீங்கிப்
௭௦ பழுதில் காட்சியிர் நீயிருந் தொழுமென
வன்றவ னுரைத்த வவ்வுரை பிழையாது
சென்றுகை தொழுது சிறப்புச் செய்தலின்
மாதவி யாகியுஞ் சுதமதி யாகியுங்

---

௬௩. வெரூஉம்பகை - அஞ்சுதற்குக் காரணமாகிய பகை.

௬௪. உயிர் உடங்கு வாழ்க என்று - எல்லாவுயிர்களும் தம்முள் மன வேறுபாடின்றி ஒத்து வாழ்வனவாக வென்று கருதி; எல்லாவுயிர்களும் ஒருபடியாக நிருவாணமடைந்து வாழ்கவென்று கருதியென்று கூறினும் பொருந்தும். உள்ளம் கசிந்து உக - மனம் கருணை மிகுதியால் இரங்கிக் கரைய.

௬௫. தொன்று காலத்து - பழையகாலத்தில்.

௬௨ - ௫. மணி. ௧௨: ௮௭ - ௯௯.

௬௫ - ௬. நின்று அறம் உரைத்த குன்ற மருங்கில் - எல்லா உயிர்களும் காணும்படி நின்று தருமோபதேசஞ்செய்த மலையினிடத்தே; அம் மலையாவது கிருத்திரகூடம்; அது மகததேசத்தின் இராசதானியாகிய இராசக்ருகநகரத்தின் அருகே உள்ளது. குற்றம் - காமவெகுளி மயக்கங்கள்.

௬௧ - ௬. முதல்வன் ஆள்வோன் உயிர் வாழ்கவென்று நின்று அறம் உரைத்த குன்றம்.

௬௭. பாதபங்கயம் - புத்தனுடைய பாததாமரைக் குறிகள்.

௬௮. பெயர்த்தாயது - பெயரையுடையதாயிற்று

௭௦. பழுது இல் காட்சியீர் - குற்றமில்லாத அறிவினையுடையீர். தொழுமென - தொழுமினென்று துச்சயன் முதலியோரை நோக்கி அறவணவடிகள் சொல்ல.

௭௧. பிழையாது - தப்பாது.

௭௨. சிறப்பு - விழா ; "சிறப்பொடு பூசனை செல்லாது" (குறள், ௧௮) ; பூசையெனினும் பொருந்தும்.

(பி - ம்.) ௬௩ - ௪. 'விலங்கு தம்முளா ருட்பகை நீக்கி யுடன்பயிர் வாள்க.........கசிந்து' ௬௭ - ௮. 'கிடைத்தலணங்கிது, பாதபங்கயமெனும்' ௭௦ - ௭௧. 'காட்சியீரே நீருந்தொழுமினென், றன்றவனுரைத்த வறவுரை'

கோதையஞ் சாய னின்னொடு கூடின
௭௫ ரறிபிறப் புற்றனை யறம்பா டறிந்தனை
பிறவற முரைப்போர் பெற்றியுங் கேட்குவை
பல்வேறு சமயப் படிற்றுரை யெல்லா
மல்லியங் கோதை கேட்குறு மந்நா
ளிளையள் வளையோ ளென்றுனக் கியாவரும்
௮0 விளைபொரு ளுரையார் வேற்றுரு வெய்தவு
மந்தரந் திரியவு மாக்குமிவ் வருந்திறன்
மந்திரங் கொள்கென வாய்மையி னோதி
மதிநாண் முற்றிய மங்கலத் திருநாட்

---

௭௪. கோதையஞ்சாயலென்றது மணிமேகலையை.

௭௩ - ௪. மு. மணி. ௧௨ : ௧௭ - ௮.

௭௫. அறிபிறப்புற்றனை - முற்பிறப்பை யறிந்தாய்; "முந்தைப் பிறப்பெய்தி நின்றோள்" (௯) என்று இக்காதையில் முன்னுங் கூறியிருத்தல் காண்க. அறம் பாடு அறிந்தனை - தருமோற்பத்தியை யறிந்தாய்; "அறம்பாடு சிறக்க" (௧0 : ௯) என்றார் முன்னும்.

௭௬. பிற அறம் உரைப்போர் - மற்றைச் சமயதருமங்களைச் சொல்லுவோர்.

௭௭. படிற்றுரை - பொய்வார்த்தை.

௭௮. அல்லியங்கோதை : முன்னிலைப்பெயர்.

௭௯. இளையள் - இளமையையுடையாள். வளையோள் - வளைகளையுடையாள்.

௮0. விளைபொருள் உரையார் - விளைகின்ற தத்தம் சமயதத்துவங்களைச் சொல்லார்; இயல்பன்றென்பார் விளைபொருளென்றார். ஆதலாலென ஒருசொல் வருவிக்க. வேற்றுரு - வேறுவடிவம்.

௭௯ - ௮0. மு. மணி. ௨௬ : ௬௮ - ௯. ௮௧. அந்தரம் - ஆகாயம்.

௮௨. வாய்மையின் ஓதி - நால்வகை வாய்மையுடன் அம்மந்திரங்களை உபதேசித்து; வாய்மையின் - உண்மையுடனென்றுமாம்.

௮௩. மதிநாள் முற்றிய - சந்திரன் நாள்தோறும் ஒவ்வொரு கலையாக வளர்ந்து முற்றுப்பெற்ற. மங்கலத்திருநாள் - பௌர்ணிமையில். புத்தன் ஞானம் பெற்றதினம் வைசாகசுத்த பௌர்ணிமையாதலால், அதனை விளக்குதற்பொருட்டு, 'மதிநாண் முற்றிய மங்கலத் திருநாள்' என்றார். புத்தன் பிறந்த தினமும் அதுவே. இதனால், வைசாகசுத்த பௌர்ணிமையைச் சிறந்த திருநாளாகப் பௌத்தர் இக்காலத்துங் கொண்டாடுவர்.

(பி - ம்.) ௭௪. 'நின்னொடுங்கூடினர்' ௭௫. 'அயப்பாடிறந்தனை' ௭௮ - ௯. 'நாளி, னினையவள் வளையோரென்றுனக்கு' ௮௧. 'அந்தரஞ் சேறலும்', 'அந்திரந் திரியவும்.'

பொதுவறி விகழ்ந்து புலமுறு மாதவன்
அரு திருவற மெய்ந்நூல் சித்தமென் றுணர்நீ
மன்பெரும் பீடிகை வணங்கினை யேத்தி
நின்பதிப் புகுவா யென்றெழுந் தோங்கி
மறந்தது முண்டென மறித்தாங் கிழிந்து
சிறந்த கொள்கைச் சேயிழை கேளாய்
ருய0 மக்கள் யாக்கை யுணவின் பிண்ட
மிப்பெரு மந்திர மிரும்பசி யறுக்குமென்
றாங்கது கொடுத்தாங் கந்தர மெழுந்து
நீங்கிய தாங்கு நெடுந்தெய்வந் தானென்.

க0.—மந்திரங்கொடுத்தகாதை முற்றிற்று.

---

அச. பொதுவறிவு இகழ்ந்து - சாமானிய ஞானத்தைவெறுத்து. புலம் உறும் மாதவன் - நான்கு வகையாகிய சத்தியங்களை அறிதற்குரிய ஞானத்தை யடைந்த புத்தனுடைய. புலம் - மெய்ஞ்ஞானம்; மூநு. ரு௫.

அரு. சித்தம் = வித்தம் - நிச்சயம். அசு. வணங்கினை - வணங்கி.

அஅ. ஓ. மணி. ரு : ருக. மறித்து ஆங்கு இழிந்து - மீட்டும் அவ்விடத்தே இறங்கி.

அகூ. கொள்கை - விரதம்; "சான்ற கொள்கை" மதுரை. சஅ0.

ருய0. மனிதருடைய உடம்பு உணவாலாகியதொகுதி; "உண்டி முதற்றே யுணவின் பிண்டம்" புறநா. கஅ.

ருக. எல்லாமந்திரத்திலும் சிறந்ததென்பார் பசியொழிக்கும் மந்திரத்தைப் பெருமந்திரமென்றார். ருரு. நெடுந்தெய்வம் நீங்கியது.

க - ருரு. ஆயிழை ஆசனத்தால் அறிந்தபிறவியளாயினள்; இவள் பெற்றியும் ஐதென்று வந்துதோன்றிய தெய்வம், நின்றோள்கேட்ப, 'நீயோ தோன்றினை; நின்னடிபணிந்தேன்; வைத்தேன்; கொண்டேன்; ஏற்றினேன்; புலம்பு அறுக' என்று ஆசனத்தைவலங்கொண்டு வணங்கா நிற்ப, அப்பொழுது அத்தெய்வத்தின் முன்னர்ப் பொருந்தி, 'உன்றிருவருளால் என்பிறப்புணர்ந்தேன், என்கணவன் யாங்குளன்?' என்று மணிமேகலைகேட்டலும், அத்தெய்வம், "இலக்குமி! கேள், பொழிலில் இராகுலனோடு நீ புலந்தாய்; அப்புலவியை மாற்றவேண்டி அவன் உன்னடியை வணங்கும்பொழுது, சாதுசக்கரன் திரிவோன் வருவோன் வெங்கதிரமயத்துப் பொழிலினுள்ளே வந்து தோன்றலும், நீ கண்டு மயங்கிக் கலங்கி நடுக்குற்று நாணி இறைஞ்ச, இராகுலன், 'வந்தோன் யார்' என்று வெகுளலும், நீ அவன் வாயைப்புதைத்து, 'இழிந்தோனுடைய அடியை வணங்காது நாநல்கூர்ந்தனை' என்று சொல்லி அவ

(பி - ம்.) அச. 'பொதுவறிவழிந்து புலம்பறு மாதவன்' அஎ. 'நின்றன்பதிப்புகுவாயென' ருரு. 'நீங்கியதாங்க'

ளோடு பாத்தியன் பாதம்பணிந்து, 'அமர, கேள்; கொணர்கேம்; உண்டி; யாம் உன்குறிப்பினம்' என்றலும், அவன், 'கொணர்க' என்று உண்டருளிய அவ்வறம் நின்னை யொழியாது நின்பிறப்பை யறுத்திடும்; உவவனத்தில்தோன்றிய உதயகுமரன்றான் இராகுலன்; அவனுக்கு உன் பாலன்றி அவன்பால் உள்ளம் நீங்காத்தன்மை நினக்கு முண்டாதலின், நினது இயல்பு வீழ்வது போலுமென்றெண்ணி உன்னை ஒருதிறப் படற்கு ஏதுவாச் செய்தேன்; இலக்குமி! இன்னுங்கேள்; தாரையும் வீரையும் நின்தவ்வையயராவோர்; அவர் தம்மைத் துச்சயன்கொண்டனன்; அவன் அவருடன் மலையாடி அடைகரையிலிருந்துழிச் சென்ற அறவணனை அவன், 'வந்தீர்யார்?' என்று எழுந்து பாதத்தைப்பணிதலும், அவன், 'பாதபங்கயத்தைத் தொழுது வலங்கொள்ளவந்தேன்; நீருந்தொழும்' என்ற உரைபிழையாது சென்று தொழுது சிறப்புச் செய்தலின், தாரையும் வீரையும் நின்னொடு கூடினர்; உற்றனை; அறிந்தனை; பெற்றியும் கேட்குவை; அந்நாள், யாவரும் உனக்கு உரையார்; ஆதலால், இம்மந்திரங்கொள்க" என்று அவற்றை உபதேசித்து, "உணர்தீ; நின்பதிப்புகுவாய்" என்று எழுந்தோங்கி, "யான் மறந்ததுமொன்றுண்டு" என்று மறித்தும் இழிந்து, "கேளாய்; யாக்கை உணவின்பிண்டம்; இப்பெருமந்திரம் இரும்பசியறுக்கும்" என்று அம்மந்திரத்தைக்கொடுத்து எழுந்து நீங்கியதெனை வினைமுடிவு செய்க.

---

பதினொன்றாவது

# பாத்திரம்பெற்றகாதை.

[பதினொன்றாவது மணிமேகலைக்குத் தீவதிலகை கோமுகியென்னும் பொய்கையிலெழுந்த பாத்திரங்கொடுத்தபாட்டு.]

மணிமே கலாதெய்வ நீங்கிய பின்னர்
மணிபல் லவத்திடை மணிமே கலைதான்
வெண்மணற் குன்றமும் விரிபூஞ் சோலையுந்
தண்மலர்ப் பொய்கையுந் தாழ்ந்தன ளொக்கிக்
ரு காவதந் திரியக் கடவுட் கோலத்துத்

---

ங. குன்றமுதலியவற்றிற்கு இரண்டனுருபு விரிக்க.
ச. தாழ்ந்தனள் நோக்கி - தாழ்ந்து நோக்கி; மெல்ல நோக்கி.
ரு. காவதம் - காதம்; 'வ' பகுதிப்பொருள் விகுதி யென்பர்; (சிலப். கo: ௩௬, அடியார்.) கடவுட்கோலம் - தெய்வவேடம்.
க - ரு. நீங்கியபின்னர் மணிமேகலை நோக்கித் திரியவென்க.
(பி - ம்.) ச. 'தண்புனற்பொய்கை'

தீவ திலகை செவ்வனர் தோன்றிக்
கலங்கவிழ் மகளிரின் வந்தீங் கெய்திய
இலங்குதொடி நல்லா யார்நீ யென்றலு
மெப்பிறப் பகத்துள் யார்நீ யென்றது
கo பொற்கொடி யன்னாய் பொருந்திக் கேளாய்
போய பிறவியிற் பூமியங் கிழவ
னிராகுலன் மனையா னிலக்குமி யென்பே
ராய பிறவியி லாடலங் கணிகை
மாதவி யீன்ற மணிமே கலையா
கரு னென்பெயர்த் தெய்வ மீங்கெனைக் கொணர்விம்
மன்பெரும் பீடிகை யென்பிறப் புணர்ந்தே
னீங்கென் வரவீதீங் கெய்திய பயனிது

---

சு. தீவதிலகை - இந்திரனேவலாற் புத்தனுடைய பாதபீடிகையைப் பாதுகாத்துக்கொண்டு மணிபல்லவத்திலிருப்பவள்; (மணி. பதிகம், ருஙு, கக: உஎ - அ.) செவ்வனம் - செவ்விதாக; வேறாகவெனினும் பொருந்தும்; "திருமக ளிருக்கை செவ்வனங் கழிந்து" (சிலப். சு: கஉஎ) என்பதிற்காண்க.

எ. கலம் - கப்பல். மகளிரின் - மகளிரைப்போல.

அ. தொடி - வளை. என்றலும் - என்று தீவதிலகை கேட்கவும்.

சு - அ. தீவதிலகை தோன்றி யார் நீ யென்றலும்.

கூ. 'எப்பிறப்பகத்துள்' என்பது முதலியன மணிமேகலையின் கூற்று.

கo. பொற்கொடி யன்னாய் - காமவல்லியையொப்பாய்.

கக. போய பிறவி - சென்ற பிறப்பு. கிழவன் - உரியவன்.

கஉ. மனை யான் - யான் மனைவி. இலக்குமி என்பேர் - இலக்குமி யென்பது எனது பெயர்.

கங. ஆய பிறவியில் - இப்பிறப்பில்.

கங - சு. பலவகையினராகிய கணிகையர்களுள் மாதவி நாடகக் கணிகையாதலின் அதனை விளக்குதற்பொருட்டு, 'ஆடலங்கணிகை மாதவி' என்றாள். கணிகையர்களின் வகையினைச் சிலப்பதிகாரம், ரு - ஆம் காதையிலும், கச - ஆம் காதையிலும் காண்க.

கரு. என்பெயர்த்தெய்வமென்றது மணிமேகலாதெய்வத்தை.

கசு. பீடிகை - பீடிகையால்.

கஎ. பயனிதுவென்றது, பழம்பிறப்புணர்ந்ததனை.

(பி - ம்.) அ. 'இலங்குகொடி யன்று யார்நீ' கஉ. 'என்பேன்'

பூங்கொடி யன்னா யார்நீ யென்றலு
மாயிழை தன்பிறப் பறிந்தமை யறிந்த
உ0 தீவ திலகை செவ்வன முரைக்கு
மீங்கித னயலகத் திரத்தின தீவத்
தோங்குயர் சமந்தத் துச்சி மீமிசை

கஅ. என்றலும் - என்று மணிமேகலை கேட்கவும்.

ககூ. ஆயிழை - மணிமேகலை. அறிந்தமை - அறிந்த தன்மையை.

உ0. உரைக்கும் - சொல்லுவாள்.

மேல் வருவன தீவதிலகையின் கூற்று.

உக. இதன் அயலகத்து - இந்த மணிபல்லவத்தின் அயலிடத் துள்ள.

உஉ. ஓங்குயர் சமந்தத்து - மிகவுமுயர்ந்த சமந்தமென்னும் மலையினது. உச்சிமீமிசை - உச்சியின்மேலே; மீமிசை - மேல்; "கொல்களிற்று மீமிசைக் கொடி" (புறநா. கூ) இம்மலைக்குச் சமனொளி யென்றும் ஒரு பெயருண்டு; "இலங்கா தீவத்துச் சமனொளி யென்னுஞ், சிலம்பினை யெய்தி" (உஅ : க0எ - அ) என்று பின்வருதலாலுணர்க. "ஆறைந்தி யோசனை .........மணிபல் லவத்திடை" (மணி. சு : உகக - ங) என்றதனால் மணிபல்லவம் காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தெற்கே முப்பதுயோசனை தூரத்திலுள்ளதென்றும், "ஈங்கிதன்.........யாங்குளதாதலின்" (உக - ங) என இங்கே கூறியவதனால் இரத்தினதீவம் மணிபல்லவத்திற்கு அயலிடத்துள்ளதென்றும், அதிற் புத்தனுடைய பாதக்குறிகளுள்ள உச்சியையுடைய சமந்தமென்னும் மலையொன்றுண்டென்றும் தெரிதலாலும், "இலங்கா தீவத்து.........எய்தி" (மணி. உஅ : க0எ - அ) என்பதனால் இலங்காதீவத்திற் சமனொளி யென்று பெயருள்ள புத்தஸ்தலமாகிய மலையொன்றுண்டென்று தெரிதலாலும் முன்னுள்ள சமந்தமென்பதும், பின்னுள்ள சமனொளியென்பதும், இலங்கையிலுள்ள 'ஆடம்ஸ்பீக்' என்று ஆங்கில பாஷையில் வழங்கும் மலையையே குறிக்கின்றனவென்று எண்ணுவதற்கு இடமுண்டு. இலங்கைத்தீவின் மேல்மாகாணத்தில் தென்கீழ்ப்பிரிவில் இரத்தினபுரியென்ற ஓரிடமும், சிலராற் சமந்தகூடமென்றும் சிலராற்சமனொலையென்றும் சொல்லப்பட்டுள்ள மலையொன்றும் உள்ளனவென்று யாழ்ப்பாணம் வட்டுக்கோட்டை, வே. சதாசிவப்பிள்ளையென்பவரால், கி. பி. 1884 - ஆம் வருஷத்திற் பதிப்பிக்கப்பட்டுள்ள இலங்கைப்பூமிசாஸ்திர சங்கிரகமென்னும் புத்தகத்தால் தெரிகின்றது. மணிபல்லவம் காவிரிப்பூம்பட்டினத்திற்குத்தெற்கே ஆறைந்து யோசனை தூரத்துள்ளதென்றும் அதன் அயலிலுள்ளது இரத்தின தீவமென்றும் முன்பு கூறியதற்கு 'ஆடம்ஸ்பீக்' காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தெற்கே சற்றேறக்குறைய முப்பது காததூரத்திலிருத்தலும், அம்மலை பண்டைக்காலத்துச் சமந்தமென்றும் சமனொளியென்றும் கூறப்பட்டு வந்ததென்பதற்கு, இக்காலத்து அது, 'சமந்தகூடம்' என்றும், 'சமனொலை' என்றும் பெயர்

(பி - ம்.) உஉ. 'சிமயத்துச்சி'

யறவியங் கிழவோ னடியிணை யாகிய
பிறவி யென்னும் பெருங்கடல் விடூஉ
உரு மறவி நாவா யாங்குள தாதலிற்
றொழுது வலங் கொண்டு வந்தே னீங்குப்
பழுதில் காட்சியிந் நன்மணிப் பீடிகை
தேவர்கோ னேவலிற் காவல் பூண்டேன்
றீவ திலகை யென்பெய ரிதுகே
ங0 டரும தலைவன் றலைமையி னுரைத்த

பெற்றிருத்தலும், சமனொளி இலங்காதீவத்துள்ளதென்பதற்கு அங்ஙனம் இலங்கைத்தீவிலிருத்தலும் சான்றாதலறிக.

உங. அறவியங் கிழவோன் - அறத்திலே நிற்கின்ற உரிமையை யுடையோனாகிய புத்தன்; "அறவியாற் காறு மூன்றும்", "அறவிய மனத்த ராகி" (சீவக. கஉ௫, உ௮௭) ; "அறவிய மனத்தினை யாகி", "அறவியான் றானு மறவமிர்த மீந்தான்" (நீல. தரும. ச௮, க0௧.) இணை - இரண்டு.

உச. பிறவி காரணகாரியத்தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின், 'பிறவியென்னும் பெருங்கடல்' என்றார். விடூஉம் - கடத்தும்.

உ௫. அறவிநாவாய் - அறத்திலே நிற்பதாகிய நாவாய்; நாவாய் - கப்பல்.

உஉ - ௫. உச்சிமீமிசை அடியிணையாகிய நாவாய் உள்ளது.

உங - ௫. பிறவியாகிய பெருங்கடலைக்கடத்தும் அடியிணையாகிய நாவாயென்க; "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா, ரிறைவ னடி சேரா தார்" குறள். க0.

உசு. ஈங்கு வந்தேன்.

உக - சு. இம்மணிபல்லவத்தின் அயலிடத்தேயுள்ளதாகிய இரத்தினதீவத்துள்ள சமந்தமென்னும் மலையினது உச்சியிற் புத்தனது பாதமாகிய அறவிநாவாய் உள்ளதாதலால் அதனைத் தொழுது வலங் கொண்டு ஈங்குவந்தேனென்றாளென்க.

உஎ. பழுது இல் காட்சி - குற்றமற்ற தோற்றத்தையுடைய. பீடிகை - பீடத்தை.

உ௮. காவல் பூண்டேன் - காத்தலை மேற்கொண்டேன்.

உகூ. என்பெயர் தீவதிலகையென்பது.

ங0. தருமராசனென்பது புத்தன்பெயர்களுள் ஒன்றாதலின். தருமதலைவனென்றாள்.

(பி - ம்.) உசு. 'வந்தேனிந்தப்' உ௮. 'காவற் பூண்ட'.

பெருமைசா னல்லறம் பிறழா நோன்பினர்
கண்டுகை தொழுவோர் கண்டதற் பின்னர்ப்
பண்டைப் பிறவிய ராகுவர் பைந்தொடி
யரிய ருலகத் தாங்கவர்க் கறமொழி
௩௫ யுரிய துலகத் தொருதலை யாக
வாங்கன மாகிய வணியிழை யிதுகே
ளீங்கிப் பெரும்பெயர்ப் பீடிகை முன்னது
மாமலர்க் குவளையு நெய்தலு மயங்கிய
கோமுகி யென்னுங் கொழுநீ ரிலஞ்சி
௪௦ யிருதிள வேனிலி லெரிகதி ரிடபத்

---

௩௧ - ௩. நோன்பினரே இப்பீடிகையைத் தரிசித்துக் கைதொழு தற்கு உரியராவார்; அங்ஙனந்தரிசித்தபின்பு அவர் பழைய பிறப்பின் செய்தியையறியும் அறிவையுடையராவார்.

௩௪ - ௫. அரியர் உலகத்து - அத்தன்மையையுடையோர் உலகத் திற் பெறுதற்கரியர். அவர்க்கு அறமொழி உரியது - அவர்க்குத் தரும பதம் உரிமையையுடையது. ஒருதலையாக - நிச்சயமாக.

௩௬. ஆங்கனமாகிய அணியிழை - அத்தன்மையையுடையாயாகிய அணியிழாய்; என்றது, நீ தருமபதங்கேட்டற்கு உரிமையையுடையா யென்றபடி.

௩௭. பெயர் - புகழ்; பெரும்பெயர் - வீடுமோம்; "மிக்குப்புக ழெய்திய பெரும்பெயர் மதுரை" மதுரை. ௬௯௯.

௩௮. மயங்கிய - கலந்த.

௩௯. கோமுகி - மணிபல்லவத்துள்ள ஒரு பொய்கை; காரணப் பெயர்; பசுவின் முகம்போன்ற வடிவமுடையதென்பது பொருள். இலஞ்சி - பொய்கையில்.

௩௭ - ௯. முன்னிடத்ததாகிய இலஞ்சியில்.

ஆபுத்திரன் வேண்டுகோளின்படி கோமுகியென்னும் பொய்கையி னுள்ளேயிருந்து அமுதசுரபியென்னும் பாத்திரம் ஒவ்வொருவருடத்தும் மேலேவந்து தோன்றுந்தினம் புத்தனுடைய ஜனனகாலமாகிய விசாக நட்சத்திரத்தோடு கூடிய வைசாகசுத்த பௌர்ணிமையாதலின், அத் தினத்தை மேலேவரும் நான்கடிகளாற் சிறப்பித்துக் கூறுவார்.

௪௦. இருது இளவேனிலில் - இளவேனிற்பருவத்தில்; பன்னி ரண்டு மாதங்களுள் ஆவணிமுதலிய இரண்டிரண்டுமாதங்கள் இருது வெனவும் பெரும்பொழுதெனவும் பருவமெனவுங் கூறப்படும். அவை முறையே கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனி லென ஆறுவகையாம். அவற்றுள், ஈண்டு இளவேனிலென்றது சித்

(பி - ம்.) ௩௫. 'ஒருதலையாங்கனம்' ௩௬. 'ஆயிழை' ௩௯. 'என் னுமிக் கொழுநீரிலஞ்சி' ௪௦. 'இருந்திள'

தொருபதின் மேலு மொருமூன்று சென்றபின்
மீனத் திடைநிலை மீனத் தகவையிற்
போதித் தலைவனொடு பொருந்தித் தோன்று

---

திரை வைகாசி மாதங்களை. கதிர் எரி இடபத்து - சூரியன் மிக்க வெம்மையைச் செய்கின்ற வைகாசி மாதத்தில்.

சக. ஒருபதின் மேலும் ஒரு மூன்று சென்றபின் - இருபத்தேழு நட்சத்திரங்களுள் கார்த்திகை முதலாகிய பதின்மூன்று நட்சத்திரங்கள் சென்றபின்பு.

சஉ. நட்சத்திரங்களுள் நடுவில் நிற்றலையுடையதான விசாகநட்சத்திரத்தில்; "போதித் தலைவனொடு பொருந்திய போழ்தத்து" (கு : உசு) என்று பின்புவருதலின், ஈண்டு விசாகம் கொள்ளப்பட்டது. அசுவினிமுதலிய இருபத்தேழனுள் பதினான்காவதும் நடுவிலுள்ளதுமாகிய நட்சத்திரம் சித்திரையாக இருக்க அதனை நடுவிலுள்ளதாகக் கூறாமல் இவ்விடத்தில் விசாகத்தைக்கூறியது என்னையோவெனின் ஒவ்வொருவருடத்தும் பகலையும் இரவையும் சமனாக முப்பது முப்பது நாழிகையாகவே பெற்ற இரண்டு விஷுவத்தினங்களுள் ஒன்றாகிய மேஷாயனத்திற் சூரியனுக்கு எந்த நட்சத்திரத்திற் பிரவேசமுண்டாகின்றதோ அதை நட்சத்திரங்களில் முதலாவதாகக் கூறுவது சோதிடநூற்றுணிபாதலாலும், முன்னொருகாலத்திற் சூரியனுக்குக் கிருத்திகாப்பிரவேச மிருந்தபொழுது மேஷாயனம் நேரிட்டிருந்ததென்றும் அதுபற்றிக்கார்த்திகையை முதலாகக்கொண்டு நட்சத்திரங்களையெண்ணிவந்தார்களென்றும் பழைய சோதிடநூல்களால் தெரிகின்றமையாலும் நட்சத்திரங்களின் நடுவிலுள்ளதை விசாகமென்று கூறியது குற்றமன்றென்க. இப்படியே முன்னொருகாலத்தில் நட்சத்திரங்களைக் கார்த்திகை முதலாக எண்ணிவந்தார்களென்பது, கிருஷ்ணயஜுர்வேத ஸம்ஹிதையாலும் கிருஷ்ணயஜுர்வேத பிராஹ்மணத்தாலும் தெரிகின்றதென்பர். உச்சயினி நகரத்தில் விக்கிரமார்க்கனுடைய அவைக்களத்திலிருந்த நவரத்தினங்களுள் ஒருவரென்று சொல்லப்படுகிற வராகமிகிரரென்ற பிரவித்த ஜ்யௌதிஷிகர், தமதுகாலத்தில் மேஷாயனத்திற் சூரியனுக்கு அச்வினீநட்சத்திரப் பிரவேசமுண்டாயிருத்தலையறிந்து பழையவழக்கத்திற்கு மாறாக நட்சத்திரங்களை அச்வினீமுதலாக எண்ணும் வழக்கத்தை வற்புறுத்தினமையின், இக்காலத்தில் நட்சத்திரங்கள் இங்ஙனம் எண்ணப்பட்டு வருகின்றனவென்பர்.

சக - உ. இங்கே விசாகநட்சத்திரத்தைப் பதினான்காவதாகக் கூறியிருத்தல் அறிஞரால் ஆராய்ச்சி செய்தற்குரியது.

சங. போதி - அரசமரம்; இதற்குப் போதத்தையுடையதென்பது பொருள்; போதம் - ஞானம்; இதனடியிலிருந்தபொழுது நால்வகைச் சத்தியங்களையும் அறிந்துகொள்ளுதற்குரிய ஞானத்தைப் புத்தன் அடைந்தமையால், இஃது இப்பெயர்பெற்றதென்பர்; புத்தன்

(பி - ம்.) சக - உ. 'சென்ற, மீனத்' சங. 'போகத்தெருவரொடு'

மாபுத் திரன்கை யமுத சுரபியெனு
சரு மாபெரும் பாத்திர மடக்கொடி கேளா
யங்கா ளிங்கா ளப்பொழு திப்பொழுது
நின்னுங்கு வருவது போலு நேரிழை
யாங்கதிற் பெய்த வாருயிர் மருந்து
வாங்குநர் கையகம் வருத்துத லல்லது

இதனடியிலிருந்தானென்பதை, "போதி நீழற் பொருந்தித் தோன்று, நாதன்" (கக : எரு - சு), "போதி மூலம் பொருந்திய சிறப்பி, ஞதன்" (கஉ : க0க - உ), "ஓங்குயர் போதி யுரவோன்" (கஉ : ககக), "போதித் தலைவனொடு" (கரு : உசு), "போதி மாதவன்" (கரு : உக), "முன்னவன் போதியி னல்லறம்" (உஅ : கசக), "பைம்பூம் போதிப் பகவற்கு" (உஅ : களச), "போதி மூலத்து, நாதன்" (உக : உரு - சு) என இந்நூலுள்ளே பின்வருவனவற்றலுணர்க; இது மகாபோதியென வுங் கூறப்படும். தலைவன் - புத்தன். இனி, போதியென்பதற்கு ஞான மென்று பொருள்செய்தல் பௌத்தர் சைனர்களுடைய வழக்கமாக விருத்தலின், போதித்தலைவனென்றதற்கு ஞானத்திற்குத் தலைவ னென்று பொருள் கூறினும் பொருந்தும்; "போதிச் செல்வம் பூண்டவ ரேத்தும் பொலிவின்று, லாதிக் காலத் தந்தணன் காதன் மகனுத் தான்" (சீவக. ருசுசு.) தோன்றும் : முற்று.

ச0 - சரு. ழ. மணி. கரு : உரு - சு.

சச. அமுதசுரபி - அமுதத்தினது மணம்போன்ற மணமுடைய தென்றும், அமுதத்தைக்கொடுக்கும் காமதேனுவைப் போன்றதென் றும் பொருள் கூறுவர்; அமுதம் - அமிர்தம், உணவு; சுரபி - மணம், காமதேனு.

ச0 - சச. அமுதசுரபி, புத்தன் பிறந்தகாலத்தே ஒவ்வொரு வரு டத்தும் கோமுகியென்னும் பொய்கையிலிருந்து தோன்றுதலின், 'போதித் தலைவனொடு பொருந்தித் தோன்றும்' என்றார்.

சரு - ரு. பாத்திரம் தோன்றும்.

சஎ. நின்னுங்கு வருவது போலும் - அப்பாத்திரம் நின்கையிடத்து வருவதுபோலும்; நின்னுங்கு : (மணி. க0 : சக); "நின்னுங்கு வருஉ மென் னெஞ்சினை, யென்னுங்கு வாரா தோம்பினை கொண்மே" கலி. உரு.

சஅ. அதில் - அமுதசுரபியென்னும் பாத்திரத்தில். ஆருயிர் மருந்து - அன்னம்; பசிநோயால் வருந்தாவண்ணம் உயிர்களைப் பாது காத்தலின், இஃது இங்ஙனங் கூறப்பட்டது; "அகன்சுரைப் பெய்த வாருயிர் மருந்து" (கக :ககஎ) என்பர் பின்னும்; சோறும் தண்ணீரும் இருமருந்தென்னப்படும்; புறநா. எ0.

சகு. கையகம் - கையிடத்தை.

(பி - ம்.) சச. 'மாபுத்திரிகை' சஎ. 'நின்னுங்கருவது' சகு. 'வருந்துதலல்லது'

௫0 தான்றொலை வில்லாத் தகைமைய தாகு
நறுமலர்க் கோதை நின்னா ராங்க
ணறவணன் றன்பாற் கேட்குவை யிதன்றிற
மென்றவ னுரைத்தலு மிளங்கொடி விரும்பி
மன்பெரும் பீடிகை தொழுதனள் வணங்கித்
௫௫ தீவ திலகை தன்னொடுங் கூடிக்
கோமுகி வலஞ்செய்து கொள்கையி னிற்றலு
மெழுந்துவலம் புரிந்த விளங்கொடி செங்கையிற்
றொழுந்தகை மரபிற் பாத்திரம் புகுதலும்
பாத்திரம் பெற்ற பைந்தொடி மடவாள்
௬0 மாத்திரை யின்றி மனமகிழ் வெய்தி
மாரனை வெல்லும் வீர நின்னடி
தீநெறிக் கடும்பகை கடிந்தோய் நின்னடி
பிறர்க்கற முயலும் பெரியோய் நின்னடி

---

௫0. தானென்றது அன்னத்தை. ௫க. கோதை: விளி.

௫உ. இதன்றிறம் - இப்பாத்திரத்தின் வரலாறு. இதன்றிறத்தை அறவணன்பாற்கேட்குவை.

௫௩. அவள் - தீவதிலகை. இளங்கொடி - மணிமேகலை.

௫௪. தொழுதனள் வணங்கி - கைகுவித்து வந்தித்து.

௫௬. கொள்கையின் நிற்றலும் - நியமத்தோடு மணிமேகலை நிற்றலும்.

௫௭. எழுந்து - கோமுகியிலிருந்து எழுந்து. இளங்கொடி - மணிமேகலை.

௫௭ - அ. பாத்திரம் எழுந்து இளங்கொடியினுடைய செங்கையிற் புகுதலும்.

௬0. மாத்திரையின்றி - அளவின்றி.

௬க. 'மாரனை' என்பது முதலியன பாத்திரம்பெற்ற மகிழ்ச்சியால் மணிமேகலை புத்தனைக் குறித்துச் செய்யுந் துதிகள். 'மாரன்' என்பதன் பொருளை, மணி. ௫ : எஎ - ஆம் அடிக்குறிப்பிற் காண்க.

௬உ. தீநெறிக் கடும்பகை - கொடிய வழிகளாகிய மிக்கபகையை; காமமுதலியவற்றை, 'அரிஷட்வர்க்கம்' என்றும், 'வைரி' என்றும் வடநூலார் கூறுதல்போலத் தீநெறியைக் கடும்பகையென்றார்; மணி. ௫ : க0௩.

௬௩. பிறர்க்கு அறம் முயலும் பெரியோய் - மற்றையோர்க்குப் புண்ணிய முண்டாதற்கு முயலுகின்ற பெரியோனே; இப்படியே,

(பி - ம்.) ௫0. 'தான்றொலைவறியா' ௫க. 'நறைமலர்க்கோதை' ௫௬. 'கொழுதிவலஞ்' ௫அ. 'தொழுதகை' ௬0. 'எய்த' ௬உ. 'கடப்போய்', 'பகைப்போய்.'

துறக்கம் வேண்டாத் தொல்லோய் நின்னடி
௬௫ யெண்பிறக் கொழிய விறந்தோய் நின்னடி
கண்பிறர்க் களிக்குங் கண்ணோய் நின்னடி

"பிறர்க்கற மருளும் பெரியோன்" (உக : கஎஅ) என்பர் பின்னும்; போதிவிருட்சத்தினடியிற் புத்தனுக்கு ஞானோதயமானபொழுது மாரன் அவனைநோக்கி, 'நீ இப்பொழுதே நிருவாணமடை' என்று சொல்ல, புத்தன் மயங்குகையில், பிரமதேவர்வந்து, 'நீ இப்பொழுது அடைய வேண்டாம்; நீ அறிந்த தருமத்தை உபதேசித்து நிருவாணமடைதற் குரிய வழியை எல்லோர்க்குங் காட்டிவிட்டு அப்பாற் செல்க' என்றவின், புத்தன் தருமோபதேசஞ் செய்யத்தொடங்கினனென்று புத்த சரிதத்தால் தெரிகின்றது.

௬௪. துறக்கம் - சுவர்க்கம். அழிவற்ற நிருவாணமே அவனால் விரும்பப்பட்டமையின், அழிதன் மாலையதாய துறக்கம் வேண்டப்படாத தாயிற்று.

௬௫. எண் பிறக்கு ஒழிய இறந்தோய் - மாந்தர்களுடைய எண்ணங்கள் எட்டாமற் பின்னே கிடக்கும்படி மேற்பட்ட நிலையிற் சென்றோனே; பிறக்கு - பின்; "துறைபிறக் கொழியப் போகி" (பெரும்பாண். ௩௫௧); "முதிர்காய் வள்ளியங் காடுபிறக் கொழிய" (முல்லை. ௧0௧.) இறத்தல் - கடத்தல்.

௬௬. பிறர்க்குக் கண் அளிக்குங் கண்ணோய் - உயிர்களுக்கு ஞானத்தை யருளிச்செய்த ஞானியே; கண் - ஈண்டு ஞானம். புத்தன் பலர்க்குத் தருமோபதேசஞ்செய்த ஆசிரியனாதலின், இங்ஙனங்கூறினார். இனி, உலோகோபகாரத்திற்காகப் புத்தனெடுத்த அநேக ஜாதகங்களுள், ஒன்றில் இவன் கொடையைப் பரிசோதிக்கவெண்ணி, இந்திரன்வந்து இரண்டு கண்களையுங் கேட்டபொழுது இவன் அவற்றைக் கொடுத்தானென்பராகலின், இதற்கு இந்திரனுக்குக் கண்ணைக்கொடுத்தோயென்று பொருள்கூறினும் பொருந்தும். இதனை, "விண்ணவர் நாயகன் வேண்டக், கண்ணினி தளித்த காதற், புண்ணிய னிருந்த போதி, நண்ணிட நோய்நலி யாவே" (வீர. யாப்பு. ௩, உதாரணம்); "கண்கொடுத்தான் றடிகொடுத்தான் கயப்புலிக்குத் தற்கொடுத்தான், பெண்கொடுத்தா னுடம்பினையும் பிளந்திட்டுப் பிறர்க்கீந்தான், மண்கொடுத்தான் மகக்கொடுத்தான் மன்னுந்தற் சேர்ந்தார்க்கு, விண்கொடுத்தானவன்கொடுத்த விரித்துரைப்பன் கேளென்றாள்", "மிக்கதனங் களைமாரி மூன்றும் பெய்யும் வெங்களிற்றைமிகுசிந்தா மணியை மேனி, யொக்கவரிந் தொருகூற்றை யிரண்டு கண்ணை யொளிதிகழுந் திருமுடியை யுடம்பி னூனை, யெக்கிவிழுங் குருதிதனை யரசு தன்னை யின்னுயிர்போற் றேவியையீன் றெடுத்த செல்வ, மக்களைவந் திரந்தவர்க்கு மகிழ்ந்தே யீயும் வானவர்தா மறைந்தபதி மாறு ஆரே" (நீல. சமய.) என்னும் பாடல்களால் உணர்க.

(பி - ம்.) ௬௫. 'என்பிறகொழியவிறைபோயநின்னடி', 'இருந்தோய் நின்னடி.'

தீமொழிக் கடைத்த செவியோய் நின்னடி
வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி
நரகர் துயர்கெட நடப்போய் நின்னடி
எ0 யுரகர் துயர மொழிப்போய் நின்னடி
வணங்குத லல்லது வாழ்த்தலென் னாவிற்
கடங்கா தென்ற வாயிழை முன்னர்ப்
போதி நீழற் பொருந்தித் தோன்று
நாதன் பாத நவைகெட வேத்தித்
எரு தீவ திலகை சேயிழைக் குரைக்குங்

---

௬எ. தீமொழி - பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என்பன ; மொழிக்கு - சொல்லைக் கேளாதிருத்தற்கு.

௬அ. வாய்மொழி - சத்தியம்.

௬௯. நரகர்களிற்சிலர்க்குக் கிலேசசாந்தி செய்வித்தற்பொருட்டு மனமிரங்கி ஒருஜாதகத்திற் புத்தன் நரகலோகத்திற்குச் சென்றானென்பராதலின், இங்ஙனங்கூறினார் ; " அருவினை சிலர்கெட வொரு பெரு நரகிடை, யெரிசுடர் மரைமல ரெனவிடு மடியினை " வீர. யாப்பு. கக, உதாரணம்.

எ0. உரகர் - நாகர் ; நாகர்களுக்குக் கருடனாலுண்டாகிய துன்பம் நீங்கும் பொருட்டு அவனுக்குத் தயாதருமத்தை உபதேசஞ்செய்து அவ னால் அவர்களுக்கு அமிர்தங்கிடைக்கும்படி புத்தன் செய்தானென்பது ஒரு ஜாதககதை. இதனைப் பின்னுள்ள செய்யுட்களாலறிக : " மீதியல் கருடனை விடவர வொடுபகை விதிமுறை கெடவறம் வெளியுற வருளினை ", " பொற்புடை நாகர்தங் துயரம் போக்கினை ", " பைந்நாகர் குலமுய்ய வாயமிழ்தம் பகர்ந்தனையே ", " ஆரமிழ்த மணிநாகர் குல முய்ய வருளினையே ", " வார்சிறைப்புள் ளரையற்கும் வாய்மைநெறி பகர்ந்தனையே " (வீர. யாப்பு. கக, உதாரணங்கள்.) தயையைப் புலப்படுத்துதலையே பயனாக நினைந்து ஸ்ரீஹர்ஷதேவர் யென்பவ ரால் வடமொழியிற் செய்யப்பட்டுள்ளதாகிய ஜீமூதவாகனன் சரிதமா யுள்ள நாகாநந்தமென்னும் நாடகத்தை உற்றுநோக்கின், அஃது ஈண் டுக்கூறிய புத்தஜாதககதையின் வழிப்பட்டதாக யாவருக்கும் விளங்கு மென்பர்.

எக - உ. வாழ்த்தல் அடங்காது ; இப்படியே " ஆயிர வாரத் தாழியங் திருந்தடி, நாவா யிரமிலே னேத்துவ தெவன் " (ரு : க0௪ - ரு) என்று முன்னும் வந்திருத்தல்காண்க.

எச. புத்தனை நாதனென்றல் மரபு ; இதனை, " நவையறு நாத னல்லறம் பகர்வோர் " (உஅ : எக), " நாத னல்லறங் கேட்டலை விரும்பி " (உஅ : அ௯) என இந்நூலுள்ளே பின்வருவனவற்றாலுணர்க. புத்தர்களிற் சிலர் தேவர்களையும் நாதரென்பதுண்டு. நவை - குற்றம்.

எரு. சேயிழைக்கு உரைக்கும் - மணிமேகலைக்குத் தீவதிலகை சொல்லுவாள்.

குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉ
நாணணி களையு மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
அ0 பசிப்பிணி யென்னும் பாவிய தீர்த்தோ
ரிசைச்சொ லளவைக் கென்னு நிமிரா து
புன்மரம் புகையப் புகையழற் பொங்கி
மன்னுயிர் மடிய மழைவளங் கரத்தலி

---

இனிப் பசியின் கொடுமை கூறப்படுகின்றது.

"பசிப்பிணி யென்னும் பாவி" (அ0) என்பதனை 'அழிக்கும்' (எசு) என்பது முதலிய முற்றுவினைகளோடு தனித்தனியே கூட்டுக.

எசு. குடிப்பிறப்பு அழிக்கும் - பசி, தன்னாற்பற்றப்பட்டாருடைய உயர்குடிப்பிறப்பைக் கெடுக்கும்; அக்குடியிலிருந்த முன்னோர்களுக் கில்லாத இழிந்தசெயல்களை அவர்களிடத்து உளவாக்கலான் இவ்வாறு கூறப்பட்டது; "தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக, நல் குர வென்னு நகை" (குறள், க0சஉ.) விழுப்பங்கொல்லும் - சிறப்பினைக் கெடுக்கும்.

எஎ. கல்விப் பெரும்புணை விடூஉம் - கல்வியாகிய பெரிய தெப் பத்தை நீக்கும்; "நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார், சொற்பொருள் சோர்வு படும்" (குறள், க0சசு), "பிறந்த குலமாயும் பேராண்மை மாயுஞ், சிறந்ததங் கல்வியு மாயும்" (நாலடி. உஅரு) என வருதல் காண்க.

எஅ. நாண் அணி களையும் - நாணாகிய ஆபரணத்தை நீக்கும்; அழகுசெய்தலின், நாண் அணியெனப்பட்டது; "அணியன்றே நாணு டைமை சான்றோர்க்கு" குறள், க0கச.

அ0. பண்பிற்குப் பண்பி இல்லையேனும் தன்னாற் சாரப்பட்டா ரிடத்துள்ள எல்லா நன்மைகளையும் அழித்தற்கொடுமைபற்றிப் பசி யைப் பாவியென்றார்; இப்படியே, "இன்மை யெனவொரு பாவி" (குறள், க0சஉ) என்று வருதல் காண்க. அது - அப்பசியை.

அக. இசை - புகழ். அளவைக்கு - அளத்தற்கு. என் நா நிமி ராது - எனது நா எழமாட்டாது; நிமிர்தல் - பேசுதற்கு முயறல்; உப காரிகளின் புகழ் அளவுபடாதென்றபடி.

பசி யாரையும் வருத்தி வேறுபாடுறுவிக்கு மென்பதற்கு உதாரண மாக விசுவாமித்திரமுனிவர் வறட்காலமொன்றில் நாயூன் தின்பதற்கு முயன்றதைத் தீவதிலகை இனிச்சொல்லுவாள்.

அஉ. மழை வளம் கரத்தலின் - மழையாகிய செல்வம் மறைந்து போனமையால். பு. மணி. உஅ : கருஎ.

(பி - ம்.) எஅ. 'நாணினைக்களையும்' அ௩. 'மழைவளங்கரப்ப'

னரசு தலை நீங்கிய வருமறை யந்தண
அரு னிருநில மருங்கின் யாங்கணுந் திரிவோ
னரும்பசி களைய வாற்றுவது காணான்
றிருந்தா நாயூன் றின்னுத லுறுவோ
னிந்திர சிறப்புச் செய்வோன் முன்னர்
வந்து தோன்றிய வானவர் பெருந்தகை
கூO மழைவளந் தருதலின் மன்னுயி ரோங்கிப்
பிழையா விளையுளும் பெருகிய தன்றோ
வாற்றுநர்க் களிப்போ ரறவிலை பகர்வோ
ராற்றா மாக்க ளரும்பசி களைவோர்
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை

---

அச. அந்தணன் - விசுவாமித்திர முனிவர்.

அரு. அரும்பசி - தீர்த்தற்கரிய பசியை. ஆற்றுவது காணான் - தணித்தற்குரிய உணவு யாதொன்றையும் காணானாகி.

அஎ. விசுவாமித்திரமுனிவர் பசியின் கொடுமையால் நாயூன் தின்பதற்கு முயன்றாரென்பதை மனுஸ்மிருதி, கய - ஆம் அத்தியாயம், க0அ - ஆம் சுலோகத்திற்காண்க.

அஅ. இந்திரசிறப்பு - பலியிடுதல் (வைச்வதேவம்); இதுமற்றைத் தேவர்களுக்கும் உரித்தெனினும் தலைமைபற்றி 'இந்திரசிறப்பு' எனப்பட்டது; உண்பதற்குமுன்பு இதனைச் செய்தல் வேண்டுமென்பது விதி.

அகூ. வானவர் பெருந்தகை - இந்திரன்.

கூக. பிழையா விளையுள் - தப்பாதவிளைவு; "வேலி, யாயிரம விளையுட் டாக" (பொருந. உசசு - எ); "வெள்ளமாறாது விளையுள் பெருக" மதுரை. க0கூ.

அரு - கூக. மழைவளந் தருதலின், அந்தணன் திரிவோன் காணான் உறுவோன் செய்வோன் முன்னர் வந்துதோன்றிய பெருந்தகை தருதலின், ஓங்கிப் பெருகியதன்றோ.

கூஉ. ஆற்றுநர்க்கு - பொறுக்கும் வன்மையையுடையோராகிய செல்வர்க்கு; ஆற்றுநர்க்களிப்போர் பயன்கருதிச் செய்வோராகின்றமையின், 'அறவிலைபகர்வோர்' என்றார். "இம்மைச் செய்தது மறுமைக் காமெனும், மறவிலை வாணிக னாஅ யல்லன்" புறநா. கங்சு.

கூங. ஆற்றாமாக்கள் - தரித்திரர்; "ஏற்றகை மாற்றாமை யென்னானுந் தாம்வரையா, தாற்றாதார்க் கீவதா மாண்கடன்" நாலடி. கஅ.

கூச. மேற்று - மேலது.

கூங - ச. வாழ்க்கை களைவோர் மேற்று.

கூஉ - ச. இவ்வடிகளின் கருத்து, "எமக்கீவோர் பிறர்க்கீவோர்,

(பி - ம்.) அச. 'அரசு நீங்கிய' அஅ. 'இந்திரச்சிறப்பு' கூ0. 'ஓம்பி' கூச. 'நெறிவழக்க'

கூரு மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லா
முண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே
யுயிர்க்கொடை பூண்ட வுரவோ யாகிக்
கயக்கறு நல்லறங் கண்டனை யென்றலும்
விட்ட பிறப்பில்யான் விரும்பிய காதலன்
க00 றிட்டி விடமுணச் செல்லுயிர் போவுழி
யுயிரொடு வேவே னுணர்வொழி காலத்து
வெயில்விளங் கமயத்து விளங்கித் தோன்றிய
சாது சக்கரன் றனையா னூட்டிய
காலம் போல்வதோர் கனமயக் குற்றே

---

பிறர்க்கீவோர் தமக்கீபவென, வனைத்துரைத்தனன் யானுக" (புறநா. கநகூ) என்பதில் வந்திருத்தல்காண்க.

கூரு. மண்டிணி ஞாலத்து - அணுக்கள் செறிந்த நிலவுலகத்தில்; "மண்டிணிந்த நிலனும்" புறநா. உ.

கூகூ. ழு. புறநா. கஅ.

கூஎ. உயிர்க்கொடை - உயிரைக்கொடுத்தல். உரவோயாகி - வலிய அறிவினையுடையோயாகி.

கூஅ. கயக்கு - கலங்குதல்; "கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்" (கூ: அரு) என்பர் பின்னும். 'கண்டனை' என்றது தெளிவு பற்றி. என்றலும் - என்று நீவதிலகை சொல்லலும்.

கூகூ. விட்டபிறப்பு - போனபிறப்பு. காதலன் - கணவனாகிய இராகுலன்.

க00. திட்டிவிடமுண - திருஷ்டிவிஷமென்னும் பாம்புதீண்ட; மணி. கூ: சக - ஆம் அடியின் குறிப்பைப்பார்க்க. உயிர்போவுழி - உயிர் போன விடத்து.

கூகூ - க00. காதலன் உயிர்போவுழி.

க0க. உயிரொடு வேவேன் - அவன் பிரிவாற்றாது தீயிற்பாய்ந்து உயிரொடு வேவாநிற்பேன். வேவேன்: பெயர்.

க00 - க0க. மணி. கூ: சக - ரு0.

க0உ. மணி. ரு: கூ0, க0: உஎ.

க0ந. ஊட்டிய - உண்ணச்செய்த.

க0ச. கனமயக்குற்றேன் - கனவாகிய மயக்கத்தை அடைந்தேன்.

கூகூ - க0ச. காதலன் உயிர்போவுழி வேவேன் உணர்வொழி காலத்துக் கனமயக்குற்றேன்.

(பி - ம்.) கூகூ. 'பிறப்பின'

க௦௫ ணுங்கதன் பயனே யாருயிர் மருந்தா
யீங்கிப் பாத்திர மென்கைப் புகுந்தது .
நாவலொடு பெயரிய மாபெருந் தீவத்து
வித்தி நல்லறம் விளைந்த வதன்பயன்
றுய்ப்போர் தம்மனைத் துணிச்சித ருடுத்து
க௧௦ வயிறுகாய் பெரும்பசி யலைத்தற் கிரங்கி
வெயிலென முனியாது புயலென மடியாது
புறங்கடை நின்று புன்கண் கூர்ந்துமுன்
னறங்கடை நில்லா தயர்வோர் பலரா
லீன்ற குழவி முகங்கண் டிரங்கித்
க௧௫ தீம்பால் சுரப்போ டன்முலை போன்றே

க௦௫. அதன் - அக்கனவின்.

க௦௫ - சு. உயிர் உடம்பினீங்கும் பொழுதுள்ள நினைப்பின்பயனை மறுபிறப்பில் அவ்வுயிர் அடையுமென்பது தொன்னூற்றுணிபாதலின் இங்ஙனங் கூறினள் ; (மணி. கச : க௦க - ச.) இக்கருத்தை, "பிறப் பென்னும் பேதைமை" (௩௫௮) என்கிற குறளுக்குப் பரிமேலழகரெழு திய விசேடவுரையாலுமுணர்க. க௦எ. சம்புத்தீவில்.

க௦அ. நல்லறத்தை வித்தி. பயன் - பயனை ; என்றது பலவகைத் தாகிய செல்வத்தை.

க௦கூ. துய்ப்போர் தம்மனை - அனுபவிக்கும் செல்வருடைய வீட் டில். துணிச் சிதருடுத்து - கிழிந்த சீரைகளை உடுத்திக்கொண்டு. சிதர், சிதாரெனவும் வழங்கும்.

கக௦. வயிறுகாய் பெரும்பசி : மணி. கச : கூ.

ககக. முனியாது - வெறுக்காமல். புயலென மடியாது - மழை யென்று ஓரிடத்தில் தங்காமல் ; மடிதல் - தங்குதல் ; "மல்லற் பேரூர் மடியின்" பெரும்பாண். உ௫ச.

ககஉ. புறங்கடைநின்று - தலைவாயிலில் நின்றுகொண்டு. புன்கண் கூர்ந்து - துன்பமிகுந்து ; "அகத்தாரே வாழ்வாரென் றண்ணாந்து நோக்கிப், புகத்தாம் பெறாஅர் புறங்கடை பற்றி, மிகத்தாம் வருந்தி யிருப்பரே மேலைத், தவத்தாற் றவஞ்செய்யா தார்" நாலடி. ௩க.

ககஉ - ௩. முன் அறங்கடை - முற்பிறப்பிற் செய்தபாவத்தால். நில்லாது - ஓரிடத்தில் நில்லாது. அறத்தினீக்கப்பட்டமையின், பாவம் அறங்கடை யெனப்பட்டது ; "அறன்கடை நின்றாரு ளெல்லாம்" குறள், கசஉ.

கக௫. சுரப்போள் - தாய்.

(பி - ம்.) க௦அ. 'வித்தியநல' ககஉ. 'நின்றுபுனகூர்நதிராநதது முனறங்'

நெஞ்சுவழிப் படூஉம் விஞ்சைப் பாத்திரத்
தகன்சுரைப் பெய்த வாருயிர் மருந்தவர்
முகங்கண்டு சுரத்தல் காண்டல் வேட்கையே னென
மறந்தே னதன்றிற னீயெடுத் துரைத்தனை
கஉ0 யறங்கரி யாக வருள்சுரந் தூட்டுஞ்
சிறந்தோர்க் கல்லது செவ்வனஞ் சுரவா
தாங்கன மாயினை யதன்பய னறிந்தனை
யீங்குநின் றெழுவா யென்றவ ளுரைப்பத்
தீவ திலகை தன்னடி வணங்கி
கஉரு மாபெரும் பாத்திர மலர்க்கையி னேந்திக்
கோமகன் பீடிகை தொழுதுவலங் கொண்டு
வானூ டெழுந்து மணிமே கலைதான்
வழுவறு தெய்வம் வாய்மையி னுரைத்த
வெழுநாள் வந்த தென்மகள் வாராள்

---

ககசு. நெஞ்சுவழிப் படூஉம் - மனத்தின்வழியே ஒழுகும். விஞ்சை-வித்தை.

ககஎ. சுரை - ஈண்டுப்பாத்திரத்தில் உள்ளீடில்லாது குழிந்த பாகம்.

ககஎ - அ. அவர் முகங்கண்டு - மேற்கூறிய பசியாளர்களுடைய வாடிய முகங்கண்டு. வேட்கை - விருப்பம். என - என்று மணிமேகலை சொல்ல.

ககக. அதன்திறம் - அப்பாத்திரத்தின் வரலாற்றை. அதன்றிறம் மறந்தேன்.

கஉ0. அறம்கரியாக - தருமமேசான்றாக. அருளாவது, "ஒன்றின் றுயர்கண்டாற் காரணமின்றித் தோன்றும் இரக்கம்" என்பர் (கு) புறநானூற்று உரையாசிரியர்; "தொடர்புபற்றாது இயல்பாக எல்லாவுயிர்கண் மேலுஞ் செல்வது" என்பர் பரிமேலழகர்; குறள், உரு - ஆம். அதி. அவ.

கஉக. (பாத்திரம்) சுரவாது.

கஉஉ. ஆங்கனமாயினை - அறங்கரியாக அருள்சுரந்தூட்டும் அத்தன்மையை யுடையாயாயினை. 'அவர்முகங்கண்டு சுரத்தல் காண்டல் வேட்கையேன்' (ககஎ) என்று முன்பு கூறியதனால், 'அதன்பயனறிந்தனை' என்றாள்.

கஉரு. அவள் - தீவதிலகை.

கஉசு. கோமகன் பீடிகை - புத்தனுடைய பாதபீடிகை.

கஉஅ. தெய்வம் - மணிமேகலாதெய்வம்.

(பி - ம்.) ககசு. 'பாத்திரமகன' ககஅ. 'சுரத்தில்வேட்கையே' கஉக. 'அல்லதீவனஞ்சுரவாது' கஉஉ. 'ஆங்கண மாயிழையதன்பய'

கஙo வழுவா யுண்டென மயங்குவோண் முன்னர்
வந்து தோன்றி யவர்மயக் கங்களைந்
தந்தி லவர்க்கோ ரற்புதங் கூறு
மிரவி வன்ம னொருபெரு மகளே
துரகத் தானைத் துச்சயன் றேவி
கஙரு யமுத பதியிற் றரிதிற் றோன்றித்
தவ்வைய ராகிய தாரையும் வீரையு
மவ்வைய ராயினீர் நும்மடி தொழுதேன
வாய்வ தாக மானிட யாக்கையிற்
றீவினை யறுக்குஞ் செய்தவ நுமக்கிங்
கசo கறவண வடிக டம்பாற் பெறுமின்
செறிதொடி நல்லீ ரும்பிறப் பீங்கிஃ
தாபுத் திரன்கை யமுத சுரபியெனு
மாபெரும் பாத்திர நீயிருந் தொழுமெனத்

---

கஙo. வழுவாய் - தப்புதல். என - என்று நினைத்து. மயங்குவோள் - சுதமதி.

கஙக, சுதமதியோடு மாதவியையும் உளப்படுத்தி 'அவர்' என்றார்.

கஙௗ. அந்தில் - அவ்விடத்து. அற்புதம் - ஆச்சரியம். கூறும் - மணிமேகலை சொல்லுவாள்.

கஉஎ - கஉ. மணிமேகலைதான், மயங்குவோண் முன்னர் வந்து தோன்றிக் களைந்து அவர்க்கு ஓர் அற்புதங்கூறும்.

கஙச. தேவியென்றது சுதமதியை.

கஙங - சஃ மு. மணி. எ : கூஅ - கூ.

கஙசு. தவ்வையர் - தமக்கைமார். கஙஎ. அவ்வையர் - தாய்மார்.

கஙஅ - கூ. வாய்வதாக - வாய்ப்புடைத்தாகுக. செய்தவம் நுமக்கு வாய்வதாகவென்க; "வாய்வ தாகநின் மனப்பாட்டறம்" (உக : சஎக) என்பர் பின்னும்; "வாய்வதின் வந்த குரவை" (சிலப். கஅ : சஎ); "வாய்வதிற், றந்தையுந் தாயுந் தொழுதெழுக" ஆசார. ௫.

கசo - சக. உம்பிறப்பின்வரலாற்றை அறவணவடிகளிடம் அறிந்து கொள்ளுமின்.

கசக - ங. இஃது, ஆபுத்திரன் கையிலிருந்த அமுதசுரபியெனப் படுகின்ற மிகச்சிறந்துள்ள பாத்திரம்; இதனை நீருந் தொழுமினென்று மணிமேகலை சொல்ல.

(பி - ம்.) கஙo. 'வழுவாலுண்டென மயங்குவோள்' கஙச. 'துரகதத்' கஙரு - சு. 'அமுதவதிவயிற் றோன்றியென், றவ்வையராகிய' கசo. 'அறவண ரடிகள்'

தொழுதன ரேத்திய தூமொழி யாரொடும்
கசரு பழுதறு மாதவன் பாதம் படர்கேம்
எழுகென வெழுந்தன ளிளங்கொடி தானென்.

கக.—பாத்திரம்பெற்றகாதை முற்றிற்று.

---

கசச. தூமொழியார் - சுதமதியும் மாதவியும்.

கசரு. பழுது - குற்றம். இனி, "பழுதொழிந் தெழுந்திருந் தான்" (சிலப். கக: சுகூ) என்பதில் 'பழுது' என்பதற்கு உடம் பென்று அடியார்க்குநல்லார் பொருள்செய்திருத்தலால், பழுதறுமாதவ னென்பதற்கு உடற்பற்றொழிந்த அறவணவடிகளென்று பொருள்கூறி னும் பொருந்தும்; "செய்தவ யாக்கையின், மேவினே னாயினும் வீழ் கதிர் போன்றேன்" (உச : கoக - உ) என்று அறவணவடிகள் கூறிய தாகப் பின்பு கூறுதல்காண்க. படர்கேம் - செல்லுவேம்.

கசசு. இளங்கொடி - மணிமேகலை. இளங்கொடி, நீர் எழுக வென்று சொல்லி எழுந்தனளென்க.

க - கசசு. மணிபல்லவத்தில் தெய்வம் நீங்கியபின்னர் மணிமேகலை தாழ்ந்து நோக்கித் திரிய, தீவதிலகை தோன்றி, 'யார்நீ' என்றலும், 'கேளாய் என்வரவு ஈது; பயன் இது; அன்னாய், நீயார்' என்றலும் தீவ திலகை உரைக்கும்; அங்ஙனமுரைப்பவள், என்றுரைத்தலும், மணி மேகலை விரும்பிப் பீடிகையைத் தொழுது வணங்கிக் கூடி வலஞ்செய்து நிற்றலும், அவள்கையிற் பாத்திரம் புகுந்தது; புகுதலும் மகிழ்வெய்தி, 'வாழ்த்தல் என்னாவிற்கடங்காது' என்றாள்; என்ற மணிமேகலையின் முன்னர்த் தீவதிலகை உரைக்கும்; அங்ஙனமுரைப்பவள், 'கண்டனை' என்றலும், மணிமேகலை, 'காண்டல் வேட்கையேன்' என, அவளுரைப்ப மணிமேகலை வணங்கி ஏத்தி வலங்கொண்டு எழுந்து மயங்குவோள் முன் னர் வந்துதோன்றிக் களைந்து கூறும்; அங்ஙனம் கூறுகின்றவள், தொழுமென, தொழுதேத்திய அவரொடும், இளங்கொடி எழுந்தன ளென வினைமுடிவுசெய்க.

பன்னிரண்டாவது

# அறவணர்த்தொழுதகாதை.

[பன்னிரண்டாவது மணிமேகலை பாத்திரங்கொண்டு
தன்னூர் அறவணர்த்தொழுதபாட்டு.]

ஆங்கவர் தம்முட னறவண வடிகள்
யாங்குள ரென்றே யிளங்கொடி வினாஅய்
நரைமுதிர் யாக்கை நடுங்கா நாவி
னுரைமூ தாள னுறைவிடங் குறுகி
௫ மைம்மலர்க் குழலி மாதவன் றிருந்தடி
மும்முறை வணங்கி முறையுளி யேத்திப்
புதுமலர்ச் சோலை பொருந்திய வண்ணமு
முதய குமரனுங் குற்றுரை செய்தது
மணிமே கலாதெய்வ மணிபல் லவத்திடை
௧௦ யணியிழை தன்னை யகற்றிய வண்ணமு
மாங்கத் தீவகத் தறவோ னாசன
நீங்கிய பிறப்பு நேரிழைக் களித்தது
மளித்த பிறப்பி னாகிய கணவனைக்
களிக்கய னெடுங்கட் கடவுளிற் பெற்றதுந்
௧௫ தவ்வைய ராகிய தாரையும் வீரையும்

---

௧. அவர் - சுதமதி, மாதவி.

௨. இளங்கொடி - மணிமேகலை. வினாஅய் = வினாவி - கேட்டுக்கொண்டு.

௩. உரைமூதாளன் - அறவணவடிகள். குறுகி - அடைந்து.

௩ - ௪. மணி. ௨௪ : ௧௧ - ௧௦௦ ; "நரைமூ தாளர்" புறநா. ௫௨.

௫. குழலி - மணிமேகலை. ௬. முறையுளி - விதிப்படி.

௭. சோலை - உவவனம்.

௧௧ - ௨. ஆசனம் பிறப்பை அளித்ததும்.

௧௪. கடவுளின் - மணிமேகலாதெய்வத்தால்.

௧௫ - ௬. வீரை மதுமயக்கத்தால் யானைக்குமுன்னே சென்றும்,

(பி - ம்.) ௫. 'குழலியர் மாதவன்' ௭. 'சோலைப்பொருந்திய' ௧௩. 'பிறப்பினாயிழை கணவனை'

வெவ்வினை யுருப்ப விளிந்துகே டெய்தி
மாதவி யாகியுஞ் சுதமதி யாகியுங்
கோதையஞ் சாய னின்னொடுங் கூடின
ராங்கவர் தந்திற மறவணன் றன்பாற்
உ0 பூங்கொடி நல்லாய் கேளென் றுரைத்தது
முரைத்த பூங்கொடி யொருமூன்று மந்திரந்
தனக்குரை செய்துதா னேகிய வண்ணமுந்
தெய்வம் போயபின் றீவ திலகையு
மையெனத் தோன்றி யருளொடு மடைந்தது
உ௫ மடைந்த தெய்வ மாபுத் திரன்கை
வணங்குறு பாத்திரம் வாய்மையி னளித்தது
மாபுத் திரன்றிற மறவணன் றன்பாற்
கேளென் றுரைத்துக் கிளரொளி மாதெய்வம்
போகென மடந்தை போந்த வண்ணமு
ந0 மாதவன் றன்னை வணங்கின ளுரைத்தலு
மணிமே கலையுரை மாதவன் கேட்டுத்
தணியா வின்பந் தலைத்தலை மேல்வரப்
பொற்றொடி மாதர் நற்றிறஞ் சிறக்க
வுற்றுணர் வாய்நீ யிவர்திற முரைக்கே
ந௫ னின்னெடுந் தெய்வ நினக்கெடுத் துரைத்த

தாரை நிலாமுற்றத்தின்மேல் ஏறி வீழ்ந்தும் இறந்தமையால், 'தாரையும் வீரையும், வெவ்வினை யுருப்ப விளிந்து' என்றார்; மணி. கஉ : சரு - அ.

கள - அ. மு. மணி. க0 : எந - சு. கக. திறம் - வரலாறு.

உக. பூங்கொடி - மணிமேகலாதெய்வம். மூன்றுமந்திரம் : மணி. க0 : அ0 - கக.

உச. ஐயெனத் தோன்றி - விரைவாகத்தோன்றி.

உ௫. தெய்வம் - தீவதிலகை. உஎ - அ. மணி. கக : ௫உ.

உக. போக என - போவாயென்று சொல்ல.

மேல்வருவன அறவணவடிகளுடைய கூற்று.

நஉ. தலைத்தலை மேல்வர : மணி. உ : ௫.

நந. மாதர் : விளி. நற்றிறம் - நல்லகூறுபாடுகள்.

நச. உரைக்கேன் - உரைப்பேன்.

(பி - ம்.) உசு. 'வணங்குபாத்திர' உஅ. 'கேளென்றுரைத்த' நந. 'பொற்றொடிமாதவா'

வந்நா ளன்றியு மருவினை கழூஉ
மாதி முதல்வ னடியிணை யாகிய
பாதபங் கயமலை பரவிச் செல்வேன்
கச்சய மாளுங் கழற்கால் வேந்தன்
௪0 றுச்சயன் றன்னையோர் சூழ்பொழிற் கண்டேன்
மாபெருந் தானை மன்ன நின்னொடுந்
தேவியர் தமக்குந் தீதின் றோவென
வழிதக வுள்ளமொ டரற்றின னாகி
யொளியிழை மாதர்க் குற்றதை யுரைப்போன்
௪௫ புதுக்கோள் யானைமுன் போற்றாது சென்று
மதுக்களி மயக்கத்து வீரை மாய்ந்ததூஉ
மாங்கது கேட்டோ ரரமிய மேறித்
தாங்காது வீழ்ந்து தாரைசா வுற்றதூஉங்
கழிபெருந் துன்பங் காவல னுரைப்பப்
௫0 பழவினைப் பயனீ பரியலென் றெழுந்தே
னாடுங் கூத்திய ரணியே போல
வேற்றோ ரணியொடு வந்தீ ரோவென
மணிமே கலைமுன் மடக்கொடி யார்திறந்
துணிபொருண் மாதவன் சொல்லியு மமையான்

---

௩௬. அந்நாள் அன்றியும் - அந்நாளிற் சென்றதல்லாமலும்.

௩௮. பாதபங்கயமலை: மணி. ௧0 : ௬௧ - ௮.

௩௮ - ௪0. செல்வேன் துச்சயனை ஓர் பொழிலிற் கண்டேன்.

௪௪. உற்றதை - உற்றதுன்பத்தை.

௪௫. புதுக்கோள் யானை - புதிதாகப் பிடித்துக்கொண்டுவரப்பட்டயானை ; குறுந். ௧௨௯.

௪௭. அது - வீரைமாய்ந்தது. அரமியம் - நிலாமுற்றம்.

௪௯. கழிபெருந் துன்பம் - மிகப்பெரியதுன்பம் ; அவ்விருவரும் இறந்தபெரியதுன்பமுமாம் ; கழிதல் - நீங்குதல்.

௪௬ - ௯. மாய்ந்ததும் சாவுற்றதுமாகிய துன்பத்தைக் காவலனுரைப்ப.

௫0. பரியல் - வருந்தாதே.

௫௧ - ௨. " ஆடுங் கூத்தர்போ லாருயி ரொருவழிக், கூடிய கோலத் தொருங்குநின் றியலாது " சிலப். ௨௮ : ௧௬௫ - ௬.

௫௪. அமையான் - தணியானாகி.

(பி - ம்.) ௩௭. 'மாதவமுதல்வனடி' ௩௮. 'பங்கயமலர்பரவிச்' ௪௨. 'நீங்கின்றோவென' ௪௩. 'ஆற்றுனாகி' ௪௫. 'யானையைப் போற்றாச்' ௪௭. 'கேட்டாளரமிய' ௫௧. 'ஆடுகூத்தரணியே' ௫௨. 'வேறோரணி'

௫௫ பிறவியு மறவியும் பெற்றியி னுணர்ந்த
நறுமலர்க் கோதாய் நல்கினை கேளாய்
தருமத லைவன் றலைமையி னுரைத்த
பெருமைசா னல்லறம் பெருகா தாகி
யிறுதியி னற்கதி செல்லும் பெருவழி
௬௦ யறுகையு நெருஞ்சியு மடர்ந்துகண் ணடைத்தாங்குச்
செயிர்வழங்கு தீக்கதி திறந்து கல்லென்
றுயிர்வழங்கு பெருநெறி யொருதிறம் பட்டது
தண்பனி விழுங்கிய செங்கதிர் மண்டில
முண்டெனு வுணர்த லல்ல தியாவதும்
௬௫ கண்டினிது விளங்காக் காட்சி போன்றது
சலாகை நுழைந்த மணித்துளை யகவையி
னுலாநீர்ப் பெருங்கட லோடா தாயினு
மாங்கத் துளைவழி யுகுநீர் போல
வீங்கு நல்லற மெய்தலு முண்டெனச்
௭௦ சொல்லலு முண்டியான் சொல்லுத றேற்றார்

௫௫. அறவி - புண்ணியத்தோடு கூடியவழி.

௫௬. நல்கினை கேளாய் - உவந்து கேளாய்; நல்குதல் - உவத்தல்; "நல்கினு நல்கா ரயினும்" புறநா. ௮௦.

௫௫ - ௬. மணி. உக : ௧௦௫ - ௬.

௫௭. தருமதலைவன் - புத்தன்; மணி. கக: ௩௦.

௫௯. இறுதியில் நற்கதி - நிருவாணம். பெருவழி - தருமம்.

௬௦. அறுகை - அறுகம்புல். கண்ணடைத்தாங்கு - இடம் அடைக்கப்பட்டாற்போல.

௬௧. செயிர் - குற்றம்.

௬௨. உயிர்வழங்கு பெருநெறி - பிறந்திறக்கும் உயிர்களெல்லாம் போகும்வழி (சிலப். உ௮ : ௧௭௩ - ௪.) ஒருதிறம்பட்டது - ஒருவழிப் பட்டது.

௬௩. செங்கதிர்மண்டிலம் - சூரியமண்டலம்.

௬௪. யாவதும் - சிறிதும். ௫௯ - ௬௫. பெருவழி போன்றது.

௬௬. சலாகை - சிறிய நாராசம். அகவையின் - உள்ளிடத்தே.

௭௦. யான்சொல்லலும் உண்டு. தேற்றார் - தெளியார்.

௭௦ - ௭௧. மக்கள் தேற்றாராதலின்.

(பி - ம்.) ௫௯. 'இறுதிநற்கதி' ௬௦. 'படர்ந்து கண்ணடைத்' ௬௧ - ௨. 'நல்லென் றுயிர்' ௬௩. 'தன்மணிவிழுங்கிய' ௭௦. 'சொல்லு முண்டியான்'

மல்லன்மா ஞாலத்து மக்களே யாதலிற்
சக்கர வாளத்துத் தேவ ரெல்லாந்
தொக்கொருங் கீண்டித் துடிதலோ கத்து
மிக்கோன் பாதம் விழுந்தன ரிரப்ப
எரு இருள்பரந்து கிடந்த மலர்தலை யுலகத்து
விரிகதிர்ச் செல்வன் றோன்றின னென்ன
வீரெண் ணூற்றோ டீரெட் டாண்டிற்
பேரறி வாளன் றோன்றுமதற் பிற்பாடு
பெருங்குள மருங்கிற் சுருங்கைச் சிறுவழி
அ0 யிரும்பெரு நீத்தம் புகுவது போல
வளவாச் சிறுசெவி யளப்பரு நல்லற
முளமலி யுவகையோ டுயிர்கொளப் புகூஉங்
கதிரோன் றோன்றுங் காலை யாங்கவ
னவிரொளி காட்டு மணியே போன்று

---

எஙு. தொக்கு - கூடி. துடிதலோகம் - துஷிதலோகம்; இஃது உலகம் முப்பத்தொன்றனுள் ஒன்பதாவது; மஹாராஜிகலோக முதலிய தெய்வலோகம் ஆறனுள் நான்காவது.

எச. மிக்கோன் - சிறந்ததேவன்; இவன் பெயர் பிரபாபால னென்றுசில புத்தநூலால் தெரிகின்றது.

எஉ - ச. மணி. கூ0 : எ - கூ. எரு. செல்வன் - சூரியன்.

எரு - சு. புத்தன் தோற்றத்துக்குச் சூரியோதயத்தை உவமை கூறியிருத்தலை, (க0 : க0 - கக, கஉ : அரு - சு, உக : கருரு - எ, உசு : சசு) இந்நூலிற் பலவிடத்தும் காண்க.

எஅ. பேரறிவாளன் - புத்தன். பிற்பாடு - பின்னை; இஃது ஒரு சொல்; "பெண்ணணி கோலம் பெயர்ந்தபிற் பாடு" சிலப். கஙு : க.

எச - அ. இரப்பத் தோன்றும்.

எசு - அ. தோன்றினனென்னப் பேரறிவாளன் தோன்றுவான்.

எகூ. சுருங்கை - மதகு. சிறுவழி - சிறுவழியில்.

அ0. நீத்தம் - வெள்ளம். அக. செவி - செவியில்.

அஉ. உயிர் உவகையோடு கொள்ள.

எகூ - அஉ. சிறுவழியில் நீத்தம்புகுவதுபோலச் சிறுசெவியில் நல்லறம்புகும்.

அங. காலை - காலத்தில். அச. மணி - சூரியகாந்தம்.

(பி - ம்.) எக. 'மக்களைத்திரசசெல்வன்றோன்றினி யாதலிற்' எங. 'துடிதபோகத்து' எரு. 'விண்பரந்துகிடந்த' எசு. 'விசித்திரச் செல்வன்' எகூ. 'சுருங்கிற் சிறுநெறி' அஉ. 'உளமலையுவகை' அங. 'காலையாங்கணவி'

அ௫ மைத்திருள் கூர்ந்த மனமாசு தீரப்
புத்த ஞாயிறு தோன்றுங் காலைத்
திங்களு ஞாயிறுந் தீங்குறு விளங்கத்
தங்கா நாண்மீன் றகைமையி னடக்கும்
வானம் பொய்யாது மாநிலம் வளம்படு
௯0 மூனுடை யுயிர்க ளுறுதுயர் காணு
வளிவலங் கொட்கு மாதிரம் வளம்படு
நளியிரு முந்நீர் நலம்பல தரூஉங்
கறவைகன் றார்த்திக் கலநிறை பொழியும்
பறவை பயன்றுய்த் துறைபதி நீங்கா
௯௫ விலங்கு மக்களும் வெரூஉப்பகை நீங்குங்
கலங்கஞர் நரகரும் பேயுங் கைவிடுங்

---

அ௫. மைத்து - கறுத்து.

மேல்வருவன, புத்தன் அவதரிக்குங் காலத்து உளவாகும் நற்குறிகள்.

அ௭. தீங்கு உறுவிளங்க - தீமைகள் உறுமல் விளங்க; விரோதமில்லாம லிருக்கவென்றபடி.

அஅ. நாண்மீன் - நட்சத்திரங்கள். அ௯. வானம் - மேகம்.

௯0. உடம்புமெலிந்த உயிர்கள் துயரைக்காணு; உடையுயிர்: வினைத்தொகை. ஊனுடையுயிர் - மக்கள்முதலிய உயிர்களுமாம்.

௯௧. வளிவலம் கொட்கும் - காற்று வலமாகச் சுழலும்; "வல மாதிரத்தான் வளிகொட்ப" (மதுரை. ௫) மாதிரம் - திசை; மலையுமாம்; "மாதிரங் கொழுக்க" மதுரை. ௧0.

௯௨. நளி இரு முந்நீர் - நீர்செறிந்த பெரியகடல்; "நளியிரு முந்நீர் நாவா யோட்டி" (புறநா. ௬௬); முந்நீர்: எழுவாய். நலம்: "ஓர்க் கோலை சங்க மொளிர்பவளம் வெண்முத்த, நீர்ப்படு முப்பினோ டைந்து" (சிலப். ௧0 : ௧0௭, மேற்.) என்னும் வளங்கள்.

௯௩. கறவை - கறத்தலையுடைய பசுக்கள். கன்று ஆர்த்தி - கன்றை உண்ணச்செய்து. கலம் நிறை பொழியும் - கறவைக்கலமும் அதனினின்றும் பால்சொரியும் சாலும் வழியும்படி பாலைப்பொழியும்; நிறை - சால்; "பீரிவர்பு பரந்த நீரறு நிறைமுதல்" (பதிற். ௧௫); "கன்றருத்தி மங்கையர் கலநிறை பொழிதர, நின்றமேதி" (சீவக. ௬௧.) கறவைகள் பொழியும்.

௯௪. பறவைகள் நீங்கா; புறநா. ௨0. துய்த்து - அனுபவித்து; புசித்தென்றுமாம்.

௯௫. மிருகசாதியும் மனிதச்சாதியும் தம்முள் அஞ்சுதற்குக் காரணமாகிய பகைமையை ஒழியும்.

௯௬. அஞர் - துன்பம். அஞரை நரகச்சாதியும் பேய்ச்சாதியும் விட்டொழியும்.

(பி - ம்.) அ௫. 'மனமாளகழூஉம்' அ௯. 'வளம்படும்' ௯0. 'உயிர்கள் விறுவ துயர்' ௯௧. 'வலங்கொள்கும்' ௯௫. 'பெரும்பகைநீக்கும்'

கூனுங் குறளு மூமுஞ் செவிடு
மாவு மருளு மன்னுயிர் பெறாஅ
வந்நாட் பிறந்தவ னருளறங் கேட்டோ
க00 ரின்னாப் பிறவி யிகந்தோ ராதலிற்
போதி மூலம் பொருந்திய சிறப்பி
னாதன் பாத நவைகெட வேத்துதல்
பிறவி தோறு மறவேன் மடக்கொடி
மாதர் நின்னால் வருவன விவ்வூ
க0ரு ரேது நிகழ்ச்சி யாவும் பலவுள
வாங்கவை நிகழ்ந்த பின்ன ரல்லது
பூங்கொடி மாதர் பொருளுரை பொருந்தா

---

கூஎ. மூ. சிலப். ரு : கக௮. கூன் - வளைவு; ஈண்டு வளைவை யுடைய வடிவத்திற்கு ஆகுபெயர். குறள் - குறுகியவடிவம்; மக்களுள் நீரக் குறியானைக் குறளனென்றும், அவனிற் சிறிது நெடியானைச் சிந்தனென்றும் கூறுவர் ஆசிரியர் நச்சினார்க்கினியர் (தொல். செய். சூ. ௪0.) ஊம் - ஊமை.

கூஅ. மா - விலங்குவடிவாகப் பிறப்பது. மருள் - அறிவின்றி மயங்கி யிருப்பது. உயிர் - ஈண்டு மக்களுயிர்.

கூஎ - அ. கூன்முதலிய வடிவங்களை உயிர்கள் பெறமாட்டா. கூன் முதலிய ஆறனோடு குருட்டையும் மணைபோற் பிறப்பதாகிய பிண்டத்தையுங் கூட்டி எண்வகையெச்சமென்பர்; இதனை, "சிறப்பில் சிதடு முறுப்பில் பிண்டமுங், கூனுங் குறளு மூமுஞ் செவிடு, மாவு மருளு முளப்பட வாழ்நர்க், கெண்பே ரெச்ச மென்றிவை யெல்லாம், பேதைமை யல்ல தூதிய மில்லென" (புறநா. உஅ) என்பதனாலும், "குறளொடு செவிடு மூங்கை கூன்மருள் குருடு மாவே, யுறுமுறுப் பில்லாப் பிண்ட மோதிய வெண்மெய் யெச்சம்" (சூடாமணி. கஉ : கூச) என்பதனாலும் உணர்க.

கூகூ. அருளறம் : வினைத்தொகை; தயாதருமமுமாம்.

க00. இன்னா - துன்பம். இகந்தோர் - கடந்தோர்.

க0உ. பாதம் - பாதத்தை. நவை - குற்றம்.

க0உ - ௩. ஏத்துதலை மறவேன்; மறவேனென்றுமாம்.

க0௪. மாதர்: விளி. இவ்வூர் - இவ்வூரில்.

க0ரு. மூ. மணி. உக : கஅ0. ஏதுநிகழ்ச்சியென்பதன் பொருளை, மணி. ௩ : ௪ - ஆம் அடியின் குறிப்பிற்காண்க.

க0௪ - ரு. வருவனவாகிய ஏது நிகழ்ச்சி.

க0எ. பொருளுரை - மெய்வார்த்தை; என்றது தருமோபதேச மொழிகளை; "பொய்யில் புலவன் பொருளுரை" (மணி. உஉ. : ௬க); "பொய்யில் காட்சியோர் பொருளுரை யாதலின்" சிலப். உஅ : கஅஅ.

(பி - ம்.) கூகூ. 'பிறந்தவருளறங்' க00. 'இகழ்வோராதலிற்' க0௩ - ௪. 'மறவேன்யானு மடக்கொடியாதலினமாதா மாதர்நின்னால்'

யாதி முதல்வ னருந்துயர் கெடுக்கும்
பாதபங் கயமலை பரசின ராதலி
கக0 னீங்கிவ ரிருவரு மிளங்கொடி நின்னோ
டோங்குயர் போதி யுரவோன் றிருந்தடி
தொழுதுவலங் கொண்டு தொடர்வினை நீங்கிப்
பழுதி னன்னெறிப் படர்குவர் காணு
யாருயிர் மருந்தா மமுத சுரபியெனு
ககரு மாபெரும் பாத்திர மடக்கொடி பெற்றனை
மக்க டேவ ரெனவிரு சார்க்கு
மொத்த முடிவி னோரற முரைக்கேன்
பசிப்பிணி தீர்த்த லென்றே யவருந்
தவப்பெரு நல்லறஞ் சாற்றின ராதலின்
கஉ0 மடுத்ததீக் கொளிய மன்னுயிர்ப் பசிகெட
வெடுத்தனள் பாத்திர மிளங்கொடி தானெனன்.

கஉ.—அறவணர்த்தொழுதகாதை முற்றிற்று.

---

க0அ. ஆதிமுதல்வன் - புத்தன். க0கூ. பரசினர் - துதித்தார்.

க0அ - கூ. ஆதிமுதல்வனது பாதபங்கயமலை.

கக0. இருவர் - மாதவி சுதமதியென்பவர். இளங்கொடி: விளி.

ககக. உரவோன் - புத்தன்; உரம் - அறிவு.

ககங. பழுது இல் நன்னெறி - குற்றமில்லாத நல்லவழி; இதனை விசுத்திமார்க்கமென்பர். நெறி - நெறியில். படர்குவர் - செல்குவர்.

க0கூ - ககங. பரசினராதலின், இவரிருவரும் நின்னோடு உரவோனடியைத்தொழுது வலங்கொண்டு நீங்கிப்படர்குவர்.

ககசு. இருசார்க்கும் - இரண்டு பகுதிகட்கும்.

ககஅ. அவ்வறம், தீர்த்தல் ஆகும். அவரும் - அறவணவடிகளும்.

கககூ. தவப்பெரு நல்லறம் - மிகப்பெரிய நல்லதருமம்.

கஉ0. கொளிய - கொளுத்தினாற்போன்ற.

கஉக. இளங்கொடி பாத்திரத்தை எடுத்தனள்.

க - கஉக. இளங்கொடி அவர்தம்முடன் அடிகள் யாங்குளரென்று வினாஅய்க் குறுகி மாதவனடியை வணங்கி ஏத்தி உரைத்தலும் கேட்டு, அவரும் தவப்பெரு நல்லறம் சாற்றினராதலின், இளங்கொடி பாத்திர மெடுத்தனளென முடிக்க.

(பி - ம்.) க0கூ. 'பங்கயமலர்' ககஅ. 'அன்றேயாவரும' கஉ0. 'மடுத்த தீக்கதிமன்னுயிர்' கஉக. 'எடுத்த பாத்திரம்'

பதின்மூன்றுவது

# ஆபுத்திரன்றிறமறிவித்தகாதை.

[பதின்மூன்றுவது மணிமேகலைக்கு அறவணர்
ஆபுத்திரன்றிறங்கூறியபாட்டு.]

மாபெரும் பாத்திர மடக்கொடிக் கருளிய
வாபுத் திரன்றிற மணியிழை கேளாய்
வார ணாசியோர் மறையோம் பாள
னாரண வுவாத்தி யபஞ்சிக னென்போன்
௫ பார்ப்பனி சாலி காப்புக்கடை கழிந்து
கொண்டோற் பிழைத்த தண்ட மஞ்சித்
தென்றிசைக் குமரி யாடிய வருவோள்

---

உ. திறம் - வரலாற்றை.

௩. வாரணாசி - காசி. மறையோம்பாளன் - வேதத்தைப் பாதுகாத்தலையுடையான்; அந்தணனென்றபடி; "வயனங் கோட்டிலோர் மறையோம் பாளன்" (௧௫) என்பர் பின்னும்.

௪. ஆரண உவாத்தி - வேதம் ஓதுவிப்பவன்; உவாத்தி: உபாத்தியாயனென்னும் வடமொழிச் சிதைவு. வேதத்திற் சில பாகத்தையேனும் வேதாங்கங்களையேனும் சீவனத்தின் பொருட்டு ஓதுவிப்பவன் உபாத்தியாயன்; இதனை மனுஸ்மிருதி, ௨-ஆம் அத்தியாயம், ௧௪௧ - ஆம் சுலோகத்திற் காண்க. இப்பெயர் தமிழ் நூல்களில் உவாத்தியன், உவாத்தியான், உவாத்தியெனவும் வழங்கும். அயஞ்சிகன்: காரணப் பெயர்; பங்கமில்லாதவனென்பது பொருள்.

௩ - ௪. மணி. ௧௩ : ௭அ - ௯.

௫. பார்ப்பனி சாலி - அவன்மனைவி சாலியென்பாள்; அந்தணர்களிற் கணவனைப் பார்ப்பானென்றும், மனைவியைப் பார்ப்பனியென்றும் கூறுதல் மரபு; "பார்ப்பான் றன்னொடு கண்ணிழந் திருந்தவித், தீத்தொழி லாட்டி" (௬ : ௧௩௨ - ௩) என்றுமுன்பு வந்திருத்தல் காண்க. காப்புக் கடை கழிந்து - காவலின் எல்லையைக்கடந்து; கற்பொழுக்கம் நீங்கி யென்றபடி.

௬. கணவனுக்குப் பிழை செய்தமையாலுண்டாகும் தண்டத்திற்குப் பயந்து; தண்டம் - தண்டனை; "கொண்டோற் பிழைத்த தண்டந் தாக்கி" பெருங். ௧. ௩௬ : ௧௫௪.

௫ - ௭. மணி. ௫: ௩௭ - அ. ஆடிய - ஆடுதற்பொருட்டு.

(பி - ம்.) உ. 'இழாய் கேளாய்' ௩ - ௯. 'வாருணசி யோர் மறை மேம்படுநஞ்ஞான அகத்துத் துஞ்சிருள் யாமத்தீன்ற' ௪. 'ஆரணவுவாத்திகன்'

சூன்முதிர் பருவத்துத் துஞ்சிரு ளியவிடை
யீன்ற குழவிக் கிரங்கா ளாகித்
க0 தோன்றாத் துடவையி னிட்டன ணீங்கத்
தாயி றாவாக் குழவித்துயர் கேட்டோ
ராவந் தணைந்தாங் கதன்றுயர் தீர
நாவா னக்கி நன்பா லூட்டிப்
போகா தெழுநாட் புறங்காத் தோம்ப
கரு வயனங் கோட்டிலோர் மறையோம் பாள
னியவிடை வருவோ னிளம்பூதி யென்போன்
குழவி யேங்கிய கூஉக்குரல் கேட்டுக்
கழுமிய துன்பமொடு கண்ணீ ருகுத்தாங்

---

அ. துஞ்சிருள் - யாவருந் தூங்குதற்குக் காரணமாகிய இருளில்; செறிந்த இருளுமாம். இயவு இடை - வழியினிடத்தே.

கூ. குழவிக்கு - குழந்தைக்கு.

க0. துடவை - தோட்டம்; "தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை" (பெரும்பாண். உ0க); "தொய்யாது வித்திய துளர்படு துடவை" மலைபடு. கஉஉ.

கூ - க0. மணி. கரு: அசு - எ.

கக. தாவாக்குழவி - உண்ணாத குழந்தை. துயர் - பசித்துயரத்தால் ஒழியாமல் அழுது கூப்பிடும் ஒலி; ஆகுபெயர்; "தாயி றூவாக் குழவி போல, வோவாது கூஉமின் னுடற்றியோர் நாடே" புறநா. ச.

கஉ. ஆ - பசு. அதன்றுயர்-அக்குழந்தையின் பசித்துன்பம்.

கச. புறங்காத்து ஓம்ப - பாதுகாக்க; இவை ஒருபொருட்பன்மொழி; புறங்காத்தல் - பாதுகாத்தல்; "வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப" (தொல். செய். சூ. கக0); "மெலிவில் செங்கோ னீபுறங் காப்ப" (புறநா. சஉ.) இதனால் ஆபுத்திரனென்பது இவனுக்குப் பெயராயிற்று.

கரு. வயனங்கோடு - ஓரூர். மறையோம்பாளன்: மணி. கரு: ரு.

கசு. வருவோன் - மனைவியுடன் வருவோன்; பின், "காதலி தன்னொடு கைதொழு தெடுத்து" (உ0) என்பதனால், 'மனைவியுடன்' என்பது கொள்ளப்பட்டது. பூதி என்பது அவன் பெயர்; "தாதை பூதியுந் தன்மனை கடிதர" (க0க) என்று இக்காதையிலேயே பின்பு வருதல் காண்க.

கஅ. கழுமிய - கலந்த; புறநா. உருஅ. கண்ணீர் - உவகைக் கண்ணீர்.

(பி - ம்.) அ. 'சூன்முதிருயக்கத்துத் துஞ்சிருள்யாமத்து' கூ. 'இரங்கினளாகி' க0. 'இட்டனணீங்கித்' கஉ. 'அணைதாங்காங்கதன்றுயர்கெட' கரு. 'வயவனங் கோட்டில்', 'வனயனங்கோட்டி,'

சாமக னல்ல னென்மக னென்றே
௨௰ காதலி தன்னொடு கைதொழு தெடுத்து
நம்பி பிறந்தான் பொலிகநங் கிளையெனத்
தம்பதிப் பெயர்ந்து தமரொடுங் கூடி
மார்பிடை முந்நூல் வனையா முன்னர்
நாவிடை நன்னூ னன்கன நவிற்றி
௨௫ யோத்துடை யந்தணர்க் கொப்பவை யெல்லா
நாத்தொலை வின்றி நன்கன மறிந்தபி
னப்பதி தன்னுளோ ரந்தணன் மனைவயிற்
புக்கோ னாங்குப் புலைசூழ் வேள்வியிற்
குரூஉத்தொடை மாலை கோட்டிடைச் சுற்றி
௩௰ வெரூஉப்பகை யஞ்சி வெய்துயிர்த்துப் புலம்பிக்

---

௧௯. ஆ மகன் அல்லன் - பசுவினுடைய மகனல்லன்; பசுப் பாது காத்ததனைக் கண்டோனாதலின் இங்ஙனங்கூறினான்.

௨௰. காதலி - மனைவி. கைதொழுது - அக்குழந்தையைத் தனக்குத்தந்தது தெய்வமென்றெண்ணி அத்தெய்வத்திற்கு அஞ்சலிசெய்து; "பழுதில் காட்சிப் பைந்தொடி புதல்வனைத், தொழுதனள் வாங்கி" (௨௫: ௧௮௮-௯) என்று இந்நூலுள்ளே பின்புவருதல் காண்க.

௨௧. நம் கிளை பொலிகவென்று. ௨௨. பதி - ஊர்.

௨௩. முந்நூல் - பூணுநூல். வனையா முன்னரென்பது விரையக் கற்பித்தமை விளக்கி நின்றது.

௨௪. நன்னூல் - வேதம் வேதாங்கங்கள். நவிற்றி - நவிற்ற; நவிலுதல் - கூறி அடிப்படுதல்; "நல்லோர் குழீஇய நாநவி லவையத்து" (மலைபடு. ௭௭); "மறைநவி லந்தணர் நுவலவும் படுமே" புறநா. ௧.

௨௫. ஓத்து - வேதம்.

௨௬. நாத்தொலைவு: மணி. ௨௪: ௧௯; சிலப். ௩: ௪௪.

௨௮. புலை சூழ் வேள்வியில் - அசுத்தமாகிய ஊன்றின்றலைச்செய்கின்ற யாகசாலையில்; சூழ்தல் - செய்தல் (தக்க. ௨௭௯, உரை); கருதலுமாம். புலையும் வேள்வியும் ஆகுபெயர்.

௨௯. நிறம்பொருந்திய தொடுக்கப்பட்ட மாலை கொம்பின்கண்ணே சுற்றப்பட்டு.

௩௰. வெரூஉப்பகை - அச்சத்தைத்தரும்பகை; வெரூஉ - அச்சம்; "வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை" (பொருந. ௧௩௧). புலம்பி - வருத்தமுற்று; புலம்பு - வருத்தம்; "புலம்புவிட் டிருந்த புனிறில் காட்சி" மலைபடு. ௪௯.

(பி - ம்.) ௨௪. 'நன்கினிநவிற்றி' ௨௫. 'ஒப்புமை யெல்லாம்' ௨௭. 'மனைவியிற் புக்கோ னங்கப்புலைசூழ்வேள்வியில்' ௨௯. 'குரூஉக்கொடி'

கொலைநவில் வேட்டுவர் கொடுமர மஞ்சி
வலையிடைப் பட்ட மானே போன்றாங்
கஞ்சிநின் றழைக்கு மாத்துயர் கண்டு
நெஞ்சுநடுக் குற்று நெடுங்கணீ ருகுத்துக்
நடு கள்ள வினையிற் கடுந்துயர் பாழ்பட
நள்ளிருட் கொண்டு நடக்குவ னென்னு
முள்ளங் கரந்தாங் கொருபுடை யொதுங்கி
யல்லிடை யாக்கொண் டப்பதி யகன்றோன்
கல்லத ரத்தங் கடவா நின்றுழி
சo யடர்க்குறு மாக்களொ டந்தண ரெல்லாங்
கடத்திடை யாவொடு கையகப் படுத்தி
யாகொண் டிந்த வாரிடைக் கழிய
நீசமக னல்லாய் நிகழ்ந்ததை யுரையாய்
புலைச்சிறு மகனே போக்கப் படுதியென்

---

நக. கொலை நவில் வேட்டுவர் - கொல்லுதலைச்செய்கின்ற வேடருடைய. கொடுமரம் - வில்.

நந. அழைக்கும் ஆ துயர் - கூப்பிடுகின்ற பசுவின் துயரத்தை.

நo - நந. புலம்பிப் போன்று அஞ்சி நின்று அழைக்கும் ஆ.

உஅ - நந. புக்கோன் ஆவினது துயரத்தைக் கண்டெனக.

நரு - சு. திருட்டுத் தொழிலால், பசுவினதுமிக்கதுன்பம் இல்லையாம்படி; கடுந்துயர் - மரணத்துன்பமுமாம். பாழ்படக் கொண்டெனக.

நசு. நள்ளிருள் - செறிந்தஇருட்டு; "வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல்" பொருந. எஉ.

நஎ. உள்ளம் கரந்து - தன்னெண்ணத்தை மறைத்து.

நகூ. கல்லதரத்தம் - பருக்கைக்கற்கள் பொருந்திய சின்னெறியையுடைய அருநெறி; "கல்லத ரத்தங் கடக்க" சிலப். கசு : ருஎ.

சo. அடர்க் குறுமாக்களொடு - நெருக்குதலைச்செய்யும் அறிவில்லாதாரோடு; "ஒலித்தொருங் கீண்டிய வூர்க்குறு மாக்களும்" (கரு : ருக) என்பர் பின்னும். குறுமாக்கள் : கலி. அஉ.

சக. கடம் - அருநெறி.

சஉ. ஆ கொண்டு - பசுவைக் கைப்பற்றிக்கொண்டு. ஆரிடை - அரியவழி.

சச. ஊனை விரும்பிப் பசுவைக்கவர்ந்தானென்று நினைந்து, 'புலைச் சிறுமகனே' என்றார். போக்கப்படுதி - விலக்கப்படுவாய்.

(பி - ம்.) நக. 'கொடுவரமஞ்சி' நரு. 'களவினையாகியிக் கடுவினை பாழ்பட' நஅ. 'ஆகொண்டப்பதி' சஉ. 'ஆகொணர்ந்த' சந. 'நீமகனல்லாய்' சச. 'புலைச்சிரககனே போகப்படுதி'

சரு றலைக்கோ லதனு லறைந்தனர் கேட்ப
வாட்டிநின் றலைக்கு மந்தண ருவாத்தியைக்
கோட்டினிற் குத்திக் குடர்புய்த் துறுத்துக்
காட்டிடை நல்லாக் கதழ்ந்துகிளர்ந் தோட
வாபுத் திரன்று னங்கவர்க் குரைப்போ
ரு0 னோவன செய்யன்மி னொடிவன கேண்மின்
விடுநில மருங்கிற் படுபுல் லார்ந்து
நெடுநில மருங்கின் மக்கட் கெல்லாம்
பிறந்தநாட் டொட்டுஞ் சிறந்ததன் றீம்பா
லறந்தரு நெஞ்சோ டருள்சுரந் தூட்டு
ருரு மிதனொடு வந்த செற்ற மென்னை
முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ

---

சரு. அலைகோல் - வருத்துதலைச்செய்யும் கோல். அறைந்தனர் - அடித்தனராய்.

சசு. ஆட்டி அலைக்கும் - மிகவும் வருத்துகின்ற. இவை ஒரு பொருட் பன்மொழி.

சஎ. கோடு - கொம்பு. குடர் புய்த்துறுத்து - குடரைப்பிடுங்கி; "கோடுபுய்க் கல்லா துழக்கு நாடகேள்" (கலி. நஅ); "புய்த்தெறி கரும்பின் விடுகழை" புறநா. உஅ.

சஅ. கதழ்ந்து கிளர்ந்தோட - விரைந்தெழுந்தோட; கதழ்தல் - விரைதல்; "கதழ்வுந் துனையும் விரைவின் பொருள" (தொல். உரி. சூ. கஎ.) கிளர்தல் - எழுதல்; "கால்கிளர்ந் தன்ன வேழம்" புறநா. அஉ.

மேல் வருவன ஆபுத்திரன் கூற்று.

ரு0. நொடிவன - சொல்லுவனவற்றை.

ருக. மேய்தற்கு அரசனால் விடப்பட்ட நிலத்தினிடத்தே தானே உண்டாகிய புல்லைமேய்ந்து; பசுக்கள் கவலையின்றி மேய்தற்கு அரசனால் விடப்பட்டநிலம் கோஸஞ்சாரபூமியெனப்படும்.

ருந. பிறத்தல், மக்கள்வினை. தீம்பால் - இனியபால்.

ருரு. இதனொடு - இப்பசுவினிடத்து; உருபுமயக்கம். செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழ்வது; புறநா. கநஉ, ந.

ருசு. முன்னியது - எண்ணியது. உரைமோ: உரையுமென்னும் ஏவற்பன்மை உயிர்மெய்கெட்டு ஓகாரம்பெற்று வந்தது. எனவென்று ஒரு சொல் வருவிக்க.

(பி - ம்.) சரு. 'கேட்புழி' சஅ. 'கழிந்துகிளர்ந்தோட' ரு0. 'நோவன செய்யே னொடியாது கேண்மோ', 'நோவல்செய்யல்.' ருக. 'விடுபுலமருங்கு' ருந. 'தொட்டுச்சிறந்த தீம்பால்' ருசு. 'முதுமொழி மாக்கண்முன்யாதுரைமோ'

பொன்னணி நேமி வலங்கொள்சக் கரக்கை
மன்னுயிர் முதல்வன் மகனெமக் கருளிய
வருமறை நன்னூ லறியா திகழ்ந்தனை
௬0 தெருமர லுள்ளத்துச் சிறியை நீயவ்
வாமக னாதற் கொத்தனை யறியா
நீமக னல்லாய் கேளென விகழ்தலு
மான்மக னசலன் மான்மகன் சிருங்கி
புலிமகன் விரிஞ்சி புரையோர் போற்று
௬௫ நரிமக னல்லனோ கேச கம்பள
னீங்கிவர் நுங்குலத் திருடி கணங்களென்
றோங்குயர் பெருஞ்சிறப் புரைத்தலு முண்டா
லாவொடு வந்த வழிகுல முண்டோ
நான்மறை மாக்கா ணன்னூ லகத்தென
௭0 வாங்கவர் தம்முளோ ரந்தண னுரைக்கு
மீங்கிவன் றன்பிறப் பியானறி குவனென

---

௫௭. நேமி - சக்கரத்தின் சூடு; வட்டமுமாம். வலம் - வெற்றி; வலப்பக்கமுமாம். நேமியையுடைய சக்கராயுதம்.

௫௮. மன்னுயிர்முதல்வன் - திருமால். மகன் - பிரமன்.

௬0. தெருமரல் - சுழற்சி. சிறியை - சிறுமையையுடையாய்.

௬௧. நூற்பொருளையறியும் அறிவிலானென்பார், 'ஆமக னாதற் கொத்தனை' என்றார்; "விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல், கற்றாரோ டேனை யவர்" (குறள். ௪௧0) என்று வருதல் காண்க.

௬௨. இகழ்தலும் - அவ்வந்தணர் இகழ்ந்து பேசுதலும்.

மேல் வருவன ஆபுத்திரன் கூற்று.

௬௩. அசலனென்பவன் ஆனின்மகன்; ஆன் - பசு. சிருங்கியென்பவன் மானின் மகன்; சமீக முனிவருக்குப் பசுவினிடம் பிறந்தவனென்னும் பாரதம்; ஆதி. ௫0 - ஆம் அத்.

௬௪. விரிஞ்சியென்பவன் புலியின்மகன். புரையோர் - மேலோர்.

௬௫. கேசகம்பளனென்பவன் நரியின் மகன்; அசிதகேசகம்பள ரென்று ஒரு முனிவர்பெயர் பௌத்த நூல்களிற் காணப்படுகின்றது.

௬௮ - ௯. ஆவொடு - ஆவால். நன்னூலகத்து ஆவொடு வந்த அழிகுலமுண்டோ? இல்லையென்றபடி. முன்னம், 'ஆமக னாதற் கொத்தனை' (௬௧) என்று அந்தணர் இகழ்ந்ததற்குப் பரிகாரங் கூறுகின்றவனாதலின், 'ஆவொடு வந்த வழிகுல முண்டோ' என்றான்.

௭0 - ௭௧. இவன் பிறப்பை யான் அறிகுவனென்று ஓரந்தணன் உரைப்பான்.

(பி - ம்.) ௫௭. 'வலங்கொளசதக்கை' ௫௮. 'எமக்களித்த' ௬0. 'சிறியோய்நீயவ்' ௬௩ - ௪. 'சிருங்கிப், புலிமகன்விருஞ்சி' ௬௫. 'தேசிகம்பலின்' ௬௯. 'மாக்கணன்னூலக'

நடவை வருத்தமொடு நல்கூர் மேனியள
வடமொழி யாட்டி மறைமுறை யெய்திக்
குமரி பாதங் கொள்கையின் வணங்கித்
எரு தமரிற் றீர்ந்த சாலியென் போடனை
யாது நின்னூ ரீங்கென் வரவென
மாமறை யாட்டி வருதிற முரைக்கும்
வார ணாசியோர் மாமறை முதல்வ
னாரண வுவாத்தி யரும்பெறன் மனைவியான்
அ0 பார்ப்பார்க் கொவ்வாப் பண்பி னொழுகிக்
காப்புக்கடை கழிந்து கணவனை யிழந்தே
னெறிபய முடைமையி னிரியன் மாக்களொடு
தெற்கட் குமரி யாடிய வருவேன்

---

எஉ. நடவை - வழி. நல்கூர் மேனியள் - இளைத்த உடம்பை யுடையாள்.

எங. வடமொழி யாட்டி - பார்ப்பனி ; இந்நூலில், ரு: சு0 - ஆம் அடியிற் பார்ப்பாரை வடமொழியாளரென்று கூறியிருத்தல் காண்க. மறைமுறை யெய்தி - வேதவிதிப்படியே சென்று.

எச. குமரியாடப்போந்தோர், ஆங்குள்ள குமரித்தெய்வப் படிமத்தை வணங்குதல் மரபு.

எரு. தமரிற்றீர்ந்த - தனக்குச் சிறந்தோரினின்றும் நீங்கிய.

எச - ரு. வணங்கித் தீர்ந்த சாலி. எசு. ஈங்கு வரவு என்னென.

எஎ. உரைக்கும் - உரைப்பாள்.

எஅ. வாரணாசி=வாராணஸீ - காசி ; வடமொழியில் ஸித்தாந்த கௌமுதி என்னும் நூலின் அவ்யயீபாவப் பிரகரணத்தில், "யஸ்யசாயாமஃ" என்னும் ஸூத்ரவியாக்கியானத்தில் 'வாராணஸீ' என்பதற்கு, 'நல்ல ஜலத்துக்குத் தூரத்திலில்லாத நகரீ' என்று தத்துவபோதினி யுரையின் ஆசிரியர் பொருள்செய்திருப்பதாகக் கூறுவர்.

எகூ. 'உவாத்தி' என்பது, "தவாஅக் காதலொடு தகையாழ் காட்டு, முவாத்தி யாதலின்" (க. சச : கங0 - ஙக) எனப் பெருங்கதையிலும் வந்திருத்தல் காண்க.

அ0. ஒழுகி - நடந்து.

அக. காப்புக்கடை கழிந்து : மணி. கங : ரு.

அஉ. எறிபயம் - அடித்தலாலுண்டாகும் அச்சம். இரியல் மாக்கள் - கெடுதலுற்ற மாக்கள் ; விரைந்துசெல்லுமாக்களென்றுமாம்.

அங. ஆடிய - நீராடும்பொருட்டு.

(பி - ம்.) அக. 'கணவனை யிகழ்ந்தேனை' அஉ. 'எற்பயமுடைமையின்', 'நெறிபயமுடைமையின்.' அங. 'தெககட்குமரி', 'தக்கண குமரி.'

பொற்றேர்ச் செழியன் கொற்கையம் பேரூர்க்
அரு காவதங் கடந்து கோவல ரிருக்கையி
னீன்ற குழவிக் கிரங்கே ளாகித்
தோன்றாத் துடவையி னிட்டனன் போந்தேன்
செல்கதி யுண்டோ தீவினை யேற்கென்
றல்லலுற் றழுத வவண்மக னீங்கிவன்
கூ0 சொல்லுத றேற்றேன் சொற்பய மின்மையிற்
புல்ல லோம்பன்மின் புலைமக னிவனென
வாபுத் திரன்பின் பமர்நகை செய்து
மாமறை மாக்கள் வருங்குலங் கேண்மோ
முதுமறை முதல்வன் முன்னர்த் தோன்றிய
கூரு கடவுட் கணிகை காதலஞ் சிறுவ
ரருமறை முதல்வ ரந்தண ரிருவரும்
புரிநூன் மார்பிர் பொய்யுரை யாமோ

---

அச. செழியன் - பாண்டியன். கொற்கை - பாண்டியர்களின் பழைய இராசதானி.

அரு. கோவலர் - இடையர்.

அஎ. துடவை - தோட்டம். அசு - எ. மணி. கங : க - க0.

அஅ. தீவினையேற்குச் செல்கதியுண்டோ.

கூ0. பயம் - பிரயோசனம் ; இன்மையிற் சொல்லுதறேற்றேன்.

கூக. புல்லலோம்பன்மின் - தீண்டலைச் செய்யாதொழிக. இவன் புலைமகன் - இவன் அசுத்தமுடைய மகன். புலை - வியபிசாரமுமாம் ; இது மலைநாட்டுவழக்கென்பர்.

கூஉ. அமர்நகை - விரும்புஞ்சிரிப்பு.

கூங. கேண்மோ : கேளுமென்னும் ஏவற்பன்மை உயிர்கெட்டு ஓகாரம் பெற்றுவந்தது; நன். வி. சூ. ஙசக.

கூச. முதுமறைமுதல்வன் - பிரமன்.

கூரு. கடவுட்கணிகை - திலோத்தமை யென்பாள். சிறுவர் - பிள்ளைகள்.

கூசு. முதல்வராகிய அந்தணரிருவரும். இருவர் - வஸிஷ்டர், அகஸ்தியர்.

கூரு - சு. அந்தணரிருவரும் காதலஞ்சிறுவரென்க.

கூச - சு. வஸிஷ்டரும் அகஸ்தியரும் திலோத்தமையின் பிள்ளைகளென்பதைப் பின்வரும் வாக்கியத்தாலுணர்க ; "வஸிஷ்டனும் அகஸ்தியனும், பிரஹ்மா திலோத்தமையென்னும் அப்ஸரஸைக்கண்டகாலத்துக் கலசத்து ஜனித்தனர்" நீல. கமய.

(பி - ம்.) கூஉ. 'ஆபுத்திரன்ருணமாநகை'

சாலிக் குண்டோ தவறென வுரைத்து
நான்மறை மாக்களை நகுவன னிற்ப
க00 வோத லந்தணர்க் கொவ்வா னென்றே
தாதை பூதியுந் தன்மனை கடிதர
வாகவர் கள்வனென் றந்தண ருறைதரும்
கிராம மெங்கணுங் கடிஞையிற் கல்லிட
மிக்க செல்வத்து விளங்கியோர் வாழுந்
க0ரு தக்கண மதுரை தான்சென் றெய்திச்
சிந்தா விளக்கின் செழுங்கலை நியமத்
தந்தின் முன்றி லம்பலப் பீடிகைத்
தங்கினன் வதிந்தத் தக்கணப் பேரூ

கூஅ. தவறு - குற்றம். கூகூ. நகுவனன் - சிரிப்பவனாகி.

க00. ஒவ்வான் - பொருந்தான்; என்றது ஆபுத்திரனை.

க0க. தாதை - தகப்பன். கடிதர - நீக்க.

க0ங. கடிஞை - பிச்சைப்பாத்திரம். கல் இட - கல்லைப் போகட; உலகத்திற் கடிஞையிற் கல்லிடுவார் எக்காலத்தும் இலராகவும் இவனுக்கும் இங்ஙனம் நிகழ்ந்ததேயென்று இரங்கிக் கூறினார்; 'கடிஞையிற் கல்லிடுவாரில்' என்பது ஒரு பழமொழி; இதனைப் பின்வரும் வெண்பாவாலுணர்க: "வினைத்த திதுவென்றந் நீர்மையை நோக்கி, மனத்த தறிந்தீவர் மாண்டார் - புனத்த, குடிஞை யிரட்டுங் குளிர்வரை நாட, கடிஞையிற் கல்லிடுவா ரில்" பழ. உசரு.

க0ரு. தக்கணமதுரை - தென்றிசைக்கணுள்ள மதுரை; என்றது கூடற்பதியை; தக்கணம்: வடசொற்றிரிபு; சிலப். கச: அக, அடியார்க்குநல்லாருரையைப்பார்க்க.

க0சு. சிந்தாவிளக்கு - ஸரஸ்வதிதேவி; மணி. பதிகத்தின் ரு0 - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க. நியமம் - கோயில்; ஸரஸ்வதிதேவியின் கோயிலாதலின், அதற்குக் கலைநியமமென்பது பெயராயிற்று; மணி. கச: க0 - கக, கஎ - அ.

க0எ. முன்றில் அம்பலப்பீடிகை - சிந்தாதேவியின் கோயில் வாயிற் கண்ணுள்ள மன்றினிடத்தில். அம்பலப்பீடிகை - அம்பலமாகிய பீடிகை; அஃது உயர்த்திக்கட்டப்பட்டிருத்தலின், பீடிகையெனப்பட்டது; பீடிகையென்பதற்குக் கோயில்வாயிற்கணுள்ள பலிபீடமெனினும் பொருந்தும்; இங்ஙனங் கொள்ளுங்காற் பீடிகையையுடைய அம்பலமெனமாறுக.

க0அ. தங்கினன் வதிந்து - தங்கி; ஒருபொருட் பன்மொழி. தக்கணப் பேரூர் - மதுரையில்.

(பி - ம்.) க00. 'ஒவ்வாயென்றே' க0உ. 'ஆங்கவர்களவ' க0ங. கடிகையிற்கல்லிட'

ரையக் கடிஞை கையி னேந்தி
௧௧௦ மையறு சிறப்பின் மனைதொறு மறுகிக்
காணார் கேளார் கான்முடப் பட்டோர்
பேணுந ரில்லோர் பிணிநடுக் குற்றோர்
யாவரும் வருகவென் றிசைத்துட னூட்டி
யுண்டொழி மிச்சிலுண் டோடுதலை மடுத்துக்
௧௧௫ கண்படை கொள்ளுங் காவலன் றானென்.

௧௩.—ஆபுத்திரன்றிறமறிவித்தகாதை முற்றிற்று.

---

௧௧௦. மை - குற்றம். மறுகி - சுழன்று.

௧௧௧. காணார் - குருடர். கேளார் - செவிடர்.

௧௧௨. பேணுநரில்லோர் - அகதிகள். பிணி - நோய்.

௧௧௧ - ௨. மணி. ௨௮ : ௨௨௨ - ௩.

௧௧௩. யாவரும் - மேற்கூறப்பட்ட காணார்முதலிய யாவரும். உடன் ஊட்டி - ஒருங்குண்ணச்செய்து ; உடன் - உடனேயென்றுமாம்.

௧௧௪. உண்டொழி மிச்சில் உண்டு - அவர்கள் உண்டொழிந்த மிகுதியை யுண்டு ; இது, "விருந்தோம்பி, மிச்சின் மிசைவான்" (௮௫) என்ற குறளின் பொருளைத் தழுவி வந்தவாறு காண்க. ஓடு - பிச்சைப் பாத்திரம். தலைமடுத்து - தலையணையாகக்கொண்டு.

௧௧௫. கண்படை - உறக்கம். காவலன் - காத்தலையுடையவன் ; என்றது ஆபுத்திரனை. காவலன் கண்படை கொள்ளுமென்க.

௧ - ௧௧௫. அணியிழை, ஆபுத்திரன்றிறங்கேளாய் ; பார்ப்பனி சாலி, கழிந்து அஞ்சி வருவோள் இரங்காளாகிக் குழவியை இட்டு நீங்க, ஆ கேட்டு அணைந்து நக்கி ஊட்டிப் போகாது ஓம்ப, பூதியென் போன் கேட்டு உருத்து என்மகனென்று எடுத்துப் பெயர்ந்து கூடி நவிற்ற, அறிந்தபின் புக்கோன் ஆ துயர் கண்டு உற்று உருத்து உள் ளங்கரந்து ஒதுங்கி அகன்றோனாய்க் கடவாநின்றுழி அந்தணரெல்லாம் குறுமாக்களோடு சென்று கையகப்படுத்திக் கேட்ப, நல்லா குத்திப் புய்த்துறுத்து ஓட, ஆபுத்திரன் உரைப்போன், 'உரைமோ' என, அந் தணரிகழ்தலும், ஆபுத்திரன், 'நன்னூலகத்து ஆவொடு வந்த அழிகுல முண்டோ' என ஓரந்தணனுரைக்கும் ; அங்ஙனமுரைப்பவன், 'புல்ல லோம்பன்மின் ; புலைமகனிவன்' என, ஆபுத்திரன் நகைசெய்து, 'சாலிக் குத்தவறுண்டோ' என்றுரைத்து நகுவனனிற்ப, பூதி ஒவ்வானென்று கடிதர, கிராமமெங்கணும் கல்லிட, காவலன் மதுரை சென்றெய்தி வதிந்து ஏந்தி மறுகி இசைத்து ஊட்டி மிச்சிலுண்டு மடுத்துக் கண் படை கொள்ளுமென வினைமுடிவுசெய்க.

(பி - ம்.) ௧௧௨. 'பேணினரில்லோர்' ௧௧௪. 'தலையடுத்து', 'தலையெடுத்துக்.' ௧௧௫. 'கரவேன்றானென்'

பதினான்காவது

# பாத்திரமரபுகூறியகாதை.

[பதினான்காவது மணிமேகலைக்கு அறவணர் அமிர்தசுரபியென்னும் பாத்திரம் சிந்தாதேவி ஆபுத்திரற்குக் கொடுத்தவண்ணம் கூறிய பாட்டு.]

ஆங்கவற் கொருநா ளம்பலப் பீடிகைப்
பூங்கொடி நல்லாய் புகுந்தது கேளாய்
மாரி நடுநாள் வல்லிருண் மயக்கத்
தாரிடை யுழந்தோ ரம்பல மரீஇத்
ரு துயில்வோன் றன்னைத் தொழுதன ரேத்தி
வயிறுகாய் பெரும்பசி மலைக்கு மென்றலு

---

க. ஆங்கவற்கு - ஆபுத்திரனுக்கு; ஆங்கவன்: ஒருசொல்; "ஈங் கிவள்" (திருச்சிற். கக) என்புழிப்போல. அம்பலப்பீடிகை - அம்பலத்தில். அம்பலம் - பலருஞ்சென்று தங்குதற்குரிய பொதுவிடம். இது மன்றமெனவுங் கூறப்படும். அம்பலப் பீடிகை: மணி. கங: க0எ, கச: ருக.

உ. நல்லாயென்றது மணிமேகலையை. புகுந்தது - நேர்ந்தது.

க - உ. அவற்குப் புகுந்ததைக்கேள்.

ங. மாரிநடுநாள் - மழைத்துளிகளையுடைய இடையாமத்தில். வல்லிருண்மயக்கத்து - வலிய இருட்கலப்பில்; 'இருண்மயக்கத்து' என்றதனால், நடுநாள் இடையாமமாயிற்று; "புதையிருள்கூர், நெறியா ரருள்பெற நாநடு நாளிடை நீந்துதுமே" (தஞ்சை. உகங) என வருதல் காண்க.

ச. அரியவழியில் வருந்தி வந்தோராகிய கூத்தர்முதலியோர் அம்பலத்தை யடைந்து; கூத்தர்முதலியோர்வந்து தங்குமிடம் அம்பலமென்பதை, "மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர்" (மலைபடு. சகஉ) என்பதனாலுணர்க.

ரு. துயில்வோன்றன்னை - ஆபுத்திரனை.

சு. மலைக்கும் - மாறுபடுத்தும்; வருத்துமென்றபடி; "மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப" (புறநா. க0.) வயிறுகாய் பெரும்பசி: மணி. கக: கக0, கஎ: ருஎ.

ச - சு. உழந்தோர் மரீஇத் தொழுது ஏத்திப் பசி மலைக்குமென்றலு மென்க.

(பி - ம்.) ச. 'அம்பலம் விழைஅய்' சு. 'மலையுமென்றலும்' 'அலைக்கு மென்றலும்.'

மேற்றா ணல்லது வேற்றா ணில்லோ
னாற்றுவது காணா னாஞ ரெய்தக்
கேளிது மாதோ கெடுகநின் றீதென
க0 யாவரு மேத்து மிருங்கலை நியமத்துத்
தேவி சிந்தா விளக்குத் தோன்றி
யேடா வழிய லெழுந்திது கொள்ளாய்
நாடுவறங் கூரினுமிவ் வோடுவறங் கூராது
வாங்குநர் கையகம் வருந்துத லல்லது
கரு தான்றொலை வில்லாத் தகைமைய தென்றே
தன்கைப் பாத்திர மவன்கைக் கொடுத்தலுஞ்
சிந்தா தேவி செழுங்கலை நியமத்து

---

எ. ஏற்றாண் - இரந்துண்ணுமுணவு. வேற்றாண் இல்லோன் - வேறு உணவில்லாத ஆபுத்திரன்.

அ. ஆற்றுவது காணான் - உதவும்வழியைக் காணானாகி. ஆற்றுதல் - உதவுதல்; "ஒருவீ ரொருவீர்க் காற்றுதிர்" (புறநா. ருஅ.) ஆர் அஞர் - தீர்த்தற்கரிய வருத்தம்.

இனி ஆபுத்திரன் வருத்தம் தீரும்படி அவனுக்குச் சிந்தாதேவி அமுதசுரபியென்னும் பாத்திரங்கொடுத்தமை கூறுவார்.

கூ. இதுகேள். நின் தீதுகெடுக.

க0. யாவரும் ஏத்தும் - எச்சமயத்தினரும் துதிக்கும். நியமம் - கோயில். கலைநியமம் : மணி. கந : க0சு.

கக. தேவியாகிய சிந்தாவிளக்கு.

கஉ. அழியல் - வருந்தாதே. இது கொள்ளாய் - இப்பாத்திரத்தைக் கொள்.

கந. வறங்கூரினும் - வற்கடம் மிகினும். வறம் - வற்கடம்; பஞ்சம்; "ஞாலம் வறந்தீரப் பெய்யக் குணக்கேர்பு, காலத்திற் றோன்றிய கொண்மூப்போல்" (கலி. அஉ.) வறங்கூராது-வறுமையுறாமல். மூ. மணி. உரு : கசச.

கரு. தான் என்றது பாத்திரத்தை. என்று - என்றுசொல்லி.

கச - ரு. மணி. கக : சகூ - ருO, கஎ : ரு - சு.

எ - கசு. இல்லோன் ஆரஞரெய்தச் சிந்தாவிளக்கு, 'நின்தீது கெடுக' எனத்தோன்றி, 'கொள்வாய், கூராது, தகைமையது' என்று பாத்திரத்தைக் கொடுத்தலும்.

மேல்வருவன, பாத்திரம்பெற்ற மகிழ்ச்சியால் ஆபுத்திரன் சிந்தாதேவியைத் துதிக்குந் துதிகள்.

(பி - ம்.) கூ. 'நின்றீய்மை' கஉ. 'ஏடாபரியலெழுந்திதுகேளாய்' கந. 'இவரோவெறங்' கரு. 'தான்றொலைவறியாத்தகைமையது'

நந்தா விளக்கே நாமிசைப் பாவாய்
வானோர் தலைவி மண்ணோர் முதல்வி
உ0 யேனோ ருற்ற விடர்களை வாயெனத்
தான்றொழு தேத்தித் தலைவியை வணங்கி
யாங்கவர் பசிதீர்த் தந்நா டொட்டு
வாங்குகை வருந்த மன்னுயி ரோம்பலின்
மக்களு மாவு மரஞ்சேர் பறவையுந்
உரு தொக்குட னீண்டிச் சூழ்ந்தன விடாஅ
பழுமரத் தீண்டிய பறவையி னெழூஉ
மிழுமென் சும்மை யிடையின் றொலிப்ப

---

கஅ. நந்தாவிளக்கே - கெடாததீபமே; மைவிளக்கு அழிதன் மாலைத்தாதலின், 'நந்தாவிளக்கே' என்றான்; இது தெரிதருதேற்ற வுவமையென்னு மலங்காரம். இவள் வாக்கின் மடந்தையாதலின், 'நாமிசைப் பாவாய்' என்றான்.

கஎ - உ0. அடுக்கிய விளிகளாற் சிந்தாதேவிபால் ஆபுத்திரனுக் குள்ள அன்பு மிகுதி விளங்கும்.

உக. தொழுது - அஞ்சலிசெய்து. தலைவி - சிந்தாதேவி.

ந - உக. மணி. உரு: கநக - ருந.

உந. வாங்குகை வருந்த: (மணி. கக: சகூ.) மன்னுயிர் என்றார், விலங்கு முதலியனவும் உண்பிக்கப்படுதல் நோக்கி. ஓம்பலின் - பாது காத்தலினாலே.

உச. மாவும் - விலங்குகளும்.

உரு. உடன் தொக்கு ஈண்டி - ஒருமிக்கச்சேர்ந்து திரண்டு. விடா - விடாவாய்.

உகூ. பழுமரத்து ஈண்டிய - பழுத்தமரத்தின்கண்ணே வந்து கூடிய. பழுமரம், ஆலமரமுமாம். பறவையின்-பறவைபோல; (பொருந. கூச; பெரும்பாண். உ0; புறநா. கஎந; நாலடி. உ0உ; சீவக. அஉஅ.) எழூஉம் - எழுப்புகின்ற.

உஎ. சும்மை - ஒலி. இடையின்று - இடையீடில்லாமல். இடை - இடையீடு; "எய்த்த லறியா திடையின்றி" பு - வெ. உஅ0.

உச - எ. மணி. உஅ: உஉஉ - நஉ.

உ0 - உஎ. ஆபுத்திரன் களைவாயெனத் தொழுது ஏத்தி வணங்கி அந்நாள் தொட்டு அவர் பசிதீர்த்து ஓம்பலின் விடாவாய் எழூஉஞ் சும்மை இடையின்றொலிப்பவென்க.

மேலே, ஆபுத்திரனுடைய புண்ணியமிகுதியைத் தனது பாண்டு கம்பள நடுக்கத்தாலறிந்த இந்திரன் அவனுக்கு வரங்கொடுத்தற் பொருட்டு விருத்தவேதியன் வடிவுகொண்டு வருதலைக் கூறுவார்.

(பி - ம்.) உச. 'அருஞ்சிறைப்பறவையும்'

ஈண்டுநீர் ஞாலத் திவன்செய லிந்திரன்
பாண்டு கம்பளந் துளக்கிய தாதலிற்
௩0 றளர்ந்த நடையிற் றண்டுகா லூன்றி
வளைந்த யாக்கையோர் மறையோ னாகி
மாயிரு ஞாலத்து மன்னுயி ரோம்பு
மாருயிர் முதல்வன் றன்முன் றோன்றி

---

உக. பாண்டு கம்பளம் - வெள்ளைக்கம்பளமாகிய ஆசனம். துளக்கியது - நடுங்கச்செய்தது.

உஅ - கூ. ஆபுத்திரன் அறச்செயல் இந்திரனுடைய பாண்டுகம்பளத்தை நடுங்கச்செய்தது. இப்பூவுலகில் தானம் சீலம் முதலியவற்றிற் சிறந்த பௌத்தருளராயினும், அவர்களுக்கு ஏதேனுந் துன்பமுளதாயினும் இந்திரனுடைய பாண்டுகம்பளம் நடுங்குமென்றும், அக்குறிப்பால் அவற்றை யறிந்துவந்து அவர்களுக்கு வேண்டிய வரங்களைக்கொடுத்தலும் தீங்குகளை ஒழித்தலும் இந்திரனுடைய கடப்பாடென்றும் தெரிகின்றது. புத்த தருமவொழுக்கினனாகிய வணிகனொருவன் கப்பல்கவிழப்பெற்றுக் கடலில்வருந்தியதைத் தனது பாண்டுகம்பளத்தின் நடுக்கத்தாலறிந்த இந்திரன் அவ்வணிகனை அத்துன்பத்தினின்று நீக்கிப் பாதுகாத்தனனென்று இந்நூல் உகூ-ஆம் காதையில் (க௩ - உசு) வருதல்காண்க; "நமி விநமி என்பாரிருவர் குமாரர் தபச்சரணம் பண்ணியருளாநின்ற பகவானை யடைந்து நமஸ்கரித்துக் கந்தபுஷ்பாதிகளாற் பூசித்து நானாவித ஸ்தோத்திரங்களை அதிமதுரமாகப் பாடிநின்று விண்ணப்பம் செய்வார்: பகவானே தம்மாற் புத்திரபௌத்திராதி பந்துஜனங்களுக்கு வேறு வேறு இராச்சியம் கொடுக்கப்பட்டன; யாங்கள் அப்பொழுது சந்நிதமாயினமல்லேம்; இப்பொழுது எங்களுக்கு விபவங்களைப் பிரஸாதித்தருளவேண்டுமென்று நிர்ப்பந்தித்துநின்று துதிப்ப, இதனைத் தரணேந்திரன் தனது ஆசனங்கம்பித்தலில் அறிந்து கடிது வந்து மனுஷ்யரூபத்தைக்கொண்டு பருவதம்போலச் சலியாது எழுந்தருளிநின்ற பகவானது தைரியாதிசயத்தினைக்கண்டு விஸ்மிதனாகிப் பிரதக்ஷிணம்பண்ணித் துதித்துக் குமாரர்களை நோக்கிச் சொல்லுவான்" என்று ஸ்ரீ புராணத்துள்ள முதலாவது விருஷபதீர்த்தங்கரர் புராணத்தில் வருதலால், இப்படியே தனது ஆசன நடுக்கத்தால் அறியவேண்டுவனவற்றையறிந்து நல்லுயிர்களுக்குச் செய்யவேண்டுவனவற்றை இந்திரன் செய்வானென்று கூறுதல் ஜைனசம்பிரதாயமென்றும் தெரிகின்றது.

௩0 - ௩க. தளர்ந்த நடையின் - நடைதளர்தலால்; தண்டுகால் ஊன்றி - தான்பிடித்ததண்டினையே காலாகவூன்றி; (நாலடி. கச.) வளைந்த யாக்கை மறையோன் ஆகி - கூனிய உடம்பையுடைய வேதியனாகி; "தளர்ந்த நடையிற் றண்டுகா லூன்றி, வளைந்த யாக்கை மறையோன்" (சிலப். கரு: சச - ரு.) ஆகி ஊன்றியென்க.

௩௩. ஆருயிர்முதல்வன் - ஆபுத்திரன்; "ஆருயி ரோம்புநன்",

(பி - ம்.) உக. 'பாணடுதன பவனத துளக்கிய' ௩க. 'யாக்கை மறையோனாகி'

யிந்திரன் வந்தே னியாது நின்கருத்
கூடு துன்பெருந் தானத் துறுபயன் கொள்கென
வெள்ளை மகன்போல் விலாவிற நக்கீங்
கெள்ளினன் போமென் றெடுத்துரை செய்வோ
னீண்டுச் செய்வினை யாண்டுநுகர்ந் திருத்தல்
காண்டகு சிறப்பினுங் கடவுள ரல்ல
சு0 தறஞ்செய் மாக்கள் புறங்காத் தோம்புநர்
நற்றவஞ் செய்வோர் பற்றற முயல்வோர்
யாவரு மில்லாத் தேவர்நன் னாட்டுக்

---

"அருந்தே மாந்த வாருயிர் முதல்வனை" (ஙக, கூஅ) என இவனை இக்காதையிலேயே பின்பு கூறுதல் காண்க.

கூசு. யாதுநின்கருத்து - உன்னுடைய எண்ணம் என்ன?

கூடு. தானங்கள் பலவற்றுள்ளும் சிறந்தமையின், அன்னதானம் பெருந்தானமென்னப்பட்டது. உறுபயன் - மிக்க பிரயோசனம். கொள்க என - கொள்கவென்று இந்திரன் சொல்ல.

இனி, இங்ஙனங்கூறிய இந்திரனுக்கு ஆபுத்திரன் விடைபகர்ந்தது கூறுவார்.

கூசா. வெள்ளைமகன் போல் - பயனில்லாத சொல்லையுடையவன் போல; "வெள்ளைக் கோட்டி" (சிலப். கூ0: ககூஅ) என்பதற்கு, 'பய னில் உரைக்கோட்டி' என்று பொருள்கூறுவர் அரும்பதவுரையாசிரியர்.

கூஎ. எள்ளுதல் - இகழுதல். போம் : ஏவற்பன்மை. செய்வோன்: பெயர்.

கூஅ. ஈண்டுச்செய்வினை - இவ்வுலகத்துச்செய்யும் புண்ணியங் களின் பயனை. ஆண்டு - அவ்விடத்தில்.

கூஅ - க. நுகர்ந்திருத்தல் காண்டகு - அனுபவித்திருத்தலைச் செய் கின்ற. நுங்கடவுளரென்றான், தனக்கு அவர் அயலென்னுங்கருத்தால்; "நின்றநின் கார்மயி றன்னையும்" (திருச்சிற். எகூ) என்புழிப்போல.

சு0. புறங்காத்தோம்பல்: மணி. கக : கசு.

சுஉ. யாவருமில்லா - அறஞ்செய் மாக்கள் முதலியோர்களில் ஒரு வருமில்லாத.

கூஅ - சுஉ. தேவருலகம் வினைப்பயனனுபவிப்போர்க்கேயன்றி அறஞ்செய் மாக்கள் முதலியோர்க்கு இடமன்றென்பதை, "பொலம்பூங் காவி னன்னாட் டோருஞ், செய்வினை மருங்கி னெய்த லல்லதை, யுடை யோ ரீதலு மில்லோ ரிரத்தலுங், கடவ தன்மையிற் கையற வுடைத்து" (புறநா. கூஅ) எனவும், "ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ்வாரே வன்க ணவர்" (குறள், க0ருஅ, பரி. மேற்.), எனவும்,

(பி - ம்.) கூசா. 'வெள்ளைகள் போல விலாவிற' கூஎ. 'போன் மென'

கிறைவ னாகிய பெருவிறல் வேந்தே
வருந்தி வந்தோ ரரும்பசி களைந்தவர்
சறு திருந்துமுகங் காட்டுமென் றெய்வக் கடிஞை
யுண்டி கொல்லோ வுடுப்பன கொல்லோ
பெண்டிர் கொல்லோ பேணுநர் கொல்லோ
யாவையீங் களிப்பன தேவர்கோ னென்றலும்
புரப்போன் பாத்திரம் பொருந்தூண் சுரந்தீங்
ருo கிரப்போர்க் காணு தேமாந் திருப்ப
கிரப்பின் றெய்திய நீணில மடங்கலும்

---

'ஈவாரும் ஏற்பாருமின்றி எல்லாரும் ஒரு தன்மையராதலின் ஒப்புரவு புத்தேளுலகத்து அரிதாயிற்று' (குறள், உகரு, பரிமேல்.) எனவும் வருவற்றாலுணர்க.

சஉ - ரு. 'யாவரும்......பெருவிறல் வேந்தே' என்பது இகழ்ச்சி.

சச. பு. மணி. உரு : கரு௫.

சச - ௫. வந்தோரரும்பசி - வந்தோருடைய பொறுத்தற்கரிய பசியை. களைந்து - நீக்கி. அவர் திருந்துமுகங்காட்டும் - அவருடைய இனிய முகத்தை யான் காணக்காட்டும்; என்றது அவர் திருந்துமுகங் காட்டும் என் தெய்வக் கடிஞையேயமையும்; உன்னாற் கொடுக்கப்படுவன எனக்கு இன்பஞ்செய்யாவாகலின், அவை வேண்டாவென்றவாறு; "ஈத்துவக்கு மின்பம்" (குறள். உஉஅ) என்று வருதல்காண்க. காட்டும்: முற்று. தெய்வக்கடிஞையென்றான், வாங்குநர் கையகம் வருத்துதலல்லது தான் தொலைவில்லாத் தன்மைத்தாதலின்.

சஅ. ஈங்கு அளிப்பன - எனக்கு அளிப்பன; ஈங்கு, தன்மையை யுணர்த்திற்று, "ஒழிக காம மீங்கென" (சீவக. எஉ) என்புழிப்போல. தேவர்கோன்: விளி.

சரு - அ. உன்னாலளிக்கப்படுவன உண்டிமுதலியவற்றுள் யாவையென்று ஆபுத்திரன் இந்திரனை இகழ்ந்துகூறலும்.

ருஎ - சஅ. எடுத்துரைசெய்வோன் என்றலுமென்க.

இனி, தன்னை ஆபுத்திரன் அவமதித்தானென்று இந்திரன் சினந்து அவன் அன்னதானஞ்செய்தற்கு இடமில்லையாகும்படி மழைபெய்வித்து நாட்டை வளப்படுத்தி இரப்பாரை இல்லையாக்கினமை கூறுவார்.

சகூ. புரப்போன்பாத்திரம் - உயிர்களைப் பாதுகாப்பவனுடைய பிச்சைப் பாத்திரம்.

ருo. ஏமாந்திருப்ப - ஆபுத்திரன் உண்பித்தற்கு ஆசையடைந்திருக்கும்படி; "அருந்தே மாந்த நெஞ்சம்" (புறநா. கoக); துன்பமுற்றிருப்ப வெனினுமமையும்.

ருக. கிரப்பு - வறுமை.

(பி - ம்.) சச. 'அருந்துபசிகளைந்து' சக. 'பொழிந்துணசுரபபபு

பரப்பு நீராற் பல்வளஞ் சுரக்கென
வாங்கவன் பொருட்டா லாயிரங் கண்ணோ
னோங்குயர் பெருஞ்சிறப் புலகோர்க் களித்தலும்
ருரு பன்னீ ராண்டு பாண்டிநன் னாடு
மன்னுயிர் மடிய மழைவள மிழந்தது
வசித்தொழி லுதவ மாநிலங் கொழுப்பப்
பசிப்புயி ரறியாப் பான்மைத் தாகலி
னாருயி ரோம்புந னம்பலப் பீடிகை
சு0 யூணொலி யரவ மொடுங்கிய தாகி
விடருந் தூர்த்தரும் விட்டேற் றுளரு

ருங. ஆங்கவன் பொருட்டு - ஆபுத்திரன்பொருட்டு; ஆங்கவன்: ஒருசொல்.

ருச. அளித்தலும் - இந்திரன் கொடுத்தலும்.

ரு0 - ருச. ஏமாந்திருப்பச் சிறப்பை இந்திரன் அளித்தலும்.

ருசு. மணி. உஅ : கருஎ.

ருரு - சு. பன்னிரண்டுவருடம் மழை வளத்தை இழந்ததாகிய பாண்டிநாடு; மணி. உரு : க0க - உ.

ருஎ. வசி - மழை; (மணி. க : எக); வசித்தொழிலுதவ: மணி. உஅ : உஙங.

ருஅ. பசிப்பு - பசித்தல்.

ருரு - அ. பாண்டிநன்னாடு பான்மைத்தாகலின்.

ருகூ. ஆபுத்திரன் பலநாளிருந்து அறஞ்செய்தற்கிடனாயதுபற்றி அம்பலம் அவனதாகக்கூறப்பட்டது. அம்பலப் பீடிகை: மணி. கங : க0எ, கச : க.

சு0. ஊணொலி அரவம் - மக்களும் மாவும் பறவையும் ஒருங்கு வந்து சோற்றை உண்ணுதலால் ஒலிக்கும் ஒலி; ஒலியரவம்: வினைத்தொகை.

சுக. விடர் - தீயநடையையுடைய காமுகர்; ஒரு வித்தையையுடையவரென்று கூறுவர் பிரதாபருத்திரீய வடநூலாசிரியரென்பர். தூர்த்தர் - பரத்தையை நுகருங் காமுகர். விட்டேற்றுளர் - இகழ்ந்து கடுஞ்சொற் சொல்லுவோர். விடருந்தூர்த்தரும்: (மணி. கரு : சு0); "விடருந் தூர்த்தரும் விட்டே றுரைப்ப" (பெருங். க : ஙரு : உஉசு); "சிற்றினமாவது விடரும் தூர்த்தரும் நடருமுள்ளிட்டகுழு" (குறள். சசு, அவ.)என்றும், "நகைவகையராகிய நட்பினராவார் விடரும் தூர்த்தரும் வேழம்பரும்போன்று பலவகையால் நகுவித்துத் தாம் பயன் கொண்டு ஒழிவார்" (குறள். அகஎ) என்றும் பரிமேலழகரெழுதியிருக்கின்றனர். இவ்வடியிலுள்ள விடர்முதலிய மூன்று பெயர்களுள் மூன்றாவதாகிய விட்டேற்றுளரென்பதற்குச் சரியாக முறையே 'நடர்', 'வேழம்பர்' என்பனவற்றைப் பரிமேலழகர் அமைத்திருத்தலை நோக்குமிடத்து விட்டேற்றுளரென்பதற்கு நடரென்றேனும் வேழம்பரென்றே

(பி - ம்.) ருசு. 'வளங்கரந்தது' ருஎ - அ. 'வசிதொழிலுதவமாநிலங் கொழுதிப்பசியுயிர்' ருஅ - சுங. 'பான்மையதாக, வட்டும்'

நடவை மாக்களு நகையொடு வைகி
வட்டுஞ் சூதும் வம்பக் கோட்டியு
முட்டா வாழ்க்கை முறைமைய தாக
கூரு வாபுத் திரன்ற னம்பல நீங்கி
யூரூர் தோறு முண்போர் வினாஅ
யாரிவ னென்றே யாவரு மிகழ்ந்தாங்
கருந்தே மாந்த வாருயிர் முதல்வனை
யிருந்தாய் நீயோ வென்பா ரின்மையிற்
எ0 றிருவின் செல்வம் பெருங்கடல் கொள்ள
வொருதனி வரூஉம் பெருமகன் போலத்
தானே தமியன் வருவோன் றன்முன்



னும் பொருள்கொள்ளுதல் பொருத்தமுடைத்தெனத் தோற்றுகின்றது. இனிச் சுற்றத்தினின்றும், நட்பினின்றும் நீங்கிப் பிறரையும் அவ்வண்ணம் செய்விப்போனை விட்டேற்றியென்றல் வழக்கின்கண் உண்மையின், விட்டேற்றாள ரென்பதற்கு அத்தன்மையையுடையோரென்று பொருள்கூறினும் பொருந்தும்.

கூஉ. நடவை - வழி. வைகி - விடர் முதலியோர் தங்குதலால்.

கூங. வட்டு - உண்டையுருட்டுதல்; "அரங்கின்றி வட்டாடி யற்றே" (குறள். ச0க); "கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்" (நற்றிணை, ங.) வம்பக்கோட்டி - பயனில் சொற்களைச் சொல்லுவோர் கூட்டம்; "புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி" (நாலடி. கருரு); "வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்" சிலப். ங0 : ககஅ.

கூச. முட்டா வாழ்க்கை - குறையாத வாழ்க்கை; "முட்டா வின்பத்து முடிவுல கெய்தினர்" சிலப். கரு : ககஎ.

ருக - கூச. பீடிகை ஒடுங்கியதாகி முறைமையதாகவென்க.

கூகூ. உண்போர் வினாஅய் - உண்போரைவினவி.

கூஎ. இகழ்ந்து - இகழ்தலால்.

கூஅ. அருந்தேமாந்த - பிறர் உண்ண ஆசைப்பட்ட; (மணி. கஅ : எஉ; புறநா. க0க.) ஆருயிர்முதல்வனை - ஆபுத்திரனை.

கூகூ. நீ இருந்தாயோவென்று வினவுவோரில்லாமையால்.

கூஎ - கூ. இகழ்தலால் இன்மையின்.

எ0. செல்வத்தைக்கடல் கொள்ள.

எக. பெருமகன் - அரசன்; "பெருநில முழுதாளும் பெருமகன்" சிலப். க : ஙக.

எஉ. உண்போர்பலரிடையே யிருந்தோன் இப்போது மிகத் தனிமை யுற்றானென்பார், 'தானே தமியன் வருவோன்' என்று ஆசிரி

(பி - ம்.) கூகூ. 'உண்போர்வினவ' கூஅ. 'இருந்தேமார்ந்த' எ0. செல்வமொருகடல்' எஉ. 'தமியேவருவோன்'

மாநீர் வங்கம் வந்தோர் வணங்கிச்
சாவக நன்னாட்டுத் தண்பெயன் மறுத்தலி
௭௫ னூனுயிர் மடிந்த துரவோ வென்றலு
மமரர்கோ னாணையி னருந்துவோர்ப் பெறாது
குமரி மூத்தவென் பாத்திர மேந்தி
யங்கந் நாட்டுப் புகுவதென் கருத்தென
வங்க மாக்களொடு மகிழ்வுட னேறிக்
௮௦ கால்விசை கடுகக் கடல்கலக் குறுதலின்
மாலிதை மணிபல் லவத்திடை வீழ்த்துத்

---

யர் இரங்கிக் கூறினர்; இப்படியே, "காடேந்து பூஞ்சாரல் கடந்தான் காவிற் கழலானே", "கானம் வழங்கன் மேவிக் காலின்னேகி னானே" (சீவக. ௧௨௨௩, ௧௪௧௨) எனத் திருத்தக்கதேவர் நடந்துசென்ற சீவகனைப்பற்றி இரங்கிக் கூறியிருத்தல் காண்க.

௭௦ - ௭௨. "நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர, செய்யா தமைகலா வாறு" (௨௧௧) என்னும் குறளை இவ்வடிகளின் பொருளோடு ஒப்பிடுக.

௭௩. மாநீர் - கடல். வங்கம் - கப்பல்.

௭௪. தண்பெயல் மறுத்தலின் - தண்ணியமழை இல்லாது போனமையால்.

௭௫. ஊன் உயிர்மடிந்தது - உடம்போடு கூடியவுயிர் அவ்வுடம்பினின்றும் நீங்கிற்று. என்றலும் - என்று வங்கம்வந்தோர் கூறலும்.

௭௬. இந்திரன் கட்டளையினால் உண்போரைப்பெறாமல்; ஆணையிற் பெறாதென்க; ஆணை - கட்டளை. வரங்கொடுத்தற்குவந்த இந்திரன் ஆபுத்திரன் தன்னை மதியாததுபற்றிக் கோபங்கொண்டு இரப்போர் இலராகும் வண்ணம் நாடுவளஞ்சுரக்கும்படி மழைபெய்வித்தமையின், இங்ஙனங்கூறினர்; இதனை இக்காதையில் ௩௪ - ஆம் அடிமுதலியவற்றாலுணர்க.

௭௭. குமரிமூத்த என்பாத்திரம் - ஒருகன்னிப்பெண் வறிதேமூத்தாற்போன்ற எனதுபாத்திரம்; கொடுப்போருங் கொள்வாருமேயன்றித் தானும் பயனிழந்து கழிந்த குமரியை ஈண்டு உவமைகூறினமையின் தானும் ஏற்பாருமேயன்றிப் பாத்திரமும் பயனிழந்து கழிந்ததேயென்று ஆபுத்திரன் இரங்கியவாறாயிற்று, "அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம், பெற்றா டமியண்மூத் தற்று" (குறள். ௧௦௦௭); குமரிமூத்த: (மணி. ௨௨ : ௧௪௩.) பாத்திரம் - பாத்திரத்தை.

௭௮. அங்கந்நாடு: இவை ஒருசொன்னீர்மைய. என் கருத்தென - என தெண்ணமென்று ஆபுத்திரனினைந்து.

௮௦. கால் - காற்று. ௮௧. இதை - கப்பற்பாய்.

(பி - ம்.) ௭௪ - ௮. 'சாவகநன்னாட்டுப் புகுவது பொருளென, வங்க' ௮௦. 'கால்விசைநடுக்கிக்கடல்'

தங்கிய தொருநாட் டானுங் கிழிந்தன
னிழிந்தோ னேறின னென்றிதை யெடுத்து
வழங்குநீர் வங்கம் வல்லிருட் போதலும்
அரு வங்கம் போயபின் வருந்துதுய ரெய்தி
பங்கு வாழ்வோர் யாவரு மின்மையின்
மன்னுயி ரோம்புமிம் மாபெரும் பாத்திர
மென்னுயி ரோம்புதல் யானோ பொறேனென்
றவந்தீர் மருங்கிற் றனித்துய ருழந்தேன்
கூ0 சுமந்தென் பாத்திர மென்றனன் றொழுது
கோமுகி யென்னுங் கொழுநீ ரிலஞ்சியி
னோரியாண் டொருநாட் டோன்றென விடுவோ
னருளறம் பூண்டாங் காருயி ரோம்புந
ருளரெனி லவர்கைப் புகுவா யென்றாங்
கூரு குண்ணா நோன்போ டுயிர்பதிப் பெயர்ப்புழி
யந்நா ளாங்கவன் றன்பாற் சென்றே
னென்னுற் றனையோ வென்றியான் கேட்பத்

---

அஉ. ஒருநாள் கப்பல் தங்கியது.

எக-அஉ. ஏறி ஆங்கு இழிந்தனன்.

அகூ. அங்கு - மணிபல்லவத்தில்.

அஎ. ஓம்பும்: முற்று. பாத்திரம் மன்னுயிரோம்புமென்க.

அகூ. இப்பாத்திரமடைவதற்கு முற்பிறப்பில் மிக்க நல்வினைசெய்த நான் அதனையொழிந்து பின்னர்ச் சிறிது தீவினையுஞ்செய்தபக்கத் தானே தனித்துத் துயரத்தையுழந்தேன்; சிலப். கச: உகூ.

கூ0. பாத்திரம் சுமந்து என் - ஏற்போரில்லாத இவ்விடத்தில் இப்பாத்திரத்தை யான்சுமத்தலால் வரும்பயன் யாது.

கூஉ. ஓர்யாண்டொரு நாளென்றது, வைசாகசுத்தபௌர்ணி மையை.

கூங. அருளறம் - தயாதருமம்; மணி. ரு: எரு - ஆம் அடியின் குறிப்பிற்காண்க.

கூச. புகுவாயென்று - புகுவாயென்று சொல்லிப் பாத்திரத்தைக் கோமுகியில் விடுத்து.

கூரு. பட்டினிவிட்டிருத்தலாகிய விரதத்தால் உயிரை விடுகையில்; "உண்ணா நோன்போ டுயிர்பதிப் பெயர்த்ததும்" சிலப். உஎ: அங.

கூஎ. யானென்றது அறவணவடிகள். என் உற்றனையோ - யாது துன்பமடைந்தாயோ.

(பி - ம்.) அஉ. 'தயங்கியதொருநாள்' அஅ. 'யானோபோற்றேன்' கூக. 'என்னுமிக்கொழுநீர்' கூச. 'கைச்செல்வாயென்றாங்கு'

தன்னுற் றனபல தானெடுத் துரைத்தனன்
குணதிசைத் தோன்றிக் காரிருள் சீத்துக்
கா00 குடதிசைச் சென்ற ஞாயிறு போல
மணிபல் லவத்திடை மன்னுடம் பிட்டுத்
தணியா மன்னுயிர் தாங்குங் கருத்தொடு
சாவக மாளுந் தலைத்தாள் வேந்த
னுவயிற் றுதித்தன னுங்கவன் றனென்.

கச.—*பாத்திரமரபுகூறியகாதை முற்றிற்று.

---

கூஅ. தன்னுற்றனபல - தன்னையடைந்த பலதுன்பங்களை.

கூகூ. சீத்து - நீக்கி.

க0க. உடம்பிட்டு : "தம்முடம் பிடாஅது" பொருந. கூக.

க0உ. தன்னாற் பசிதணிக்கப்படாத நிலைபெற்ற உயிரைப்பாது காக்கும் எண்ணத்துடன்.

க0ரு. தாள் - முயற்சி. வேந்தன் - பூமிசந்திரன்.

க0சு. ஆங்கவன் - ஆபுத்திரன்.

க0ரு - சு. ஆபுத்திரனைப்பெற்ற பசு மண்முகனென்னும் முனிவனிடத்ததாயினும் பூமிசந்திரனுடைய நாட்டகத்ததாதலின், 'வேந்தனு' எனப்பட்டது.

க0உ - சு. உயிர் உடம்பினீங்குங் காலத்து அதனால் யாதொன்று பாவிக்கப்பட்டது அஃது அதுவாய்த்தோன்றுமென்பது எல்லா நூல்களுக்கும் ஒத்த துணிபாகலின், 'மன்னுயிர் தாங்குங் கருத்தொடு, ஆவயிற் றுதித்தனன்' என்றார்; குறள், ருஙஅ, பரிமேல்.

க - க0சு. உழந்தோர் மலைக்குமென்றலும், இல்லோன் அருெய்த, சிந்தாவிளக்குத் தோன்றிப் பாத்திரங்கொடுத்தலும், ஆபுத்திரன் ஓம்பலின், விடாவாய் ஒலிப்ப, இந்திரன்கொள்கென, உரைசெய்வோன், 'யாவையீங்களிப்பன தேவர்கோன்' என்றலும், ஆயிரங்கண்ணோன் உலகோர்க்களித்தலும், பாண்டிநன்னாடு பான்மைத்தாகலின், பீடிகை முறைமையதாக, ஆபுத்திரன்நீங்கி உண்போரைவினாவி, என்பாரின்மையின் வருவோன்றன்முன் வந்தோர் மடிந்ததென்றலும், வங்கமேறி இழிந்தனன்; வங்கம் வல்லிருட்போதலும் துயரெய்தி விடுவோன் புகுவாயென்று உயிர்பதிப்பெயர்ப்புழிச்சென்றேன்; கேட்ப உரைத்தனன்; அவன் ஆவயிற்றுதித்தனனென வினைமுடிவு செய்க.

(பி - ம்.) கூஅ. 'தன்னுறுதுன்பம்' கூகூ. 'காரிருள்நீத்து' க0ரு. 'தலைத்தார்வேந்தன்' * 'அமுதசுரபியென்னும் பாத்திரமரபு கூறிய காதை முற்றும்'

பதினைந்தாவது

# பாத்திரங்கொண்டு பிச்சைபுக்ககாதை.

[பதினைந்தாவது மணிமேகலை பாத்திரங்கோண்டு பிச்சைக்குப் பெருந்தெருப்போய பாட்டு.]

இன்னுங் கேளா யிளங்கொடி மாதே
யந்நா ளவனை யோம்பிய நல்லாத்
தண்ணென் சாவகத் தவள மால்வரை
மண்முக னென்னு மாமுனி யிடவயிற்
௫ பொன்னின் கோட்டது பொற்குளம் புடையது
தன்னலம் பிறர்தொழத் தான்சென் றெய்தி
யீனா முன்ன மின்னுயிர்க் கெல்லாந்
தான்முலை சுரந்து தன்பா லூட்டலு
மூன்று காலமுந் தோன்றநன் குணர்ந்த
௧௦ வான்ற முனிவ னதன்வயிற் றகத்து
மழைவளஞ் சுரப்பவு மன்னுயி ரோம்பவு
முயிர்கா வலன்வந் தொருவன் றோன்றுங்
குடர்த்தொடர் மாலை பூண்பா னல்ல
னடர்ப்பொன் முட்டை யகவையி னானெனப்

---

௨. அந்நாள் - சாலியென்பவள் ஈன்றுபோகட்டுப்போனநாளில்; மணி. ௧௩ : ௧௦. அவனை - ஆபுத்திரனை.

௩. சாவகம் - சாவகநாடு. ௫. கோட்டது - கொம்பையுடையது.

௨ - ௮. நல்லா, மாமுனியிடத்திற் கோட்டதாய்க் குளம்புடையதாய்ச் சென்றெய்தி உயிர்க்கெல்லாம் தன் பாலூட்டலுமென்க.

௧௦. முனிவன் - மண்முகன். அதன் வயிற்றகத்து - அப்பசு வயிற்றில்.

௧௨. உயிர்காவலனாகிய ஒருவன் வந்து தோன்றுவான்.

௧௦ - ௧௨. அதன்வயிற்றகத்துத் தோன்றுமென்க.

௧௪. பொன் அடர்முட்டை அகவையினான் - பொற்றகட்டாலாகிய முட்டையின் உள்ளிடத்துள்ளான். என - என்று மண்முகமுனிவன் சொல்ல.

௧௩ - ௪. அங்ஙனந்தோன்றுவோன்குடர்மாலை பூண்பானல்லன்;

(பி - ம்.) ௪. 'மனமுகனென்னு' ௮. 'நான்முலை சுரந்துநன்பா லூட்டலும்' ௧௦. 'ஆன்வயிற்றகத்து' ௧௪. 'ஆவயிற்றான்', 'அகவையிற்றான்.'

கரு பிணிநோ யின்றியும் பிறந்தறஞ் செய்ய
மணிபல் லவத்திடை மன்னுயிர் நீத்தோன்
றற்காத் தளித்த தகையா வதனை
யொற்கா வுள்ளத் தொழியா னாதலி
னுங்கவ் வாவயிற் றமரர்கணா மூவப்பத்
உ0 தீங்கனி நாவ லோங்குமித் தீவினுக்
கொருதா னாகி யுலகுதொழத் தோன்றினன்
பெரியோன் பிறந்த பெற்றியைக் கேணீ
யிருதிள வேனிலி லெரிகதி ரிடபத்
தொருபதின் மேலு மொருமூன்று சென்றபின்
உரு மீனத் திடைநிலை மீனத் தகவையிற்
போதித் தலைவனொடு பொருந்திய போழ்தத்து
மண்ணக மெல்லா மாரி யின்றியும்
புண்ணிய நன்னீர் போதொடு சொரிந்தது
போதி மாதவன் பூமியிற் றோன்றுங்
ந0 கால மன்றியுங் கண்டன சிறப்பெனச்

---

முட்டை அகவையினனென ; "குடர்த்தொடர் மாலை சூழா தாங்கோ, ரடர்ப்பொன் முட்டையு ளடங்கிய வண்ணமும்" (உரு : எஉ - ந) என்பர் பின்னும்.

கரு. பிணிநோயின்றியும் - பிணியாலுளதாகும் வருத்தம் இல்லா திருக்கவும்.

கசு. உயிர் நீத்தோன் - உயிரைத்துறந்தவனாகிய ஆபுத்திரன்.

கரு - கசு. நோயின்றியும் அறஞ்செய்தற்பொருட்டு உயிர் நீத்தோ னென்க; "உண்ணா நோன்போ டுயிர்பதிப் பெயர்ப்புழி" (கசு : கரு) என்று முன்பு வந்திருத்தல் காண்க.

கஎ. தகை : அழகு ; தகுதியுமாம்.

கஅ. ஒற்கா - தளராத; இஃது ஒல்காவென்பதன் விகாரம் ; "ஒல்க லுள்ளமொ டொருபுடைத தழீஇ" புறநா. கநரு.

கசு - உக. நீத்தோன் அவ்வாவயிற்றுத் தோன்றினன்.

உஉ. பெற்றி - பேறு. உந - சு. மு. மணி. கக : சப.

உக - சு. போழ்தத்துத் தோன்றினனென வியையும்.

உகூ. போதிமாதவன் - புத்தன்.

ந0. சிறப்புக்கள் காணப்பட்டன.

உகூ - ந0. புத்தன் தோன்றுங்காலத்து உளவாகுஞ் சிறப்புக்களை, மணி, கஉ : அசு - ஆம் அடி முதலியவற்றிற் காண்க.

(பி - ம்.) கஎ. 'தகையாத்தகுதி' உஉ. 'பெற்றியதுகேள்' உந. 'எறிகதிரிடபத்' உக. 'போதி நாதன்'

சக்கர வாளக் கோட்டம் வாழு
மிக்க மாதவர் விரும்பினர் வியந்து
கந்துடை நெடுநிலைக் கடவு ளெழுதிய
வந்திற் பாவை யருளு மாயிடி
நடு னறிகுவ மென்றே செறியிருட் சேறலு
மணிபல் லவத்திடை மன்னுயிர் நீத்தோன்
றணியா வுயிருயச் சாவகத் துதித்தன
னுங்கவன் றன்றிற மறவண னறியுமென்
றீங்கென் னுவை வருத்திய திதுகேண்
சு0 மண்ணாள் வேந்தன் மண்முக னென்னும்
புண்ணிய முதல்வன் றிருந்தடி வணங்கி
மக்களை யில்லேன் மாதவ னருளாற்
பெற்றேன் புதல்வனை யென்றவன் வளர்ப்ப
வரைசாள் செல்வ மவன்பா லுண்மையி
சடு னிரைதார் வேந்த னாயின னவன்றான்
றுறக்க வேந்தன் றுய்ப்பிலன் கொல்லோ
வறக்கோல் வேந்த னருளிலன் கொல்லோ
சுரந்து காவிரி புரந்துநீர் பரக்கவு
நலத்தகை யின்றி நல்லுயிர்க் கெல்லா

---

நடு. அந்தில் - அவ்விடத்து ; "அந்தி லரங்கத் தகன்பொழி லக வயின்" சிலப். கக : கூ.

உஅ - நடு. நீர் சொரிந்தது, சிறப்புக்கண்டனவென்று மாதவர் வியந்து அறிகுவமென்று பாவைபாற் செறியிருளிற் செல்லுதலுமென்க.

நகூ. என்னுவை வருத்தியதென்றது, முனிவர்களுக்கு ஆபுத்திரன் வரலாற்றை யான் சொல்லும்படி அப்பாவை செய்ததென்றவாறு.

சு0. வேந்தன் - பூமிசந்திரன்.

சடு. நிரைதார் : வினைத்தொகை. அவன்றான் - ஆபுத்திரன்றான். இதுகாறும் ஆபுத்திரன்றிறங் கூறப்பட்டது.

சகூ. துறக்கவேந்தன் - இந்திரன். துய்ப்பு இலன்கொல்லோ - அவிநுகர்ச்சி இலனாயினனோ;

(பி - ம்.) நக, 'கோட்டகவாழு' நஎ. 'தணியாதுயருறு சாவகத்து' சக. 'திருந்தடிபொருந்தி' சச. 'அவன்வயினுண்மையி' சகூ. 'துப்பிலன் கொல்லோ' சஅ. 'புரிந்து நீர்க்காக்கவும்'

௫௦ மலத்தற் காலை யாகிய தாயிழை
வெண்டிரை தந்த வமுதை வானோ
றுண்டொழி மிச்சிலை யொழித்துவைத் தாங்கு
வறனோ டுலகின் வான்றுயர் கெடுக்கு
மறனோ டொழித்த லாயிழை தகாதென
௫௫ மாதவ னுரைத்தலு மணிமே கலைதான்
றாயர் தம்மொடு தாழ்ந்துபல வேத்திக்
கைக்கொண் டெடுத்த கடவுட் கடிஞையொடு
பிக்குணிக் கோலத்துப் பெருந்தெரு வடைதலு
மொலித்தொருங் கீண்டிய வூர்க்குறு மாக்களு
௬௦ மெலித்துகு நெஞ்சின் விடருந் தூர்த்தருங்

---

௫௦. அலத்தற்காலை ஆகியது - வறுமைக்காலம் உண்டாயிற்று. ஆயிழை: விளி.

௪௯ - ௫௦. இப்படியே, "செங்கோல் கோடியோ... ..அறியேன்" (௨௮ : ௧௮௮ - ௯௧) என்று பின்வருதல் காண்க.

௫௨. மிச்சில் - மிகுதி. ஒழித்து வைத்தாங்கு - பயன்படுத்தாது வைத்தாற்போல.

௫௩. வறன் ஓடு உலகு - வற்கடமானகாலம் பரந்தவுலகம்; "வறனோடின் வையகத்து வான்றருங் கற்பினாள்" கலி. ௧௬.

௫௪. அறன் ஓடு ஒழித்தல் - அமுதசுரபியைப் பயன்படுத்தாது வைத்தல்.

௫௩ - ௪. மணி. ௨௧ : ௧௫௭ - ௮.

௫௫. மாதவன் - அறவணவடிகள்.

௫௬. தாயர் - மாதவி, சுதமதி. ௫௭. கடிஞை - பிச்சைப்பாத்திரம்.

௫௮. பிக்குணிக்கோலத்து - பிக்குணிக்கோலத்துடன்; துறந்தோர்களில் ஆண்பாலாரைப் பிக்ஷுக்களென்றும், பெண்பாலாரைப் பிக்ஷுணிகளென்றுங்கூறுதல் பௌத்தசமயமரபு. கோலம் - வேடம்.

௫௫ - ௮. மணிமேகலை ஏத்திக் கடிஞையொடு கோலத்தோடு பெருந்தெருவடைதலுமென்க.

இனிப் பெருந்தெருவிற் பிச்சைக்குப் போந்த மணிமேகலையின் பிக்குணிக் கோலத்தைக் கண்டோருடைய மனவருத்தத்தைக் கூறுவார்.

௫௯. குறுமாக்கள் - அறிவில்லாத சிறியர்; "அடர்க்குறு மாக்கள்" (௧௩ : ௪௦) என்றார் முன்னும்; "ஊர்க்குறு மாக்கள்" புறநா. ௯௪.

௬௦. மெலிந்து, மெலித்தென்றாயது விகாரம். விடருந் தூர்த்தரும்: மணி. ௧௪ : ௬௧.

(பி - ம்.) ௫௨. 'ஒளித்துவைத்தாங்கு' ௫௯. 'ஒளித்தொருங்கீண்டிய' ௬௦. 'விடமருந்தூர்த்தரும்'

கொடிக்கோ சம்பிக் கோமக னாகிய
வடித்தேர்த் தானை வத்தவன் றன்னை
வஞ்சஞ் செய்துழி வான்றனை விடீஇய
வுஞ்சையிற் றோன்றிய யூகி யந்தண
சுரு னுருவுக் கொவ்வா வுறுநோய் கண்டு
பரிவுறு மாக்களிற் றம்பரி வெய்தி
யுதய குமர னுளங்கொண் டொளித்த
மதுமலர்க் குழலாள் வந்து தோன்றிப்
பிச்சைப் பாத்திரங் கையி னேந்தியது
௭0 திப்பிய மென்றே சிந்தைநோய் கூர
மணமனை மறுகின் மாதவி யீன்ற

சுக. கோசம்பி - கௌசாம்பிநகரம்; இது, முதலிற் குசாம்ப னென்பவனாற் நிறுவப்பட்டதாதலின் இப்பெயர்பெற்றதென்பர்; இது பாகதம்; "கொடியணி நெடுமதிற் கொடிக்கோ சம்பி" (பெருங். க. ருச: எசு.) கோமகனாகிய - அரசனாகிய.

சுஉ. வடி - திருத்தம்; "வானுட்கும் வடிநீண்மதில்" (புறநா. கஅ.) வத்தவன் - வத்ஸதேசத்தரசனாகிய உதயணன்; "வயந்தக குமரன் வத்த வற் குரைப்ப" பெருங். க, சரு: அரு.

சுஉ - ரு. வத்தவன்றன்னை வஞ்சஞ் செய்துழி - (தனக்குத் திறை கொடாததுபற்றிச் சினந்து சாலங்காயனனென்னுந் தன்மந்திரியால் யந் திரயானையைக்காட்டி வஞ்சமாகப்பிடிப்பித்துப் பிரச்சோதனனென்னு மரசன்) உதயணனைச் சிறைப்படுத்தியபொழுது.

சுச. உஞ்சையில் - உச்சயினிநகரத்தில்; இஃது அவந்திநாட்டி லுள்ளது; பிரச்சோதனனுடைய இராசதானி; இதையே அவந்தியென் றும் வழங்குவர். தோன்றிய - வேற்றுருவங்கொண்டு தோன்றிய. யூகி யந்தணன் - பிரமசுந்தர யோகியென்பவருடைய குமாரன்; உதயண னுடைய மந்திரிகள் நால்வருளொருவன்.

சுசு. பரிவுறுமாக்களில் - துன்பமுற்ற சனங்களைப்போல.

சுக - சு. பிரச்சோதனன் உதயணனை வஞ்சித்துச் சிறைப்படுத் திய பொழுது அவனைச் சிறைமீட்டற்கு யூகியென்பவன் மாறுவடிவங் கொண்டு உச்சயினிநகரப்பெருந்தெருவையடைந்ததும், அதனைக்கண் டோர் பலரும் பரிவுற்றுச் சூழ்ந்ததுமாகியவிவற்றை உதயணகுமாரகாவி யத்துள்ள உஞ்சைக்காண்டத்தாலுணர்க.

௭0. திப்பியம், ஈண்டு ஆச்சரியமென்னும் பொருளைத்தந்து நின் றது. சிந்தைநோய்கூர - மனவருத்தம் மிக; சிந்தை - சிந்தாகுலம்; "என் றுண்டாங் கொல்லினிக் கட்படு நாளெனுஞ் சிந்தையே" சீவக. ககருக.

ருகு - ௭0. குறுமாக்களும் விடரும் தூர்த்தரும், மாக்களிற் பரி வெய்தி, குழலாள் தோன்றி எந்தியது திப்பியமென்று நோய்கூர வென்க.

வணிமலர்ப் பூங்கொம் பகமலி யுவகையிற்
பத்தினிப் பெண்டிர் பண்புட னிடூஉம்
பிச்சையேற்றல் பெருந்தக வுடைத்தெனக்
௭௫ குளனணி தாமரைக் கொழுமலர் நாப்ப
ணொருதனி யோங்கிய திருமலர் போன்று
வான்றரு கற்பின் மனையுறை மகளிரிற்
றான்றனி யோங்கிய தகைமைய ளன்றே
வாதிரை நல்லா ளவண்மனை யிம்மனை
௮௦ நீபுகல் வேண்டு நேரிழை யென்றனள்
வடதிசை விஞ்சை மாநகர்த் தோன்றித்
தென்றிசைப் பொதியிலோர் சிற்றியாற் றடைகரை
மாதவன் றன்னால் வல்வினை யுருப்பச்
சாவம் பட்டுத் தனித்துய ருழாஉம்

---

௭௨. பூங்கொம்பு - மணிமேகலை.

௭௨ - ௪. பூங்கொம்பு பத்தினிப்பெண்டிர் இடும் பிச்சையேற்றல் பெருந்தகவுடைத்தெனக் கூற.

௭௫ - ௯. மணி. ௪ : ௮ - ௯ ; பெருங். ௧. ௩௬ : ௧௧.

௭௭. வான்றருகற்பு - மழையைப் பெய்விக்குங்கற்பு ; (மணி. ௧௬ : ௪௯ - ௫0), "ஆங்கவை யொழிகுவை யாயி னாயிழை, யோங்கிரு வானத்து மழையுநின் மொழியது" (௨௨ : ௫௮ - ௯) என்று பின்வருதல் காண்க ; "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய் யெனப் பெய்யு மழை" (குறள், ௫௫); "வறனோடின் வையகத்து வான்ற ருங் கற்பினாள்" கலி. ௧௬.

௭௬ - ௯. திருமலர்போன்று ஆதிரைநல்லாள் தான் தனியோங்கிய தகைமையள்அன்றேவென்க.

௮௧. வடதிசை விஞ்சைமாநகர் - வடதிசையிலுள்ள வித்தியாதர நகரமாகிய காஞ்சனபுரத்தில்.

௮௨. பொதியில் - பொதியின்மலை.

௮௩. வல்வினையுருப்ப - வலியதீவினையழல ; உருப்ப - தோன்ற வென்றுமாம்.

௮௩ - ௪. மாதவன்றன்னாற் சாவம்பட்டு.

(பி - ம்.) ௭௨. 'பூங்கொடியகமலி' ௭௭. 'வான்றருசிறப்பின்' ௭௮. 'தனியோகியதகைமை' ௭௯. 'நல்லாளகன்மனை' ௮௨. 'தென்றிசை மருங்கினோர்' ௮௩. 'மாதவன்றன்முன்'

அறு வீவில் வெம்பசி வேட்கையொடு திரிதருங்
காயசண் டிகையெனுங் காரிகை தானென்.

கரு.—பாத்திரங்கொண்டு பிச்சைபுக்ககாதை முற்றிற்று.

---

அகூ. காரிகை - பெண்.

அக - கூ. தோன்றி அடைகரையில் மாதவனுற் சாபம்பட்டுத்திரி தருங் காயசண்டிகையெனுங் காரிகையென்க ; மணி. கஎ : உக - எங, உ0 : உஉ - கூ.

அ0 - அகூ. என்றனள் காயசண்டிகையெனுங் காரிகையென்க.

க - அகூ. ''மாதே, கேளாய் ; நல்லா சென்றெய்தி ஊட்டலும், முனிவன், 'ஒருவன்றேன்றும் ; அவன் பூண்யானல்லன் ; அகவையினன்' என, நீத்தோன் ஒழியானுதலின், ஒருதானுகிப் போழ்தத்துத் தோன்றினன் ; அப்போழ்தத்து நன்னீர் போதொடு சொரிந்தது ; மாதவர் வியந்து அறிகுவமென்று பாவைபாற்சேறலும் அஃது, 'அறவணனறியும்' என்று என்னுவை வருத்திற்று ; இதுகேள் ; மண்ணுள்வேந்தன் வணங்கிப் பெற்றேனென்று வளர்ப்ப, உண்மையின், அவன் வேந்தனுயினன் ; அலத்தற்காலை ஆகியது ; ஒழித்தல் தகாது'' என மாதவனுரைத்தலும், மணிமேகலை தாயரொடு தாழ்ந்தேத்திக் கடிஞையொடு கோலத்தோடு பெருந்தெருவடைதலும், மாக்களும் விடரும் தூர்த்தரும் பரிவெய்தித் திப்பியமென்று நோய்கூர, பூங்கொம்பு, 'பெருந்தகவுடைத்து' என அதுகேட்டுக் காரிகை, 'நீ புகல்வேண்டும்' என்றனளென வினைமுடிவுசெய்க.

---

பதினுருவது

# ஆதிரைபிச்சையிட்டகாதை.

[பதினுருவது மணிமேகலைக்கு ஆதிரையென்னும் பத்தினிப்பெண்டிர் பாத்துணீத்தபாட்டு.]

ஈங்கிவள் செய்தி கேளென விஞ்சையர்
பூங்கொடி மாதர்க்குப் புகுந்ததை யுரைப்போ

---

க. ஈங்கிவள் : ஒருசொல்; (திருச்சிற். கக.) இவள் - ஆதிரை.

க - உ. விஞ்சையர்பூங்கொடி - காயசண்டிகை. மாதர்க்கு - மணிமேகலைக்கு : ஆதிரைக்கென்றுமாம். மாதர்க்கு உரைப்போளென்க. புகுந்ததை - ஆதிரைக்குச் சம்பவித்ததை.

(பி - ம்.) க. 'ஈங்கென்செய்தி'

ஏாதிரை கணவ னாயிழை கேளாய்
சாதுவ னென்போன் றகவில னாகி
ரு யணியிழை தன்னை யகன்றனன் போகிக்
கணிகை யொருத்தி கைத்தூ ணல்க
வட்டினுஞ் சூதினும் வான்பொருள் வழங்கிக்
கெட்ட பொருளின் கிளைகே டுறுதலிற்
பேணிய கணிகையும் பிறர்நலங் காட்டிக்
க0 காண மிலியெனக் கையுதிர்க் கோடலும்
வங்கம் போகும் வாணிகர் தம்முடன்
றங்கா வேட்கையிற் றானுஞ் செல்வுழி
நளியிரு முந்நீர் வளிகலன் வெளவ
வொடிமரம் பற்றி யூர்திரை யுதைப்ப
கரு நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்

---

ந - ச. கணவன் சாதுவனென்போன்.

ரு. ஆதிரையைப் பிரிந்துசென்று.

சு. கணிகை - வேசை. கைத்தூண் - தீய ஒழுக்கத்தால் வந்த உணவு ; கை - ஒழுக்கம் ; " கடவ தன்றுநின் கைத்தூண் வாழ்க்கை " (சிலப். கரு : ருஎ.) நல்கவென்பதன்பின், 'உண்டு' என்று ஒருசொல் வருவிக்க.

எ. வட்டினும் சூதினும் - வட்டாடலிலும் சூதாடலிலும்; (மணி. கச : சுந.) வழங்கி - கொடுத்து.

அ. கணிகைக்கும் வட்டிற்கும் சூதிற்கும் கொடுக்கப்படுதல்பற்றி, 'கெட்டபொருள்' என்றார். பொருளின்கிளை - பொருளின்பகுதிகள்.

க0. காணமிலி - பொன்னில்லாதவன். கையுதிர்க்கோடலும் ; உம் : உடனிகழ்ச்சி, " நீயெனப் பேச லோடும்......மயங்கி வீழ்ந் தான் " (சீவக. நஅக) என்புழிப்போல. கையுதிர்க்கோடல் : மணி. ந : க0க, ரு : ருரு.

அ - க0. கேடுறுதலிற் கையுதிர்க்கோடலுமெனக.

கக. வாணிகர் - வியாபாரிகள்.

கஉ. தங்கா வேட்கை - பலவிடத்தும் செல்லவேண்டுமென்ற விருப்பம். தானென்றது சாதுவனை.

கந. வளி - காற்று. கலன் - கப்பல். காற்றுற் கப்பல் கவிழ.

கச. ஓடிமரம் - பாய்மரத்தின் ஒடிந்ததுண்டம் ; " கூம்பிற்ற துண்டந் தழுவிக் கிடந்தான் " (சீவக. ருகந.) உதைப்ப - செலுத்த; " ஓடுந் திரைக ளுதைப்ப வுருண்டுருண்டு " சீவக. ருகரு.

கரு. பூ. மணி. கசு : நசு. நாகரென்பதன் பொருளை, மணி. அ : ருச - ஆம் அடியின் குறிப்பிற் பார்க்க. உடையில்லாமற் சஞ்சரிப்பவ ராதலின் நாகர், 'நக்கசாரணர்' எனப்பட்டார்; நக்கம்=நக்நம் - நிருவாணம். சாரணராகிய நாகர்.

பக்கஞ் சார்ந்தவர் பான்மைய னாயினு
னாவாய் கேடுற நன்மரம் பற்றிப்
போயினன் றன்றே னுய்யப் போந்தோ
ரிடையிருள் யாமத் தெறிதிரைப் பெருங்கட
உ0 லுடைகலப் பட்டாங் கொழிந்தோர் தம்முடன்
சாதுவன் றானுஞ் சாவுற் றனனென
வாதிரை நல்லா ளாங்கது தான்கேட்
டேஎ ரேயோ வெள்ளமூ ழீமந்
தாரீ ரோவெனச் சாற்றினள் கழறிச்
உரு சுடலைக் கானிற் றொடுகுழிப் படுத்து
முடலை விறகின் முளியெரி பொத்தி
மிக்கவென் கணவன் வினைப்பய னுய்ப்பப்
புக்குழிப் புகுவே னென்றவள் புகுதலும்

கசு. பான்மை - பகுந்த்தன்மை ; மணி. ௩ : ௩௧.

௩ - கசு. கணவன் சாதுவனென்போன், ஆகிப் போகி உண்டு வழங்கிச் செல்வுழி வௌவுதலாற் பற்றிச் சார்ந்து அவர்பான்மைய னாயின னென்க.

சாதுவன் கடலில் இறந்தானென்று கேட்ட ஆதிரையின்செய்தியை இனிக் கூறுவார்.

கஅ. போயினன் - சாதுவன். உய்ய - பிழைக்க.

ககூ. இடையிருள்யாமத்து - இருளையுடைய இடையாமத்தில் ; யாமம் - இரவு ; "யாம மும்பக லும்மறி யாமையால்" சீவக. க௩௫.

உ0. மணி. கஅ : ௬௪ ; சிலப். கரு : உஅ - கூ. உடை கலப்பட்டு - உடைந்தகப்பலில் அகப்பட்டு. ஒழிந்தோர் - இறந்தோர்.

உக. என - என்றுசொல்ல.

கஅ - உக. போந்தோர் சாவுற்றனனென.

உ௩. ஈமம் - பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு ; மயானமு மாம். உச. தாரீர் - தருவீர்.

உரு. சுடலைக்கான் - மயானம். படுத்து - செய்து. தொடுகுழிப் படுத்தல் : மணி. சு : சுசு.

உசு. முடலைவிறகு - முறுக்குண்ட விறகு ; "முடலை யாக்கை முழுவலி மாக்கள்" (பெரும்பாண். சுக.) பொத்தி - மூட்டி ; "தீயழற் பொத்தி" (உ : ருஉ) என்றார் முன்னும்

உஎ. உய்ப்ப - செலுத்த.

உஅ. புக்குழி - புக்கவிடத்து. அவள் - ஆதிரை.

கஅ - உஅ. போந்தோர், ஒழிந்தோர் தம்முடன் சாதுவனும் சாவுற்றனனென, நல்லாள் அதுகேட்டுக் கழறிப் படுத்துப்பொத்தி அதிற் புகுதலு மென்க.

படுத்துடன் வைத்த பாயற் பள்ளியு
௩௰ முடித்த கூறையு மொள்ளெரி யுருஅ
தாடிய சாந்தமு மசைந்த கூந்தலிற்
சூடிய மாலையுந் தொன்னிறம் வழாது
விரைமலர்த் தாமரை யொருதனி யிருந்த
திருவின் செய்யோள் போன்றினி திருப்பத்
௩௫ தீயுங் கொல்லாத் தீவினை யாட்டியேன்
யாது செய்கே னென்றவ ளேங்கலு
மாதிரை கேளுன் னரும்பெறற் கணவனை
யூர்திரை கொண்டாங் குய்ப்பப் போகி
நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்
௪௰ பக்கஞ் சேர்ந்தனன் பல்லியாண் டிராஅன்
சந்திர தத்த னெனுமோர் வாணிகன்
வங்கந் தன்னொடும் வந்தனன் றேன்று
நின்பெருந் துன்ப மொழிவாய் நீயென
வந்தரந் தோன்றி யசரீரி யறைதலு
௪௫ மையரி யுண்க ணழுதுயர் நீங்கிப்
பொய்கைபுக் காடிப் போதுவாள் போன்று
மனங்கவல் வின்றி மனையகம் புகுந்தென்
கண்மணி யனையான் கடிதீங் குறுகெனப்
புண்ணிய முட்டாள் பொழிமழை தரூஉ

௨௧. பாயற்பள்ளி - படுக்கையிடம்.
௩௰. உருஅது - உருமல். ௩௧. ஆடிய - பூசிய.
௩௨. வழாது - வழுவாமல். ௩௩. தாமரை - தாமரைமலரில்.
௩௪. திருவின்செய்யோள் - திருமகள் ; மணி. ௫ : ௪.
௩௬. யாதுசெய்கேன் - என்னசெய்வேன். அவள் - ஆதிரை.
௩௭. அரும்பெறற்கணவன் - பெறுதற்கரியகணவன்.
௪௪. அந்தரம் - ஆகாயம். அசரீரி - அருவமாய் எங்கும் நிறைந்துள்ள முதற்றெய்வம். ௪௬. போதுவாள் - வருவாள்.
௪௭. கவல்வு - கவலையடைதல். மனையகம் - மனையிடம்.
௪௮. கண்மணியனையான் - கணவன் ; சிலப். ௧௩ : ௭௫. உறுக என்று.
௪௯. முட்டாள் - வழுவாளாய் ; " புண்ணிய முட்டா " பட்டினப். ௨௦௪.
(பி - ம்.) ௨௯. 'படுத்துடனமைத்தபாவனைப்பள்ளியும்' ௩௮. 'கொண்டாங்குயிருயப்போகி' ௪௪. 'அந்தரத்தொன்றி' ௪௫. 'அழிதுயர்நீங்கி', 'அழியாதுநீங்கி.'

௫0 மரும்பெறன் மரபிற் பத்தினிப் பெண்டிரும்
விரும்பினர் தொழூஉம் வியப்பின ளாயின
ளாங்கவள் கணவனு மலைநீ ரடைகரை
யோங்குயர் பிறங்க லொருமர நீழன்
மஞ்சுடை மால்கட லுழந்தநோய் கூர்ந்து
௫௫ துஞ்சு துயில் கொள்ளவச் சூர்மலை வாழு
நக்க சாரணர் நயமிலர் தோன்றிப்
பக்கஞ் சேர்ந்து பரிபுலம் பினனிவன்
றன்னே தமியன் வந்தன னளிய
னூனுடை யிவ்வுடம் புணவென் றெழுப்பலு
௬0 மற்றவர் பாடை மயக்கறு மரபிற்
கற்றன னாதலிற் கடுந்தொழின் மாக்கள்
சுற்று நீங்கித் தொழுதுரை யாடி
யாங்கவ ருரைப்போ ரருந்திறல் கேளா
யீங்கெங் குருமக னிருந்தோ னவன்பாற்
௬௫ போந்தரு ணீயென வவருடன் போகித்

௫0. பெண்டிரும்; உம்மை: உயர்வு சிறப்பு.

சக - ௫0. மணி. கரு : எஎ.

௫க. வியப்பு - ஆச்சரியம். ஆதிரை வியப்பினளாயினள்.
மேலே சாதுவன் செய்திகூறுவார்.

௫உ. கணவனும் - சாதுவனும்.

௫ங. பிறங்கல் - மலை. நீழல் - நிழலில்.

௫ச. நோய் கூர்ந்து - வருத்தம்மிகுந்து.

௫௫. துஞ்சுதுயில்கொள்ள - (சாதுவன்) மிக்க நித்திரை
கொள்ள. சூர் - அச்சம். ௫௬. நயமிலர் - இனிமையில்லாதவர்.

௫எ. பரிபுலம்பினன் - இவன் மிகவும் வருந்தினன்; "பக்க நீங்கு
மின் பரிபுலம் பினரென" (சிலப். க0 : உஉ௬); "பரிபுலம் பலைத்தநும்
வருத்தம் வீட" மலைபடு. சகஎ.

௫௯. எழுப்பலும் - சாதுவனை எழுப்பலும்.

௬0. அவர்பாடை - நாகர்களுக்குரிய பாஷையை.

௬க. கடுந்தொழின்மாக்கள் - நாகர்.

௬ங. அருந்திறல் - பெறுதற்கரிய திறலையுடையாய்.

௬ச. இருந்தோன் : முற்று. ௬௫. என - என்று நாகர்சொல்ல.

(பி - ம்.) ௫ங. 'ஓங்கியபிறங்கல்' ௫ச. 'மாக்கடலிழந்த' ௬0.
'பாடையின்மயக்கற', 'மயக்குறு.' ௬உ. 'தொழுதுரையாடலும்'

கள்ளடு குழிசியுங் கழிமுடை நாற்றமும்
வெள்ளென் புணங்கலும் விரவிய விருக்கையி
லெண்குதன் பிணவோ டிருந்தது போலப்
பெண்டுட னிருந்த பெற்றி நோக்கிப்
௭0 பாடையிற் பிணித்தவன் பான்மைய னாகிக்
கோடுயர் மரநிழல் குளிர்ந்த பின்னவ
னீங்குநீ வந்த காரண மென்னென
வாங்கவற் கலைகட லுற்றதை யுரைத்தலு
மருந்தாத லின்றி யலைகட லுழந்தோன்
௭௫ வருந்தின னளியன் வம்மின் மாக்கா
ணம்பிக் கிளையளோர் நங்கையைக் கொடுத்து
வெங்களு மூனும் வேண்டுவ கொடுமென
வவ்வுரை கேட்ட சாதுவ னயர்ந்து
வெவ்வுரை கேட்டேன் வேண்டே னென்றலும்
௮0 பெண்டிரு முண்டியு மின்றெனின் மாக்கட்

---

௬௬. குழிசி - பானை. கழிமுடைநாற்றமும் - மிக்க புலால்நாற்றமும்.

௬௭. உணங்கல் - வற்றல்.

௬௮. எண்கு - கரடி. பிணவு - பெண்கரடி; "பன்றி புல்வாய்" (தொல். மரபு. ௫௮) என்னும் சூத்திரத்தில், 'ஒன்றிய' என்றதனால், பிணவென்பது கரடிக்குங் கொள்ளப்பட்டது.

௬௯. பெண்டு - மனைவி.

௭0. பாடையிற்பிணித்து - பாஷையினாலே வயமாக்கி.

௭௧. கோடு - கிளை. நிழல் - நிழலில். அவன் - நாகர்களுடைய குருமகன்.

௭௨. வந்தகாரணமென்னென - வந்தது யாதுகருதியென்று கேட்ப. வந்தகாரணம்: சிலப். ௧0 : ௧௯௬.

௭௩. அவற்கு - குருமகனுக்கு.

௭௫. அளியன் - அளிக்கத்தக்கான்; "அளியன் றானே முதுவாயிரவலன்" புறநா. ௨௮௪.

௭௭. என - என்று குருமகன் சொல்ல

௭௫ - ௭. மாக்காள், நம்பிக்கு வேண்டுவகொடுமென.

௭௮. அயர்ந்து - கவலையுற்று.

௮0. உண்டி - உணவு. இன்றெனின் - இலலையாயின்.

(பி - ம்.) ௭௧. 'குளிர்ந்தவன்பினன்' ௭௩. 'ஆங்கவனலகட்' ௭௬. 'நங்கையைக்கொடுமின்' ௭௯. 'கெட்டேன்'

குண்டோ ஞாலத் துறுபய னுண்டெனிற்
காண்குவம் யாங்களுங் காட்டுவா யாகெனத்
தூண்டிய சினத்தினன் சொல்லெனச் சொல்லு
மயக்குங் கள்ளு மன்னுயிர் கோறலுங்
அரு கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்
பிறந்தவர் சாதலு மிறந்தவர் பிறத்தலு
முறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையி
னல்லறஞ் செய்வோர் நல்லுல கடைதலு
மல்லறஞ் செய்வோ ரருநர கடைதலு
கூ0 முண்டென வுணர்தலி னுரவோர் களைந்தனர்
கண்டனை யாகெனக் கடுநகை யெய்தி
யுடம்புவிட் டோடு முயிருருக் கொண்டோ
ரிடம்புகு மென்றே யெமக்கீங் குரைத்தா
யவ்வுயி ரெவ்வணம் போய்ப்புகு மவ்வகை
கூரு செவ்வன முரையெனச் சினவா திதுகே
ளுற்றதை யுணரு முடலுயிர் வாழ்வுழி

---

அக. உறுபயனுண்டோ. அஉ. காண்குவம் - அறிவேம்.

அங. சினத்தினன் சொல்லென-கோபமுடையவனுய்ச் சொல்வா யென்று நாகருடைய குருமகன்கேட்ப. சொல்லும் - சாதுவன் சொல்லுவான்.

அரு. கயக்கு - கலங்குதல்; "கயக்கறு நல்லறம்" (கக: கஅ) என்றார் முன்னும்; பு. வெ. கஅஅ, உஉங.

அச - ரு. கள்ளையும் கொலையையும் அறிவுடையோர் நீக்கினர்.

அசு - எ. இவ்வடிகள், "உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி, விழிப்பது போலும் பிறப்பு" (ங௩க) என்னும் குறளின் பொருளைத் தழுவி வந்திருத்தல் காண்க.

அகூ. அல்லறம் - பாவம்; அறமல்லாததென்றபடி.

கூ0. உரவோர் - அறிவுடையோர்.

அஎ - கூ0. உண்மையின், உணர்தலின் உரவோர் களைந்தனர்.

கூக. கண்டனையாக - அறிந்தாயாகுக. என - என்று சாதுவன் சொல்ல. கடுநகை - பெருஞ்சிரிப்பு.

கூரு. செவ்வனம் - நேரே; "திருவிரி பூம்பொழிற் செவ்வனஞ் சேர்ந்து" (சீவக. ருகரு.) என - என்று குருமகன்சொல்ல.

கூசு. உயிர்வாழ்வுழி உடல் உற்றதையுணரும்.

(பி - ம்.) அக. 'உண்டோமாக்கட்குறுபய' அங - ச. 'சொல் லலு மயக்கும்'

மற்றைய வுடம்பே மன்னுயிர் நீங்கிடிற்
றடிந்தெரி யூட்டினுந் தானுண ராதெனி
னுடம்பிடைப் போனதொன் றுண்டென வுணர்நீ
க00 போனார் தமக்கோர் புக்கிலுண் டென்ப
தியானோ வல்லே னியாவரு முணர்குவ
ருடம்பீண் டொழிய வுயிர்பல காவதங்
கடந்துசேட் சேறல் கனவினுங் காண்குவை
யாங்கனம் போகி யவ்வுயிர் செய்வினை
க0ரு பூண்ட யாக்கையிற் புகுவது தெளிநீ
யென்றவ னுரைத்தலு மெரிவிழி நாகனு
நன்றறி செட்டி நல்லடி வீழ்ந்து
கள்ளூ மூனுங் கைவிடி னிவ்வுடம்
புள்ளுறை வாழுயி ரோம்புத லாற்றேன்
கக0 றமக்கொழி மரபிற் சாவுறு காறு
மெமக்கா நல்லற மெடுத்துரை யென்றலு
நன்று சொன்னாய் நன்னெறிப் படர்குவை
யுன்றனக் கொல்லு நெறியற முரைக்கே
னுடைகல மாக்க ளுயிருய்ந் தீங்குறி
ககரு னடுதொழி லொழிந்தவ ராருயி ரோம்பி

---

கூஅ. தடிந்து - வெட்டி. க00. புக்கில் - புகுமிடம்.

க0உ. காவதம் - காதம். க0ங. சேண் - நெடுந்தூரம்.

க0உ - ங. உயிர்சேறல் கனவினுங் காண்குவை.

க0ச - ரு. உயிர் புகுவது.

க0சா. அவன் - சாதுவன். க0எ. நன்று - தருமம்.

கக0. தமக்கொழிமரபின் - தமக்கென்றே நேர்ந்த முறைமையினை யுடைய.

கக0 - கக. மரபினையுடைய நல்லறமென்க.

க0சா - கக. நாகனும் எடுத்துரையென்றலும்.

ககஉ. படர்குவை - செல்வாய்.

ககங. ஒல்லும் நெறி-இயலும் வழி; இவ்வடி, "ஒல்லும் வகையா னறவினை யோவாதே, செல்லும்வா யெல்லாஞ் செயல்" (ங௩) என்ற குறளின் கருத்தைத் தழுவி வந்தவாறு காண்க.

ககரு. அடுதொழில் - கொல்லுந்தொழில்.

(பி - ம்.) க0எ. 'நன்னெறிச்செட்டி தன்னடி' கக0 - கக. 'என்றெனக் கொழிய தேமுறு மேககாநன்றிநல்லற' ககஉ. 'நன்றிது சொன்னாய்'

மூத்துவிளி மாவொழித் தெவ்வுயிர் மாட்டுந்
தீத்திற மொழிகெனச் சிறுமக னுரைப்போ
னீங்கெமக் காகு மிவ்வறஞ் செய்கே
மாங்குனக் காகு மரும்பொருள் கொள்கெனப்
கஉ0 பண்டும் பண்டுங் கலங்கவிழ் மாக்களை
யுண்டே மவர்த முறுபொரு ளீங்கிவை
விரைமர மென்றுகில் விழுநிதிக் குப்பையோ
டிவையிவை கொள்கென வெடுத்தனன் கொணர்ந்து
சந்திர தத்த னென்னும் வாணிகன்
கஉரு வங்கஞ் சேர்ந்ததில் வந்துட னேறி
யிந்நகர் புகுந்திங் கிவளொடு வாழ்ந்து
தன்மனை நன்பல தானமுஞ் செய்தன
ளாங்கன மாகிய வாதிரை கையாற்
பூங்கொடி நல்லாய் பிச்சை பெறுகென
கங0 மனையகம் புகுந்து மணிமே கலைதான்
புனையா வோவியம் போல நிற்றலுந்
தொழுதுவலங் கொண்டு துயரறு கிளவியோ
டமுத சுரபியி னகன்சுரை நிறைதரப்

---

ககசு. மூத்துவிளிமா - முதுமையுற்று இறக்கும் விலங்குகள்.

ககஎ. தீத்திறம் - கொலை. என - என்று சாதுவன் சொல்ல.

கஉஉ. விரைமரம் - சந்தனம் அகில் முதலியன.

கஉங. என - என்று நாகன் சொல்ல.

ககஎ - உங. உரைப்போன் இவையிவை கொள்கெனவென்க.

கஉரு. வங்கஞ்சேர்ந்ததில் - சேர்ந்த கப்பலில்.

கஉஅ. ஆங்கனமாகிய - அத்தன்மையை உடையளாகிய.

உ - கஉக. உரைப்போள், பிச்சை பெறுகெனவென்க.

கஙக. பிச்சைவாங்கும்பொழுது துறவறத்தினர் மௌனமாக நிற்க வேண்டுமென்பது விதியாதலின், 'புனையா வோவியம் போல நிற்றலும்' என்றார்; புனையா வோவியம் - வண்ணங்களைக் கொண்டெழுதாத வடிவைக்கோட்டின சித்திரம்; மணி. உஉ: அஅ; நெடுநல். கசஎ, ந.

கஙங. அகன்சுரை: மணி. கக: ககஎ.

(பி - ம்.) கஉ0. 'பண்டுபண்டீங்குக்கலங்' கஉஅ. 'ஆயிழை கையாற்' கஙங. 'சுரபியினகனசுனை'

பாரக மடங்கலும் பசிப்பிணி யறுகென
கருடு வாதிரை யிட்டன ளாருயிர் மருந்தென்.

கசு.—ஆதிரைபிச்சையிட்டகாதை முற்றிற்று.

---

கருடு. ஆருயிர்மருந்து - அன்னம்.

கருரு - டு. நிறைதர இட்டனளென்க.

உ - கருடு. உரைப்போள், 'ஆங்கனமாகிய ஆதிரையையாற் பிச்சை பெறுக' என்று சொல்ல, மணிமேகலை மனையகம் புகுந்து நிற்றலும், ஆதிரை தொழுது வலங்கொண்டு ஆருயிர் மருந்திட்டனளென முடிக்க.

---

பதினேழாவது

# உலகவறவிபுக்ககாதை.

[பதினேழாவது மணிமேகலை
காயசண்டிகையென்னும் விச்சாதரிவயிற்று யானைத்தீயவித்து
அம்பலம்புக்கபாட்டு.]

பத்தினிப் பெண்டிர் பாத்தூ ணேற்ற
பிச்சைப் பாத்திரப் பெருஞ்சோற் றமலை
யறத்தி னீட்டிய வொண்பொரு ளறவோன்
றிறத்து வழிப்படூஉஞ் செய்கை போல

---

க. பத்தினிப்பெண்டிர் - ஆதிரை. பாத்தூண் - (இயல்புடைய மூவர் முதலாயினார்க்கும் தென்புலத்தார்முதலிய நால்வர்க்கும்) பகுத்துக்கொடுத்து உண்ணப்படும் உணவு; பாத்தல் - பகுத்தல். இதனால், ஆதிரையின் இல்வாழ்க்கைநலம் கூறப்பட்டது; "பழியஞ்சிப் பாத்தூணுடைத்தாயின் வாழ்க்கை, வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்" (குறள், சச.) பெண்டிரது பாத்தூணை.

உ. அமுதசுரபியிலுள்ள பெரிய சோற்றுத்திரளை; அமலை - சோற்றுத்திரளை; "அமலைக் கொழுஞ்சோறு" புறநா. ருச.

க - உ. ஏற்ற பாத்திரம்.

ரு. அறத்தின் ஈட்டிய - நல்வழியே சம்பாதித்த. ஒண்பொருள்: குறள், எசுO.

ரு - ச. அறவோன் திறத்து வழிப்படூஉம் செய்கைபோல-அறவோனிடத்துப் பெருகுதலுறுஞ் செய்கையைப்போல; அறவோன்-சற்பாத்தி

(பி - ம்.) க. 'பாத்தூணீய்த்த'

ரு வாங்குகை வருந்த மன்னுயிர்க் களித்துத்
தான்றொலை வில்லாத் தகைமை நோக்கி
யானைத் தீநோ யகவயிற் றடக்கிய
காயசண் டிகையெனுங் காரிகை வணங்கி
நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி
க0 யடலரு முந்நீ ரடைத்த ஞான்று
குரங்குகொணர்ந் தெறிந்த நெடுமலை யெல்லா
மணங்குடை யளக்கர் வயிறு புக்காங்
கிட்ட தாற்றாக் கட்டழற் கடும்பசிப்
பட்டே னென்றன் பழவினைப் பயத்தா

---

ரம். தானப்பொருள், பாத்திரத்தின் பெருமைக்குத்தக்கபடி பெருகுத லுறு மென்பதை, "விருந்தின், றுணைத்துணை வேள்விப் பயன்" (குறள், அஎ), "அறப்பயனுந், தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக் கால், வான்சிறிதாப் போர்த்து விடும்" (நாலடி. ௩அ) எனவருவனவற்றா லுணர்க.

௬. தகைமையை (காயசண்டிகை) நோக்கி.

உ - ௬. ஒண்பொருள் வழிப்படூஉஞ்செய்கைபோலப் பெருஞ் சோற்றமலைதான் தொலைவில்லாத்தகைமையை நோக்கியென்க.

எ. யானைத்தீநோய் - பஸ்மகவியாதி.

அ. காரிகை மணிமேகலையைவணங்கி.

௯. நெடியோன் - திருமால். மயங்கி - பருவதமுனிவரும் நாரத முனிவரும் அம்பரீடனுக்கிட்டசாபமாகிய அந்தகாரத்தைத் தான் ஏற் றுக் கொண்டமையால் மயக்கமுற்று. தோன்றி - இராமனாக அவத ரித்து. நெடியோன் நிலமிசைத் தோன்றிமயங்கியெனமாற்றுக. திரு மால் இராமனாக அவதரித்தபொழுது, முற்கூறிய சாபாந்தகாரத்தால் மயக்கமுற்றிருந்தா ரென்பதைப் பின்வருஞ் செய்யுளாலுணர்க: "கன்னி யந்துழாய்க் கமலலோ சனன்றய ரதற்கு, மன்னு நன்மக னாகியே வந் தன னுதித்து, முன்னை யந்தகா ரத்தினான் மூடிடப் பட்டுத், தன்னை மாயனென் றறிந்திடா துறைந்தனன் சார்ந்தே" இலிங்க. உத்தர. அம்ப ரீடனை ஆழிகாத்த. அ௫.

க0. முந்நீர் - ஆக்கல் முதலிய மூன்றுநீர்மையையுடைய கடல். அடைத்த ஞான்று - இலங்காநகரஞ்செல்ல அடைத்தநாளில்.

கஉ. அணங்கு - வருத்தம்; தெய்வத்தன்மையுமாம். அளக்கர் - கடல். புக்காங்கு - புகுந்தாற்போல.

கக - உ. மலையெல்லாம் அளக்கர் வயிறுபுக்காங்கென்க.

க௩. இட்டது ஆற்றா - இட்டபொருளால் தணியாத.

க௪. பட்டேன் - அடைந்தேன். வினைப்பயத்தாற் பட்டே னென்க.

(பி - ம்.) ௫ - ௬. 'அளிக்கத்தான' ௯. 'நெடுமோன்மயங்கி'

கரு லன்னை கேணீ யாருயிர் மருத்துவி
துன்னிய வென்னோய் துடைப்பா யென்றலு
மெடுத்த பாத்திரத் தேந்திய வமுதம்
பிடித்தவள் கையிற் பேணினள் பெய்தலும்
வயிறுகாய் பெரும்பசி நீங்கி மற்றவ
உ௦ ளியா நீங்கித் தொழுதன ளுரைக்கு
மாசில் வாலொளி வடதிசைச் சேடிக்
காசில்காஞ் சனபுரக் கடிநக ருள்ளேன்
விஞ்சையன் றன்னொடென் வெவ்வினை யுருப்பத்
தென்றிசைப் பொதியில் காணிய வந்தேன்
உரு கடுவர லருவிக் கடும்புனல் கொழித்த
விடுமணற் கானியாற் றியைந்தொருங் கிருந்தேன்

கரு. ஆருயிர் மருத்துவி - அரிய உயிரைப் பாதுகாக்கும் மருந்தை யுடையாய்; ஆருயிர்மருந்து - அன்னம்.

கசு. துன்னிய - நெருங்கிய. என்னோய் - எனது பசிமகா வியாதியை. என்றலும் - என்று காயசண்டிகை சொல்லலும்.

சு - கசு. காரிகை, நோக்கி வணங்கி, 'என்னோய் துடைப்பாய்' என்றலு மென்க.

கஎ அமுதம் - அன்னத்தை.

கஅ. அவள்கையில் - காயசண்டிகையின்கையில். பிடித்துப்பெய்தலும்.

கக. அவள் - காயசண்டிகை. உ௦. தொழுது உரைப்பாள்.

கக - உ௦. அவள் நீங்கி நீங்கித் தொழுது உரைக்கும்.

உக. வாலொளி - வெள்ளிய ஒளி. சேடி - வித்தியாதரருலகு. சேடி வெள்ளிமலைக்கண் உள்ளதாதலின், அதற்கு வாலொளி கூறப்பட்டது; "வெள்ளி மால்வரை வியன்பெருஞ் சேடி" சிலப். சு: க.

உஉ. காசு - குற்றம். காஞ்சனபுரமாகிய காவலையுடைய நகரம்.

உங. விஞ்சையன் - கணவனாகிய வித்தியாதரன். உருப்ப - தோற்ற; அழலவென்றுமாம்.

உச. பொதியில் - பொதியின்மலை. காணிய - காணுதற்கு.

உங - ச. விஞ்சையனொடு வந்தேன்.

உரு. கடுவரல் - விரைந்துவருதல். கொழித்த - தெள்ளிய.

உசு. கான்யாறு - காட்டாறு. ஒருங்கிருந்தேன் - கணவனுடனிருந்தேன்.

உச - சு. வந்தேன் கான்யாற்றிருந்தேனென்க.

(பி - ம்.) கசு. 'துன்னியவெந்நோய்' உஉ. 'காஞ்சனக்கடிநகர்', 'காஞ்சனபுறநகர்.' உச. 'காணியவருவேன்'

புரிநூன் மார்பிற் றிரிபுரி வார்சடை
மரவுரி யுடையன் விருச்சிக னென்போன்
பெருங்குலைப் பெண்ணைக் கருங்கனி யனையதோ
ங0 ரிருங்கனி நாவற் பழமொன் றேந்தித்
தேக்கிலை வைத்துச் சேணுறு பரப்பிற்
பூக்கமழ் பொய்கை யாடச் சென்றோன்
றீவினை யுருத்தலிற் செருக்கொடு சென்றேன்
காலா லந்தக் கருங்கனி சிதைத்தே
ஙரு னுண்டல் வேட்கையின் வரூஉம் விருச்சிகன்
கண்டன னென்னைக் கருங்கனிச் சிதைவுடன்
சீர்திகழ் நாவலிற் றிப்பிய மான
தீரா றாண்டி லொருகனி தருவ
தக்கனி யுண்டோ ராறீ ராண்டு
ச0 மக்க ளியாக்கையின் வரும்பசி நீங்குவர்
பன்னீ ராண்டி லொருநா ளல்லை

---

உஎ. புரிநூல் - முறுக்கிய பூணுநூல். திரிபுரிவார்சடை - திரித்து முறுக்கிய நீண்டசடை.

உஅ. மரவுரியுடையன் - வற்கலையாகிய ஆடையையுடையன். உடையனாகிய விருச்சிகனென்போன்.

உகூ. பெண்ணை - பனை. கருங்கனி - கரியகனி; பெரியகனி யென்றுமாம்.

ங0. இருமை - பெருமை. நாவல் - சம்புமரம்.

ஙக - உ. சேணநாறுபூ; சேண் - நெடுந்தூரம். பரப்பினையுடைய பொய்கை. ஆட - நீராட.

உஅ - ஙஉ. விருச்சிகனென்போன், நாவற்பழமொன்றையேந்தி வைத்துப் பொய்கையாடச் சென்றோனாகவென்க.

ஙங. உருத்தலின் - பயன்கொடுப்பத்தோற்றுதலினால். செருக்கு - களிப்பு.

ஙங - ச. உருத்தலிற் சென்று காலால் அந்தக்கனியைச் சிதைத்தேன்.

ஙரு. வேட்கை - விருப்பம்.

ஙசா. கருங்கனிச்சிதைவுடன் என்னைக் கண்டனன்.

மேல்வருவன விருச்சிகன்கூற்று.

ஙஎ. திப்பியம் - தெய்வலோகத்திலிருந்து உண்டாயது; இச் சொல் திவ்யமென்னும் வடமொழிச்சிதைவு; திவ் - தெய்வலோகம்; மணி. எ : கூஎ.

ஙஅ. ஆண்டு - வருடம். ஙகூ - ச0. உண்டோர் பசியை நீங்குவர்.

(பி - ம்.) ஙக. 'வைத்துச்சென்றூற்றுப்பரப்பிற்' ஙஎ - அ. 'திப்பியமாகிய வீராறு'

துண்ணு நோன்பினே னுண்கனி சிதைத்தா
யந்தரஞ் செல்லு மந்திர மிழந்து
தந்தித் தீயாற் றனித்துய ருழந்து
௪௫ முந்நா லாண்டின் முதிர்கனி நானீங்
குண்ணு நாளுன் னுறுபசி களைகென
வந்நா ளாங்கவ னிட்ட சாப
மிந்நாள் போலு மிளங்கொடி கெடுத்தனை
வாடுபசி யுழந்து மாமுனி போயபின்
௫0 பாடிமி ழருவிப் பயமலை யொழிக்தெ
னலவலைச் செய்திக் கஞ்சின னகன்ற
விலகொளி விஞ்சையன் விழுமமோ டெய்தி
யாரணங் காகிய வருந்தவன் றன்னாற்
காரண மின்றியுங் கடுநோ யுழந்தனை
௫௫ வானூ டெழுகென மந்திர மறந்தே

---

௪௨. நோன்பு - விரதம். சிதைத்தாய் - அழித்தாய்.

௪௩. மந்திரத்தை இழந்து.

௪௪. தந்தித்தீ - பஸ்மகவியாதியென்று வழங்குகிற யானைத்தீயென்னும் நோய்; சீவக. ௩௧௩. தனித்துயர் - ஒப்பற்றதுன்பம்.

௪௫. முந்நாலாண்டு - பன்னிரண்டு வருடம்.

௪௬. உறுபசி - மிக்க பசியை. களைகென - நீங்குகவென்று.

௪௭. அவன் - விருச்சிகன். சாபம் - சாபத்தை; சாபத்தின் முடிவெல்லையாகிய நாளென்றுமாம்; ஆகுபெயர்.

௪௭ - அ. இளங்கொடி, சாபத்தைக் கெடுத்தனை.

௪௯. உழந்து - வருந்தி. முனி - விருச்சிகன்.

௫0. ஒலி முழங்குகின்ற அருவியாலுண்டாகிய பிரயோசனத்தையுடைய பொதியின்மலையை. பாடிமிழ்: புறநா. ௪௧.

௫௧. அலவலைச்செய்திக்கு - மனத்திற்றோற்றியதை ஆராயாது செய்த என் செய்கைக்கு; "அலவலைவந் தப்பூச்சி காட்டுகின்றான்" (௨. ௧ : ௨), "பலபல நாழஞ் சொல்லிப் பழித்த சிசுபாலன் றன்னை, யலவலைமைதவிர்த்த வழகன்" (௪. ௩ : ௫) எனப் பெரியாழ்வார்திருமொழியில் வருதல்காண்க. இஃது அலவலைமையென்றும் வழங்கும்.

௫௨. விழுமம் - துன்பம்.

௫௩. ஆரணங்கு - அரியதெய்வத்தன்மை.

௫௩ - ௪. அருந்தவன்றன்னாற் கடுநோயுழந்தனை.

௫௫. வானூடு எழுக என - வானிடத்து எழுவாயென்று வித்தியாதரன் சொல்ல.

(பி - ம்.) ௪௬. 'உறுதுயர்' ௪௯. 'உழந்தமாமுனி' ௫0 - ௫௨. 'ஒழித்தே, னவலக்கவலை செய்வினையஞ்சி, யிலகொளி'

ஊனுயிர் நீங்கு முருப்பொடு தோன்றி
வயிறுகாய் பெரும்பசி வருத்துமென் றேற்குத்
தீங்கனி கிழங்கு செழுங்காய் நல்லன
வாங்கவன் கொணரவு மாற்றே னாக
௬0 நீங்க லாற்ற னெடுந்துய ரெய்தி
யாங்கவ னாங்கெனக் கருளொடு முரைப்போன்
சம்புத் தீவினுட் டமிழக மருங்கிற்
கம்ப மில்லாக் கழிபெருஞ் செல்வ
ராற்ற மாக்கட் காற்றுந் துணை யாகி
௬ரு நோற்றோ ருறைவதோர் நோனக ருண்டாற்
பலநா ளாயினு நிலனொடு போகி
யப்பதிப் புகுகென் றவனருள் செய்ய
விப்பதிப் புகுந்தீங் கியானுறை கின்றே
னிந்திர கோடணை விழவணி வருநாள்

---

ருக. உடம்பினின்றும் உயிர்நீங்குதற்குக் காரணமாகிய வெப்பத்தோடு.

ருஎ. வயிறுகாய் பெரும்பசி: மணி. கச: கூ. வருத்துமென்றேற்கு - வருத்துமென்ற என்பொருட்டு.

ருஅ. தீங்கனி - இனியபழம். நல்லனவென்பதை ஒவ்வொன்றோடுங் கூட்டுக.

ருகூ. ஆற்றேனாக - பசிதணியேனாக.

௬க. அவன் - வித்தியாதரன்.

௬உ. தமிழகமருங்கில் - தமிழ்நாட்டில்; "இமிழ்கடல் வரைப்பிற் றமிழக மறிய" சிலப். ௩: ௩எ.

௬௩. கம்பம் - நடுக்கம். கழிபெருஞ்செல்வர் - மிகப்பெரிய செல்வத்தையுடையார்.

௬ச. பூ. மணி. கக: ௩ரு. ஆற்றமாக்கள் - வறிஞர்.

௬ரு. நோற்றோர் - முற்பிறப்பில் தவஞ்செய்தோர். நோன் நகர் - வலிமையையுடையநகர்; நோன்மை-வலி; "சாப நோன்ஞாண்" (புறநா. கச.) நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

௬௩ - ரு. செல்வர் நோற்றார், ஆகி உறைவதோர் நகரென்க.

௬௬. பலநாள் ஆயினும் - ஆகாயவழியே செல்லக்கூடாமையாற் பலநாள் ஆகுமாயினும். நிலனொடுபோகி - பூமியில் நடந்துசென்று.

௬எ. அவன் - வித்தியாதரன்.

(பி - ம்.) ருஎ. 'என்றேற்கவன்' ௬ச. 'அருந்துணையாகிய' ௬௬. 'நிலைநாடுபோகி'

எ0 வந்து தோன்றியிம் மாநகர் மருங்கே
யென்னுறு பெரும்பசி கண்டனை னிரங்கிப்
பின்வரும் யாண்டவ னெண்ணினன் கழியுந்
தணிவில் வெம்பசி தவிர்த்தனை வணங்கினேன்
மணிமே கலையென் வான்பதிப் படர்கேன்
எரு றுக்கந் துடைக்குந் துகளறு மாதவர்
சக்கர வாளக் கோட்டமுண் டாங்கதிற்
பலர்புகத் திறந்த பகுவாய் வாயி
லுலக வறவி யொன்றுண் டதனிடை
யூரு ராங்க ணுறுபசி யுழந்தோ
அ0 ராரு மின்மையி னரும்பிணி யுற்றோ
ரிடுவோர்த் தேர்ந்தாங் கிருப்போர் பலரால்
வடிவாழ் கூந்த லதன்பாற் போகென்
றுங்கவள் போகிய பின்ன ராயிழை
யோங்கிய வீதியி னொருபுடை யொதுங்கி
அரு வலமுறை மும்முறை வந்தனை செய்தவ்
வுலக வறவியி னொருதனி யேறிப்
பதியோர் தம்மொடு பலர்தொழு தேத்து
முதியோள் கோட்ட மும்மையின் வணங்கிக்

---

எ0. இம்மாநகர் மருங்கே வந்துதோன்றியென்க.

எஉ. கழியும் - நீங்குவான்.

எச. மணிமேகலை: விளி. வான்பதிப்படர்கேன் - சிறந்த ஊராகிய காஞ்சனபுரத்திற்குச் செல்வேன்.

எரு. துக்கம் - பிறப்புமுதலியன; நால்வகைச் சத்தியங்களுள் துக்கம் முதலாவது.

எஎ - அ. மூ. மணி. எ: கஉ-ரு. அதனிடை-அவ்வுலகவறவியில்.

எகூ - அ. ஆங்கதில் ஒன்றுண்டு.

அ0. ஆருமின்மையின் - பாதுகாப்போர் ஒருவரும் இல்லாமையினாலே.

எஅ - அக. அதனிடை இருப்போர் பலர்.

அஉ. வடி - வகிர்; 'வடிவாழ் கூந்தல்' என்றது மணிமேகலையை.

அரு. ஆயிழை - மணிமேகலை.

அரு. வலமுறையாக மூன்றுமுறை வந்து பணிந்து; 'வந்து' என்று ஒரு சொல் வருவிக்க.

அஅ. முதியோள்கோட்டம் - சம்பாபதிகோயில். மும்மையின் வணங்கி - மனம் வாக்குக் காயங்களால் வணங்கி; மூன்றுமுறைவணங்கியென்றுமாம்.

(பி - ம்.) அச. 'ஒருபடைபோகி' அஅ. 'முறைமையின் வணங்கி'

கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய
க௦ தந்துணைப் பாவையைத் தான்றொழு தேத்தி
வெயில்சுட வெம்பிய வேய்கரி கானத்துக்
கருவி மாமழை தோன்றிய தென்னப்
பசிதின வருந்திய பைதன் மாக்கட்
கமுத சுரபியோ டாயிழை தோன்றி
க௫ யாபுத் திரன்கை யமுத சுரபியிஃ
தியாவரும் வருக வேற்போர் தாமென
வூன்றொலி யரவத் தொலியெழுந் தன்றே
யாணர்ப் பேரூ ரம்பல மருங்கென்.

கஎ.—உலகவறவிபுக்ககாதை முற்றிற்று.



---

க௦. மணிமேகலையொடு மற்றையோரையும் உளப்படுத்தி, 'தந் துணைப்பாவை' என்றார். பாவையை - கந்திற்பாவையை.

கக. வேய்கரிகானம் - மூங்கில்கரிந்தகாடு.

க௩. பைதல் - துன்பம்.

க௬. ஏற்போராகிய யாவரும் வருகவென்று மணிமேகலைசொல்ல.

கஎ. எழுந்தன்று - எழுந்தது. கஅ. யாணர் - புதுவருவாய்.

கஎ - அ. அம்பலமருங்கு ஒலியெழுந்தன்றெனக.

க - கஅ. காயசண்டிகையென்னுங்காரிகை, நோக்கி வணங்கி, 'என்னோய் துடைப்பாய்' என்றலும், மணிமேகலை பெய்தலும், அவள் பசிநீங்கித் தொழுது உரைக்கும்; அங்ஙனம் உரைப்பவள், 'அதன்பாற் போக' என்று கூறிப் போகியபின்னர், ஆயிழை ஒதுங்கி வந்து வந்தனை செய்து ஏறி வணங்கித் தொழுது ஏத்தித் தோன்றி, 'ஏற்போர்யாவரும் வருக' என, அம்பலமருங்கு ஒலியெழுந்தன்றென வினைமுடிவுசெய்க.

(பி - ம்.) க௦. 'தன்றுணைப்பாவை' க௬. 'இரப்போர்தாமென'

பதினெட்டாவது

# உதயகுமரன் அம்பலம்புக்ககாதை.

[பதினெட்டாவது மணிமேகலை அம்பலமடைந்தமை சித்திராபதி உதயகுமரனுக்குச்சொல்ல அவன் அம்பலம்புக்கபாட்டு.]

ஆங்கது கேட்டாங் கரும்புண் ணகவயிற்
றீத்துறு செங்கோல் சென்றுசுட் டாங்குக்
கொதித்த வுள்ளமொடு குரம்புகொண் டேறி
விதுப்புறு நெஞ்சினள் வெய்துயிர்த்துக் கலங்கித்
ரு தீர்ப்பலிவ் வறமெனச் சித்திரா பதிதான்
கூத்தியன் மடந்தையர்க் கெல்லாங் கூறுங்
கோவல னிறந்தபின் கொடுந்துய ரெய்தி
மாதவி மாதவர் பள்ளியு ளடைந்தது

---

க. ஆங்கதுகேட்டு - மணிமேகலை பிக்குணிக்கோலம் பூண்டு பிச்சையேற்று யாவருக்கும் உணவு கொடுத்தலைக்கேட்டு. ஆங்கு - அப்பொழுதே.

உ. தீத்துறுசெங்கோல் - தீயின்கண் பழுக்கக் காய்தலுற்ற செந்நிறத்தையுடைய நாராசம். சுட்டாங்கு - சுட்டாற்போல்

ங. குரம்பு கொண்டு ஏறி - வரம்பை த்தாண்டியெழுந்து ; என்றது வரம்பு கடந்தென்றபடி ; “ குரம்பெழுந்து குற்றங்கொண்டேறார் ” நாலடி. கஙங.

ச. விதுப்புறு - நடுக்கமுற்ற ; விரைதலுற்றவென்றுமாம.

ரு. தீர்ப்பல் இவ்வறமென - மணிமேகலைகொண்ட இவ்வறத்தைத் தீர்த்து விடுவேனென்று எண்ணி. சித்திராபதி - மாதவியின்தாய்.

சு. எல்லா நாடகக்கணிகைகளுக்கும் சொல்லுவாள்.

க - சு. அதுகேட்டு ஏறி நெஞ்சினளாய் வெய்துயிர்த்துக் கலங்கி இவ்வறத்தைத் தீர்ப்பலென்று எண்ணிக் கூத்தியன் மடந்தையர் எல்லாருக்கும் சித்திராபதி கூறுவாள்.

மேல்வருவன சித்திராபதி கூற்று.

அ. மாதவர் பள்ளியுள் - சங்கத்தாரான அறவணவடிகளுடைய உறைவிடத்து ; பள்ளி - முனிவருறைவிடம் ; சிலப். ரு : கஎசு.

எ - அ. கோவலன் இறந்தமைகேட்டு மாதவி அறவணவடிகளிடம் புகுந்து துறவுபூண்டமையை,“ஈங்கிம் மாதவ ருறைவிடம் புகுந்தேன், மற

(பி - ம்.) க. ‘புண்ணுக்கையிற்’ ங. ‘குரங்கொண்டெழுந்து’, ‘குரம்பு கொண்டெழுந்து.’ எ. ‘நிறைந்தபின்’

நகுதக் கன்றே நன்னெடும் பேரூ
௧௦ ரிதுதக் கென்போர்க் கெள்ளுரை யாயது
காதலன் வீயக் கடுந்துய ரெய்திப்
போதல் செய்யா வுயிரொடு புலந்து
நளியிரும் பொய்கை யாடுநர் போல
முளியெரிப் புகூஉ முதுகுடிப் பிறந்த
௧௫ பத்தினிப் பெண்டி ரல்லேம் பலர்தங்
கைத்தூண் வாழ்க்கை கடவிய மன்றே
பாண்மகன் பட்டுழிப் படூஉம் பான்மையில்
யாழினம் போலு மியல்பின மன்றியு



---

வண நீத்த மாசறு கேள்வி, யறவண வடிக ளடிமிசை வீழ்ந்து.........உர வோ னருளினன்" (உ: ௫௬-௯௯) என வயந்தமாலைக்கு மாதவி கூறிய தாக இந்நூலிலும், "மற்றது கேட்டு மாதவி மடந்தை,..........கோதைத் தாமங் குழலொடு களைந்து, போதித் தானம் புரிந்தறங் கொள்ளவும்" (உ௭: ௧௦௩-௮), "போதியின்கீழ் மாதவர்முன் புண்ணியதா னம்புரிந்த, மாதவி தன்றுறவுங் கேட்டாயோ தோழீ" (உ௯: 'காதலன்றன்') எனச் சிலப்பதிகாரத்தும் வருவனவற்றாலுணர்க.

௯. நகுதக்கன்று - சிரிக்கத்தக்கது. பேரூர் - பேரூரில்.

௮ - ௯. அடைந்தது நகுதக்கன்று.

௧௦. இது தக்கு என்போர்க்கு - இச்செய்கை தகுதியுள்ளதென்று சொல்லும் அறிஞர்க்கு; தக்கது: விகாரம். எள்ளுரை - இகழ்ச்சியுரை.

௧௨. போதல்செய்யா - நீங்காத. புலந்து - வெறுத்து.

௧௧ - ௨. மணி. உ: ௩௮ - ௯.

௧௩. நளி இரும்பொய்கை - குளிர்ந்த பெரிய குளம். ஆடுநர் - ஆடு வோர்.

௧௩ - ௪. மணி. உ: ௪௫.

௧௧ - ௫. காதலன்வீயத் துயரெய்திப் புலந்து எரிபுகும் பத்தினிப் பெண்டிரல்லேம் யாம்.

௧௫ - ௬. பலருடைய கைத்தாகிய உணவை உண்டுவாழ்தலில் உரி மையையுடையேம்.

௧௭. பாண்மகன் - பாணன். பட்டுழி - இறந்தவிடத்து.

௧௮. இயல்பினம் - இயல்பையுடையேம்.

௧௭ - ௮. பாண்மகனையும் யாழையும் உவமை கூறினள், நாடகக் கணிகையாதலின்.

(பி - ம்.) ௧௦. 'தக்கென்றவர்க்கெள்ளுரை' ௧௨. 'போதல்செல்லா வுயிரொடுபுலர்ந்து' ௧௭. 'பான்மையின்'

நறுந்தா துண்டு நயனில் காலை
உ0 வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்
வினையொழி காலைத் திருவின் செல்வி
யனையே மாகி யாடவர்த் துறப்பேந்
தாபதக் கோலந் தாங்கின மென்ப
தியாவரு நகூஉ மியல்பின தன்றே
உரு மாதவி யீன்ற மணிமே கலைவல்லி
போதவிழ் செவ்வி பொருந்துதல் விரும்பிய
வுதைய குமரனு மூலகாள் வண்டின்
சிதையா வுள்ளஞ் செவ்விதி னருந்தக்
கைக்கொண் டாங்கவ ளேந்திய கடிஞையைப்
ஙூ0 பிச்சை மாக்கள் பிறர்கைக் காட்டி
மற்றவன் றன்னுன் மணிமே கலைதனைப்
பொற்றேர்க் கொண்டு போதே னாகிற்

---

கசு. நயன் - பசை; என்றது செல்வத்தை.

உ0. வறும்பூ - தேனில்லாதபூ. பரத்தையர்க்கு வண்டு உவமையாதல்: "வண்டிற் றுறக்குங் கொண்டி மகளிரை" (மணி. கஅ: க0சு); மதுரை. ருஎஉ - ச. உக. வினை - நல்வினை.

உக - உ. "தவந்தீர் மருங்கிற் றிருமகள் போலப், பயந்தீர் மருங்கிற் பற்றுவிட் டொரீஇ, யிட்டதை யுண்ணு நீலம் போல, வொட்டிடத் தொட்டு முறுதி வாழ்க்கையுட், பத்திமை கொள்ளார்" (பெருங். க. ஙரு: கஙஎ-சக); "புண்ணிய முலந்தபின் பொருளி லார்களைக், கண்ணிலர் துறந்திடும்........வண்ணமே" சூளா. முத்தி. கரு.

உங. தாபதக்கோலம் - விதவைக் கோலம்; பிக்குணிக் கோலமுமாம்.

உச. நகூஉம் இயல்பினது - பழிக்கும் இயல்பையுடையது.

உசு. செவ்வி - சமயம்.

உஎ. உதயகுமரனை இங்கே வண்டாகக் கூறியதுபோல, "உதய குமரனெனு மொருவண் டுணீஇய, விரைவொடு வந்தேன்" (சு0 - சுக) என்று சித்திராபதி கூறியதாக இக்காதையிலேயே பின்னும் கூறுவர்; "பெண்டிர் நலம்வௌவித் தண்சாரற் றுதுண்ணும், வண்டிற் றுறப்பான் மலை" (கலி. ச0) என்று தலைமகனை வண்டாகக் கூறியிருத்தல் காண்க.

உஅ. சிதையாவுள்ளம் - வேறொன்றால் அழியாதவுள்ளம்.

உகூ. கடிஞை - பிச்சைப்பாத்திரம். ஙக. அவன் - உதயகுமரன்.

ஙஉ. போதேனாகின் - வாரேனாயின்.

(பி - ம்.) உக. 'விலையொழிகாலை' உகூ. 'செவ்வினபொருந்தல'

சுடுமண் ணேற்றி யரங்குசூழ் போகி
வடுவொடு வாழு மடந்தையர் தம்மோ
௩௫ ரனையே னாகி யரங்கக் கூத்தியர்
மனையகம் புகாஅ மரபின னென்றே
வஞ்சினஞ் சாற்றி நெஞ்சுபுகை யுயிர்த்து
வஞ்சக் கிளவி மாண்பொடு தேர்ந்து
செறிவளை நல்லார் சிலர்புறஞ் சூழக்
௪0 குறுவியர் பொடித்த கோலவாண் முகத்தள்
கடுந்தேர் வீதி காலிற் போகி
யிளங்கோ வேந்த னிருப்பிடங் குறுகி
யரவ வண்டொடு தேனின மார்க்குந்
தருமணன் ஞெமிரிய திருநா ளொருசிறைப்

---

௩௩. சுடுமண் - செங்கல். ௩௪. வடு - குற்றம்.

௩௪ - ௫. மடந்தையர் தம்மோரனையேனாகி - மடந்தையரை ஒப்பேனாகி; ஓர்: இடைச்சொல்.

௩௩ - ௫. பதியிலாரிற் குடிக்குற்றப்பட்டாரை எழு செங்கற்சுமத்தி அரங்குசூழ்வித்துப் புறத்துவிடுதல் மரபாதலின் சித்திராபதி இங்ஙனம் சபதஞ்செய்வாளாயினள்; இதனை, "சுடுமண் ணேறா வடுநீங்கு சிறப்பின்" (சிலப். க௪: க௬௬) என்பதனாலும், அதன் விசேடவுரைகளாலும் உணர்க.

௩௭. வஞ்சினம் - சபதம். நெஞ்சுபுகை யுயிர்த்து - மனங் கொதித்து; "செங்கண் சிவந்து நெஞ்சுபுகை யுயிர்த்து" (அ: ௫அ) என்றார் முன்னும்.

௫ - ௩௭. சித்திராபதி கூறும்: 'மாதவி பள்ளியுளடைந்தது நகுதக்கன்று; அஃது எள்ளுநரையாயது; யாம் பத்தினிப் பெண்டிரல்லேம்; வாழ்க்கை கடவியமன்றே; இயல்பினம்; அன்றியும் வண்டுபோல்குவம்; துறப்பேம்; தாங்கினமென்பது நகுமியல்பினது; ஆதலால், மணிமேகலையைப் பொற்றேர்க்கொண்டு போதுவேன்; அங்ஙனம் போதேனாயின் மரபினன்' என்று வஞ்சினஞ் சாற்றியென்க.

௩அ. கிளவியைத் தேர்ந்து.

௪0. வியர் - வேர்வை. பொடித்த - தோன்றிய.

௪உ. இளங்கோ வேந்தன் - உதயகுமரன்.

௪௩. வண்டும் தேனும் நல்லமணத்தே செல்வனவாதலின், இங்கே சேர்த்துக் கூறப்பட்டன; இதனை, "மங்கைநல்லவர்" (சீவக. அ௬உ) என்னும் செய்யுளுரையாலுணர்க.

௪௪. தருமணல் ஞெமிரிய - கொண்டுவந்திட்ட மணல்பரந்த; "தரு

(பி - ம்.) ௩௪. 'மடந்தையர் தம்மோடு' ௩௫. 'ஆடற்கூத்தியர்' ௩௬. 'மரபினளன்றென' ௪௪. 'திருமணன்ஞெமரிய'

சரு பவழத் தூணத்துப் பசும்பொற் செஞ்சுவர்த்
திகழொளி நித்திலச் சித்திர விதானத்து
விளங்கொளி பரந்த பளிங்குசெய் மண்டபத்துத்
துளங்குமா னூர்தித் தூமலர்ப் பள்ளி
வெண்டிரை விரிந்த வெண்ணிறச் சாமரை
ருo கொண்டிரு மருங்குங் கோதையர் வீச
விருந்தோன் றிருந்தடி பொருந்திநின் றேத்தித்
திருந்தெயி றிலங்கச் செவ்வியி னக்கவன்
மாதவி மணிமே கலையுட னெய்திய
தாபதக் கோலந் தவறின் றோவென
ருரு வரிதுபெறு சிறப்பிற் குருகுகரு வுயிர்ப்ப

---

மணன் வெறுமிரிய திருநகர் முற்றத்து" (நெடுநல். சுo ; பெருங். க. சஎ : ககஎ.) ஒருசிறை - ஒருபக்கம்.

சரு. பவழத்தூணம் - பவளத்தாலாகிய தூண் ; சிலப். ரு: கசஅ.

சசு. நித்திலம் - முத்து ; என்றது, முத்தாலாகிய சல்லியையும் தூக்கினையும். சித்திர விதானம் - சித்திரங்களையுடைய மேற்கட்டி ; (மணி. கக : ககஉ - ௩); "ஓவிய விதானத் துரைபெறு நித்திலத்து, மாலைத் தாமம் வளையுட னாற்றி" சிலப். ௩ : ககக - உ.

சரு - எ. தூணத்தினையும் சுவரினையும் விதானத்தினையுமுடைய மண்டபமென்க.

சஅ. துளங்கும் மான் ஊர்தி - ஒளி அசைதலையுடைய சிங்காதனம். ஊர்தி - ஏறுதற்கிடமாகவுள்ள ஆசனமென்னும்பொருளது. பள்ளி - இடம்.

சகூ. தெண்டிரை விரிந்த - வெள்ளிய அலைகள் போலே விரிந்த.

ருக. இருந்தோன் - உதயகுமரன். ஏத்தி - ஏத்த.

சஎ - ருக. மண்டபத்துப் பள்ளியில் இருந்தோனென்க.

ருஉ. நக்கு - சிரித்து. அவன் - உதயகுமரன்.

ருச. தாபதக்கோலம் - தவவேடம் ; என்றது பிக்குணிக் கோலத்தை. தாபதர் - தவமுடையவர். என - என்று உதயகுமரன் கேட்ப.

ருஉ - ச. அவன் நக்குத் தாபதக்கோலம் தவறின்றோவென.

மேல்வருவன சித்திராபதிகூற்று ; உதயகுமரன் இருந்தவிடம் அவைக்களமாதலின் மணிமேகலைசெய்தியைச் சிலேடையாற் கூறுவாள்.

ருரு. குருகு கருவுயிர்ப்ப - குருக்கத்திபெற, மாதவிபெற ; குருகு - குருக்கத்தி ; குருக்கத்தி மாதவியென வழங்கப்பெறும். பின்னர்க் காஞ்சி கூறப்படுதலின் பறவைகள் ஈனவெனவும் ஒருபொருள் கொள்ளலாம்.

வொருதனி யோங்கிய திருமணிக் காஞ்சி
பாடல்சால் சிறப்பிற் பரதத் தோங்கிய
நாடகம் விரும்ப நன்னலங் கவினிக்
காமர் செவ்விக் கடிமல ரவிழ்ந்த
௬௦ துதைய குமரனெனு மொருவண் டுணீஇய
விரைவொடு வந்தேன் வியன்பெரு மூதூர்ப்
பாழ்ம்ம் பறந்தலை யம்பலத் தாயது
வாழ்கநின் கண்ணி வாய்வாள் வேந்தென
வோங்கிய பௌவத் துடைகலப் பட்டோன்

---

௫௬. திருமணிக்காஞ்சியென்பதற்கு அழகிய கரியகாஞ்சிமரமென்றும், அழகிய மணிமேகலையென்றும் பொருள்கொள்க. மேகலைக்குக் காஞ்சியென்று பெயருளதாதல், "எதிருன் றுதலு நிலையின் மையுமா, மணிமே கலையு மொருமரப் பெயருங், கருதுங் காஞ்சி யென்னுங் கட்டுரை" என்னும் திவாகரச்சூத்திரத்தாலும், "ஒருமரப் பெயரு மோரிசைப் பெயருங், கச்சிப் பதியுமே கலையுங் காஞ்சி" என்னும் பிங்கலச் சூத்திரத்தாலும் துணியப்படும்.

௫எ. பரதமென்பதற்குப் பரதகண்டமென்றும் நாடகநூலென்றும் பொருள்கொள்க. பூ. பதிகம், உஉ.

௫அ. நாடகம் - நாடுகளின் இடமும், ஆடலும். நாடகம் இவளாற் சிறப்பெய்துமாகலின், "நாடகம் விரும்ப" என்றார்; "நாடக மேத்து நாடகக் கணிகை" (சிலப். பதி. கரு) என்றுவருதல் காண்க.

௬௦. 'உதயகுமரனெனு மொருவண்டு' என்றது முன்னிலைப் புறம்; அஃதாவது முன்னே நிற்கின்றவரை நோக்கிப் பிறரைக் கூறுமாறு போலக் கூறுதல். உணீஇய - உண்ணும் பொருட்டு; உண்ணுதல் - மிசைதலும் அனுபவித்தலும்.

௬உ. பாழ்ம் பறந்தலை அம்பலத்து - பாழிடமாகிய புறங்காட்டைச் சார்ந்த உலகவறவியினிடத்து; பறந்தலை - புறங்காடு; "கள்ளியம் பறந்தலை யொருசிறை யல்கி" புறநா. உ௪௦.

௫௫ - ௬உ. குருகுகருவுயிர்ப்ப ஓங்கிய காஞ்சி, நலங்கவினிக் கடிமலரவிழ்ந்தது: அதனை உதயகுமரனாகிய வண்டு உண்ணும்பொருட்டு வந்தேன்; அக்காஞ்சி அம்பலத்தாயதென்க.

௬௩. கண்ணி - தலைமாலை; "கண்ணி கார்நறுங் கொன்றை" (புறநா. க.) நின்கண்ணி வாழ்கவென்றல் மரபு; (புறநா. ககஅ); "தாமரை யுறையுஞ் செய்யாள், வழுவினூர் தம்மைப் புல்லாள் வாழ்க நுங் கண்ணி மாதோ" (சீவக. கஅக௦.) என - என்று சித்திராபதி சொல்ல.

௬௪. பௌவம் - கடல். உடைகலப் பட்டோன் - கப்பல் உடையப்பட்டோன்; "உடைகலப் பட்டாங் கொழிந்தோர் தம்முடன்" (கக: உ௦) என்றார் முன்னும்; "உடைகலப் பட்ட வெங்கோன்" சிலப். கரு: உக.

(பி - ம்.) ௫அ. 'நன்னயம்' ௬உ. 'பாஅழ்ம்'

௬௫ வான்புணை பெற்றென மற்றவட் குரைப்போன்
மேவிய பளிங்கின் விருந்திற் பாவையிஃ
தோவியச் செய்தியென் றொழிவேன் முன்னர்க்
காந்தளஞ் செங்கை தளைபிணி விடாஅ
வேந்திள வனமுலை யிறைநெரித் ததூஉ
௭௦ மொத்தொளிர் பவளத் துள்ளொளி சிறந்த
முத்துக்கூர்த் தன்ன முள்ளெயிற் றமுத
மருந்தே மாந்த வாருயிர் தளிர்ப்ப
விருந்தின் மூர லரும்பிய தூஉ
மாயிதழ்க் குவளை மலர்புறத் தோட்டிக்
௭௫ காய்வேல் வென்ற கருங்கய னெடுங்க

---

௬௫. வான்புணை - சிறந்ததெப்பம். அவட்கு - சித்திராபதிக்கு. மேல்வருவன உதயகுமரன் கூற்று.

௬௬. பளிங்கின் - பளிக்கறையின்கணுள்ள. விருந்திற் பாவை இஃது - புதுமையினையுடைய பாவையாகிய இது.

௬௭. ஓவியச்செய்தியென்று - சித்திரச் செய்கையென்று.

௬௬ - ௭. மணிமேகலை தன்னைக்கண்டு அஞ்சிப் பளிக்கறையிற் புகுந்தபொழுது அவளைச் சித்திரமென்று தான் எண்ணியிருந்ததாக உதயகுமரன் கூறினன்; "தாழொளி மண்டபம்........எத்திறத் தாளின் னிளங்கொடி யுரையென" (௫ : ௯ - ௧௨) என்று முன்பு வந்திருத்தல் காண்க.

௬௮. தளைபிணி - கட்டியகட்டு; தளைத்தல் - கட்டுதல். விடா - விடாவாய்.

௬௮ - ௯. செங்கைகள் பிணிவிடாவாய் முலையை இறையளவு நெரித்தசெய்கையும்; இறை - சிறிது.

௭௦. பவளமென்றது வாயை.

௭௧. முத்துக்கூர்த்தன்ன - முத்துக்கள் கூர்மையுற்றாலொத்த. எயிறு - பல்.

௭௨. அருந்த எமாந்த - உண்ணுதற்கு ஆசைப்பட்ட; "அருந்தே மாந்த வாருயிர் முதல்வனை" (௧௪ : ௬௮) என்றார் முன்னும்.

௭௧ - ௨. "முள்வா யெயிற்றூ றமுதம் முனியாது மாந்திக், கொள்ளாத வின்பக் கடற்பட்டனன்" சீவக. ௪௬௧.

௭௩. விருந்தின்மூரல் - புதிய இளநகை. அரும்புதல் - தோற்றுதல்.

௭௧ - ௩. எயிற்றமுதத்தையுண்ண ஆசையுற்ற எனதுயிர் செழிப்புறும் வண்ணம் புன்முறுவல் செய்ததும்.

௭௪. மாயிதழ் - கரிய இதழ்.

(பி - ம்.) ௬௯. 'முலையிறநெறித்ததூஉ'

ணறிவுபிறி தாகிய தாயிழை தனக்கெனச்
செவியகம் புகூஉச் சென்ற செவ்வியும்
பளிங்குபுறத் தெறிந்த பவளப் பாவையென்
னுளங்கொண் டொளித்தா ளுயிர்க்காப் பிட்டென்
அ0 றிடையிருள் யாமத் திருந்தேன் முன்னர்ப்
பொன்றிகழ் மேனி யொருத்தி தோன்றிச்
செங்கோல் காட்டிச் செய்தவம் புரிந்த
வங்கவ டன்றிற மயர்ப்பா யென்றன
டெய்வங் கொல்லோ திப்பியங் கொல்லோ
அரு வெய்யா மையலேன் யானென் றவன்சொலச்
சித்திரா பதிதான் சிறுநகை யெய்தி
யத்திறம் விடுவா யரசிளங் குருசில்

---

எசு. பிறிதாகியது - வேறுபட்டது. ஆயிழை தனக்கு - மணிமேகலைக்கு.

எஎ. புகூஉ - புகுந்து. செவ்வி - அழகு.

எச - எ. ஓட்டி வென்ற கண்கள் ஆயிழைக்கு அறிவு பிறிதாகிய தென்று குறிப்பித்துச் செவிக்கண்ணே சென்ற செவ்வியும்.

எஅ. மணி. ச : கஉசு. பளிங்கு - உவவனத்திலுள்ள பளிக்கறை. பாவை - மணிமேகலை.

எகூ. கொண்டு - நெரித்ததூஉம் அரும்பியதூஉம் செவ்வியும் ஆகிய இவற்றைக்கொண்டு. உயிர்க்காப்பிட்டு - உயிரைக் காத்தல்செய்து.

எஅ - கூ. பாவை கொண்டு உயிர்க்காப்பிட்டு என்னுளத்து ஒளித்தா ளென்க.

அ0. இருந்தேன் முன்னர் - துயிலாதிருந்தேனுடைய முன்பு; "பொங்குமெல் லமளியிற் பொருந்தா திருந்தோன், முன்னர்த் தோன்றி" (எ : சு-எ) என்று முன்பு வந்திருத்தல் காண்க.

அக. ஒருத்தியென்றது, மணிமேகலாதெய்வத்தை.

அங. அயர்ப்பாய் - மறப்பாய். அஉ - ங. மணி. எ: அ - கச.

அ0 - அங. இருந்தேன்முன்னர் ஒருத்தி தோன்றிக் காட்டி அவள் திறம் அயர்ப்பாயென்றனளென்க.

அங - ச. என்றனள், தெய்வமோ? தெய்வலோகத்திற்றோன்றிய பொருளோ?

அரு. எய்யா மையலேன் - குறையாத மயக்கமுடையேன்.

அஎ. அத்திறம்விடுவாய் - 'அங்கவ டன்றிற மயர்ப்பாய்' என்று நின்கனவிற் றோன்றிய ஒருத்தி கூறிய அதனை விடுவாயாக.

(பி - ம்.) எஎ - அ. 'செவிகுறுக் குறூஉச் சென்ற செவ்வியும், பசும் பொற்'

காமக் கள்ளாட் டிடைமயக் குற்றன
தேவர்க் காயினுஞ் சிலவோ செப்பின்
கூ0 மாதவன் மடந்தைக்கு வருந்துதுய ரெய்தி
யாயிரஞ் செங்க ணமரர்கோன் பெற்றது
மேருக் குன்றத் தூருநீர்ச் சரவணத்
தருந்திறன் முனிவர்க் காரணங் காகிய
பெரும்பெயர்ப் பெண்டிர் பின்புளம் போக்கிய
கூரு வங்கி மனையா ளவரவர் வடிவாய்த்
தங்கா வேட்கை தனையவட் டணித்ததூஉங்
கேட்டு மறிதியோ வாட்டிறற் குருசில்

அஅ. மயக்குற்றன - மயங்கிச்செய்த செய்திகள்.

அகூ. செப்பிற் சிலவோ? ; பலவுள்ளனவென்றபடி.

உதயகுமரனுக்குத் துணிவுபிறத்தற்பொருட்டு இந்திரன் அகல்யை யை விரும்பியது முதலியவற்றைச் சித்திராபதி கூறுவாள்.

கூ0. மாதவன் மடந்தை - கௌதமன் மனைவியாகிய அகல்யை.

கூ0 - கூக. இந்திரன் கௌதமமுனிவர் மனைவியாகிய அகல்யையை விரும்பிச் சேர்ந்து அம்முனிவர் சாபத்தால் ஆயிரங்கண் பெற்றானென்பது புராணகதை.

கூஉ. மேருக்குன்றத்து - இமயமலையினிடத்து ; "இமையவில் வாங்கிய" (கலி. ந௲.) ஊரும் நீர்ச் சரவணத்து - பரந்த நீரையுடைய சரவணத்தில் ; சரவணம் - தருப்பைக் காட்டினையுடையதொரு பொய்கை.

கூங. முனிவர் - ஸப்தரிஷிகள்.

கூச. பெரும்பெயர்ப்பெண்டிர் - பெரிய புகழையுடைய மனைவியர்.

கூரு. அங்கி மனையாள் - அக்கினிதேவன் மனைவியாகிய ஸ்வாஹாதேவி. அவரவர்வடிவாய் - அவ்வம்முனி பத்தினிகளின் வடிவமாய்.

கூசு. வேட்கை - விருப்பம். அவண் - அவ்விடத்து.

கூஉ - கூசு. முன்னொரு காலத்தில் அக்கினிதேவன் ஸப்தரிஷிகளுடைய மனைவிகளை விரும்பி அந்தச் சந்தாபம் பொறுக்கமாட்டாமற் காட்டுக்குப் போனபொழுது அவன் எண்ணத்தையறிந்த ஸ்வாஹாதேவி அம்முனிவரெழுவர் மனைவிகளுள் அருந்ததி யொழிந்தோருடைய வடிவத்தை முறையே யெடுத்து வேறுவேறு காலங்களிற் சேர்ந்து அவன் வேட்கையைத் தணித்தாளென்று ஸ்ரீ வியாஸபாரதத்துள்ள ஆரணிய பர்வத்தில், உஉச - சு - ஆம் அத்தியாயங்களால் தெரிகின்றது.

(பி - ம்.) அஅ. 'உற்றென்' அகூ. 'செப்புவனன்' கூஉ. 'குன்றத்தொரு நீர்ச்சரவணத்' கூசு. 'வேட்கையவன்றணித்ததூஉம்'

கன்னிக் காவலுங் கடியிற் காவலுந்
தன்னுறு கணவன் சாவுறிற் காவலு
க00 நிறையிற் காத்துப் பிறர்பிறர்க் காணது
கொண்டோ னல்லது தெய்வமும் பேணுப்
பெண்டிர்தங் குடியிற் பிறந்தா ளல்ல
ளாடவர் காண நல்லரங் கேறி
யாடலும் பாடலு மழகுங் காட்டிச்
க0ரு சுருப்புநாண் கருப்புவி லருப்புக்கணை தூவச்
செருக்கய னெடுங்கட் சுருக்குவலைப் படுத்துக்
கண்டோர் நெஞ்சங் கொண்டகம் புக்குப்
பண்டோர் மொழியிற் பயன்பல வாங்கி

---

கூஅ. கன்னி - கன்னிப்பருவம். கடி - கல்யாணம்.

க00. நிறை - நெஞ்சைக்கற்புநெறியில் நிறுத்தல்; "சிறைகாக் குங் காப்பெவன் செய்யு மகளிர், நிறைகாக்குங் காப்பே தலை" (குறள், ருஎ) என்று வருதல்காண்க. பிறர்க்காணது - அயலாரைப் பாராமல்.

க0க. கொண்டோன் - கணவன்; மணி. கங: கூ.

க0உ. பெண்டிர் - குலமகளிர்.

க0க - உ. "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்" குறள், ருரு.

க0ங. நல்லரங்கு - எழுகோலகலத்தினையும் எண்கோல்நீளத்தினை யும் ஒருகோல்குறட்டுயரத்தினையும் வாய்தலிரண்டினையுமுடைய அரங்கு; சிலப். ங: க0க - ரு.

க0சு. கூத்தும் பாட்டும் அழகும் ஆகியவிவற்றைப் புலப்படுத்தி; "ஆடலும் பாடலு மழகு மென்றிக், கூறிய மூன்றி னொன்றுகுறை படாமல்" (சிலப். ங: அ - கூ); "அழகிகூத் தாடு கின்றாள்" சீவக. கஉருசு.

க0ரு. சுரும்பு - வண்டு; விகாரம். அருப்புக்கணை - மொட்டரு மலராகிய அம்பு; அரும்பு: விகாரம்; "கருப்பு வில்லியை யருப்புக்கணை மைந்தனை" (உ0: கூஉ), "கருப்பு வில்லி யருப்புக்கணை தூவ" (உரு: கூ0) என இந்நூலுள்ளே பின்பும் வருதல் காண்க.

க0சு. சுருக்குவலை - ஒருவகைவலை. படுத்து - அகப்படுத்திக் கொண்டு.

க0எ. அகம் - வீடு

க0அ. பயன்பல - பொருள் அணிகலம் ஆடை முதலியன.

(பி - ம்.) க0ரு - சு. 'கணைதூஉயச் செருக்கி' க0அ. 'பண்டொடா மொழியின்'

வண்டிற் றுறக்குங் கொண்டி மகளிரைப்
கக0 பான்மையிற் பிணித்துப் படிற்றுரை யடக்குதல்
கோன்முறை யன்றோ குமரற் கென்றலு
மூதைய குமர னுள்ளம் பிறழ்ந்து
விரைபரி நெடுந்தேர் மேற்சென் றேறி
யாயிழை யிருந்த வம்பல மெய்திக்
ககரு காடமர் செல்வி கடிப்பசி களைய
வோடுகைக் கொண்டுநின் றூட்டுநள் போலத்
தீப்பசி மாக்கட்குச் செழுஞ்சோ றீத்துப்
பாத்திர மேந்திய பாவையைக் காண்டலு
மிடங்கழி காமமொ டடங்கா னாகி

---

க0கூ. வண்டின் - தேனைக்கொண்டு மலரைத்துறக்கும் வண்டு போல; வண்டு, பரத்தையர்க்குவமை; "நறுந்தா துண்டு நயனில் காலை, வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்" (கக - உ0) என்று இக்காதையிலும், "பருகு வாரிற் புல்லிப் பயங்கண் மாறத் துறக்கு, முருகு விம்மு குழலார் போல மொய்கொ டும்பி, யுருவப் பூங்கொம் பொசியப் புல்லித் தீந்தேன் பருகி, யருகு வாய்விட் டார்ப்ப வண்ணன் மெல்லச் சென்றான்" (கசகரு) என்று சீவகசிந்தாமணியிலும் வந்திருத்தல் காண்க. கொண்டி மகளிர் - பொருள் கொள்ளுதலையுடைய பரத்தையர்; கொண்டி - கொள்ளையுமாம்; "நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்" மதுரை. ருஅங.

கக0. படிற்றுரை - பொய்வார்த்தை.

ககக. கோன்முறை - செங்கோன்முறை. என்றலும் - என்று சித்திராபதி கூறலும்.

ககஉ. உள்ளம் பிறழ்ந்து - மனம் வேறுபட்டு.

ககங. விரைபரி : வினைத்தொகை.

ககச. ஆயிழை - மணிமேகலை. அம்பலம் - உலகவறவி.

ககரு. காடமர்செல்வி - துர்க்கை; "காடமர் செல்வி கழிபெருங் கோட்டமும்" (சு : ருங) என்றார் முன்னும்; அமர்தல் - விரும்பியுறைதல். கடிப்பசி களைய - பேய்களின் பசியைத் தணிவித்தற்பொருட்டு.

ககரு - சு. ஊட்டுநளாகிய காடமர் செல்விபோலவென இயைக்க.

ககஎ - அ. பாத்திரமேந்தி மாக்கட்குச் செழுஞ்சோறீத்தபாவை - மணிமேகலை. காண்டலும் - உதயகுமரன் கண்டவுடன்.

கககூ. இடங்கழிகாமம் - வரம்பின்றிப் பெருகியகாமம்; இராகவேக மென்பாருமுளர் (மணி. க0 : உஉ); "இடங்கழி நெஞ்சத் திளமையானை" சிலப். உங: ஙஎ.

(பி - ம்.) ககஉ. 'உள்ளகம் பிறழ்ந்து' ககரு. 'களைஇய' ககசு - எ. 'ஊட்டுவள்போல...தீப்பலிமாக்கட்கு'

கஉ0 யுடம்போ டென்ற னுள்ளகம் புகுந்தென்
னெஞ்சங் கவர்ந்த வஞ்சக் கள்வி
நோற்றாண் வாழ்க்கையி னொசிதவந் தாங்கி
யேற்றாண் விரும்பிய காரண மென்னெனத்
தானே தமிய ளின்றோண் முன்னர்
கஉரு யானே கேட்ட லியல்பெனச் சென்று
நல்லா யென்கொ னற்றவம் புரிந்தது
சொல்லா யென்று துணிந்துடன் கேட்ப
வென்னமர் காதல னிராகுல னீங்கிவன்
றன்னடி தொழுதலுந் தகவென வணங்கி
கங0 யறைபோய் நெஞ்ச மவன்பா லணுகினு
மிறைவளை முன்கை யீங்கிவன் பற்றினுந்
தொன்று காதலன் சொல்லெதிர் மறுத்த
னன்றி யன்றென நடுங்கினள் மயங்கிக்
கேட்டது மொழிவேன் கேள்வி யாளரிற்

---

கஉக. கள்வி - மணிமேகலை.

கஉஉ. நோற்றாண் வாழ்க்கை - விரதங்களாற் பட்டினி விட்டு உண்ணுதலையுடைய வாழ்க்கை; வாழ்க்கை : தவத்திற்கு அடை. நொசி தவம் - நுண்ணிய தவம்; "நோற்றுணல் யாக்கை நொசிதவத்தீர்" சிலப். க0: உஉங.

கஉங. ஏற்றாண்-இரந்துண்ணுமுணவு.

கஉங - ரு. என்னெனக் கேட்டல் இயல்பென்று உதயகுமரன் சென்று.

கஉசு. நற்றவம் புரிந்தது என்கொல்.

கஉஎ. கேட்ப - உதயகுமரன் கேட்ப.

கஉஅ. என்னமர் காதலன் இராகுலன் - இவன் என்னை விரும்பிய கணவனாகிய இராகுலனுவான்; என்றது பழம்பிறப்பின் செய்தி கூறியபடி.

கஉகூ. வணங்கி - மணிமேகலை வணங்கி.

கங0. அறைபோய் - ஒட்டைபோய். நெஞ்சம்அறைபோய் அவன் பால் அணுகினுமென்க.

கஙஉ. தொன்று - பழமை.

கஙங. நன்றியன்று - நன்மையன்று.

கஙச. கேட்டது மொழிவேன் - நீ கேட்டதற்கு விடை கூறு

(பி - ம்.) கஉக. 'வஞ்சக்கிளவி' கஉங. 'காரணம்யாதென' கஉசு. 'நல்லா யெனக்கோ நற்றவம்புரிந்தது' கஉஎ. 'துணைந்துடன் கேட்ப'

௧௩௫ றோட்ட செவியைநீ யாகுவை யாமெனிற்
பிறத்தலு மூத்தலும் பிணிப்பட் டிரங்கலு
மிறத்தலு முடைய திடும்பைக் கொள்கல
மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து
மிக்க நல்லறம் விரும்புதல் புரிந்தேன்
௧௪௦ மண்டமர் முருக்குங் களிறனை யார்க்குப்
பெண்டிர் கூறும் பேரறி வுண்டோ
கேட்டனை யாயின் வேட்டது செய்கென
வாட்டிறற் குருசிலை மடக்கொடி நீங்கி
முத்தை முதல்வி முதியா ளிருந்த

---

வேன். அவன் கேட்டது, முன்பு, 'நல்லா யென்கொ னற்றவம் புரிந்தது' (௧௮: ௧௨௯) என்பதனாலுணரப்படும். கேள்வியாளரின் - கேள்வியாளர்களால்.

௧௩௫. நீ துளைக்கப்பட்ட செவியையுடையாயாயின்.

௧௩௪ - ௫. எனின்மொழிவேனென இயையும். இதில், "கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற், றோட்கப் படாத செவி" (௪௧௮) என்னும் குறளின் பொருள் அமைந்திருத்தல் காண்க.

மேல்வருவன மணிமேகலை கூற்று.

௧௩௭. இடும்பை - துன்பம். ௧௩௮. யாக்கையாகிய இது.

௧௩௬ - ௮. இஃது உடையது கொள்கலமென்க. இவ்வடிகளிற் போலவே, "வினையின் வந்தது வினைக்குவிளை வாயது,.........மிக்கோ யிதனைப் புறமறிப் பாராய்" (௪: ௧௧௩ -௨௧) என்று இந்நூலுள்ளே முன்னும் மக்கள் யாக்கையை இழித்துக் கூறியிருத்தல் காண்க.

௧௩௯. நல்லறம் - தயாதருமம்.

௧௪௦. மண்டு அமர் முருக்கும் களிறு - மிக்குச் செல்லுகின்ற போரை அழிக்கும் யானை.

௧௪௧. உண்டோ - இல்லை யென்றபடி.

௧௪௦ - ௪௧. 'களிறனை யார்க்குப், பெண்டிர் கூறும் பேரறி வுண்டோ' என்றது முன்னிலைப்புறம்; இப்படியே, "இளமை நாணி முதுமை யெய்தி,.........செறிவளை மகளிர் செப்பலு முண்டோ" (௪: ௧௦௭ - ௧௦) என்று உதயகுமரனைநோக்கிச் சுதமதி கூறியதாக இந்நூலில் முன்பு நீதி கூறியிருத்தல் காண்க.

௧௪௨. வேட்டது - விரும்பியது.

௧௪௩. குருசிலை - உதயகுமரனை. மடக்கொடி - மணிமேகலை.

௧௪௪. முதியாள் - சம்பாபதி.

(பி - ம்.) ௧௪௦. 'மண்டலமாடுக்களிறு', 'மண்டமாடுஉங்களிறு.'

கசரு குச்சரக் குடிகை தன்னகம் புக்காங்
காடவர் செய்தி யறிகுநர் யாரெனத்
தோடலர் கோதையைத் தொழுதன ளேத்தி
மாய விஞ்சை மந்திர மோதிக்
காயசண் டிகையெனுங் காரிகை வடிவாய்
கரு௦ மணிமே கலைதான் வந்து தோன்ற
வணிமலர்த் தாரோ னவள்பாற் புக்குக்
குச்சரக் குடிகைக் குமரியை மரீஇப்
பிச்சைப் பாத்திரம் பெரும்பசி யுழந்த
காயசண் டிகைதன் கையிற் காட்டி
கருரு மாயையி னொளித்த மணிமே கலைதனை
யீங்கிம் மண்ணீட் டியாரென வுணர்கே
னுங்கவ ளிவளென் றருளா யாயிடிற்
பன்னா ளாயினும் பாடு கிடப்பே

கசரு. குசசரக்குடிகை =கூர்ச்சரகுடிகா - கூர்ச்சரதேசத்துப் பணியமைந்த சிறிய கோயில். கூர்ச்சரதேசம் சிற்பத்திற் பெயர் பெற்றதென்பர்; "குச்சரக் குடிகைக் குமரியை மரீஇ" (கருஉ) என்று இக்காதையிலேயே பின்னும் வரும்; கூர்ச்சரமென்பது குஜ்ஜரமென்று கன்னட பாஷையில் வழங்கப்படுகின்றது.

கசசு. அறிகுநர் - அறிவோர். கசஎ. கோதை - சம்பாபதி.

கசஅ. மந்திரம் - மணிமேகலாதெய்வம் உபதேசித்த வேற்றுரு எய்துவிக்கும் மந்திரம்; மணி. க௦ : அ௦.

கசகூ. காரிகை - பெண்.

கசகூ - ரு௦. மணிமேகலை காரிகைவடிவாய் வந்து தோன்ற வென்க.

கருக. தாரோன் - உதயகுமரன். அவளென்றது, காயசண்டிகை வடிவுகொண்டு நின்ற மணிமேகலையை.

கருஉ. குமரி - சம்பாபதி.

மேல்வருவன உதயகுமரன் கூற்று.

கருங - ச. பாத்திரத்தைக் கையிற் காட்டியென்க.

கருசு. மண்ணீடு - சுதையாற் செய்யப்பட்ட பாவை; மணி. சு : சஎ. மண்ணீடுகளுளென ஏழனுருபுவிரிக்க.

கருஅ. பாடு - படுக்கை; பாடுகிடப்பேன் - வரங்கிடப்பேனென்று பொருள் கூறுவர் அடியார்க்குநல்லார்; "பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாளுக்கு", "பாசண்டன்பாற் பாடு கிடந்தாட்கு" சிலப். கூ : கரு, ௯௦ : எஅ.

(பி - ம்.) கசரு. 'குஞ்சக்குண்டிகை' கசகூ. 'காயசண்டிகை வடிவாய்க் காரிகை'

ளின்னுங் கேளா யிமையோர் பாவாய்
௧௬௦ பவளச் செவ்வாய்த் தவளவா ணகையு
மஞ்சனஞ் சேராச் செங்கய னெடுங்கணு
முரிந்துகடை நெரிய வரிந்தசிலைப் புருவமுங்
குவிமுட் கருவியுங் கோணமுங் கூர்நுனைக்
கவைமுட் கருவியு மாகிக் கடிகொளக்
௧௬௫ கல்விப் பாகரிற் காப்புவலை யோட்டி
வல்வா யாழின் மெல்லிதின் விளங்க
முதுக்குறை முதுமொழி யெடுத்துக் காட்டிப்

---

௧௫௯. இமையோர் பாவாய் - தேவர்களுடைய தலைவி; "பவ மறு வித்த வானோர் பாவாய்" (௨௫ : ௧௪௭) என்று இந்நூலிற் சிந்தா தேவியைப் பின்பு கூறுதல் காண்க.

இனி, உதயகுமரன் மணிமேகலையின் நகைமுதலியவற்றால் தான் வலியழிந்து அவளுக்கு வயமாயினமை கூறுவான், தன்னை யானையாக வும் அவளது நகைமுதலியவற்றை யானையையடக்கி வயமாக்குங்கருவி களாகவும் உருவகஞ்செய்து கூறுகின்றான்.

௧௬௧. 'அஞ்சனஞ் சேரா' என்றதனாற் கண்ணுக்கு மையெழு தாமை அணியப்படும்.

௧௬௩. கோணம் - தோட்டியென்னுங்கருவி; "கோணந் தின்ற வடுவாழ் முகத்த" மதுரை. ௫௯௨.

௧௬௪. கவைமுட்கருவி - கவைத்த முள்ளையுடைய பரிக்கோல்; "கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக், கல்லா விளைஞர் கவளங் கைப்ப" (முல்லை. ௩௫ - ௬.) கடிகொள - காவல்கொள்ள.

௧௬௩ - ௪. குவிமுட் கருவி முதலிய மூன்றும் யானையையடக்கும் கருவி விசேடங்கள்; "அரைமதி யிரும்பொடு கவைமுட் கரீஇ, பீலி சுற் றிய வேணு வெண்காழ், யானை" பெருங். ௧. ௩௨ : ௬௬ - ௮.

௧௬௦ - ௬௪. நகை குவிமுட்கருவியும், கண் கோணமும், புருவம் கவைமுட் கருவியுமாகிக் கடிகொளவென இயைக்க; இது நிரனிறை.

௧௬௫. கல்வியாகிய பாகர்களாற் காத்தலாகிய வலையைப்போக்கி; "மடங்கெழு நோக்கின் மதிமுகந் திறப்புண், டிடங்கழி நெஞ்சத் திளமை யானை, கல்விப் பாகன் கையகப் படாஅ, தொல்கா வுள்ளத் தோடு மாயினும்" (சிலப். ௨௩ : ௩௬ - ௯) என்றதிற் கல்வியைப் பாக னாக உருவகஞ்செய்திருத்தல்காண்க.

௧௬௭. முதுக்குறை முதுமொழி - பேரறிவைப் புலப்படுத்திய மொழி; என்பது, 'பிறத்தலு மூத்தலும்' என்றது முதலியவற்றை.

௧௬௬ - ௭. யாழோசைபோல இனிமையாக மொழிகளை எடுத் துக்காட்டி; யானை யாழிற்கு வயமாகுமாதலின், இங்ஙனம் கூறினான்; இதனை, "காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல், யாழ்வரைத் தங்கி

புதுக்கோள் யானை வேட்டம் வாய்த்தென
முதியா ளுன்றன் கோட்டம் புகுந்த
௧௭0 மதிவாண் முகத்து மணிமே கலைதனை
யொழியப் போகே னுன்னடி தொட்டே
னிதுகுறை யென்றன னிறைமகன் றனெனன்.

க௮.—உதயகுமரன் அம்பலம்புக்ககாதை முற்றிற்று.

---

யாங்கு" (கலி. உ), "அணியிழை மகளிரும் யானையும் வணக்கு, மணி யொலி வீணை" (பெருங். ௧. ௩௫ : ௧00 - ௧0௧), "இசையினி லிவட்குத் தோற்றும் யானையால் வேறு மென்னி, னிசைவதொன் றன்று கண் டீர்" (சீவக. ௭௪௮), "ஐம்புல வேழத்தின் வெந்தொழில் வீயக், கருணை வீணை காமுறத் தழீஇ" (ஞானமிர்தம், ௪), "மகரயாழ் வல்ல மைந்த னொருவனைக் கண்ட மத்தப், புகர்முகக் களிற்றின்" (மேரு மந்தா. வச்சிராயுத. ௩௧) என்பனவற்றாலறிக.

௧௬௮. புதிதாகக் கொள்ளப்படும் யானை வேட்டையில் அகப்பட்ட தென்று கருதி. புதுக்கோள்யானை : மணி. ௧௨ : ௪௫.

௧௬௯. முதியாள் : விளி.

௧௭௧. அடிதொடுதல், சூளுறவுகளுள் ஒன்று; இதனைப் பின் வருவனற்றாலுணர்க : "நம்மு, ளுமுசாஅங் கோனடி தொட்டேன்" (கலி. ௯௪); "அடல்வலி யெயினர்நி னடிதொடு கடனிது", "அடிதொடு படு கடனிது" சிலப். ௧௨ : 'சுடரொடு', 'துடியொடு.'

௧௭௨. இதுகுறை - இஃது எனக்கு வேண்டுங்காரியம்; குறை-காரியம்; "முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும், வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி" (பெரும்பாண். ௪௪௩-௪.) இறைமகன்-உதயகுமரன்.

௧ - ௧௭௨. சித்திராபதி, அதுகேட்டு வெறி வெய்துயிர்த்துக்கலங்கித் தீர்ப்பலென்று கூத்தியன் மடந்தையரெல்லார்க்குங் கூறும்; அங்ஙனங் கூறுகின்றவள், வஞ்சினஞ்சாற்றி உயிர்த்துத் தேர்ந்து போகிக்குறுகிப் பொருந்தி நின்று ஏத்த அவன், 'தவறின்றோ' என, அவள், 'வேந்தே, நின்கண்ணி வாழ்க; காஞ்சி அம்பலத்தாயது' என, அதுகேட்டு அவட்கு உரைப்போன், 'எய்யா மையலேன்' என்று சொல்ல, சித்திராபதி சிறு நகை யெய்தி, 'படிற்றுரை யடக்குதல் கோன்முறையன்றோ குமரற்கு' என்றலும், உதயகுமரன் உள்ளம் பிறழ்ந்து வெறி எய்திக் காண்டலும் அடங்கானாகிச்சென்று துணிந்து கேட்ப, அவள் வணங்கி நடுங்கி மயங்கி, 'வேட்டதுசெய்க' என்று கூறி நீங்கிப் புக்குத் தொழுது ஏத்தி ஓதிக் காயசண்டிகை வடிவாய் வந்து தோன்ற, தாரோன் புக்கு மரீஇ, 'இது குறை' என்றனனென வினை முடிவு செய்க.

(பி - ம்.) 'புதுக்கோட்டியானை'

பத்தொன்பதாவது

# சிறைக்கோட்டமறக்கோட்டமாக்கிய காதை.

[பத்தொன்பதாவது மணிமேகலை காயசண்டிகை வடிவாய்ச் சிறைக்கோட்டம்புக்குச் சிறைவீடு செய்து சிறைக் கோட்டம் அறக்கோட்டமாக்கிய பாட்டு.]

முதியா டிருந்தடி மும்மையின் வணங்கி
மதுமலர்த் தாரோன் வஞ்சினங் கூற
வேடவிழ் தாரோ யெங்கோ மகண்மு
னாடாது துணிந்து நாநல்கூர்ந் தனையென
௫ வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச்
சித்திர மொன்று தெய்வங் கூறலு
முதய குமர னுள்ளங் கலங்கிப்
பொதியறைப் பட்டோர் போன்றுமெய் வருந்தி

---

௧. முதியாள் - சம்பாபதி. மும்மை - மனம் வாக்குக் காயங்கள்; மூன்றுமுறை யென்றுமாம்.

௨. தாரோன் - உதயகுமரன். வஞ்சினம் - சூளுறவு; அஃது, "உன்னடி தொட்டேன்" (மணி. ௧௮ : ௧௭௧) என்றது.

மேல்வருவன தெய்வத்தின் கூற்று.

௪. நாடாது துணிந்து - ஆராயாது துணிவுற்று. நாநல்கூர்ந்தனை - நாவறுமையுற்றாய்; என்றது, "எண்ணித் துணிக கருமந் துணிந்தபி, னெண்ணுவ மென்ப திழுக்கு" (௪௬௭) என்னும் குறளின் பொருளைத் தழுவி வந்தவாறு காண்க; மணி. ௧௦ : ௩௪.

௫. வித்தகர் - சிற்பாசாரிகள்; "வித்தக ரியற்றிய, கண்கவ ரோவியம்" (௩ : ௧௩௦ - ௩௧), "வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச், சித்திரச் செய்கை" (௩ : ௧௬௭ - ௮) என முன்பு வந்திருத்தல் காண்க; "வித்தக ரியற்றிய விளங்கிய கோலத்து" சிலப். ௨௮ : ௨௨௬.

௬. ஒன்றுதெய்வம் - பொருந்திய தெய்வம்.

௪ - ௬. நல்கூர்ந்தனையெனக் கூறலுமென்க.

௮. பொதியறை - துவாரமில்லாத கீழறை; (மணி. ௪ : ௧௦௫); "போதார் பிறவிப் பொதியறையோர்" சிலப். ௧௦ : ௧௬௧.

(பி - ம்.) ௧. 'முறைமையின் வணங்கி'

யங்கவ டன்றிற மயர்ப்பா யென்றே
௧0 செங்கோல் காட்டிய தெய்வமுந் திப்பியம்
பையர வல்குல் பலர்பசி களையக்
கையி லேந்திய பாத்திரந் திப்பிய
முத்தை முதல்வி யடிபிழைத் தாயெனச்
சித்திர முரைத்த விதூஉந் திப்பிய
௧௫ மிந்நிலை யெல்லா மிளங்கொடி செய்தியிற்
பின்னறி வாமெனப் பெயர்வோன் றன்னை
யகல்வாய் ஞால மாயிரு ளுண்ணப்
பகலர சோட்டிப் பணையெழுந் தார்ப்ப
மாலை நெற்றி வான்பிறைக் கோட்டு



௯. அவள் - மணிமேகலை. அயர்ப்பாய் - மறப்பாய்.

௧0. செங்கோல் காட்டிய - செங்கோன்முறையை எடுத்துக் காட்டிய. தெய்வமுமென்றது, மணிமேகலாதெய்வத்தை ; உம்மை எதிரது தழீஇயது. திப்பியம் : மணி. ஏ : ௬ஏ.

௯ - ௧0. உதயகுமரனுக்கு மணிமேகலாதெய்வம் செங்கோன் முறையை எடுத்துக்காட்டி, மணிமேகலை திறத்தை நீ மறப்பாயென்று கூறியதனை, "கோணிலை திரிந்திடிற் கோணிலை திரியும்......அவன்வயி னுரைத்தபின்" (ஏ : அ - ௧௪), "பொன்றிகழ் மேனி யொருத்தி தோன்றி......அங்கவ டன்றிற மயர்ப்பா யென்றனள்" (௧அ : அ௧ - ௩) என இந்நூலுள்ளே முன்புவந்தவாற்றாலுணர்க.

௧௧ - ௨. களைய ஏந்திய பாத்திரம்.

௧௩. முத்தைமுதல்வி : மணி. ௧அ : ௧௪௪. பிழைத்தாய் - தவறு செய்தாய்.

௧௪. இதூஉம் - இதுவும்.

௧௫. இந்நிலையெல்லாம் - செங்கோல்காட்டிய தெய்வமுதலிய மூன்றன் வரலாற்றையும். இளங்கொடி - மணிமேகலை.

௧௬. பெயர்வோன்றன்னை - பெயர்ந்துசெல்லும் உதயகுமரனை.

இனி இராத்திரியை யானையாக உருவகித்துக் கூறுவார்.

௧அ. பகல் அரசு - சூரியனாகிய அரசனை. பணை - பறை; யானை செல்லுங்கால் அதன்வரவை எல்லார்க்கும் தெரிவித்தற்குப் பணை முழங்கும்; "வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை, வெரு வரு செலவின் வெகுளி வேழம்" பொருந. ௧௭௧ - ௨.

௧௯. மாலை நெற்றி - அந்திக்காலமாகிய நெற்றி. பிறைக்கோடு - பிறையாகிய தந்தம்.

(பி - ம்). ௧௧. 'பசிகெடுப்ப' ௧௫. 'உன்னிலை யெல்லாமிளங் கொடி செய்தியாயிற்'

௨0 நீல யானை மேலோ ரின்றிக்
காமர் செங்கை நீட்டி வண்டுபடு
பூநாறு கடாஅஞ் செருக்கிக் கால்கிளர்ந்து
நிறையழி தோற்றமொடு தொடர முறைமையி
னகர நம்பியர் வளையோர் தம்முடன்
௨௫ மகர வீணையின் கிளைநரம்பு வடித்த
விளிபுண ரின்சீ ரெஃகுளங் கிழிப்பப்
பொருஅ நெஞ்சிற் புகையெரி பொத்திப்

௨0. நீலயானை - கரியநிறத்தையுடைய இராத்திரியாகிய யானை. மேலோர் - பாகர்; "மேலோ ரின்றி" (௪ : ௩௫) என்றார் முன்னும்; "மேலோர் வீசி" மதுரை. ௩௮௧.

௨௧. காமர்செங்கை - விருப்பமாகிய துதிக்கை.

௨௨. பூநாறுகடாம் - ஏழிலைப்பாலை மலரினது மணம்நாறுகின்ற மதம்; இதனை, "பாத்த யானையிற் பதங்களிற் படுமத நாறக், காத்த வங்குச நிமிர்ந்திடக் கால்பிடித் தோடிப், பூத்த வேழிலைப் பாலையைப் பொடிப்பொடி யாகக், காத்தி ரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததோர் களிறு" (கம்ப. வரை. ௬) என்னுஞ் செய்யுளாலுணர்க; வேங்கை மலரின் மணமென்றுமாம்; "விலக்கருங் கரிமதம் வேங்கை நாறுவ" (கம்ப. நகர. ௫௮.) செருக்கி - களித்து. கால்கிளர்ந்து - காற்றைப் போல எழுந்து; "கால்கிளர்ந் தன்ன வேழம்" புறநா. ௮௨.

௨௧ - ௩. பெயர்வோன்றன்னை நீலயானை தொடரவெனவியைக்க; இரவுவரவென்றபடி.

௨௪. நம்பியர் - காதலஞ்செல்வர்; "நறுஞ்சாந் தகலத்து நம்பியர்" (சிலப். ௧௪ : ௧00.) வளையோர் - மகளிர்.

௨௫. மகரவீணை - மகரயாழ்; இது நால்வகையாழ்களுள் ஒன்று; பதினேழுநரம்புகளையுடையது. கிளைநரம்பு - குரல், இளி, துத்தம், விளரி, கைக்கிளையென்னும் ஐந்துமாம்; இதனை, "கிளையெனப் படுவ கிளக்குங் காலைக், குரலே யிளியே துத்தம் விளரி, கைக்கிளை யெனவைந் தாகு மென்ப" (சிலப். ௮ : ௩௩ - ௪, மேற்.) என்பதனாலுணர்க. வடித்தல் - 'சுட்டு விரலும் பெருவிரலுங் கூட்டி நரம்பை அகமும்புறமும் ஆராய்தல்' (சிலப். ப. ௨0௪) என்பர் அரும்பதவுரையாசிரியர்; 'நரம்பை உருவுதல்' (பொருந. ௨௩) என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

௨௬. இளி - இசை; ஏழுநரம்பினுள் ஒன்றன் பெயராயிருந்தும் எல்லாப்பண்ணிற்கும் இஃது அடிமணையாதலின், ஈண்டு இப்பொருளைத் தந்து நின்றது. சீர் - தாளவறுதி. எஃகு - வேல். சீராகிய எஃகு உளத்தைக் கிழிப்ப. ௨௭. எரிபொத்தி - (காமமாகிய) தீ மூட்டப்பட்டு.

(பி - ம்.) ௨௪. 'நகரம்பிரியாவிளையோர்'

பருஅக் குருகி னுயிர்த்தவன் போயபி
னுறையுட் குடிகை யுள்வரிக் கொண்ட
௩௦ மறுவில் செய்கை மணிமே கலைதான்
மாதவி மகளாய் மன்றந் திரிதரிற்
காவலன் மகனோ கைவிட லீயான்
காய்பசி யாட்டி காயசண் டிகையென
வூர்முழு தறியு முருவங் கொண்டே
௩௫ யாற்று மாக்கட் காற்றுந் துணையாகி
யேற்றலு மிடுதலு மிரப்போர் கடனவர்
மேற்சென் றளித்தல் விழுத்தகைத் தென்றே
நூற்பொரு ளுணர்ந்தோர் நுனித்தன ராமென
முதியாள் கோட்டத் தகவயி னிருந்த
௪௦ வமுத சுரபியை யங்கையின் வாங்கிப்
பதியகந் திரிதரும் பைந்தொடி நங்கை

---

உஅ. பருஅக்குருகின் உயிர்த்து - கொல்லன் உலைமூக்குப்போலே யுயிர்த்து ; பருஅக்குருகு: வெளிப்படை; வஞ்சிநகரைப் பூவாவஞ்சியென் றும், குதிரைமலையை ஊராக்குதிரையென்றும், குறிஞ்சிப் பண்ணைக் கொய்யாக் குறிஞ்சியென்றும், நாஞ்சின்மலையை உழாநாஞ்சிலென்றும் நூல்களில் வழங்குதல் காண்க. “ஊதுலைக் குருகி னுயிர்த்து” (உ: ௪௩) என்றார் முன்னும்.

கசு - உஅ. பெயர்வோன்றன்னை நிலயானை தொடரச் சீராகிய எஃகு உளங்கிழிப்ப எரிபொத்தி உயிர்த்து அவன் போயபினென்க.

இனி, மணிமேகலை உதயகுமரனுக்கு அஞ்சிக் காயசண்டிகை வடிவத்துடன் பிச்சையிடுதற்கு வெளிப்பட்டு வந்தமை கூறுவார்.

உகூ. உறையுட் குடிகை – இருப்பிடமாகிய சிறிய கோயிலில். உள்வரிக்கொண்ட - வேற்றுருவங்கொண்ட ; உள்வரியாவது பாண்டவர் விராடநகரத்துப்பிறிதுருவங்கொண்டாற்போல்வது என்பர் அடியார்க்கு நல்லார் (சிலப். அ: அச - கூ); கிருத்திரிமவேடம் என்றும், வடிவு மறைத்தலென்றுங் கூறுவர் சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர் ; ரு: உககூ, அ: அரு - கூ.

௩க. ‘மாதவிமகளாய்’ என்பது முதலியன மணிமேகலையின் உட்கோள். மன்றம் - உலகவறவி.

௩உ. காவலன்மகன் - உதயகுமரன். கைவிடலீயான் - கைவிடான்.

௩ரு. பூ. மணி. கஎ : கூச.

௩சு - அ. வாங்குதலும் கொடுத்தலும் இரப்போர் கடனுமாதலின், அவர் எவ்விடத்திலும் வலிந்து சென்று கொடுத்தல் சிறப்புடைத்தென்று நூற்பொருளுணர்ந்தோர் ஆராய்ந்து சொன்னாரென்று கருதி.

௪0. வாங்கி - கொண்டு. ௪க. நங்கை - மணிமேகலை.

(பி - ம்.) ௪க. ‘பைந்தொடி மடந்தை’

யதிர்கழல் வேந்த னடிபிழைத் தாரை
யொறுக்குந் தண்டத் துறுசிறைக் கோட்டம்
விருப்பொடும் புகுந்து வெய்துயிர்த் துப் புலம்பி
சரு யாங்குப் பசியுறு மாருயிர் மாக்களை
வாங்கு கையகம் வருந்தநின் றூட்டலு
மூட்டிய பாத்திர மொன்றென வியந்து
கோட்டங் காவலர் கோமகன் றனக்கிப்
பாத்திர தானமும் பைந்தொடி செய்தியும்
ருO யாப்புடைத் தாக விசைத்துமென் றேகி
நெடியோன் குறளுரு வாகி நிமிர்ந்துதன்
னடியிற் படியை யடக்கிய வந்நா
ணீரிற் பெய்த மூரி வார்சிலை
மாவலி மருமான் சீர்கெழு திருமகள்

---

சஉ. பிழைத்தாரை - பிழை செய்தாரை.

சங. தண்டத்து - தண்டத்தினையுடைய. சிறைக்கோட்டம்-சிறைச் சாலை.

௩O - சசு. மணிமேகலை, நுணித்தனராமென வாங்கிப் புகுந்து நின்று மாக்களை ஊட்டலுமென்க.

இவள் பலரையும் உண்பித்தலைக் கண்ட கோட்டங்காவலர் வியப்புற்றுச்சென்று அரசனுக்குத் தெரிவித்தல் இனிக் கூறப்படும்.

ருO. யாப்புடைத்தாக - உறுதியுடைத்தாக. இசைத்தும் - சொல்லுவேம்.

சஎ - ருO. கோட்டங்காவலர் வியந்து தானமும் செய்தியும் கோமகனுக்கு இசைத்துமென்றேகியென்க.

ருக. திருமால் வாமனனாகிப்பேருருவங்கொண்டு.

ருஉ. அடக்கிய - அடக்க. அந்நாளில்; அடக்கிய அந்நாளென இயைத்துப் பெயரெச்சத் தொடராக்கினுமமையும்.

ருங. நீரிற் பெய்த - நீருடன் பூமியைக்கொடுத்த; பூமியைத் தாரை வார்த்துக் கொடுத்தவென்றபடி.

ருஉ - ங. அடக்கிய நீரிற் பெய்தவெனவியைக்க.

ருச. மாவலி மருமான் மகள் - மகாபலியின் வழித்தோன்றலாகிய அரசனுடைய மகள்; அரசன் பெயர் புலப்படவில்லை.*

---

* மகாபலியின் பரம்பரையரசர் யாரென்று வினவியபொழுது இராசாங்கத்துச் சிலாசாதன பரிசோதகர்களுள் ஒருவராக இருந்த, ஸ்ரீ வி.

(பி - ம்.) ருஉ - ங. 'அன்னாளங்கதுபெய்தி'

௫௫ சீர்த்தி யென்னுந் திருத்தகு தேவியொடு
போதவிழ் பூம்பொழில் புகுந்தனன் புக்குக்
கொம்பர்த் தும்பி குழலிசை காட்டப்
பொங்கர் வண்டின நல்லியாழ் செய்ய
வரிக்குயில் பாட மாமயி லாடும்

௫௫. சீர்த்தியென்று பெயர் கூறப்படும் செல்வமிக்க தேவியுடன்.

௫௬. போது - மலரும் பருவமுள்ள அரும்பு.

௫எ. குழல் - வேய்ங்குழல். ௫அ. பொங்கர் - சோலை.

௫எ - அ. இவ்வடிகளிற்போலவே, "குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட, மழலை வண்டின நல்லியாழ் செய்ய" (௪ : ௩ - ௪) என்று முன்பு வந்திருத்தல் காண்க.

௫௯. வரி - வரிப்பாட்டு ; இற்றுமாம்.

வெங்கையாவர்கள் அன்புடன் எழுதியனுப்பியவிடை வருமாறு: "பாண வம்சத்து அரசர்கள் மகாபலியின் பரம்பரையைச் சேர்ந்தவர் ; அவர்க ளின்கல்வெட்டுக்கள், வட ஆர்க்காடு ஜில்லா வேலூருக்கடுத்த திருவல்ல மென்கிற கிராமத்திலும், மைஸூர் ஸமஸ்தானத்தில் துல்கான்போடே என்கிற ஊரிலும் கிடைத்திருக்கின்றன ; 'மூவுலகிலும் தொழப்பட்ட வனும் தேவர்களுக்கும் அசுரர்களுக்குந் தலைவனுயுமிருக்கின்ற பரமே சுவரனுக்கு வாயில்காக்கும்படியாக நியமிக்கப்பட்ட மகாபலிதலத் தைச்சேர்ந்தவன்' என்று சிலபாணவரசர்கள், தங்களுக்குரிய கல்வெட் டுக்களிற் சிறப்பிக்கப்பட்டிருக்கிறார்கள். பாணகுலத்தைச் சேர்ந்த செப் புப் பட்டயங்கள் இரண்டுண்டு. அவற்றில் ஒன்று, சிதம்பரம் கனக ஸபையின் முகட்டைப் பொன்வேய்ந்த பராந்தகனென்று சொல்லப் பட்ட வீரநாராயணச்சோழன் பாணவம்சத்தை நின்மூலஞ்செய்து அவர் களின் நாட்டைக் கங்கவம்சத்தைச்சேர்ந்த அத்திமல்லனென்ற அர னுக்குக் கொடுத்ததாகச் சொல்லுகின்றது. இந்த வீரநாராயணன் கி. பி. 10-ஆம் நூற்றாண்டின் முற்பாதியிற் சீவித்திருந்தான். மற்றொருசெப் புப்பட்டயத்திற் கீழே எழுதப்பட்டிருக்கும் வம்சாவலி கிடைத்தது :பலி, அவன்மகன்பாணன், அவன் குலத்திற்பிறந்தவன் பாணுதிராசன், இவ்வம் சத்தைச்சேர்ந்த அநேக அரசர்கள் மரித்தபிறகு இருந்தோன் ஜயநந்தி வர்மன் (இவன் ஆந்திரதேசத்திற்கு மேற்கிலிருந்தநாட்டை ஆண்டவன்) ; அவன் மகன் முதலாம் விசயாதித்தன், அவன்மகன் ஜகதேகமல்ல னென்கிற மல்லதேவன், அவன்மகன் பாணவித்தியாதரன், அவன்மகன் பிரபு மேருதேவன், அவன் மகன் முதலாம் விக்கிரமாதித்தன், அவன் மகன் புகழ்விப்பவர்கண்டனென்கிற இரண்டாம் விசயாதித்தன், அவன் மகன் விசயபாதுவென்று கூறப்பட்ட இரண்டாம் விக்கிரமாதித்தன் (இவன் கிருஷ்ணராஜனென்ற அரசனுக்கு நேசன்.) இந்த அரசர்களின் காலம் தெரியவில்லை."

(பி - ம்.) ௫௫. 'சீதரதகையெனுந்', 'சீதாதிகையெனுந்.' ௫௬. 'பொருந்தினள்புக்கு', 'புகுந்தனள்புக்கு.' ௫எ. 'கொம்பலாததுகுழ விசைகாட்ட'

௬0 விரைப்பூம் பந்தர் கண்டுளஞ் சிறந்தும்
புணர்துணை நீங்கிய பொய்கை யன்னமொடு
மடமயிற் பேடையுந் தோகையுங் கூடி
யிருசிறை விரித்தாங் கெழுந்துடன் கொட்பன
வொருசிறைக் கண்டாங் குண்மகிழ் வெய்தி
௬௫ மாமணி வண்ணனுந் தம்முனும் பின்ஞையு
மாடிய குரவையி ஃதாமென நோக்கியுங்
கோங்கலர் சேர்ந்த மாங்கனி தன்னைப்
பாங்குற விருந்த பல்பொறி மஞ்ஞையைச்
செம்பொற் றட்டிற் றீம்பா லேந்திப்
எ0 பைங்கிளி யூட்டுமோர் பாவையா மென்று

---

௫எ - ௬0. காட்டச்செய்யப் பாட ஆடும்பந்தர் கண்டு உளஞ்சிறந்து மென்க.

௬௧. துணை - பெண்ணன்னம். ௬உ. தோகை - ஆண்மயில்.

௬௩. கொட்பன - சுழலுவனவற்றை.

௬௪. ஒருசிறை- ஒரு பக்கம்.

௬௫. மாமணிவண்ணன் - கண்ணன். தம்முன் - பலதேவர். பின்ஞை - நப்பின்னை.

௬௬. ஆடிய - (துவராபதியில் எருமன்றத்தே அக்காலத்து) ஆடிய. குரவை - கைகோத்தாடுங்கூத்து ; இதனை, வரிக்கூத்தின் ஒருறுப்பென்றும், விநோதக்கூத்து ஆறினுள்ஒன்றென்றும் கூறுவர் அடியார்க்கு நல்லார் ; சிலப் ௩ ; ௧உ.

௬௫ - ௬. கண்ணனும் பலதேவரும் நப்பின்னையுமாகிய மூவரும் துவராபதியில் எருமன்றத்தே குரவைக்கூத்து ஆடியதனை, "மாயவன் றம் முன்னினொடும் வரிவளைக்கைப் பின்னையொடுங் கோவலர்தஞ் சிறுமியர்கள் குழற்கோதை புறஞ்சோர, வாய்வளைச்சீர்க் கடிபெயர்த்திட்டசோதையார் தொழுதேத்தத் தாதெருமன் றத்தாடுங் குரவையோ தகவுடைத்தே" (சிலப். ௧எ) என்பதனாலுணர்க.

௬௧ - ௬. அன்னத்திற்குப் பலதேவரும், மயிற்பேடைக்கு நப்பின்னையும், தோகைக்குக் கண்ணனும் உவமைகள். கொட்பனவற்றைக் கண்டு மகிழ்வெய்திக் குரவையிஃதாமென நோக்கியுமென்க.

௬எ. கோங்கலர் - கோங்கம்பூ. ௬அ. மஞ்ஞை - மயில்.

எ0. பாவை - பெண். என்றும் - என்று கருதியும்.

௬எ - எ0. கோங்கலர்க்குப் பாலையுடைய பொற்றட்டும், மாங்கனிக்குக் கிளியும், மயிலுக்குப் பெண்ணும் உவமைகள்.

(பி - ம்.) ௬0. 'சிறந்து' ௬௧. 'அனமொடும்' ௬உ. 'பேடையுஞ் சேவலுங்கூடி' ௬௪. 'சிறை கண்டா.....வெய்திய' ௬௫. 'பின்னையும் ௬௬. 'குரவையதாமென' எ0. ஊட்டுமோபாவை'

மணிமலர்ப் பூம்பொழி லகவயி னிருந்த
பிணவுக்குரங் கேற்றிப் பெருமதர் மழைக்கண்
மடவோர்க் கியற்றிய மாமணி யூசல்
கடுவ னூக்குவது கண்டுநகை யெய்தியும்
எரு பாசிலை செறிந்த பசுங்காற் கழையொடு
வால்வீ செறிந்த மராஅங் கண்டு
நெடியோன் முன்னொடு நின்றன னெனத்
தொடிசேர் செங்கையிற் றொழுதுநின் றேத்தியு
மாடற் கூத்தினோ டவிநயந் தெரிவோர்
அ0 நாடகக் காப்பிய நன்னூ னுனிப்போர்
பண்ணியாழ் நரம்பிற் பண்ணுமுறை நிறுப்போர்

---

எஉ. பிணவுக்குரங்கு - பெண்குரங்கு ; "பன்றி புல்வாய் நாயென மூன்று, மொன்றிய வென்ப பிணவென் பெயர்க்கொடை" (தொல். மரபு. நிஅ) என்னும் சூத்திரத்தில், 'ஒன்றிய' என்றதனாற், 'பிணவு' என்பது குரங்குக்கும் கொள்ளப்பட்டது.

எங. மடவோர்க்கு - மகளிர்க்கு.

எச. கடுவன் - ஆண்குரங்கு ; "குரங்கி னேற்றினைக் கடுவ னென்றலும்" (தொல். மரபு. சூ. கூஅ.) ஊக்குவது - செலுத்துதலை.

எஉ - ச. கடுவன், பிணவுக்குரங்கை யேற்றி ஊசலை ஊக்குவது கண்டு நகையெய்தியுமென்க. எரு. கழை - மூங்கில்.

எகூ. வால்வீ - வெள்ளியமலர். மராம் - வெண்கடம்பு.

எஎ. நெடியோன் - கண்ணன். முன் - தமையன் ; என்றது பலதேவரை.

எரு - எ. கழைக்குக் கண்ணனும் வெண்கடம்பிற்குப் பலதேவரும் உவமைகள். மராத்திற்குப் பலதேவர் : கலி. உகூ : க ; கார். கக.

எஅ. தொடி - வீரவளை ; "தொடித்தோட்கை" மதுரை. நச.

எகூ. அவிநயம் - கதைதழுவாதே பாட்டுக்களின் பொருள்தோன்றக் கைகாட்டி அபிநயிப்பது.

அ0. நாடகம் - கதைதழுவிவருங்கூத்து. காப்பியம் - காவ்யம். நாடகக்காப்பியமாகிய நன்னூலென்க. நுனிப்போர் - கூர்ந்து ஆராய்வோர் ; "நூற்பொரு ளுணர்ந்தோர் நுனித்தனர்" (நஅ) என இக் காதையிலேயே முன்பு வந்திருத்தல் காண்க.

அக. பண்களையுடைய வீணைநரம்புகளிற் பண்களை முறையே நிறுத்துவோர்.

(பி - ம்.) எஉ. 'பெருந்தாமரைக்கண்' எச. 'கண்டுமகிழ்வெய்தியும்' எரு. 'காலிக்கழையொடு'

தண்ணுமைக் கருவிக் கண்ணெறி தெரிவோர்
குழலொடு கண்டங் கொளச்சீர் நிறுப்போர்
பழுநிய பாடல் பலரொடு மகிழ்வோ
அரு ராரம் பரிந்த முத்தங் கோப்போ
ரீரம் புலர்ந்த சாந்தந் திமிர்வோர்
குங்கும வருணங் கொங்கையி னிழைப்போ
ரஞ்செங் கழுநீ ராயிதழ் பிணைப்போர்
நன்னெடுங் கூந்த னறுவிரை குடைவோர்
கூo பொன்னி னூடியிற் பொருந்துபு நிற்போ
ராங்கவர் தம்மோ டகலிரு வானத்து
வேந்தனிற் சென்று விளையாட் டயர்ந்து

அஉ. தண்ணுமைக்கருவி - மத்தளம்; இதனை உத்தமத்தோற் கருவியென்பர். கண்ணெறி தெரிவோர் - அதன் முகத்தில் அடித்தலை ஆராய்வோர்; கண் - வாத்தியங்களின் முகம்; "பண்ணமை முழவின் கண்ணெறி யறிந்து" சிலப். ங: கக.

அங. குழலொடு கண்டம் கொள - வேய்ங்குழலோடு மிடற்றுப் பாடல் பொருந்தும் வண்ணம். சீர் - தாளவறுதி.

அச. பழுநிய பாடல் - முற்றுப்பெற்ற இசைப்பாடல். மகிழ்வோர் - மகிழ்ந்துபாடுவோர்.

அரு. ஆரம் பரிந்தமுத்தம் - ஆரம் அறபடுதலாற் சிந்தியமுத்துக் கள்.

அசு. புலர்ந்த சாந்தம் - உலர்ந்த சந்தனம்.

அஎ. குங்குமவருணம் - சிவந்ததொய்யிற்குழம்பு. இழைப்போர் - எழுதுவோர்.

அஅ. ஆயிதழ்பிணைப்போர் - அழகிய இதழைத் தொடுப்போர்.

கூo. ஆடி - கண்ணாடி.

எக - கூக. தெரிவோரும், நுனிப்போரும், நிறுப்போரும், தெரிவோரும், நிறுப்போரும், மகிழ்வோரும், கோப்போரும், திமிர்வோரும், இழைப்போரும், பிணைப்போரும், குடைவோரும், நிற்போருமாகிய அவர்களோடென்க.

கூக - உ. வானத்து வேந்தனில் - இந்திரன்போல; "வேந்தன் மேய தீம்புன லுலகமும்" (தொல். அகத். சூ. ரு), "வேந்தனும் வேந்து கெடும்" (குறள், அகூக) என வருதலால், வேந்தனென்றதற்கே இந்திரனென்று பொருள்கூறினும் இழுக்காது. விளையாட்டு அயர்ந்து - விளையாட்டை விரும்பிச்செய்து.

(பி - ம்.) அச. 'பழனிப்பாடல்பலவொடுமகிழ்வோர்' அரு - அ. 'கோப்போர், செங்கழுநீராற் சேயிதழ் பிணிப்போர்' அகூ. 'கூந்தனறு விரை' கூo. 'பொன்னனியாடி', 'பொன்னணி யாடியின்.'

குருந்துந் தளவுந் திருந்துமலர்ச் செருந்தியு
முருகுவிரி முல்லையுங் கருவிளம் பொங்கரும்
௯௫ பொருந்துபு நின்று திருந்துநகை செய்து
குறுங்கா னகுலமு நெடுஞ்செவி முயலும்
பிறழ்ந்துபாய் மானு மிறும்பகலா வெறியும்
வம்மெனக் கூஉய் மகிழ்துணை யொடுதன்
செம்மலர்ச் செங்கை காட்டுபு நின்று
௧௦௦ மன்னவன் றானு மலர்க்கணை மைந்தனு
மின்னிள வேனிலு மிளங்காற் செல்வனு
மெந்திரக் கிணறு மிடுங்கற் குன்றமும்
வந்துவீ ழருவியு மலர்ப்பூம் பந்தரும்
பரப்புநீர்ப் பொய்கையுங் கரப்புநீர்க் கேணியு
௧௦௫ மொளித்துறை யிடங்களும் பளிக்கறைப் பள்ளியும்
யாங்கணுந் திரிந்து தாழ்ந்துவிளை யாடி

---

௯௩. தளவு - செம்முல்லை. செருந்தி - ஒருமரம்; இது செருந்தெனவும் வழங்கும்.

௯௪. முருகு - வாசனை. கருவிளை - ஒருமரம்; "அந்தண் ணகிலுஞ் சந்தனக் குழையுங், கருவிளங் கோடும்" (பெருங். ௧.௪௧:௩௨-௩.) பொங்கர் - சோலை; கிளையுமாம்.

௯௬. நகுலம் - கீரி. ௯௭. இறும்பு - குறுங்காடு. வெறி - ஆடு.

௯௮. வம்மெனக்கூஉய் - வாருமென்று கூவி; வாருமென்றது வம் என நின்றது; "கதுமெனக் கரைந்து வம்மெனக் கூஉய்" (பொருந. ௧௦௧.) மகிழ் துணை - இராசமாதேவி.

௯௯. காட்டுபு - காட்டி. ௧௦௦. மலர்க்கணை மைந்தன் - மன்மதன்.

௧௦௧. இன்னிள வேனில் - இனிய இளவேனிற்பருவம்; அஃதாவது சித்திரை வைகாசி மாதங்கள்; (சிலப். ௮: ௫௭.) இளங்காற் செல்வன் - தென்றற்காற்றாகிய செல்வன்; "சிறுகாற் செல்வன் மறுகிற் றூற்ற" சிலப். ௪: ௧௮.

௧௦௨. எந்திரக்கிணறு - நீரை நிறைக்க வேண்டுமாயின் நிறைத்துப் போக்கவேண்டுமாயிற் போக்குதற்குரிய கிணறு. இடுங்கற்குன்றம் - செய்குன்று.

௧௦௪. கரப்புநீர்க்கேணி - மறைதலையுடைய நீரையுடைய கிணறு; இதனை அந்தக்கேணி யென்பர்.

௧௦௫. பளிக்கறை - பளிங்கறை. பள்ளி - இடம்.

௧௦௬. யாங்கணும் - கிணறும் குன்றமும் அருவியும் பந்தரும் பொய்

(பி - ம்.) ௯௩. 'குருகுந்தளவு திருமலர் சொரிந்து', 'குருகுந்தளவுந் திருமலர்ச் செருந்தியும்.' ௯௭. 'விரும்புகயாவெறியும்', 'இரும்பகவா வெறி.' ௧௦௨. 'இடுதற்குன்றமும்' ௧௦௪. 'காப்புநீர்க்கணியு'

மகத வினைஞரு மராட்டக் கம்மரு
மவந்திக் கொல்லரும் யவனத் தச்சருந்
தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடிக்
கக0 கொண்டினி தியற்றிய கண்கவர் செய்வினைப்
பவளத் திரள்காற் பன்மணிப் போதிகைத்
தவள நித்திலத் தாமந் தாழ்ந்த
கோணச் சந்தி மாண்வினை விதானத்துத்
தமனியம் வேய்ந்த வகைபெறு வனப்பிற்
ககரு பைஞ்சேறு மெழுகாப் பசும்பொன் மண்டபத்

---

கையும் கேணியும் இடங்களும் பள்ளியுமாகிய எவ்விடத்தும். திரிந்து மன்னவன்றானும் மைந்தனும் வேனிலும் செல்வனும் திரிந்து.

க0உ - கூ. இவ்வடிகளிற் போலவே, "அந்தக் கேணியு மெந்திரக் கிணறுந், தண்பூங் காவுந் தலைத்தோன் றருவிய,வெண்சுதைக் குன்றொடு வேண்டுவ பிறவு, மிளையோர்க் கியற்றிய விளையாட் டிடத்த, சித்திரப் பூமி வித்தக நோக்கி" (பெருங். க. ௩௩ : ௩-எ), "பளிக்கறைப் பூமியும் பந்தெறி களத்து, மணிக்கயிற் றூசன் மறலிய விடத்துங், கொய்ம்மலர்க் காவும் பொய்கைக் கரையு, மந்தக் கேணியும் வந்துபெயர் கூவி" (பெருங். க. ௩௪ : ககரு - அ) என வருதல்காண்க.

க0எ. மகதவினைஞர் - மகதநாட்டிப்பிறந்த இரத்தினவேலைக்காரர். மராட்டம் - மகாராஷ்டிர தேசம்.

க0அ. அவந்தி - அவந்திதேசம். யவனம் - யவனதேசம்.

க0எ - அ. மகததேசத்துப் பிறந்த இரத்தின வேலைக்காரர் முதலியோர் தொழிலிற் பெயர்பெற்றவரென்பதை, "யவனத் தச்சரு மவந்திக் கொல்லரு, மகதத்துப் பிறந்த மணிவினைக் காரரும், பாடலிப் பிறந்த பசும்பொன் வினைஞருங், கோசலத் தியன்ற வோவியத் தொழிலரும், வத்த நாட்டு வண்ணக் கம்மரும்" (பெருங். க. ருஅ: ௪0 - ௪௪) என்பதனுலுமுணர்க.

க0எ - கூ. மேற்கூறிய மகதவினைஞர் முதலியோர் தண்ணிய தமிழ் நாட்டிற்பிறந்த தொழில் செய்வாருடனேகூடி.

ககஉ. நித்திலத்தாமம் - முத்துமாலை.

கக௩. கோணச்சந்தி - கோணமாகிய சந்தி ; "சந்திக் கோணமு மந்திர வாணியும்" (பெருங். க. ருஅ : ருக.) விதானம் - மேற்கட்டி.

கக௪. தமனியம் - பொன்.

ககரு. பைஞ்சேறு மெழுகா - ஆப்பியால் மெழுகப்படாத ; "பைஞ் சேறு மெழுகிய படிவ நன்னகர்" (பெரும்பாண். உகஅ) ; சந்தனத்தால் மெழுகியவென்றபடி ; "மங்கல வெள்ளை வழித்துமுத் தீர்த்தபின்" (சீவக. க௪எஎ) எனவருதல் காண்க.

(பி - ம்.) க0எ. 'மாட்டக்கம்மரும்' ககரு. 'செம்பொன் மண்டபத்து'

திந்திர திருவன் சென்றினி தேறலும்
வாயிலுக் கிசைத்து மன்னவ னருளாற்
சேய்நிலத் தன்றியுஞ் செவ்வியின் வணங்கி
யெஞ்சா மண்ணசைஇ யிகலுளந் துரப்ப
௧௨௦ வஞ்சியி னிருந்து வஞ்சி சூடி
முறஞ்செவி யானையுந் தேரு மாவு
மறங்கெழு நெடுவாள் வயவரு மிடைந்த
தலைத்தார்ச் சேனையொடு மலைத்துத்தலை வந்தோர்

௧௧௬. இந்திரதிருவன் - இந்திரச்செல்வமுடைய அரசன்.

௯௧-௧௧௬. இந்திரதிருவன், தேவியொடுபுக்குக் கண்டு உளஞ்சிறந்தும் நோக்கியும் பாவையாமென்றும் நகையெய்தியும் எத்தியும் அவர்தம்மோடுசென்று அயர்ந்து பொருந்துபுநின்று நகைசெய்து கூஉய்க் காட்டுபு நின்று யாங்கணுந் திரிந்து விளையாடி மண்டபத்து அவன் சென்று இனிது ஏறலுமென்க.

௧௧௭. வாயிலுக்கு இசைத்து - வாயில் காவலர்க்குத் தெரிவித்து. அருளால் - கட்டளையால்.

௧௧அ. சேய்நிலத்தன்றியும் - தூரமான இடத்தே தாம் நின்ற தல்லாமலும். செவ்வியின் - சமயத்தில்.

௪அ - ௧௧அ. கோட்டங்காவலர் இசைத்துமென்று எகி இசைத்து வணங்கியெனக் கூட்டுக.

௧௧௯. குறையாத மண்ணைவிரும்பி, மாறுபாடு உள்ளத்தைச் செலுத்த.

௧௨௦. வஞ்சியின் இருந்து - கருவூரிலிருந்து. வஞ்சி சூடி - வஞ்சிப்பூ மாலையைச்சூடி ; "பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி, வாய்வா ணெடுந்தகை மணிமுடிக் கணிந்து" (௨௬ : ௯௦ - ௯௧) என்று சிலப்பதிகாரத்தும் கூறப்பட்டிருத்தல் காண்க.

௧௧௯ - ௨௦. இதனை, "எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்த, னஞ்சுதகத் தலைச்சென் றடல்குறித் தன்றே" (தொல். புறத். சூ. எ), "வாடா வஞ்சி தலைமலைந்து, கூடார்மண் கொளல்குறித் தன்று", "வஞ்சி வணங்கார் வணக்கிய வண்டார்ப்பக், குஞ்சி மலைந்தானெங் கோ" (பு - வெ. ௩௬.) என வருவனவற்றாலுணர்க.

௧௨௧. முறஞ்செவி யானை - முறம் போலும் காதுகளையுடைய யானை ; "முறஞ்செவி வாரணம்" சிலப். ௧௦ : ௨௪எ.

௧௨௨. மறம் - ஆண்மை. வயவர் - வீரர்.

௧௨௩. தலைத்தார்ச்சேனையொடு - முதன்மையாகிய தூசிப்படையோடு ; (சிலப். ௨௬ : அ௦.) மலைத்து - மாறுபட்டு. தலைவந்தோரென்

(பி - ம்.) ௧௧௬. 'சிறுவனேறின னென்றலும்' ௧௧௯. 'எஞ்சார் மண்ணசைமேலுலந்துரப்ப' ௧௨௧ - ௨. 'மாவு, றறங் கெழுநெடுவாள் மறவரும்'

சிலைக்கய னெடுங்கொடி செருவேற் றடக்கை
௧௨௫ யார்புனை தெரிய லிளங்கோன் றன்னாற்
காரியாற்றுக் கொண்ட காவல் வெண்குடை
வலிகெழு தடக்கை மாவண் கிள்ளி
யொளியொடு வாழி யூழிதோ றூழி
வாழி யெங்கோ மன்னவர் பெருந்தகை
௧௩௦ கேளிது மன்னோ கெடுகநின் பகைஞர்
யானைத் தீநோய்க் கயர்ந்துமெய் வாடியிம்
மாநகர்த் திரியுமோர் வம்ப மாத
ரருஞ்சிறைக் கோட்டத் தகவயிற் புகுந்து
பெரும்பெயர் மன்ன நின்பெயர் வாழ்த்தி
௧௩௫ யையப் பாத்திர மொன்றுகொண் டாங்கு

றது, சேர பாண்டியர்களை; பின், "சிலைக்கய னெடுங்கொடி" என்று வருதலால் இங்ஙனங் கொள்ளப்பட்டது.

௧௨௪. சிலைக் கயல் நெடுங்கொடி - சேரனுடைய விற்கொடியையும், பாண்டியனுடைய கயற்கொடியையும்.

௧௨௫. ஆர் - ஆத்தி; இது சோழர்களுக்கு உரிய அடையாள மாலை. இளங்கோன் - தம்பி; இவன் யுவராசாவாக இருத்தலின், 'இளங்கோன்' என்றார் போலும்.

௧௨௬. காரியாறு - ஒருநதியின்பெயர். இதனை, 'காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி' (புறநா. ௪௭), "செல்கதிமுன் னளிப்பார்தந் திருக்காரிக் கரையணிந்து" (பெரிய. திருநா. ௩௪௩) என வருவன வற்றாலுணர்க. பெரும் போர்புரிவோர் ஆற்றிடையே அது செய்தல் இயல்பு; "உடன்றுமேல் வந்த வாரிய மன்னரைக், கடும்புனற் கங்கைப் பேர்யாற்று வென்றோய்" சிலப். ௨௮ : ௧௨௦ - ௨௧.

௧௨௭. மாவண்கிள்ளி: விளி; இஃது அரசன் பெயர்.

௧௨௩ - ௭. வந்தோருடைய கொடிகளை இளங்கோனாற் காரியாற்றுக்கொண்ட மாவண்கிள்ளியென்க.

௧௨௮. ஒளி - உறங்காநிற்கவும் உலகங்காக்கின்ற அரசரிடத் துள்ள கடவுட்டன்மை; "இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற, வொளியோ டொழுகப் படும்" (குறள், ௬௯௮); "உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" சீவக. ௨௪௮.

௧௩௧. அயர்ந்து - கவலையுற்று.

௧௩௨. வம்பமாதர் - காயசண்டிகை; வம்பு - புதுமை.

௧௩௪. பெரும்பெயர் - மிக்கபுகழ்; "பெரும்பெயர்மன்னவன்" சிலப். ௩௩ : ௩௮.

(பி - ம்.) ௧௨௮. 'ஒலியொடுவழாஅதூழி' ௧௨௯. 'வாழியெங்கோ வாழிய பெருந்தகை'

மொய்கொண் மாக்கண் மொசிக்கவூண் சுரந்தன
ளூழிதோ றூழி யுலகங் காத்து
வாழி யெங்கோ மன்னவ வென்றலும்
வருக வருக மடக்கொடி தானென்
௧௪௦ றருள்புரி நெஞ்சமொ டரசன் கூறலின்
வாயி லாளரின் மடக்கொடி தான்சென்
றாய்கழல் வேந்த னருள்வா ழியவெனத்
தாங்கருந் தன்மைத் தவத்தோய் நீயார்
யாங்கா கியதிவ் வேந்திய கடிஞையென்
௧௪௫ றரசன் கூறலு மாயிழை யுரைக்கும்
விரைத்தார் வேந்தே நீநீடு வாழி
விஞ்சை மகள்யான் விழவணி மூதூர்
வஞ்சந் திரிந்தேன் வாழிய பெருந்தகை
வானம் வாய்க்க மண்வளம் பெருகுக
௧௫௦ தீதின் றாக கோமகற் கீங்கி
தையக் கடிஞை யம்பல மருங்கோர்

---

௧௩௬. மொய் - நெருக்கம். மொசிக்க - உண்ண; "மையூன் மொசித்த வொக்கலொடு" புறநா. ௯௬.

௧௩௨ - ௬. மாதர் புகுந்து வாழ்த்திக் கொண்டு ஊண்சுரந்தனள்.

௧௩௮. என்றலும் - என்று கோட்டங்காவலர் கூறலும்.

௧௩௭ - ௮. சிலப். ௧௧ : ௧௫ - ௬, ௨௫ : ௧௮௧ - ௨, ௨௭ : ௧௩௯ - ௪0, ௨௮ : ௧௮௫ - ௬.

௧௩௯. மடக்கொடி வருக வருகவென்று.

௧௪௧. வாயிலாளரின் - வாயிலாளர்களால்.

௧௪௨. வாழியவென - வாழ்கவென்று மணிமேகலைசொல்ல.

மேல்வருவது அரசன் கூற்று.

௧௪௪. நீ ஏந்திய இப்பாத்திரம் எங்கே கிடைத்தது.

மேல்வருவன மணிமேகலைகூற்று.

௧௪௭. விஞ்சைமகளென்பதற்கு மந்திரத்தால் உருமாறிய மகளென்றும் வித்தியாதரமகளென்றும் இருபொருள்கொள்க; விஞ்சை - மந்திரம். பின்வருவனவும் இப்படியே ஏற்பப்பொருள்கொள்ளுதற்குரியவை.

௧௪௯. வானம் - மழை. ௧௫0. கோமகற்குத் தீதின்றாகுக.

௧௫0 - ௫௧. ஈது ஐயக்கடிஞை - இது பிச்சைப்பாத்திரம்.

(பி - ம்.) ௧௩௬. 'முசிக்க', 'பொசிக்க.' ௧௪௨. 'தாள்வாழிய' ௧௪௩. 'தவத்தீர்நீர்' ௧௪௫. 'அரசகூறலும்' ௧௪௬. 'விரைதார் வேந்தேநீடூழி' ௧௫0 - ௫௧. 'கோமகன்றனக்கிங், கைய கடிஞை'

தெய்வந் தந்தது திப்பிய மாயது
யானைத் தீநோ யரும்பசி கெடுத்த
தூனுடை மாக்கட் குயிர்மருந் திதுவென
௧௫௫ யான்செயற் பாலதென் னிளங்கொடிக் கென்று
வேந்தன் கூற மெல்லிய லுரைக்குஞ்
சிறையோர் கோட்டஞ் சீத்தரு ளெஞ்சத்
தறவோர்க் காக்கு மதுவா ழியரென
வருஞ்சிறை விட்டாங் காயிழை யுரைத்த
௧௬௦ பெருந்தவர் தம்மாற் பெரும்பொரு ளெய்தக்
கறையோ ரில்லாச் சிறையோர் கோட்ட
மறவோர்க் காக்கின னரசாள் வேந்தென்.

௧௯.—சிறைக்கோட்டமறக்கோட்டமாக்கியகாதை முற்றிற்று.

---

௧௫௨. திப்பியமாயது - தெய்வலோகத்திருந்து உண்டாகிய பொருளாகவுள்ளது.

௧௫௪. உடம்பு மெலிந்தவர்களுக்கு உயிரைக்கொடுக்குமருந்து. என - என்று மணிமேகலை சொல்ல. ௧௫௭. ழ. மணி. உ௦ : ௧௧.

௧௫௭ - அ. சிறைச்சாலையை இடித்துத் தூய்மைசெய்து அவ்விடத்தை அருள்பொருந்திய மனத்தையுடைய முனிவர்களுக்கு உரிய இடமாகச் செய்யுமதுவே நீ செயற்பாலதென்று மணிமேகலை சொல்ல.

௧௬௦. பெரும்பொருள் - அறம் ; ஞானமுமாம்.

௧௬௧. கறையோர் - கடமை கொடுப்போர். இல்லாக்கோட்டமென்க ; என்றதனால், அரசன் கறைவீடுசெய்த செங்கோன்முறையையுடையனென்றவாறாயிற்று ; இதனை, "சிறைப்படு கோட்டஞ் சீமின் யாவதுங், கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மி, னிடுபொரு ளாயினும் படுபொரு ளாயினு, முற்றவர்க் குறுதி பெற்றவர்க் காமென, யானையெருத்தத் தணிமுரசிரீஇக், கோன்முறை யறைந்த கொற்றவேந்தன்", "சிறையோர் கோட்டஞ் சீமின் யாங்கணுங், கறைசெழு நாடு கறைவீடு செய்ம்மென" (சிலப். உ௩ : ௧உ௬ - ௩௧, உஅ : உ௦௩ - ௪), "தம்பியை முகத்து நோக்கி, யூர்பிணி கோட்டஞ் சீப்பித் தாறுதவ ஞண்டநாட்டைப், பார்பிணி கறையி னீங்கப் படாமுரசறைவி யென்றான்" (சீவக. உ௩௭உ) என்பனவற்றாலறிக.

௧ - ௧௬உ. தாரோன் வணங்கிக் கூறத்தெய்வங் கூறலும், உள்ளங் கலங்கி வருந்தி அறிவாமெனப் பெயர்வோன்றன்னை நீலயானை தொடர

(பி - ம்.) ௧௫உ. 'தெய்வந்தந்து திசைபியமாயது' ௧௫௪. 'மானிடமாக்க ளுயிர்மருந்திது' ௧௫௬. 'வேந்தன் கூறி' ௧௫எ. 'கோட்டஞ் சிதைத்து' ௧௫அ. 'அறவோர் காக்குமதிவாழிய' ௧௫௯. 'அருஞ்சிறைவிடுத்ததாயிழை தானென' ௧௬உ. 'மறவோர் நகாகயின ளாசாள'

எஃகு உளங்கிழிப்ப அவன் பொத்தி உயிர்த்துப் போயபின், மணிமேகலை நுனித்தனரென்று கருதி வாங்கிக் கோட்டம்புகுந்து மாக்களை ஊட்டலும், காவலர் வியந்து கோமகனுக்கு இசைத்துமென்றேகி, திருவன் சென்று ஏறலும், வாயிலுக்கிசைத்து வணங்கி, 'மன்னவ, வம்ப மாதர் ஊண் சுரந்தனள்' என்றலும், 'வருகவருக' என்று அரசன் கூறலின், மடக்கொடி வாயிலாளரிற் சென்று, 'நின் அருள்வாழிய' என, 'யாங்காகியது' என்று அரசன் கூறலும், ஆயிழையுரைக்கும்: அங்ஙனமுரைப்பவள், 'உயிர்மருந்து இது' என, 'யான் செய்தற்பாலது என்' என்று வேந்தன்கூற, மெல்லியல் உரைக்கும்; அங்ஙனம் உரைப்பவள், 'நீ செயற்பாலது அறவோர்க்கு ஆக்குமது' என, வேந்து பெரும் பொருளெய்துதற்குக் கோட்டத்தை அறவோர்க்கு ஆக்கினனென வினைமுடிவுசெய்க.

---

இருபதாவது

# உதயகுமரனைக் காஞ்சனன் வாளாலெறிந்தகாதை.

[இருபதாவது மணிமேகலை காயசண்டிகைவடிவேய்தக் காயசண்டிகை கணவனாகிய காஞ்சனனென்னும் விச்சாதரன் வந்து காயசண்டிகையாமெனக்கருதி அவள் பின்னிலைவிடா உதயகுமரனைப் புதையிருட்கண் உலகவறவியில் வாளாலெறிந்துபோன பாட்டு.]

---

அரச னாணையி னாயிழை யருளா
னிரயக் கொடுஞ்சிறை நீக்கிய கோட்டந்
தீப்பிறப் புழந்தோர் செய்வினைப் பயத்தான்
யாப்புடை நற்பிறப் பெய்தினர் போலப்
ரு பொருள்புரி நெஞ்சிற் புலவோன் கோயிலு

---

உ. நிரயக் கொடுஞ்சிறை - நரகவேதனையைச்செய்யும் கொடிய சிறை. கோட்டம் - அறை.

ங. தீப்பிறப்புழந்தோர் - கொடிய பிறவியிற்பிறந்து வருந்தினோர்.

ச. யாப்பு - பொருத்தம்.

ரு. பொருள்புரிநெஞ்சிற் புலவோன் - சத்தியம் நான்கினையும் விரும்பிய நெஞ்சினையுடைய புத்தன்; பொருள் - சத்தியம்.

(பி - ம்.) ங. 'செய்தவம் பயந்ததால்', 'செய்ததவப்பயத்தால்.' ச. 'எய்தினபோல'

மருள்புரி நெஞ்சத் தறவோர் பள்ளியு
மட்டிற் சாலையு மருந்துநர் சாலையுங்
கட்டுடைச் செல்வக் காப்புடைத் தாக
வாயிழை சென்றதூஉ மாங்கவ டனக்கு
க0 வீயா விழுச்சீர் வேந்தன் பணித்ததூஉஞ்
சிறையோர் கோட்டஞ் சீத்தரு ணெஞ்சத்
தறவோர் கோட்ட மாக்கிய வண்ணமுங்
கேட்டன னாகியத் தோட்டார் குழலியை
மதியோ ரெள்ளினு மன்னவன் காயினும்
கரு பொதியி னீங்கிய பொழுதிற் சென்று
பற்றினன் கொண்டென் பொற்றே ரேற்றிக்
கற்றறி விச்சையுங் கேட்டவ ளுரைக்கு
முதுக்குறை முதுமொழி கேட்குவ னென்றே

---

கூ. அறவோர் - பௌத்தமுனிவர்; "அறவோர் பள்ளியு மற னோம் படையும்" (சிலப். ரு : கஎக); "அருணெஞ்சத், தறவோர் கோட்டம்" (கக - உ) என்று இக்காதையிற் பின்பு கூறுதல் காண்க.

எ. அட்டிற்சாலை - மடைப்பள்ளி. அருந்துநர்சாலை - போசன சாலை.

அ. கட்டு - உறுதி. காப்பு உடைத்தாக - காவலையுடையதாக.

உ - அ. கோட்டம் காப்புடைத்தாகவென இயைக்க.

கூ. ஆயிழை - மணிமேகலை.

க0. வீயாவிழுச்சீர் - மாறாத சிறந்த கீர்த்தி. பணித்தது - சொல்லியது; அது, "யான்செயற் பாலதெ னிளங்கொடிக்கு" (மணி. ககூ : கருரு) என்றது.

கக - உ. அருணெஞ்சத் தறவோர் : மணி. உ0 : கூ.

கங. கேட்டனனாகி - (உதயகுமரன்) கேட்டு. தோடார்குழலி, தோட்டார்குழலியென விகாரம்; சிலப். ப. சு0க.

கச. மதியோர் எள்ளினும் - அறிவுடையோர் இகழ்வாராயினும். காயினும் - கோபித்தாலும்.

கரு. பொதியில்=பொது இல் - அம்பலம்.

கசு. பற்றினன்கொண்டு - பிடித்துக் கொண்டு.

கஎ. விச்சை - வித்தை; உம்மை, இறந்தது தழீஇயது.

கஅ. முதுக்குறை முதுமொழி : மணி. கஅ : ககூஎ, உ0 : எசு.

(பி - ம்.) எ. 'அருந்தினர்' கூ. 'சென்றதுமாங்' கக - உ. 'சிறையோர் நீங்கிச் சிறையோர்கோட்ட, மறவோர் கோட்ட' கங. 'தோட்டலர் குழலியை' கரு. 'நீங்கிப் பொழுதிற்' கஎ. 'கற்றறி விஞ்சையும்' கஅ. 'முதுக்குறை மொழியுங் கேட்குவன்'

மதுக்கமழ் தாரோன் மனங்கொண் டெழுந்து
உ0 பலர்பசி களையப் பாவைதா னொதுங்கிய
வுலக வறவியி னூடுசென் றேறலு
மழைசூழ் குடுமிப் பொதியிற் குன்றத்துக்
கழைவளர் கான்யாற்றுப் பழவினைப் பயத்தான்
மாதவன் மாதர்க் கிட்ட சாப
உரு மீரா றாண்டு வந்தது வாராள்
காயசண் டிகையெனக் கையற வெய்திக்
காஞ்சன னென்னு மவடன் கணவ
னோங்கிய மூதூ ருள்வந் திழிந்து
பூத சதுக்கமும் பூமலர்ச் சோலையு
ங0 மாதவ ரிடங்களு மன்றமும் பொதியிலுங்

கக. தாரோன் - உதயகுமரன். உ0. ஒதுங்கிய - சென்ற.
உக. ஊடு - உள்ளே.

க - உக. சென்றதூஉம் பணித்ததூஉம் வண்ணமும் கேட்டு எள்ளினும் காயினும் சென்று குழலியைப்பற்றிக்கொண்டு ஏற்றிக் கேட்டுக் கேட்குவனென்று மனங்கொண்டு தாரோன் எழுந்து சென்று ஏறலு மென்க.

மேலே, காஞ்சனன் காயசண்டிகையைத் தேடிப்போந்ததும், உதய குமரனைக் கொன்றதும் கூறப்படும்.

உஉ. பொதியிற்குன்றம் - பொதியின் மலை.

உங. கழை - மூங்கில். யாற்று - ஆற்றில்.

உச. மாதவன் - விருச்சிகன். மாதர்க்கு - காயசண்டிகைக்கு.

உரு. ஈராறாண்டு - பன்னிரண்டாவது வருடம்.

உசு. கையறவு - செயலறுதல். உரு - சு. காயசண்டிகை வாராள்.

உஅ. மூதூர் - காவிரிப்பூம்பட்டினம். இழிந்து - இறங்கி ; என்றதனால், காஞ்சனன் ஆகாய கமனமுடையனென்பது பெறப்பட்டது; "விஞ்சையன் போயினன் விலங்குவிண் படர்ந்தென்" (கஉக) என்று இக்காதையிற் பின்வருதல் காண்க.

உக. பூதசதுக்கம் - தவவேடத்தில் மறைந்துநின்று அத்தவத்திற்கு இழுக்கானவற்றின்கணொழுகும் பொய்வேடத்தார் முதலிய அறுவகையோரையும் பாசத்தாற் கட்டி அடித்துண்ணும் பூதம் நிற்றற்கிடமாகிய சதுக்கம்; சதுக்கம் - நாற்சந்தி; "தவமறைந் தொழுகும்............பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்" (ரு:கஉஅ - ௩ச) என்று சிலப்பதிகாரத்து வருதல் காண்க. பூ - பொலிவு.

ங0. மன்றம் - ஊருக்குநடுவாய் எல்லாருமிருக்கும் மரத்தடி; "மன்றமும் பொதியிலும்" ௱௩௩. உஉசு.

(ப் - ம்.) உ0. 'களைஇயபாவைதானொடுங்கிய' உச. 'மாதவனமாற்கிட்ட' உஅ. 'வந்துபுகுந்து' உக. 'பூதச்சதுக்கமும் பூமரச் சோலையும்'

தேர்ந்தனன் றிரிவோ னேந்திள வனமுலை
மாந்தர் பசிநோய் மாற்றக் கண்டாங்
கின்றுநின் கையி னேந்திய பாத்திர
மொன்றே யாயினு முண்போர் பலரா
௩௫ லானைத் தீநோ யரும்பசி களைய
வான வாழ்க்கைய ரருளினர் கொல்லெனப்
பழைமைக் கட்டுரை பலபா ராட்டவும்
விழையா வுள்ளமொ டவன்பா னீங்கி
யுதைய குமரன் றன்பாற் சென்று
௪0 நரைமூ தாட்டி யொருத்தியைக் காட்டித்
தண்ணறல் வண்ணந் திரிந்துவே றாகி
வெண்மண லாகிய கூந்தல் காணாய்
பிறைநுதல் வண்ணங் காணா யோநீ
நரைமையிற் றிரைதோற் றகையின் றாயது
௪௫ விறல்விற் புருவ மிவையுங் காணா
யிறவி னுணங்கல் போன்றுவே றாயின
கழுநீர்க் கண்காண் வழுநீர் சுமந்தன
குமிழ்மூக் கிவைகா ணுமிழ்சீ யொழுக்குவ
நிரைமுத் தனைய நகையுங் காணாய்

---

௩௧. திரிவோன் - காஞ்சனன்,

௩உ. கண்டு - காஞ்சனன் கண்டு.

மேல்வருவன காஞ்சனன் கூற்று.

௩௫. நோய் - பஸ்மகவியாதி. ௩௬. வானவாழ்க்கையர் - தேவர்.

௩௫ - ௬. களைய அருளினர்கொல்.

௩எ. பலபாராட்ட - பலவற்றைக்கூறிப் பாராட்ட.

௩அ. அவன் - காஞ்சனன்.

௪0. நரைமூதாட்டி - நரையையும் முதுமையையுமுடையவள்.

௪௧. 'தண்ணறல் வண்ணம்' என்பது முதலியன மணிமேகலை கூற்று. அறல் - கருமணல்.

௪௪. நரைமை - வெண்மை.

௪௬. இறவின் உணங்கல் - இறால்மீனின்வற்றல்.

௪௯. நகை - பல்.

(பி - ம்.) ௪௧. 'தண்ணலவண்ணந்திரிந்து வேறாகிய' ௪உ. 'கூந்தலுங் காணாய்' ௪௪. 'நறைமயிற்றினர் தோறறேறுகையின' ௪அ. 'ஒழுகுவ', 'ஒழுகுவன.' ௪௯. 'பல்லுங்காணாய்'

௫0 சுரைவித் தேய்ப்பப் பிறழ்ந்துவே றாயின
விலவிதழ்ச் செவ்வாய் காணா யோநீ
புலவுப் புண்போற் புலால்புறத் திடுவது
வள்ளைத் தாள்போல் வடிகா திவைகா
ணுள்ளூன் வாடிய வுணங்கல் போன்றன
௫௫ விறும்பூது சான்ற முலையுங் காணாய்
வெறும்பை போல வீழ்ந்துவே றாயின
தாழ்ந்தொசி தெங்கின் மடல்போற் றிரங்கி
வீழ்ந்தன விளவேய்த் தோளுங் காணாய்
நரம்பொடு விடுதோ லுகிர்த்தொடர் கழன்று
௬0 திரங்கிய விரல்க ளிவையுங் காணாய்
வாழைத் தண்டே போன்ற குறங்கிணை
தாழைத் தண்டி னுணங்கல் காணா
யாவக் கணைக்கால் காணா யோநீ
மேவிய நரம்போ டென்புபுறங் காட்டுவ
௬௫ தளிரடி வண்ணங் காணா யோநீ
முளிமுதிர் தெங்கி னுதிர்கா யுணங்கல்
பூவினுஞ் சாந்தினும் புலான்மறைத் தியாத்துத்
தூசினு மணியினுந் தொல்லோர் வகுத்த
வஞ்சந் தெரியாய் மன்னவன் மகனென

---

௫0. சுரைப்பழத்தின்விதை பல்லுக்கு உவமையாதலை, "சுரை வித்துப் போலுந்தம் பல்" (நாலடி. ௩௧௫) என்பதனாலுமுணர்க.

௫௨. புலவு - புலால்நாற்றம்.

௫௩. வள்ளைத்தாள் - வள்ளைத்தண்டு. வடிகாது - வடிந்தகாது.

௫௫. இறும்பூது - அதிசயம்; "இறும்பூது போலுமஃ தறிந்தருளீயென" சிலப். பதி. ௯.

௫௭. திரங்கி - திரைந்து.

௫௯. உகிர்த்தொடர் - நகத்தின்தொடர்ச்சி.

௬௧. குறங்கு - தொடை. இணை - இரண்டு. ௬௩. ஆவம் - அம்புக்கூடு.

௬௬. முளிமுதிர்தெங்கு - உலர்ந்த முதிர்ந்த தென்னை.

௬௭. "புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது" (௪ : ௧௧௪) என்றார் முன்னும்.

௬௯. தெரியாய் - தெரிந்துகொள்வாய்.

(பி - ம்.) ௫௩. 'வடிந்தகாது' ௫௫. 'சான்றனமுலையிவைகாணாய்' ௫௮. 'தோளிவைகாணாய்' ௫௯. 'உகிரொடு கழன்று' ௬௩. 'காலிவையுங் காணாய்' ௬௭. 'புலான்மறுத்தியார்த்து'

௭0 விஞ்சை மகளாய் மெல்லிய லுரைத்தலுந்
தற்பா ராட்டுமென் சொற்பயன் கொள்ளாள்
பிறன்பின் செல்லும் பிறன்போ னேக்கு
மதுக்கம மூலங்கன் மன்னவன் மகற்கு
முதுக்குறை முதுமொழி யெடுத்துக் காட்டிப்
௭௫ பவளக் கடிகையிற் றவளவா ணகையுங்
குவளைச் செங்கணுங் குறிப்பொடு வழாஅ
வீங்கிவன் காதல னுதலி னேந்திழை
யீங்கொழிந் தனளென விகலெரி பொத்தி
மற்றவ ளிருந்த மன்றப் பொதியினுட்
௮0 புற்றடங் கரவிற் புக்கொளித் தடங்கினன்

---

௭0. விஞ்சைமகளாய் - காயசண்டிகையாய். மெல்லியல் - மணிமேகலை.

மேல்வருவது காஞ்சனன்செய்தி.

௭உ. பிறனென்றது உதயகுமரனை. இங்கே பிறன்பின் செல்லுமென்றதுபோல, "எண்ணிப்பத் தங்கை யிட்டா விந்திரன் மகளு மாங்கே, வெண்ணெய்க்குன் றெரியுற் ருற்போன் மெலிந்துபின் னிற்கு மன்றே" (கடுகஎ) என்று சீவகசிந்தாமணியிலும் வந்திருத்தல்காண்க.

௭௪. மூ. மணி. க௮ : ககூஎ.

௭௫. பவளக்கடிகை - பவளத்துண்டம்; என்றது உதட்டினை.

௭௬. குறிப்பு - இங்கிதம்.

௭௫ - ௬. இவ்வடிகளின் பொருளோடு, "ஒத்தொளிர் பவளத் துள்ளொளி சிறந்த.........உளங்கொண் டொளித்தா னுயிர்க்காப் பிட்டு" (க௮ : ௭0 - ௭க) என்று உதயகுமரன் கூறியவாக்கியம் ஒப்பு நோக்கற்பாலது.

௭௭. இவனென்றது, உதயகுமரனை. காதலன் - ஆசைநாயகன்.

௭௮. ஈங்கு ஒழிந்தனள் - இவ்விடத்திலேயே தங்கிவிட்டாள்; என்னைத் தவிர்ந்தாளென்றுமாம்; ஈங்கு, தன்மையையுணர்த்துதலை, "ஈங்களிப்பன" (மணி. க௪ : ௪௮) என்பதிற்காண்க. இகல் - மாறுபாடு.

௭௯. மன்றப்பொதியில் - மன்றமாகிய பொதியில்; இருபெயரொட்டு; இப்படியே, "மன்றப் பொதியிற், கந்துடை நெடுநிலைக் கடவுட் பாவை" (உக : கூ - ௭) என்று பின்னும்வரும்.

௮0. இங்கே காஞ்சனனுக்குப் பாம்பை உவமை கூறியதற்கேற்ப, "வேக வெந்தீ நாகங் கிடந்த, போருயர் புற்றளை புகுவான் போல", "வெஞ்சின வரவ நஞ்செயி றரும்பத்,தன்பெரு வெகுளியி னெழுந்துபை

(பி - ம்.) ௭0. 'மெல்லியலுரைக்கத்' ௭உ. 'பிறர்பின்செல்லினும் பிறர்போல்' ௭௪. 'எடுத்துக்காட்டப்' ௭௫. 'பவளக் கடிகையும்' ௭௮. 'ஆங்கொழிந்தனளென வுகையெரி' ௭௯. 'பொதியிற்'

காஞ்சன னென்னுங் கதிர்வாள் விஞ்சைய
னாங்கவ ளுரைத்த வரசிளங் குமரனுங்
களையா வேட்கை கையுதிர்க் கொள்ளான
வளைசேர் செங்கை மணிமே கலையே
௮௫ காயசண் டிகையாய்க் கடிஞை யேந்தி
மாய விஞ்சையின் மனமயக் குறுத்தன
ளம்பல மருங்கி லயர்ந்தறி வுரைத்தவிவ்
வம்பலன் றன்னொடிவ் வைகிரு ளொழியா
ளிங்கிவள் செய்தி யிடையிருள் யாமத்து
௯௦ வந்தறி குவனென மனங்கொண் டெழுந்து
வான்றேர்ப் பாகனை மீன்றிகழ் கொடியனைக்
கருப்பு வில்லியை யருப்புக்கணை மைந்தனை
யுயாவுத் துணையாக வயாவொடும் போகி
யூர்துஞ் சியாமத் தொருதனி யெழுந்து
௯௫ வேழம் வேட்டெழும் வெம்புலி போலக்
கோயில் கழிந்து வாயி னீங்கி
யாயிழை யிருந்த வம்பல மணைந்து

---

விரித்தென, விருந்தோ னெழுந்து" (௯௮ - ௯, ௧௦௪-௯) என இக்காதையிலேயே கூறுதல் காண்க.

௮௨. அவள் - மணிமேகலை. ௮௩. கையுதிர்க்கொள்ளான்-நீக்கான். மேல்வருவன உதயகுமரனுட்கோள்.

௮௬. மாயவிஞ்சையின் - மாயவித்தையினால்.

௮௭. அயர்ந்து - வருந்தி; மறந்தென்றுமாம். அறிவுரைத்த - பழமைக்கட்டுரை பல பாராட்டிய.

௮௮. வம்பலன் - அயலான். வைகிருள் - வைகறைப்பொழுது.

௯௧. வான்றேர் - ஆகாயத்திலுலவும் தென்றற்காற்றாகிய தேர்.

௯௨. மணி. ௧௮ : ௧௦௫, ௨௫ : ௯௦; "மைதுழா நெடுங்கணார் மனத்துட் காமனு, மைதுலாங் கவர்கணை யரும்பு வைத்தவே" சூளா. குமார. ௫.

௯௩. உயாவுத் துணையாக - வினவுந்துணையாக; கொண்டென்று ஒருசொல் வருவிக்க; தனியே சென்றானென்றபடி. வயா - வேட்கை மிகுதி; "வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்" தொல். உரி. சூ. ௭௩.

௯௪. போயவன் நடுஇரவில் மீட்டும் எழுந்து வந்தான்.

(பி - ம்.) ௮௨ - ௩. 'உரைத்த வலர்தார் வேந்தனுங், களையாவேட்கையிற் கைவிதிற் கொள்ளா' ௮௮. 'வம்பலன்றனனொடடவை கிருளொளியான்' ௮௯. 'ஈங்கிவைசெய்தி' ௯௧. 'பாகன்மீன்' ௯௩. 'உயிர்த்துணையாக வயர்ப்பொடும்', 'உற்றனையாகவயாவொடும்.'

வேக வெந்தீ நாகங் கிடந்த
போகுயர் புற்றளை புகுவான் போல
க00 வாசந் தோய்ந்த சாந்தல ருறுத்த
வூழடி யிட்டத னுள்ளகம் புகுதலு
மாங்குமுன் னிருந்த வலர்தார் விஞ்சைய
னீங்கிவன் வந்தன னிவள்பா லென்றே
வெஞ்சின வரவ நஞ்செயி றரும்பத்
க0ரு தன்பெரு வெகுளியி னெழுந்துபை விரித்தென
விருந்தோ னெழுந்து பெரும்பின் சென்றவன்
சுரும்பறை மணித்தோ டுணிய வீசிக்
காயசண் டிகையைக் கைக்கொண் டந்தரம்
போகுவ லென்றே யவள்பாற் புகுதலு
கக0 நெடுநிலைக் கந்தி னிடவயின் விளங்கக்
கடவு ளெழுதிய பாவையாங் குரைக்கு

கூஅ. தீ - விடம்

கூகூ. போகுயர் புற்றளை - மிகவுயர்ந்த புற்றின்துவாரம்.

கூஅ - கூ. மணி. உ0: அ0, க0ச - ரு.

க00. சாந்து - சந்தனம். அலருறுத்த - பலரறியச்செய்ய.

க0க. ஊழ் அடியிட்டு - முறையே அடிவைத்து; "ஊழடிமுட்டம்" (குறிஞ்சி. உருஅ.) அதன் உள்ளகம் - அம்பலத்தின் உள்ளிடம்

க0ங. என்று - என்றுகருதி.

க0ச. நஞ்சு எயிறு அரும்ப - விடத்தைப் பல் வெளிப்படுத்த; விடத்தையுடைய பல்தோன்றவென்றுமாம்.

க0ரு. பை - படம். க0ச - ரு. மணி. உ0: அ0, கூஅ - கூ.

க0சு. இருந்தோன் - காஞ்சனன்.

க0எ. சுரும்பு அறை மணித் தோள் - மலையை யொத்த அழகிய தோள்; சுரும்பு - மலை; அறை: உவமவுருபு.

க0கூ. போகுவல் - போவேன்.

க0அ - கூ. விஞ்சையன் இருந்தோன், இவன் இவள்பால் வந்தனனென்று எழுந்து சென்று வீசிப் போகுவலென்று புகுதலுமென்க.

கக0. கந்து - தூண்.

ககக. கடவுள் எழுதிய - மயனாற் பண்ணப்பட்ட; "மயனெனக் கொப்பா வகுத்த பாவையி, னீங்கேன்" (மணி. உக: கருஉ - ங) என்று பின்வருதல் காண்க.

(பி - ம்.) கூகூ. 'போயபுற்' க0ங. 'ஈங்குவந்தனன்' க0எ. 'தோள் வீச' கக0. 'கந்தனிடவயின்' ககக. 'பாவயர்க்குரை'

மனுக வனுகல் விஞ்சைக் காஞ்சன
மணிமே கலையவண் மறைந்துரு வெய்தினள்
காயசண் டிகைதன் கடும்பசி நீங்கி
௧௧௫ வானம் போவுழி வந்தது கேளா
யந்தரஞ் செல்வோ ரந்தரி யிருந்த
விந்த மால்வரை மீமிசைப் போகார்
போவா ருளரெனிற் பொங்கிய சினத்தள்
சாயையின் வாங்கித் தன்வயிற் றிடூஉம்
௧௨௦ விந்தங் காக்கும் விந்தா கடிகை
யம்மலை மிசைப்போ யவள்வயிற் றடங்கினள்
கைம்மை கொள்ளேல் காஞ்சன விதுகே
ளூழ்வினை வந்திங் குதய குமரனை
யாருயி ருண்ட தாயினு மறியாய்

மேல்வருவன கந்திற்பாவை காஞ்சனனை நோக்கிக் கூறும் கூற்று.

௧௧௨. அணுகல் அணுகல் - அணுகாதே அணுகாதே.

௧௧௪ - ௫. தன்பசி நீங்கிக் காயசண்டிகை வானம்போவுழி அவளுக்கு வந்த துன்பத்தைக்கேள்.

௧௧௬. அந்தரஞ் செல்வோர் - தேவர். அந்தரி - துர்க்கை.

௧௧௭. விந்தமால்வரை - விந்தியமலை.

௧௧௬ - ௭. விந்திய மலையிலிருத்தல் பற்றித் துர்க்கைக்கு விந்தாஸனி யென்றும் ஒரு பெயருண்டு; "விந்தா சனிகொண்கன்" வங்கர் கோவை.

௧௧௮ - ௨௦. விந்தமலையைப் பாதுகாக்கும் விந்தாகடிகை யென்பவள், யாரேனும் அம்மலைமேற்போனால் மிக்க கோபத்தையுடையளாய்ச் சாயையினால் அவர்களை இழுத்துத் தன்வயிற்றிலிடுவள்; பிரமதேவரிடம் வரம்பெற்ற ஸிம்ஹிகை யென்னுமரக்கி இலங்கைக்குச் சென்ற அநுமானை நிழலாலிழுத்துத் தடைப்படுத்தியதாக ஸ்ரீமத் வான்மீகராமாயணம், சுந்தரகாண்டத்தால் தெரிகின்றது.

௧௧௪ - ௨௧. காயசண்டிகை விந்தாகடிகையின் வயிற்றிலடங்கினள்.

௧௨௨. கைம்மை கொள்ளேல் - சிறுமையைக்கொள்ளாதே; சிறுமையென்றது ஆராயாது செய்தலை. இனி, உதயகுமரன் மணிமேகலையுடைய பழம்பிறப்பின் நாயகனென்பதனை ஞானத்தால் அறிந்த கந்திற்பாவை அவன் இறந்தது பற்றி, மணிமேகலையை அமங்கலையாக நினைந்து அவளைக் கொள்ளாதேயென்று கூறிற்றென்னலுமாம்; கைம்மை - அமங்கலை.

௧௨௩ - ௪. மடைத்தொழில் செய்வோனை முற்பிறப்பில் வெட்

(பி - ம்.) ௧௧௨. 'விஞ்சையர் காஞ்ச' ௧௧௩. 'மற்றுருவெய்தினள்' ௧௧௭. 'மீமிசைச்செல்லார்' ௧௧௮. 'சினத்தாள்' ௧௧௯ - ௨௦. 'சாகையின...தகைவையிற்றழூஉ, மந்தங்'

கஉடு வெவ்வினை செய்தாய் விஞ்சைக் காஞ்சன
வவ்வினை நின்னையு மகலா தாங்குறு
மென்றிவை தெய்வங் கூறலு மெழுந்து
கன்றிய நெஞ்சிற் கடுவினை யுருத்தெழ
விஞ்சையன் போயினன் விலங்குவிண் படர்ந்தென்.

உ௦.—உதயகுமரனைக்காஞ்சனன் வாளாலெறிந்தகாதை முற்றிற்று.

---

டியபாவம் உதயகுமரன் வெட்டுண்ணச் செய்தது; ஆனாலும் ஆராயாது செய்தலின் நீ அறியாய். இவ்வரலாற்றை, மணி. உக - ஆம் காதை, சஎ - ஆம் அடிமுதலியவற்றாலும், உங - ஆம் காதை, அஉ - ஆம் அடி முதலியவற்றாலும் உணர்க.

கஉஅ. கடுவினை - உதயகுமரனைக் கொன்றபாவம்.

கஉகூ. விலங்கு - குறுக்காக.

க - கஉகூ. கோட்டம் காப்புடைத்தாக, தாரோன் கேட்டு மனங்கொண்டு எழுந்து சென்று எறலும், கணவன், கையறவெய்தி வந்து இழிந்து தேர்ந்து திரிவோனுய்க் கண்டு பலபாராட்டவும், நீங்கிச் சென்று காட்டி மெல்லியல் உரைத்தலும், விஞ்சையன் புக்கு ஒளித்து அடங்கினன்; அரசிளங்குமரனும் கொள்ளான் மனங்கொண்டு எழுந்து போகி எழுந்து கழிந்து நீங்கி அணைந்து புகுதலும், விஞ்சையன், எழுந்து சென்று வீசிப் புகுதலும், பாவை உரைக்கும்; அங்ஙனம் உரைப்பது கூறலும், விஞ்சையன் எழுந்து படர்ந்து போயினனென வினைமுடிவு செய்க.

(பி - ம்.) கஉகூ. 'விளங்குவிண்'

---

இருபத்தோன்றுவது

# கந்திற்பாவை வருவதுரைத்தகாதை

[இருபத்தோன்றுவது மணிமேகலை உதயகுமரன்மடிந்ததுகண்டு உறுதுயரெய்த, நெடுநிலைக்கந்தின் நின்றபாவை வருவதுரைத்து அவள் மயக்கொழித்தபாட்டு.]

---

கடவு ளெழுதிய நெடுநிலைக் கந்தின்
குடவயி னமைத்த நெடுநிலை வாயின்

---

க. கடவுள் எழுதிய - துவதிகனையொத்த பாவையை மயன் பண்ணின; "கடவுட் பாவை" (எ) என்பர் பின்னும்.

உ. குடவயின் - மேற்றிசை யிடத்தே.

(பி - ம்.) உ. 'அமைந்த நெடுநிலை'

முதியாள் கோட்டத் தகவயிற் கிடந்த
மதுமலர்க் குழலி மயங்கினை ளெழுந்து
ரு விஞ்சையன் செய்தியும் வென்வேல் வேந்தன்
மைந்தற் குற்றது மன்றப் பொதியிற்
கந்துடை நெடுநிலைக் கடவுட் பாவை
யங்கவற் குரைத்த வற்புதக் கிளவியுங்
கேட்டன ளெழுந்து கெடுகவிவ் வுருவெனத்
கய தோட்டலர்க் குழலி யுள்வரி நீங்கித்
திட்டி விடமுண நின்னுயிர் போநாட்
கட்டழ லீமத் தென்னுயிர் சுட்டே
னுவவன மருங்கி னின்பா லுள்ளந்
தவிர்விலே னாதலிற் றலைமக ளோன்றி
கரு மணிப்பல் லவத்திடை யென்னையாங் குய்த்துப்

ங. முதியாள் கோட்டம் - சம்பாபதி கோயில்.

க - ங. இவ்வடிகளால் சம்பாபதிகோயில், கந்திற்பாவைக்கு மேற்றிசையிலுள்ளதென்று தெரிகின்றது.

ச. குழலி - மணிமேகலை.

ரு. விஞ்சையன் - காஞ்சனன். வென் - வெற்றி; "வென்வேலாடவன்" பு - வெ. ருக.

சு. மைந்தற்கு - உதயகுமரனுக்கு. மன்றப்பொதியில்: மணி. உ0 : எக.

எ. சந்திற்பாவை.

அ. அங்கவற்கு - காஞ்சனனுக்கு. அற்புதம் - ஆச்சரியம்.

கூ. இவ்வுருக் கெடுகவென்று.

கய. குழலி: சுட்டு. உள்வரிநீங்கி - மறைந்தவேடமொழிந்து; என்றது, காயசண்டிகையின் வடிவமொழிந்தென்றபடி.

இனி, உதயகுமரனைக்குறித்து மணிமேகலை புலம்புதல் கூறப்படும்.

கக. திட்டிவிடம் - கண்ணில் விடமுடையதொரு பாம்பு; மணி. கூ : சக; இதனைப் பாம்புகளுக்கு அரசென்றுங் கூறுவர்.

கஉ. கட்டழல் - மிக்கநெருப்பு. ஈமம் - மயானம்.

கக - உ. இவ்வடிகளாற் போனபிறப்பின்செய்தி கூறினாள்.

கச. தலைமகள் - மணிமேகலாதெய்வம்.

கங - ச. உவவனத்திற் கண்டபொழுது உதயகுமரன்பால் மணிமேகலைக்குக் காதலிருந்ததென்பதை, "புதுவோன் பின்றைப் போனதென் னெஞ்ச, மிதுவோ வன்னாய் காமத் தியற்கை" (ரு : அகூ - கய), "அவன்பா லுள்ள, நீங்காத் தன்மை நினக்குமுண் டாகலின்" (கய : சச - ரு) என முன்வந்திருத்தலாலுணர்க.

(பி - ம்.) ரு. 'வெள்வேல்' கய. 'தோட்டக்குழலி', 'தோட்டலர் குழலி' கக. 'விடமுண்டு'

பிணிப்பறு மாதவன் பீடிகை காட்டி
யென்பிறப் புணர்ந்த வென்முற் றோன்றி
யுன்பிறப் பெல்லா மொழியின் றுரைத்தலிற்
பிறந்தோ ரிறத்தலு மிறந்தோர் பிறத்தலு
உ0 மறந்தரு சால்பு மறந்தரு துன்பமும்
யானினக் குரைத்துநின் னிடர்வினை யொழிக்கக்
காயசண் டிகைவடி வானேன் காதல
வைவாள் விஞ்சையன் மயக்குறு வெகுளியின்
வெவ்வினை யுருப்ப விளிந்தனை யோவென
உரு விழுமக் கிளவியின் வெய்துயிர்த்துப் புலம்பி
யழுதன ளேங்கி யயாவுயிர்த் தெழுதலுஞ்
செல்லல் செல்லல் சேயரி நெடுங்க
ணல்லியந் தாரோன் றன்பாற் செல்ல
னினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉ
௩0 மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம்

கசு. பிணிப்பறு மாதவன் - புத்தன்; பிணிப்பு - பற்று; "பிணிப் பறுத் தோர்தம் பெற்றி யெய்தவும்" சிலப். கரு : க00.

கச - அ. தலைமகள் தோன்றி உய்த்துக் காட்டித் தோன்றி உரைத்தலினென்க.

உ0. சால்பு - அமைதி; இன்பமுமாம். மறம் - பாவம்.

கக - உ0. மணி. உக : கக௩; சிலப். ௩0 : க௩அ - கூ.

உச. உருப்ப - கோபிக்க. விளிந்தனையோ - இறந்தாயோ.

உ௩ - ச. உருப்ப வெகுளியின் விளிந்தனையோ.

உரு. விழுமக்கிளவி - துன்பத்தைப் புலப்படுத்தும் சொற்கள்.

உசு. அயாவுயிர்த்து - நெட்டுயிர்ப்புக்கொண்டு. எழுதலும் - மணி மேகலை எழுதலும்

மேல், மணிமேகலையை நோக்கிக் கந்திற்பாவை கூறுதலைச் சொல்லு வார்.

உஎ. செல்லல் செல்லல் - போகாதே போகாதே. சேயரிநெடுங் கண் : விளி

உஅ. அல்லி - அகவிதழ். தாரோன் - உதயகுமரன்.

உகூ. மகன் - கணவனாக; "நோதக வுண்டோ நும்மக னார்க்கு" (சிலப். கசு : கஎ) எனக் கணவனை மகனென்று கூறியிருத்தல் காண்க.

௩0. மனக்கினியாற்கு - உதயகுமானுக்கு. மகளாயதூஉம் - மனைவியானதும்.

(பி - ம்.) கசு. 'பிணிப்புமாதவன்' உஉ. 'காதலன்' உகூ. 'தலை மகனாய்த்தோன்றியதூஉம்'

பண்டும் பண்டும் பல்பிறப் புளவாற்
கண்ட பிறவியே யல்ல காரிகை
தடுமாறு பிறவித் தாழ்தரு தோற்றம்
விடுமாறு முயல்வோய் விழுமங் கொள்ளே
௩௫ லென்றிவை சொல்லி யிருந்தெய்வ முரைத்தலும்
பொன்றிகழ் மேனிப் பூங்கொடி பொருந்திப்
பொய்யா நாவொடிப் பொதியிலிற் பொருந்திய
தெய்வ நீயோ திருவடி தொழுதேன்
விட்ட பிறப்பின் வெய்துயிர்த் தீங்கிவன்
௪0 றிட்டி விடமுணச் செல்லுயிர் போயது
நெஞ்சு நடுங்கி நெடுந்துயர் கூரயான்
விஞ்சையன் வாளி னிவன்விளிந் ததூஉ
மறிதலு மறிதியோ வறிந்தனை யாயிற்
பெறுவேன் றில்லநின் பேரரு ளீங்கென

---

௩உ. நீ அறிந்துகொண்ட முற்பிறப்பில் மட்டுமல்ல; காணுதல் - அறிதல்.

உகூ - ௩உ. தோன்றியதூஉம் ஆயதூஉம் கண்ட பிறவியேயல்ல; பண்டும் பண்டும் பல்பிறப்புளவாவென இயைக்க.

௩௩. தாழ்தரு - தங்குகின்ற; அழுந்துகின்றவென்றுமாம்.

௩௪. விழுமம் - துன்பம்.

௩௫. சொல்லியுரைத்தல் - கூறிவிளக்குதல், "அறைந்தனர் சாற்றும்" (சிலப். ௧0 : ௧௩) என்புழிப்போல.

௩௬. பூங்கொடி - மணிமேகலை.

மேல், மணிமேகலையின் வினவும், கந்திற்பாவை கூறும் விடையும் கூறப்படும்.

௩௯. விட்டபிறப்பு - போனபிறப்பு. இவன் - உதயகுமரன்.

௩௯ - ௪0. இவன் உயிர்போதற்குக் காரணமாகிய தீவினையையும்.

௪௧. யான் நெடுந்துயர் கூர; கூர - மிக.

௪உ. விளிந்ததூஉம் - இறந்ததற்குக்காரணமாகிய தீவினையையும்.

௪௩. அறிதலுமறிதியோ - அறிதலும் செய்தியோ; இஃது, "உண்ணலு முண்ணேன் வாழலும் வாழேன்" (கலி. உ௩) என்பனபோல நின்றது.

௪௪. நினது பெருங்கருணையை யான் இவ்விடத்துப் பெறுவேன்; என்றது, நீ கூறும் விடையைக்கேட்கும் விருப்பமுடையேனென்றவாறு. என - என்று மணிமேகலை சொல்ல.

(பி - ம்.) ௩உ. 'பிறவை யெல்லாங் காரிகை' ௩எ. 'பொதியிற் றோன்றிய' ௪௪. 'பெறுவேனல்லநின்', 'பெறுவனேன்.'

௪௫ வையரி நெடுங்க ணாயிழை கேளெனத்
தெய்வக் கிளவியிற் றெய்வங் கூறும்
காயங் கரையெனும் பேரியாற் றடைகரை
மாயமின் மாதவன் வருபொரு ளுரைத்து
மருளுடை மாக்கண் மனமாசு கழூஉம்
௫௦ பிரம தருமனைப் பேணினி ராகி
யடிசிற் சிறப்பியா மடிகளுக் காக்குதல்
விடியல் வேலை வேண்டின மென்றனு
மாலை நீங்க மனமகிழ் வெய்திக்
காலை தோன்ற வேலையின் வரூஉ

---

௪௫. ஆயிழை : விளி. ௪௬. தெய்வம் - கந்திற்பாவை.

௪௭. அடைகரை - அடைகரையில்.

௪௮. மாதவன் வருபொருள் - புத்தன் அவதரித்தலை. உலகத்திற் பாவங்கள் அதிகரிக்கும் காலந்தோறும் அப்பாவங்களைப் போக்கி அருளறத்தை நிலைநிறுத்தி உயிர்களை நிருவாணமடைவித்தற் பொருட்டுப் புத்தாவதாரமுண்டென்பது பௌத்தநூற்றுணிபு; "ஈரெண் ணூற்றோ டீரெட் டாண்டிற், பேரறி வாள னோன்றும்" (கஉ : எஎ - அ), "மறவிரு ளிரிய மன்னுயி ரேமுற, வறவெயில் விரித்தாங் களப்பி லிருத்தியொடு, புத்த ஞாயிறு தோன்றுங் காறும்" (உக : கசுரு - எ), "புலவன் முழுதும் பொய்யின் றுணர்ந்தோ, னுலகுயக் கோடற் கொருவன் றோன்று, மந்நா ளவனறங் கேட்டோ ரல்ல, தின்னாப் பிறவி யிழுக்குந ரில்லை" (உரு : சரு - அ), "கரவரும் பெருமைக் கபிலையம் பதியி, னளப்பரும் பாரமிதை யளவின்று நிறைத்துத், துளக்கமில் புத்த ஞாயிறு தோன்றி" (உசு : சச - சு) என இந்நூலுள்ளே பலவிடத்தும் வருதல் காண்க.

௪௯. மருளுடை மாக்கள் - மயக்கத்தையுடைய மனிதர். மனமாசு - காம வெகுளி மயக்கங்கள்; "வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சி யென், றுள்ளந் தன்னி லுருப்பன மூன்றும்" (௩௦ : ௭௦ - ௭௧) என்பதனா லுணர்க. கழூஉம் - கழுவும்.

௫௧. அடிகளுக்கு அடிசிற்சிறப்பு ஆக்குதலென்க.

௫௨. விடியல் வேலை - நாள்வெயிற்காலம்; வைகறைப்பொழுதெனினும் பொருந்தும்.

௫௧ - ௨. அடிகளுக்கு அடிசிற் சிறப்பு விடியல் வேலையாக்குதல் வேண்டினமென்று மடையனை நோக்கிக் கூறுதலும்.

௪௭ - ௫௨. அடைகரையில் உரைத்துக் கழூஉம் பிரமதருமனைப் பேணி விடியல்வேலையில் ஆக்குதலை வேண்டினமென்றலுமென்க.

௫௩. மாலை - இரவு.

௫௪. காலை - நாள்வெயிற்காலம். வரூஉ - வந்து.

(பி - ம்.) ௪௮. 'ஆய்மனமாதவன்' ௫௧. 'அடிசிற் சிறபியாடுதலுக்காக குதல' ௫௩. 'மாலைநீங்கி'

௫௫ நடைத்திறத் திழுக்கி நல்லடி தளர்ந்து
மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனைச்
சீல நீங்காச் செய்தவத் தோர்க்கு
வேலை பிழைத்த வெகுளி தோன்றத்
தோளுந் தலையுந் துணிந்துவே றுக
௬௦ வாளிற் றப்பிய வல்வினை யன்றே
விராமலர்க் கூந்தன் மெல்லிய னின்னோ
டிராகுலன் றன்னை யிட்டக லாதது
தலைவன் காக்குந் தம்பொருட் டாகிய

---

௫௫. நடைத்திறத்து இழுக்கி - நடைவகையால் வழுக்கி.

௫௬. மடைக் கலம் - சோற்றுப்பாத்திரம். மடையன் - சமையற்காரன்.

௫௭. சீலம் - பஞ்சசீலம் ; தசசீலமுமாம் ; கொல்லாமை (அஹிம்ஸை), பொய்சொல்லாமை (ஸத்தியம்), களவின்மை (அஸ்தேயம்), காமமின்மை (பிரமசரியம்), இரவாமை (அஸங்கிரஹம்) என்னும் இவை பஞ்சசீலம் ; இவ்வைந்தனோடு உயர்ந்த ஆசனத்து இருத்தல் கிடத்தலின்மை, சந்தனம் மாலை முதலியன தரியாமை, பொன் வெள்ளிகளைத் தீண்டாமை, பாடலாடல் விரும்பாமை, உதயத்திற்கு முன்பு புசியாமை என்னும் ஐந்தும்சேரத் தசசீலமாம். பஞ்சசீலத்துள், இரவாமை நின்ற நிலைக்களத்தின்கண் கள்ளுண்ணாமையைச் சேர்த்துக்கூறுவாருமுளர்; (நீல சமய.) கொல்லாமை, திருடாமை, வியபிசரியாமை, பொய்கூறாமை, கள்ளுண்ணாமையென்னுமிவை பஞ்சசீல மென்றும், இவை இல்லறத்தார் எல்லோர்க்கும் உரியனவென்றும், இவ்வைந்தனோடு இரவில் தூய்மையில்லாத உணவைப்புசியாமை, சந்தனம் முதலிய மணமுள்ள பொருள்களை உபயோகியாமை, தரையிற் பாய்மேலே படுத்தல் என்னும் மூன்றுஞ்சேர அஷ்டாங்கசீலமென்றும், இவை இல்லறத்தாரில் நிஷ்டாபரர்களுக்கே உரியனவென்றும், இவ்வெட்டனோடு நாட்டியம் கானம் முதலியவற்றை விரும்பாமை, பொன் வெள்ளிகளைத் தொடாமை யென்னும் இவ்விரண்டும்சேரத் தசசீலமென்றும், இப்பத்தும் துறவிகளுக்கே உரியனவென்றும், இப்பத்தில் வியபிசரியாமை நின்றவிடத்திற் பிரமசரியம் கூறப்படுமென்றும் தார்மிக சூத்திரமென்னும் பௌத்தநூல் கூறும்.

௫௮. பிழைத்தவெகுளி - தவறினமையால் வந்த கோபம்.

௬௦. தப்பிய - வெட்டிய. ௬௧. மெல்லியல் : விளி.

௫௬ - ௬௨. இப்படியே, "மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனை, யுடற்றுணி செய்தாங் குருத்தெழும் வல்வினை, நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி, விஞ்சையன் வாளால் வீட்டிய தன்றே" (௨௩ : ௮௨ - ௫) என்று இராசமாதேவியை நோக்கி மணிமேகலை கூறியதாகப் பின்பு வருதல் காண்க.

௬௩. தலைவன்- கடவுள். காக்கும்-காப்பான்; தடுப்பானென்றபடி.

(பி - ம்.) ௫௭. 'நீங்காத் தேசத்தோர்க்கு' ௬௧. 'விராக்கூந்தல்'

வலல வெவ்வினை யென்போ ரறியா
௬௫ ரறஞ்செய் காத லன்பினி ளாயினு
மறஞ்செய் துளதெனின் வல்வினை யொழியா
தாங்கவ் வினைவந் தணுகுங் காலைத்
தீங்குறு முயிரே செய்வினை மருங்கின்
மீண்டுவரு பிறப்பின் மீளினு மீளு
௭௦ மாங்கவ் வினைகா ணாயிழை கணவனை
யீங்கு வந்திவ் விடர்செய் தொழிந்த
தின்னுங் கேளா யிளங்கொடி நல்லாய்
மன்னவன் மகற்கு வருந்துதுய ரெய்தி
மாதவ ருணர்த்திய வாய்மொழி கேட்டுக்
௭௫ காவல னின்னையுங் காவல்செய் தாங்கிடு
மீடுசிறை நீக்கி யிராசமா தேவி
கூட வைக்குங் கொட்பின ளாகி
மாதவி மாதவன் மலரடி வணங்கித்

---

௬௩ - ௪. வினையைத் தலைவன் காக்குமென்போர் அறியாரென இயைக்க; செய்தவன் நுகர்ந்தாலன்றி வினை தொலையாதென்றவாறு.

௬௬. மறம் செய்துளதெனின் - பாவம் செய்யப்பட்டிருப்பின். வல்வினை; சுட்டு. ௬௮. தீங்கு - துன்பம்.

௭௦. அவ்வினை - மடையனை வெட்டியபாவம். கணவனை - உதயகுமரனை.

௭௦ - ௭௧. அவ்வினை ஈங்குவந்து உன் கணவனை இவ்விடர் செய்தொழிந்ததென்க.

இனி, மணிமேகலைக்குப் பின் வருவனவற்றைக் கந்திற்பாவைத் தெய்வம் கூறுதல் கூறப்படும்.

௭௩. மகற்கு - உதயகுமரன் இறந்ததற்காக.

௭௪. உணர்த்தியவன் ஒருவனாயினும் உரைக்க வந்தோர் பலராதலின், 'மாதவருணர்த்திய' என்றார். வாய் - உண்மை.

௭௫. காவல்செய்தாங்கிடும் - சிறையில் வைப்பான்.

௭௬. இராசமாதேவி - பட்டத்துத்தேவி.

௭௭. கொட்பு - கொள்கை. ௭௮. மாதவன் - அறவணவடிகள்.

(பி - ம்.) ௬௫. 'அறஞ்செய்த காதலனன்பின' ௬௭. 'ஆங்கவெவ்வினை வந்தெனநுங்காத்' ௭௩. 'வருதுயரெய்தி' ௭௪. 'மாதவருரைத்த', 'மாதவருணர்த்த.' ௭௫. 'காதலினின்னையுங் காவல்செய்தீங்கிடும்'

தீது கூறவவ டன்னொடுஞ் சேர்ந்து
அ௦ மாதவ னுரைத்த வாய்மொழி கேட்டுக்
காதலி நின்னையுங் காவ னீக்குவ
ளரசாள் செல்வத் தாபுத் திரன்பாற்
புரையோர்ப் பேணிப் போகலும் போகுவை
போனா லவனொடும் பொருளுரை பொருந்தி
அ௫ மாநீர் வங்கத் தவனொடு மெழுந்து
மாயமில் செய்தி மணிபல் லவமெனுந்
தீவகத் தின்னுஞ் சேறலு முண்டாற்
றீவ திலகையிற் றன்றிறங் கேட்டுச்
சாவக மன்னன் றன்னா டடைந்தபின்

எ௯. தீது - மணிமேகலை சிறையில் வைக்கப்பட்டிருத்தல்.

அ௦. வாய்மொழி - உண்மைமொழி; சிலப். ௧௦: ௧௯௨.

எ௯ - அ௧. இராசமாதேவி நீக்கி வைக்குங்கொட்பினளாகிக் கேட்டு நின்னைக் காவல் நீக்குவளென்க.

அ௨. ஆபுத்திரனென்றது புண்ணியராசனை; இது, "நாக புரமிது நன்னக ராள்வோன், பூமிசந் திரன்மகன் புண்ணிய ராசன்" (௨௪: ௧௬௯ - ௭௦) என்று தருமசாவகன் மணிமேகலைக்குக் கூறியவாற்றாலுணரப்படும்; புண்ணியராசனை ஆபுத்திரனென்றே இந்நூலிற் பெரும்பாலும் வழங்குவர்.

அ௩. புரையோர் - சங்கத்தார்; புரை - உயர்ச்சி. போகலும் போகுவை - போதலையுஞ்செய்வை.

அ௪. பொருளுரை - தருமபதம்; "பொய்யில் புலவன் பொருளுரை" (மணி. ௨௨: ௬௧); என்றது, நாகபுரத்தின் பக்கத்ததாகிய சோலையிலுள்ள தருமசாவகன் ஆபுத்திரனுக்குக்கூறும் உபதேசமொழிகளைக் குறித்து நின்றது. பொருந்தி - கேட்டு. அம்மொழிகளாவன, "அறனு மறனு மனித்தமு நித்தத், திறனுந் துக்கமுஞ் செல்லுயிர்ப் புக்கிலுஞ், சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியு, மாரிய னமைதியும்" (௨௫ : ௩ - ௬) என்பவைகள்.

அ௫ - எ. மணிமேகலை நாகபுரத்திலிருந்து ஆகாயவழியேபோந்து மணிபல்லவத்தையடைந்தாளென்றும், ஆபுத்திரன் கப்பல்வழியேவந்து அத்தீவத்தை அடைந்தானென்றும், இந்நூல், ௨௫ : ௧௧ - ஆம் அடி முதலியவற்றாலும், ௧௨௪ - ஆம் அடிமுதலியவற்றாலும் விளங்குதலால், 'வங்கத்தவனொடு மெழுந்து' என்பதற்குப் பின்பு கப்பலேறி மணிபல்லவத்தையடைவோனாகிய ஆபுத்திரனிடத்தினின்று நீங்கி ஆகாயவழியேயெழுந்தெனப் பொருள்கொண்டு எழுந்து சேறலுமுண்டென வியைக்க. வங்கத்தவனொடு மென்பது, ஐந்தாவதன்மயக்கம்.

அ௧. சாவகமன்னன் - சாவகநாட்டரசனாகிய ஆபுத்திரன்.

(பி - ம்.) அ௩. 'போக்கலும்போக்கும்', 'போகினும் போகுவை.' அ௫. 'அவனொடுமேறி'

௯௦ ஞங்கத் தீவம்விட் டருந்தவன் வடிவாய்ப்
பூங்கொடி வஞ்சி மாநகர் புகுவை
யாங்கந் நகரத் தறிபொருள் வினவு
மோங்கிய கேள்வி யுயர்ந்தோர் பலரா
லிறைவ னெங்கோ னெவ்வுயி ரனைத்து
௯௫ முறைமையிற் படைத்த முதல்வனென் போர்களுந்
தன்னுரு வில்லோன் பிறவுருப் படைப்போ
னன்றே னிறைவ ளுருமென் போர்களுந்
துன்ப நோன்பித் தொடர்ப்பா டறுத்தாங்
கின்ப வுலகுச்சி யிருத்துமென் போர்களும்
௧௦௦ பூத விகாரப் புணர்ப்பென் போர்களும்
பல்வேறு சமயப் படிற்றுரை யெல்லா
மல்லியங் கோதை கேட்குறு மந்நா
ளிறைவனு மில்லை யிறந்தோர் பிறவா
ரறனோ டென்னையென் றறைந்தோன் றன்னைப்
௧௦௫ பிறவியு மறவியும் பெற்றியி னுணர்ந்த
நறுமலர்க் கோதை யெள்ளினை நகுதி

---

௯௦. தீவம் - மணிபல்லவம்.

௯௧. வஞ்சிமாநகர் - சேரர்களுடைய இராசதானி; மலைநாட்டிலுள்ளது.

௯௪ -௫. படைத்த முதல்வனே இறைவன் எங்கோன் என்போர்களுமென்க; இவர்கள் பிரஹ்மவாதிகள்; "பேருல கெல்லாம் பிரமவாதியோர், தேவ னிட்ட முட்டை யென்றனன்" (௨௭: ௯௯ - ௭) என்று வருதல்காண்க. இவர்களை இரணியகருப்பவாதிகளென்றுங் கூறுவர். ௯௯ - ௭. என்போர்கள் - அத்துவைத வாதிகள்.

௯௮. நோன்பு - கன்மங்கள். இத்தொடர்ப்பாடு-இந்தப்பந்தங்கள்.

௯௮ - ௯. நோன்பு அறுத்து இருத்துமென்போர்கள் - கர்மப்ரஹ்ம வாதிகள்.

௧௦௦. புணர்ப்பென்போர்கள் - பூதவாதிகள்.

௯௪ - ௧௦௦. இவ்வடிகளிற்கூறிய சமய இலக்கணங்களுட் சிலவும், இன்னும் பலவும் இந்நூல் ௨௭ - ஆம் காதையால் விளங்கவுணரப்படும்.

௧௦௧. படிற்றுரை - பொய்ம்மொழி.

௧௦௪. அறனோடு என்னை - தருமத்தால்வரும் பயன்யாது? அறைந்தோன் - பூதவாதி.

௧௦௫. அறவி - தருமத்தோடு பொருந்தியவழி.

௧௦௬. எள்ளினை நகுதி - இகழ்ந்து சிரிப்பாய்.

(பி - ம்.) ௯௬. 'தானுருவில்லோன்' ௯௮. 'நோன்பிற்றொடர்ப்பாடு' ௧௦௩. 'இல்லைபிறவிருந்தோர் பிறவார்'

யெள்ளினை போலு மிவ்வுரை கேட்டிங்
கொள்ளிய துரையென வுன்பிறப் புணர்த்துவை
யாங்குறிற் கொணர்ந்த வருந்தெய்வ மயக்கக்
௧௧0 காம்பன தோளி கனுமயக் குற்றனை
யென்றவ னுரைக்கு மிளங்கொடி நல்லா
யன்றென் றவன்முன் னயர்ந்தொழி வாயலை
தீவினை யுறுதலுஞ் செத்தோர் பிறத்தலும்
வாயே யென்று மயக்கொழி மடவாய்
௧௧௫ வழுவறு மரனு மண்ணுங் கல்லு
மெழுதிய பாவையும் பேசா வென்ப
தறிதலு மறிதியோ வறியாய் கொல்லோ
வறியா யாயி னிங்கது கேளாய்
முடித்துவரு சிறப்பின் மூதூர் யாங்கணுங்
௧௨0 கொடித்தேர் வீதியுந் தேவர் கோட்டமு
முதுமர விடங்களு முதுநீர்த் துறைகளும்
பொதியிலு மன்றமும் பொருந்துபு நாடிக்
காப்புடை மாநகர்க் காவலுங் கண்ணி
யாப்புடைத் தாக வறிந்தோர் வலித்து
௧௨௫ மண்ணினுங் கல்லினு மரத்தினுஞ் சுவரினுங்
கண்ணிய தெய்வதங் காட்டுநர் வகுக்க
வாங்கத் தெய்வத மவ்விட நீங்கா

---

௧0௪ - எ. அறைந்தோன்றன்னை இவ்வுரைகேட்டு எள்ளினைநகுதி போலும்.

௧௧௨. அயர்ந்தொழிவாயலை - மறந்தொழியாய்.

௧௧௩. மணி. உக: ௧௧ - உ0.

௧௧௪. வாயே - உண்மையே. ௧௧௫ - ௬. மணி. உக: ௧௨௫ - ௬.

௧௧எ. அறிதலுமறிதியோ - அறிதலும் செய்தியோ.

௧௨0. தேவர் கோட்டம் - தேவர் கோயில்.

௧௨௧. முதுமரம் - பழையமரம்.

௧௨௩. காவலுங்கண்ணி - காவலையுங் கருதி.

௧௨௪. யாப்புடைத்தாக - உறுதியுடைத்தாக. வலித்து - எண்ணி.

௧௨௬. தெய்வதங்காட்டுநர் - தெய்வத்தை நிறுத்துவோர்.

(பி - ம்.) ௧0எ. 'போலுமென்னுரை கேட்டீங்கு' ௧0அ. 'பிறப் புரைக்குவை' ௧௧0. 'காம்பிணைத்தோளி' ௧௧௨. 'அன்றவன்றன்முன்' ௧௧௩. 'சென்றோர்' ௧௧௪. 'மடக்கொடி மடவாய்' ௧௧௯. 'வரும்பிறப் பின்' ௧௨௪. 'அறிந்தோரியற்றி' ௧௨௬. 'கண்ணியவுருவங் காட்டுநர் வகுத்த'

ஊன்கணி ஞர்கட் குற்றதை யுரைக்கு
மென்றிறங் கேட்டியோ விளங்கொடி நல்லாய்
கருo மன்பெருந் தெய்வ கணங்களி னுள்ளேன்
றுவதிக னென்பேன் றொன்றுமுதிர் கந்தின்
மயனெனக் கொப்பா வகுத்த பாவையி
னீங்கேன் யானென் னிலையது கேளாய்
மாந்த ரறிவது வானவ ரறியா
கருரு ரோவியச் சேனனென் னுறுதுணைத் தோழ
னவனை யிந்நகர்க் காருரைத் தனரோ
வவனுடன் யான்சென் றாடிட மெல்லா
முடனுறைந் தார்போ லொழியா தெழுதிப்
பூவும் புகையும் பொருந்துபு புணர்ந்து
கசo நாநனி வருந்தவென் னலம்பா ராட்டலின்
மணிமே கலையான் வருபொரு ளெல்லாந்
துணிவுட னுரைத்தே னென்சொற் றேறெனத்
தேறே னல்லேன் றெய்வக் கிளவிக
ளீறுகடை போக வெனக்கரு ளென்றலுந்

---

கஉஅ. ஊன்கணிஞர்கட்கு - மானிடர்களுக்கு; சீவக. ருச.
மேல்வருவன, மணிமேகலைக்குத் தனதுவரலாற்றைக் கந்திற்பாவை கூறுங் கூற்று.
கருக. துவதிகனென்பேன் - துவதிகனென்று பெயர் கூறப்படுவேன். தொன்று முதிர்கந்து - பழமை முதிர்ந்த தூண்.
கருஉ. மயன் - தெய்வத்தச்சன்; அசுரத்தச்சனென்றுங் கூறுவர்; கந்திற்பாவை இருத்தற்கிடமாகிய சக்கரவாளக் கோட்டமும் மயனாற் செய்யப்பட்டதென்று இந்நூல், சு : ககஉ - ஆம் அடி முதலியவற்றால் தெரிகின்றது. கருரு. ஓவியச்சேனன் - சித்திரசேனன்.
கருஎ. அவனுடன் - சித்திரசேனனுடன். ஆடிடம் - விளையாடுமிடம். கசஉ. தேறென - தெளிவாயென்று கந்திற்பாவை சொல்ல.
மேல்வருவன மணிமேகலை கூற்று.
கசரு. தெய்வக்கிளவிகளைத் தேறேனல்லேன்; தெளிவேனென்றபடி.
கசச. ஈறு கடைபோக - மரணம் இறுதியாக; "கடைபோகச் செல்வமுய்த் தார்" (நாலடி. ககக.) என்றலும் - என்று மணிமேகலை சொல்லலும்.
மேல் வருவன கந்திற்பாவை கூற்று.
(பி - ம்.) கருஉ. 'பாவையை' கருரு. 'ஓவிய சேனன்' கருகூ. 'பொருந்துவகொணர்ந்து' கசo. 'நாநலம் வருந்தவென்னலம்' கசக. 'மணிமேகலைக்கு வரு' கசச. 'ஈறுயிர் கடைகொளெனக் குறையென்றலும்'

கசரு துவதிக னுரைக்குஞ் சொல்லலுஞ் சொல்லுவேன்
வருவது கேளாய் மடக்கொடி நல்லாய்
மன்னுயிர் நீங்க மழைவளங் கரந்து
பொன்னெயிற் காஞ்சி நகர்கவி னழிய
வாங்கது கேட்டே யாருயிர் மருந்தா
கரு0 யீங்கிம் முதியா ளிடவயின் வைத்த
தெய்வப் பாத்திரஞ் செவ்வியின் வாங்கித்
தையனிற் பயந்தோர் தம்மொடு போகி
யறவணன் றானு மாங்குள னாதலிற்
செறிதொடி காஞ்சி மாநகர் சேர்குவை
கருரு யறவண னருளா லாய்தொடி யவ்வூர்ப்
பிறவண மொழிந்துநின் பெற்றியை யாகி
வறனோ டுலகின் மழைவளந் தரூஉ
மறனோ டேந்தி யாருயி ரோம்புவை
யாய்தொடிக் கவ்வூ ரறனொடு தோன்று
கசு0 மேது நிகழ்ச்சி யாவும் பலவுள
பிறவற முரைத்தோர் பெற்றிமை யெல்லா
மறவணன் றனக்குநீ யுரைத்த வந்நாட்
டவமுந் தருமமுஞ் சார்பிற் றோற்றமும்

---

கசரு. உரைக்கும் : முற்று. சொல்லலுஞ் சொல்லுவேன் - யான் சொல்லுதலையுஞ் செய்வேன்.

கசஎ. மணி. கக : அ௩, உரு : க0உ. நீங்கக் கரந்து - நீங்கும்படி மறைந்து.

கசஎ - அ. மணி. உஅ : கருகூ - எ. கரு0. முதியாள் - சம்பாபதி.

கருஉ. நிற்பயந்தோர் - மாதவியும் சுதமதியும்.

கரு௩. ஆங்கு - காஞ்சிநகரில். கருச. செறிதொடி : விளி.

கரு௩ - ச. ஆங்கு உளனாதலிற் சேர்குவை.

கசகூ -ருச. அதுகேட்டு வாங்கிக் காஞ்சிமாநகர்சேர்குவை யென்க.

கருகூ. பிறவணமொழிந்து - வேற்றுமதப்பற்றொழிந்து.

கருஎ. வறன் ஓடு உலகில் - வறட்காலம் பரந்த உலகத்தில்.

கருஅ. அறனோடு - அமுதசுரபி. கருஎ - அ. மணி. கரு : ரு௩ - ச.

கசுக. பிறவறமுரைத்தோர் - வஞ்சி நகரத்தில் மற்றைச் சமய தருமங்களைச் சொன்னோருடைய.

கசு௩. சார்பு - துவாதசநிதானம் ; அவை, " பேதைமை செய்கை யுணர்வே யருவுரு, வாயி லூறே நுகர்வே வேட்கை, பற்றே பவமே

(பி - ம்.) கருரு. 'அருளவாய்கொடி' கருஎ. 'மறனோடுலகின்' கசு0. 'ஏதுக்கு நிகழ்ச்சி'

பவமறு மார்க்கமும் பான்மையி னுரைத்து
கசுரு மறவிரு ளிரிய மன்னுயி ரேமுற
அறவெயில் விரித்தாங் களப்பி லிருத்தியொடு
புத்த ஞாயிறு தோன்றுங் காறுஞ்
செத்தும் பிறந்துஞ் செம்பொருள் காவா
வித்தல நீங்கே னிளங்கொடி யானுந்
கஎ0 தாயரு நீயுந் தவறின் றாக
வாய்வ தாகநின் மனப்பாட் டறமென
வாங்கவ னுரைத்தலு மவன்மொழி பிழையாய்
பாங்கிய னல்லறம் பலவுஞ் செய்தபின்
கச்சி முற்றத்து நின்னுயிர் கடைகொள
கஎரு வுத்தர மகதத் துறுபிறப் பெல்லா
மாண்பிறப் பாகி யருளற மொழியாய்

தோற்றம் வினைப்பய, னிற்றெனை வகுத்த வியல்பீ ராறும்'' (மணி. உச : க0ரு - அ, ந0 : சரு - அ) என்பன.

கசுச. பவம் - கருமங்களின் கூட்டம் ; "பவமெனப் படுவது கரும வீட்டம்'' (ந0 : கங) என வருதல் காண்க.

கசுரு. மறவிருள் - பாவமாகிய இருட்டு. ஏமுற - நிருவாணமாகிய இன்பத்தை அடையும்படி ; ஏமம் - இன்பம்.

கசுசு. இருத்தி - அணிமாதியோகசித்திகளெட்டும் ; "எத்திறத் தார்க்கு மிருத்தியுஞ் செய்குவம்'' (உசு : சுக) என்று பின்னும் வருதல் காண்க ; சித்தி எண்பத்தொன்பதென்று கூறுதலுமுண்டு ; "எண்பத் தொன் பதுசித்தி யியல்பிறு னுளவென்று, பண்பொத்த நுண்பொரு ளைப் பாரறியப் பகர்ந்தனையே'' என்பது வீர. யாப்பு. கக, உதாரணம்.

கசுஎ. தோன்றுங்காறும் - தோன்றுமளவும்.

கசுஅ. செம்பொருள் - தருமம் ; மெய்யுணர்ந்தார் நெஞ்சிற்கெல் லாம் செம்மையுடைத்தாய்த் தோன்றலின், இப்பெயர்பெற்றது ; "செம் பொருள் கண்டார்வாய்ச் சொல்'' (குறள், கக.) காவா - காத்து.

கசுகூ. இத்தலம் - இக்காஞ்சி நகரத்தை. கஎக. அறம் வாய்வதாக.

கஎஉ. அவன் - அறவணன். பிழையாய் - தப்பாயாய்.

கசுச - எஉ. அவன் உரைத்து நின் மனப்பாட்டறம் வாய்வதாக வென வுரைத்தலும். கஎந. நல்லறம் - காருணியம்.

கஎச. கச்சிமுற்றம் - காஞ்சிநகரிடம் ; "வஞ்சிமுற்றம்'' (சிலப். உரு : கூ, நச.) கடை - முடிவு.

கஎரு. உத்தரமகதம் - வடமகதநாடு.

கஎசு. ஒழியாய் - நீங்காயாய்.

(பி - ம்.) கசுச. 'வேமறுமார்க்கமும்' கசுஅ. 'செம்பொருளிக வாய்' கசுகூ. 'இத்திற நீங்கேன்' கஎந. 'வாங்கிய நல்லறம் பலவுஞ்' கஎரு. 'புத்தமலலகததுனபிறப்'

மாண்பொடு தோன்றி மயக்கங் களைந்து
பிறர்க்கற மருளும் பெரியோன் றனக்குத்
தலைச்சா வகனுய்ச் சார்பறுத் துய்தி
க௲0 யின்னுங் கேட்டியோ நன்னுதன் மடந்தை
யூங்க ணோங்கிய வுரவோன் றன்னை
வாங்குதிரை யெடுத்த மணிமே கலாதெய்வஞ்
சாது சக்கரற் காரமு தீத்தோ
யீது நின்பிறப் பென்பது தெளிந்தே
க௲டு யுவவன மருங்கி னின்பாற் றோன்றி
மணிபல் லவத்திடைக் கொணர்ந்தது கேளெனத்
துவதிக னுரைத்தலுந் துயர்க்கட னீங்கி
யவதி யறிந்த வணியிழை நல்லாள்
வலையொழி மஞ்ஞையின் மனமயக் கொழிதலு
ககூ0 மூலகுதுயி லெழுப்பினன் மலர்கதி ரோனென்.

உக.—கந்திற்பாவை வருவதுரைத்தகாதை முற்றிற்று.

---

களக. தலைச்சாவகனுய் - முதல்மாணுக்கனுய்; சாவகன்—ஸ்ராவகன்-கேட்பவன்; "தரும சாவகன் றன்னடி வணங்கி" (உடு : உ) என்பர் பின்னும். சார்பு - பன்னிருநிதானம் ; மணி. ௲0 : சடு - அ. உய்தி - பிழைப்பாய்.

க௲க. உன் குலத்தில் முன்பு அறத்தால் உயர்ச்சியுற்றிருந்த அறிவுடையோனுகிய ஒருவனை. ஊங்கண் - முன்பு ; "தூங்கெயி லெறிந்த நின்னூங்கணோர் நினைப்பின்" (புறநா. ௲க); "போந்தைக் கண்ணிநின் னூங்கணோர் மருங்கிற், கடற்கடம் பெறிந்த காவலன்" சிலப். உ௲: க௲ச-டு.

க௲உ. திரை எடுத்த - அழுந்தி இறவாவண்ணம் கடலினின்றும் எடுத்த; எடுத்த கதையை, சிலப்பதிகாரம், கடு: உ௲ - ஆம் அடி முதலியவற்றிற் காண்க.

க௲௲. சாதுசக்கரற்கு - சாதுசக்கரனென்னும் முனிவனுக்கு.

க௲ச. ஈது - இத்தன்மையையுடையது.

க௲௲. அவதி - எல்லை. ககூ0. மலர்கதிரோன்: வினைத்தொகை.

க - ககூ0. குழலி எழுந்து கேட்டு எழுந்து நீங்கி வெய்துயிர்த்துப் புலம்பி அழுதேங்கி அயாவுயிர்த்தெழுதலும், இருந்தெய்வம் உரைத்தலும், பூங்கொடி பொருந்தி, 'நின்பேரருள் பெறுவேன்' என, தெய்வங் கூறும்; அங்ஙனங்கூறுந் தெய்வம், 'என்சொற்றேறு' என, மணிமேகலை, 'எனக்கு அருள்' என்றலும் துவதிகனுரைக்கும் ; அங்ஙனமுரைக்குந் துவதிகன் உரைத்தலும், நல்லாள் நீங்கி மயக்கொழிதலும், கதிரோன் துயிலெழுப்பினனென வினைமுடிவு செய்க.

(பி - ம்.) கள௲. 'அறமொழியும் பெரியோன்' களக. 'சாவறுத் துய்தி'

இருபத்திரண்டாவது

# சிறைசெய் காதை.

[இருபத்திரண்டாவது மணிமேகலை பொருட்டால் மடிந்தான் உதயகுமரனென்பது மாதவர்வாய்க்கேட்ட மன்னவன் மணிமேகலையை மந்திரியாகிய சோழிகவேனுதியாற் காவல்கொண்ட பாட்டு.]

கடவுண் மண்டிலங் காரிருள் சீப்ப
நெடுநிலைக் கந்தி னின்ற பாவையொடு
முதியோள் கோட்டம் வழிபடல் புரிந்தோ
ருதய குமரற் குற்றதை யுரைப்பச்
௫ சாதுயர் கேட்டுச் சக்கர வாளத்து
மாதவ ரெல்லா மணிமே கலைதனை
யிளங்கொடி யறிவது முண்டோ விதுவெனத்
துளங்கா தாங்கவ ளுற்றதை யுரைத்தலு
மாங்கவ டன்னை யாருயிர் நீங்கிய
௧௦ வேந்தன் சிறுவனொடு வேறிடத் தொளித்து
மாபெருங் கோயில் வாயிலுக் கிசைத்துக்
கோயின் மன்னனைக் குறுகினர் சென்றீங்
குயர்ந்தோங் குச்சி யுவாமதி போல

---

க. கடவுண்மண்டிலம் - சூரியன். ௩. முதியோள் - சம்பாபதி.
௨ - ௪. பாவையொடு கோட்டத்தை வழிபடல் புரிந்தோர் உற்றதை முனிவர்க்கு உரைப்ப.
௫. சாதுயர் - உதயகுமரனிறந்த துன்பம்; மணி. ௬ : ௬௫.
௬. மணிமேகலையை நோக்கி.
௭. இளங்கொடி - மணிமேகலை; விளி. இது - உதயகுமரனிறந்தது. என - என்று முனிவர் கேட்ப.
௬ - ௭. மாதவரெல்லாம் மணிமேகலையை நோக்கி இதனை நீ அறிவது முண்டோவென.
௮. துளங்காது - நடுங்காது.
இனி, சக்கரவாளக் கோட்டத்துள்ள முனிவர் அரசனையடைந்து உதயகுமரன் காஞ்சனனால் இறந்தது மொழிதல் கூறப்படும்.
௧௧. வாயில் - வாயில்காப்போர். ௧௨. சிலப். ௨௦ : ௭௭.
௧௩. உவாமதி - பூர்ணசந்திரன்.

நிவந்தோங்கு வெண்குடை மண்ணக நிழற்செய
கரு வேலுங் கோலு மருட்கண் விழிக்க
தீதின் றுருள்கநீ யேந்திய திகிரி
நினக்கென வரைந்த வாண்டுக ளெல்லா
மனக்கினி தாக வாழிய வேந்தே
யின்றே யல்ல விப்பதி மருங்கிற்
உ0 கன்றிய காமக் கள்ளாட் டயர்ந்து
பத்தினிப் பெண்டிர் பாற்சென் றணுகியு
நற்றவப் பெண்டிர் பின்னுளம் போக்கியுந்
தீவினை யுருப்ப வுயிரீறு செய்தோர்
பாராள் வேந்தே பண்டும் பலரான்
உரு மன்மருங் கறுத்த மழுவா ளெடியோன்
றன்முன் றோன்ற றகாதொழி நீயெனக்
கன்னி யேவலிற் காந்த மன்னவ
னிந்நகர் காப்போர் யாரென நினைஇ

கச. செய: வியங்கோள்.

கரு. திகிரி தீதின்று உருள்க ; தீது - இடையூறு.

கஎ. மதுரை. எஅஉ. வரைந்த - எல்லையிட்ட.

கஅ. இனிது: பன்மையொருமை மயக்கம்.

காமமிகுதியாற் கொலையுண்ட உதயகுமரன் பொருட்டு வருந்தா வண்ணம், முற்காலத்து அந்நகரத்திற் காமமிகுதியால் தீங்கிழைத்துக் கொலையுண்ட இருவருடைய சரித்திரங்களை அம்முனிவர்களுள் ஒருவர் அரசனுக்குக் கூறுதல் மேற்கூறப்படும்.

உ0. கன்றிய - அடிப்பட்ட; "காமமே கன்றி நின்ற" (சீவக. உக0.) அயர்ந்து - செய்து. காமக்கள்ளாட்டு : மணி. கஅ : அஅ, உரு : கக.

உஉ. நற்றவப் பெண்டிர் - நல்ல தவஞ்செய்யுமகளிர் ; நற்றவம் - வீடு பெறுதற்குச் செய்யுந் தவமுமாம் ; "நற்றவஞ்செய் வார்க்கிடந் தவஞ் செய்வார்க்கு மஃதிடம்" சீவக. எஎ.

உச. பண்டும்: உம்மை எதிரதுதழீஇய எச்சப்பொருளது.

உரு. மன்மருங்கறுத்த - இராசகுலத்தை இல்லையாக்கின ; "சூர் மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி" (முருகு. உஎரு.) மழுவாணெடி யோன் - பரசுராமன் ; மதுரை, சருரு.

உஎ. கன்னி - துர்க்கை ; சம்பாபதியுமாம். காந்தமன்னவன் - காந்தனென்னும் பெயரையுடைய அரசன்.

உஅ. இந்நகரென்றது, காவிரிப்பூம் பட்டினத்தை. நினைஇ - நினைந்து.

(பி - ம்.) உசு. 'தகாதொழி'

நாவலந் தண்பொழி னண்ணார் நடுக்குறக்
௩௰ காவற் கணிகை தனக்காங் காதல
னிகழ்ந்தோர் காயினு மெஞ்சுத லில்லோன்
ககந்த னாமெனக் காதலிற் கூஉ
யரசா ளுரிமை நின்பா லின்மையிற்
பரசு ராமனின் பால்வந் தணுகா
௩௫ னமர முனிவ னகத்தியன் றனாது
துயர்நீங்கு கிளவியின் யான்றோன் றளவுங்
ககந்தன் காத்தல் காகந்தி யென்றே
யியைந்த நாம மிப்பதிக் கிட்டீங்
குள்வரிக் கொண்டவ் வுரவோன் பெயர்நாட்
௪௰ டெள்ளுநீர்க் காவிரி யாடினள் வரூஉம்
பார்ப்பனி மருதியைப் பாங்கோ ரின்மையின்

உக. சிலப். உ௫ : கஎ௩. நாவலந்தண்பொழில் - சம்புத்தீவில். நண்ணார் - பகைவர்.

௩௰. காவற்கணிகை - களத்தாடுங் கூத்தி; இராக்கடை வேசை யென்பர் அரும்பதவுரையாசிரியர் (சிலப். ௫ : ௫௰); இவள் அரசன் காமக்கிழத்திபோலும். காதலன் - மகன்.

௩க. எஞ்சுதல் - குறைதல்.

உக - ௩க. நண்ணார் இகழ்ந்தோராய் நடுக்குறக்காயினும் எஞ்சுதலில்லோன்.

௩உ. ககந்தனாமென - ககந்தன் காத்தற்குரியனாவானென்று நினைந்து. கூஉய் - அழைத்து.

௩௰ - ௩உ. காதலனும் எஞ்சுதலில்லோனுமாகிய ககந்தனென்க. மேல்வருவது, ககந்தனை நோக்கி அரசன் கூறும் கூற்று.

௩௩. ககந்தன் கணிகைமகனாதலின், அவன்பால் அரசவுரிமை இலதாயிற்று.

௩௫. அமரமுனிவனாகிய அகத்தியன்.

௩௫ - ௬. இம்மன்னவன் அகத்திய முனிவர்பாற் பத்திமையுடையனாதலை, "கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட, வமர முனிவ னகத்தியன் றனாது, கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை" (மணி. பதி. க௰ - கஉ) என்பதனாலுணர்க.

௩எ. ககந்தன் : அண்மைவிளி. காத்தல் : வியங்கோள். 'என்று கூறி' என வருவிக்க.

௩க. உள்வரிக்கொண்டு - வேற்றுருவங்கொண்டு. நாள் - நாளில். இனிக் கூறப்படுவது, பத்தினிப்பெண்டிர்பாற் சென்றணுகித் தீங்குற்றோன் கதை.

(பி - ம்.) ௩க. 'இகழ்ந்தோர்க்காயினும்' ௩எ. 'ககந்தன் காத்தலின்'

யாப்பறை யென்றே யெண்ணின ளாகிக்
காவிரி வாயிலிற் ககந்தன் சிறுவ
னீவா வென்ன நேரிழை கலங்கி
௪௫ மண்டிணி ஞாலத்து மழைவளந் தரூஉம்
பெண்டி ராயிற் பிறர்நெஞ்சு புகாஅர்
புக்கேன் பிறனுளம் புரிநூன் மார்பன்
முத்தீப் பேணு முறையெனக் கில்லென
மாதுய ரெவ்வமொடு மனையகம் புகாஅள்
௫0 பூத சதுக்கம் புக்கனள் மயங்கிக்
கொண்டோற் பிழைத்த குற்றந் தானிலேன்
கண்டோ னெஞ்சிற் கரப்பெளி தாயினேன்
வான்றரு கற்பின் மனையறம் பட்டேன்
யான்செய் குற்றம் யானறி கில்லேன்
௫௫ பொய்யினை கொல்லோ பூத சதுக்கத்துத்
தெய்வ நீயெனச் சேயிழை யரற்றலு
மாபெரும் பூதந் தோன்றி மடக்கொடி

---

௪உ. யாப்பறை - உறுதியற்றவள்.

௪௩. காவிரி வாயிலில் - காவிரிக்கரையில் திருமுகத்துறைகழி கின்ற வாயிலில்; "காவிரி வாயிற் கடைமுகங் கழிந்து" சிலப். க0 : ௩௩.

௪௪. என்ன - என்றுகூற. நேரிழை - மருதி. ௪௫. புறநா. உ.

௪எ. பிறனுளம்புக்கேனென்க. இக்கருத்தைத்தழுவி, "நீதிலா வடமீன்" (சிலப். க : உஎ) என்பதில், 'நீது' என்பதற்கு, 'பிறர் நெஞ்சு புகுதல்' என்று அடியார்க்குநல்லார் பொருள்செய்திருத்தல் காண்க. புரிநூன் மார்பனென்றது, தன் கணவனாகிய அந்தணனை.

௪௯. மாதுயரெவ்வம் - மிக்க துன்பம்; மணி. க0 : ௬உ. புகாஅள் - புகாளாய்.

௫0. பூதசதுக்கம் - தவமறைந்தொழுகும் தன்மையிலாளர் முதலிய அறுவகையினரைப் பாசத்தாற்கட்டிப் புடைத்துண்ணும் பூதம் நிற் றலையுடைய சதுக்கம்; சதுக்கம் - நாற்சந்தி; பூதசதுக்கத்தின் வரலாற் றைச் சிலப்பதிகாரம், ௫ : க௨அ - ஆம் அடிமுதலியவற்றானுணர்க.

௫க. கொண்டோன் - கணவன். ௫உ. கரப்பு - ஒளித்தல்.

௫௩. வான்றருகற்பு - மழையைத்தரும் கற்பு. மனையறம் பட்டேன் - இல்லறத்திற்குத் துணையாக நிற்றலை ஒழிந்தேன்.

௫௪. யானறிகில்லேன் - யானறியேன்.

௫௫. பொய்யினைகொல்லோ - பொய்ம்மையையுடையாயோ.

௫௫ - ௬. நீ இல்லையாயினையோ. ௫எ. பூதம் - சதுக்கப்பூதம்.

(பி - ம்.) ௪உ. 'எள்ளினளாகி' ௫எ. 'மாபெருந்தெய்வம்'

நீகே ளென்றே நேரிழைக் குரைக்குந்
தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
௬௦ பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்
பிசியு நொடியும் பிறர்வாய்க் கேட்டு
விசிபிணி முழவின் விழாக்கோள் விரும்பிக்
கடவுட் பேணல் கடவியை யாகலின்
௬௫ மடவர லேவ மழையும் பெய்யாது
நிறையுடைப் பெண்டிர் தம்மே போலப்
பிறர்நெஞ்சு சுடூஉம் பெற்றியு மில்லை
யாங்கவை யொழிகுவை யாயி னாயிழை
யோங்கிரு வானத்து மழையுநின் மொழியது
௭௦ பெட்டாங் கொழுகும் பெண்டிரைப் போலக்
கட்டா துன்னையென் கடுந்தொழிற் பாச
மன்முறை யெழுநாள் வைத்தவன் வழூஉம்
பின்முறை யல்ல தென்முறை யில்லை

---

௫௯ - ௬௦. குறள், ௫௫.

௬௧. பொய்யில்புலவன் - திருவள்ளுவர். பொருளுரை - பொருளை யுடைய சொல்; தருமவார்த்தையுமாம். தேறாய் - தெளியாயாய்; சிலப். உ௮ : ௧௬௮.

௬௨. பிசி - பிதிர் (புதிர்); பொய்யுமாம். நொடி - விடுகதை.

௬௩. விசிபிணிமுழவின் விழா - கட்டப்பட்ட கட்டினையுடைய முழவினையுடைய விழா.

௬௪. கடவியையாகலின் - கடப்பாடாக வுடையையாகலின்.

௬௫. மடவரல் : முன்னிலைப்பெயர்.

௬௬. நிறை - நிறுத்தல். பெண்டிர் தம்மேபோல - பெண்டிரைப் போல.

௬௭. பெற்றியுமில்லை - தன்மையுமில்லை.

௬௫ - ௭. மணி. உஉ : ௪௫ - ௬.

௬௮. அவை - பிசியையும் நொடியையும் கேட்டலும், விழாக்கோள் விரும்பலும், கடவுட்பேணலும்.

௭௦. பெட்டாங்கு - விரும்பியவண்ணம். பெண்டிரைப்போல - பெண்டிரைக் கட்டுவதுபோல.

௭௨. எழுநாள் - எழுநாளாம். வைத்து : சொன்னடை; அரசன் முறையாக எழுநாள் பொறுத்துவைத்திருந்து என்றலுமாம். வழூஉம் - தவறும்.

(பி - ம்.) ௫௮. 'தொழும்மவள்' ௬௨. 'கேட்டும்' ௬௩. 'விரும்பியும்'

யீங்கெழு நாளி விளங்கொடி நின்பால்
எரு வாங்கா நெஞ்சின் மயரியை வாளாற்
சுகந்தன் கேட்டுக் கடிதலு முண்டென
விகந்த பூத மெடுத்துரை செய்ததப்
பூத முரைத்த நாளா லாங்கவன்
றாதை வாளாற் றடியவும் பட்டன
அ0 னின்னுங் கேளா யிருங்கட லுடுத்த
மண்ணுள் செல்வத்து மன்னவ வேறே
தரும தத்தனுந் தன்மா மன்மகள்
பெருமதர் மழைக்கண் விசாகையும் பேணித்
தெய்வங் காட்டுந் திப்பிய வோவியக்
அரு கைவினை கடந்த கண்கவர் வனப்பினர்
மைத்துனன் முறைமையால் யாழோர் மணவினைக்
கொத்தன னென்றே யூர்முழு தலரெழப்
புனையா வோவியம் புறம்போந் தென்ன
மனையக நீங்கி வாணுதல் விசாகை
கூ0 யுலக வறவியி னூடுசென் றேறி
யிலகொளிக் கந்தி னெழுதிய பாவா
யுலகர் பெரும்பழி யொழிப்பாய் நீயென
மாநக ருள்ளீர் மழைதரு மிவளென

எரு. மயரி - மயக்கமுடையான்.

எச - கூ. எழுநாளிற்கடிதலுமுண்டு.

எஎ. இகந்தபூதம் - தீமையைக் கடந்தபூதம்.

எஅ. நாளால் - நாளில். அ0 - அக. புறநா. கூகூரு.

இனிக்கூறப்படுவது, நற்றவப்பெண்டிர் பின்னுளம்போக்கித் தீங்குற்றோன் கதை.

அஉ - ரு. தருமதத்தனும் விசாகையும் வனப்பினர்.

அகூ. யாழோர்மணவினைக்கு - காந்தருவவிவாகத்திற்கு.

அஎ. ஒத்தனர் - இயைந்தனர்.

அஅ. புனையாவோவியம்-வண்ணங்களைக்கொண்டெழுதாமல் வடிவைமாத்திரம் கோட்டினசித்திரம்; மணி. கசு : கூஉ; செயற்கையழகு யாதொன்றும் இன்மையின், இங்ஙனங்கூறினார்.

கூ0. ஊடு - உள்ளே. கூஉ. என - என்று விசாகைவேண்ட.

கூரு. இவள் மழையைத் தருவாளென்று.

(பி - ம்.) அஎ. 'ஒத்தனரென்றே' கூ0. 'ஊடுவந்தேறி'

நாவுடைப் பாவை நங்கையை யெடுத்தலுந்
கூரு தெய்வங் காட்டித் தெளித்திலே னாயின்
மைய லூரோ மனமா சொழியாது
மைத்துனன் மனையாண் மறுபிறப் பாகுவே
னிப்பிறப் பிவனொடுங் கூடே னென்றே
நற்றாய் தனக்கு நற்றிறஞ் சாற்றி
க00 மற்றவள் கன்னி மாடத் தடைந்தபின்
றரும தத்தனுந் தந்தையுந் தாயரும்
பெருநகர் தன்னைப் பிறகிட் டேகித்
தாழ்தரு துன்பந் தலையெடுத் தாயென
நாவுடைப் பாவையை நலம்பல வேத்தி
க0ரு மிக்கோ ருறையும் விழுப்பெருஞ் செல்வத்துத்
தக்கண மதுரை தான்சென் றடைந்தபின்
றரும தத்தனுந் தன்மா மன்மகள்
விரிதரு பூங்குழல் விசாகையை யல்லது
பெண்டிரைப் பேணே னிப்பிறப் பொழிகெனக்
கக0 கொண்ட விரதந் தன்னுட் கூறி
வாணிக மரபின் வருபொரு ளீட்டி
நீணிதிச் செல்வனாய் நீணில வேந்தனி
னெட்டிப் பூப்பெற் றிருமுப் பதிற்றியாண்

---

கூச. நாவுடைப்பாவை - கந்திற்பாவை ; மணி. உக : ருஎ - அ. எடுத்தல் - உயர்த்தல்.

கூஎ. மறுபிறப்பில் மைத்துனன் மனைவியாவேன். மைத்துனனென்றது தருமதத்தனை.

கூகூ. நற்றிறம் - விரதம். க00. அவள் - விசாகை.

க0உ. பெருநகர் - காவிரிப்பூம்பட்டினம். பிறகிட்டு - பின்வைத்து.

க0ரு. தலையெடுத்தாய் - நீக்கினாய்.

க0கூ. தக்கணமதுரை - கூடல் ; மணி. உஉ : கஉக ; தக்கணம்: பாகதச்சிதைவு.

க0எ. தருமதத்தனும் : உம்மை, இறந்தது தழீஇயது.

கக0. கொண்ட - மேற்கொண்ட.

ககக. வாணிகமரபு - கொள்வது மிகையும் கொடுப்பது குறையுமாகாமல் ஒப்பநாடிச் செய்தல்.

ககரு. எட்டிப்பூப்பெற்று - அரசனாற் கொடுக்கப்படும் எட்டிப் பட்டத்திற்குரிய பூவைப்பெற்று ; இதன்வரலாற்றை இந்நூல், ச : ருஅ - ஆம் அடியின்குறிப்பிற் பார்க்க. இருமுப்பதிற்றியாண்டு - அறுபதுவருடம் ; என்றது அவன்பிராயத்தை ; "ஆறைந் திரட்டி யாண்டுனக் காயது" (கஉக) என்று பின்பு விசாகை கூறுதல் காண்க.

டொட்டிய செல்வத் துயர்ந்தோ னாயின
௧௧௫ னந்த ணாள னொருவன் சென்றீங்
கென்செய் தனையோ விருநிதிச் செல்வ
பத்தினி யில்லோர் பலவறஞ் செய்யினும்
புத்தே ளுலகம் புகாஅ ரென்பது
கேட்டு மறிதியோ கேட்டனை யாயி
௧௨௦ னீட்டித் திராது நின்னக ரடைகெனத்
தக்கண மதுரை தான்வழி தாக
விப்பதிப் புகுந்தன னிருநில வேந்தே
மற்றவ னிவ்வூர் வந்தமை கேட்டுப்
பொற்றொடி விசாகையு மனைப்புறம் போந்து
௧௨௫ நல்லா ணாணுள் பல்லோர் நாப்ப
ணல்லவை கடிந்த வவன்பாற் சென்று
நம்முறு மறிந்தில நம்மை முன்னாண்
மம்மர் செய்த வனப்பியாங் கொளித்தன
வாறைந் திரட்டி யாண்டுனக் காடிதென்
௧௩௦ றுறைங் கூந்தனு நரைவிரா வுற்றன
விளமையுங் காமமும் யாங்கொளித் தனவோ
வுளனில் லாள வெனக்கீங் குரையா
யிப்பிறப் பாயினியா னின்னடி யடையே
னப்பிறப் பியானின் னடித்தொழில் கேட்குவ

௧௧௪. ஒட்டிய - தீராத.

௧௦௭ - ௧௪. தருமதத்தனும் கூறி ஈட்டிப் பெற்று உயர்ந்தோனாயினனென்க.

௧௨௦. அடைக என - அடைவாயென்று அந்தணாளன் கூற,

௧௨௨. புகுந்தனன் - தருமதத்தன் புகுந்தனன்.

௧௨௬. அல்லவை - பொய்முதலியன.

மேல்வருவது விசாகைகூற்று.

௧௨௮. மம்மர் - மயக்கம். வனப்பென்றது இருவருடைய அழகையும்.

௧௩௦. நாறைங்கூந்தல்: சிலப். ௧௦ : ௫௩.

௧௨௯ - ௩௦. என் கூந்தலும் - எனது கூந்தலும். கூந்தல் - மயிர் மாத்திரையாய் ஐவகையுமுணர்த்தலின், 'நரைவிரா வுற்றன' என்று பன்மை கூறினர்; "வண்ணப்போ தருச்சித்து மகிழ்வானைத் தகையவே" சீவக. ௧௯௪.

௧௩௪. அப்பிறப்பு - மறுபிறப்பு.

(பி - ம்.) ௧௩௧. 'யாங்குகுத்தனவோ'

௧௩௫ னிளமையு நில்லா யாக்கையு நிலையா
வளவிய வான்பெருஞ் செல்வமு நில்லா
புத்தே ளுலகம் புதல்வருந் தாரார்
மிக்க வறமே விழுத்துணை யாவது
தானஞ் செய்யெனத் தருமதத் தனு
௧௪௦ மாமன் மகள்பால் வான்பொருள் காட்டி
யாங்கவ னவளுடன் செய்த நல்லற
மோங்கிரு வானத்து மீனினும் பலவாற்
குமரி மூத்தவக் கொடுங்குழை நல்லா
ளமர னருளா லகனக ரிடூஉம்
௧௪௫ படுபழி நீங்கிப் பல்லோர் நாப்பட்
கொடிமிடை வீதியின் வருவோள் குழன்மேன்
மருதி பொருட்டான் மடிந்தோன் றம்முன்
கருகிய நெஞ்சினன் காமங் காழ்கொளச்
சுரியிரும் பித்தை சூழ்ந்துபுறந் தாழ்ந்த
௧௫௦ விரிபூ மாலை விரும்பினன் வாங்கித்

---

௧௩௫ - ௬. "இளமையுஞ் செல்வமும் யாக்கையு நில்லா" சிலப். ௩௦: ௧௬௬. ௧௩௭. புத்தேளுலகம் - தேவருலகம்.

௧௩௫ - அ. மணி. உஅ: ௬அ - ௭௦.

௧௩௯. தானஞ்செய்யென-தானஞ்செய்யென்று விசாகைசொல்ல.

௧௪௦. மாமன்மகள் - விசாகை; மணி. உஉ: ௧அ௬.

௧௪௩. குமரிமூத்த - கன்னிப்பெண்ணாகவிருந்து வறிதே மூப்புற்ற; "குமரி மூத்தவென் பாத்திரம்" (௧௪: ௭௭) என ஆபுத்திரன் கூறியதாக முன்னும் கூறியிருத்தல் காண்க. நல்லாள் - விசாகை.

௧௪௪. அமரன் அருளால் - கந்திற்பாவையிலுள்ள துவதிகனென்னும் தேவனுடைய கருணையால்.

௧௪௫. படுபழி - மைத்துனன் முறையால் யாழோர் மணவினைக்கு ஒத்தனனென்று ஊர்கூறிய பொய்ப்பழி.

௧௪௫ - ௬. நாப்பண்வருவோள் - விசாகை.

௧௪௭. மருதி - முற்கூறிய பார்ப்பனி மருதி. தம்முன்-தமையன்.

௧௪அ. கருகிய நெஞ்சு - இருண்ட நெஞ்சு. காழ்கொள - வயிரங்கொள்ள; மணி. ௫: ௨௦. காழ்கொளக் கருகிய நெஞ்சினனென்க.

௧௪௯. சுரியிரும்பித்தை - சுரிந்த கரிய தன் குடுமியில்; "சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி" பொருந. ௧௬௦.

௧௫௦. மாலையை விரும்பி வாங்கி.

(பி - ம்.) ௧௩௫. 'நில்லாது'

தொல்லோர் கூறிய மணமீ தாமென
வெல்லவிழ் தாரோ னிடுவான் வேண்டி
மாலை வாங்க வேறிய செங்கை
நீலக் குஞ்சி நீங்கா தாகலி
கருரு னேறிய செங்கை யிழிந்தில திந்தக்
காரிகை பொருட்டெனக் ககந்தன் கேட்டுக்
கடுஞ்சினந் திருகி மகன்றுயர் நோக்கான்
மைந்தன் றன்னை வாளா லெறிந்தன
னூழிதொ றூழி யுலகங் காத்து
கசுo வாழிய வெங்கோ மன்னவ வென்று
மாதவர் தம்முளோர் மாதவன் கூறலும்
வீயா விழுச்சீர் வேந்தன் கேட்டன
னின்றே யல்ல வென்றெடுத் துரைத்து
நன்றறி மாதவிர் நலம்பல காட்டினி
கசுரு ரின்று முளதோ விவ்வினை யுரைமென
வென்றி நெடுவேல் வேந்தன் கேட்பத்
தீதின் றுக செங்கோல் வேந்தென
மாதவர் தம்முளோர் மாதவ னுரைக்கு
முடிபொரு ளுணர்ந்தோர் முதுநீ ருலகிற்
கஎo கடியப் பட்டன வைந்துள வவற்றிற்



கருஉ. எல் - விளக்கம். இடுவான் வேண்டி - இடவிரும்பி.
கருங. வாங்க - கொள்ளுதற்பொருட்டு.
கருச. நீலக்குஞ்சி - கருமையையுடைய குடுமி; நீலம் - கருமை; "நீல யானை மன்னவன்" சீவக. கசஅ.
கருங - ச. கை நீங்காதாகலின்.
கருரு - சு. விசாகைக்குச் சூட்டுதற்பொருட்டு மாலைவாங்குதற்கு ஏறிய கை குஞ்சியினின்றும் இழிந்திலதென்று ககந்தன் கேட்டு.
கருஎ. சினந்திருகி - கோபம்முறுகி; "காய்சினந் திருகிய கடுந் திறல் வேனில்" (பெரும்பாண். ங.) நோக்கான் - நோக்கானாய்; இது நோக்கல் நோக்கம்.
கருக - சுo. மு. மணி. கக: கஙஎ - அ. கசுஉ. வீயா - மாறாத.
கசுங. 'இன்றேயல்ல' என்பதனை இக்காதையில் கக - ஆம் அடியிற்காண்க.
கசுரு. உரைமென=உரையுமென - சொல்லுமென்று.
கசுஎ. வேந்தே, செங்கோல் தீதின்றுகவென்று.
கசுஅ. உரைக்கும் - உரைப்பான்.
கசுக. முடிபொருள் உணர்ந்தோர் - பரமார்த்த தத்துவஞானிகள்.
கஎo. கடியப்பட்டன - விலக்கப்பட்டன. ஐந்தாவன: கள், பொய்,

கள்ளும் பொய்யுங் களவுங் கொலையுந
தள்ளா தாகுங் காமந் தம்பா
லாங்கது கடிந்தோ ரல்லவை கடிந்தோ ரென
நீங்கின ரன்றே நிறைதவ மாக்க
௧௭௫ ணீங்கா ரன்றே நீணில வேந்தே
தாங்கா நரகந் தன்னிடை யுழப்போர்
சேயரி நெடுங்கட் சித்திரா பதிமகள்
காதல னுற்ற கடுந்துயர் பொறாஅண்
மாதவி மாதவர் பள்ளியு ளடைந்தனண்
௧௮0 மற்றவள் பெற்ற மணிமே கலைதான்
முற்று முலையினண் முதிராக் கிளவியள்
செய்குவன் றவமெனச் சிற்றிலும் பேரிலு
மையங் கொண்டுண் டம்பல மடைந்தன
ளாங்கவ ளவ்வியல் பினளே யாயினு
௧௮௫ நீங்கா னவளை நிழல்போல் யாங்கணுங்
காரிகை பொருட்டாற் காமங் காழ்கொள

களவு, கொலை, காமமென்பன; "கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையு முள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை" (உ௪ : ௭௭ - ௮) என்பர் பின்னும். அவற்றில் - அவ்வைந்தனுள்ளே.

௧௭௧ - உ. காமம், கள்முதலிய நான்கினையும் நீக்காது; என்றது, காமமுடையோர் மற்றை நான்கு குற்றத்தையும் உடையராவரென்றபடி.

௧௭௩. ஆங்கது - அத்தன்மையதாகிய காமத்தை. அல்லவை கடிந்தோர் - அல்லாத கள்முதலியவற்றையுங் கடிந்தோராவர்.

௧௭௪. நீங்கினரன்றே - அக்காமத்தை நீங்கினோரே.

௧௭௬. உழப்போர் - வருந்துவோர்.

௧௭௫ - ௬. நீங்காரே நரகத்தில் துன்பமனுபவிப்போராவார்.

மேல் உதயகுமரன் செய்தி கூறப்படும்.

௧௭௮. காதலனுற்ற கடுந்துயர் - கோவலன் கொலையுண்டிறந்தது.

௧௭௯. மாதவர்பள்ளியுள் - பௌத்த சங்கத்தாரான அறவணவடிகளுடைய உறைவிடத்தில்.

௧௭௮ - ௯. மணி. உ : ௫௯ - ௬௬, ௧௮ : ௭ - ௮.

௧௭௭ - ௯. மகளாகிய மாதவி. பள்ளியுள் அடைந்தனள்.

௧௮0. அவள் - மாதவி. ௧௮உ. தவம் செய்குவனென்று.

௧௮௩. ஐயம் - பிச்சை. அம்பலம் - உலகவறவி.

௧௮௫. அவளை நிழல்போல் யாங்கணும் நீங்கானாய்.

௧௮௬. காரிகைபொருட்டு - மணிமேகலைபொருட்டு. காழ்கொள - முற்ற; மணி. உஉ : ௧௪௮.

(பி - ம்.) ௧௭௩. 'அவைகடிந்தோரென' ௧௭௯. 'அடைதலும்'

வாரிரு ளஞ்சா னம்பல மடைந்தனன்
காயசண் டிகைவடி வாயினள் காரிகை
காயசண் டிகையு மாங்குள ளாதலிற்
ககூ௦ காயசண் டிகைதன் கணவ னாகிய
வாய்வாள் விஞ்சைய னொருவன் றேன்றி
யீங்கிவள் பொருட்டால் வந்தன னிவனென
வாங்கவன் றீவினை யுருத்த தாகலின்
மதிமருள் வெண்குடை மன்ன நின்மக
ககூ௫ னுதய குமர னொழியா னாக
வாங்கவ டன்னை யம்பலத் தேற்றி
யோங்கிருள் யாமத் திவனையாங் குய்த்துக்
காயசண் டிகைதன் கணவ னாகிய
வாய்வாள் விஞ்சையன் றன்னையுங் கூஉய்
உ௦௦ விஞ்சை மகள்பா லிவன்வந் தனனென
வஞ்ச விஞ்சையன் மனத்தையுங் கலக்கி
யாங்கவன் றன்கை வாளா லம்பலத்
தீங்கிவன் றன்னை யெறிந்ததென் றேத்தி
மாதவர் தம்முளோர் மாதவ னுரைத்தலுஞ்
உ௦௫ சோழிக வேனாதி தன்முக நோக்கி

---

கஅஎ. அஞ்சானாகி அம்பலமடைந்தனன்.
கஅஅ. காரிகை - மணிமேகலை. கஅக. உளள் - உள்ளாள்.
ககக. வாய்வாள் - தப்பாத வாள்.
ககஉ. இவள்பொருட்டு - காயசண்டிகையின் பொருட்டு.
ககங. அவன் - உதயகுமரன்; காஞ்சனனுமாம்.
ககச. மருள் : உவமவுருபு ; மணி. ச : உஎ.
ககரு. அவள் தன்னை - மணிமேகலையை.
ககஎ. இவனை - உதயகுமரனை.
உ௦௦. விஞ்சைமகள் - காயசண்டிகை.
உ௦ங. எறிந்தது - அத்தீவினை வெட்டியது.
உ௦௫. ஏனாதியென்பது வேந்தனாற் கொடுக்கப்படும் பட்டப்பெயர்களுளொன்று ; இதனை, "மாராயம் பெற்ற நெடுமொழி யானும்" (தொல். புறத். சூ. அ) என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதியவுரையாலும், அதில், "போர்க்கட லாற்றும் புரவித்தேர்ப் பல்படைக்குக், கார்க்கடல் பெற்ற கரையன்றோ - போர்க்கெல்லாந், தானாதி யாகிய தார்வேந்தன் மோதிரஞ்சேர், ரேனாதிப் பட்டத் திவன்" என்று அவர் எடுத்துக்காட்டிய பழம்பாட்டாலுமுணர்க ; பெரியபுராணத்துக் கூறப்பட்டுள்ள திருத்தொண்டர்களுள் ஒருவர்க்கு ஏனாதிநாதநாயனாரென்ற திருநாமம்.

(பி - ம்.) ககச. 'மதிமருணெடுங்குடை'

யான்செயற் பால திளங்கோன் றன்னைத்
தான்செய் ததனுற் றகவிலன் விஞ்சையன்
மாதவர் நோன்பு மடவார் கற்புங்
காவலன் காவ லின்றெனி னின்றுன்
உக௦ மகனை முறைசெய்த மன்னவன் வழியோர்
துயர்வினை யாளன் றேன்றின னென்பது
வேந்தர் தஞ்செவி யுறுவதன் முன்ன
மீங்கிவன் றன்னையு மீமத் தேற்றிக்
கணிகை மகளையுங் காவல்செய் கென்றன
உக௫ னணிகிளர் நெடுமுடி யரசாள் வேந்தென்.

உஉ.—சிறைசெய்காதை முற்றிற்று.

---

இதுபற்றியேவந்த குடிப்பெயர்போலும்; "ஆழிதொட்டான்" என்பதற்கு 'ஏனுதிமோதிரஞ் செறித்த சேனபதி' (சீவக. உகசுஎ) என்று ஆசிரியர் நச்சினார்க்கினியரெழுதியிருக்கின்றனர். மேற் கூறியவாற்றுலும், இக் காதையின் தலைப்பில், 'மந்திரியாகிய சோழிகவேனுதி' என்றிருத்தலாலும், 'சோழிகவேனுதி' என்பதற்குச் சோழனுடைய ஏனுதிமோதிரஞ் செறித்த சேனபதியும் மந்திரியுமாகிய ஒருவனென்று பொருள்கொள்ளுதல் பொருத்தமுடைத்து.

உ௦எ. காஞ்சனன் தகுதியில்லாதவனுயினன்.

உ௦சு - எ. யான் செயற்பாலதைத் தான் செய்ததனுலென்க.

உ௦அ - க. காவலின்றெனின், நோன்புமின்று, கற்புமின்று: "அருந்திற லரசர் முறைசெயி னல்லது, பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாது" சிலப். உஅ: உ௦எ - அ.

உக௦. மகனை முறைசெய்த மன்னவன் - கன்றையிழந்த பசுவின் துயரைத் தீர்த்தற்குத் தன் மகனைக் கிடத்தி அவன் மார்பில் உருளைசெல்லும்படி தேரையூர்ந்த மனுவேந்தன்; இதனை, "மேலைக், கறவைக்கன் றூர்ந்தானைத் தந்தையு மூர்ந்தான்" (பழ. கூ௩), "வாயிற் கடைமணி நடுநா நடுங்க, வாவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத் தான்ற, னரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன், பெரும்பெயர்ப் புகாரென் பதியே" (சிலப். உ௦: ௫௩ - ௬), "கறவை முறைசெய்த காவலன்கா ணம்மானை" (ஷை. உ௯: 'புறவு நிறை'), "மருளும் பசுவொன்றின் மம்மர்நோய் தீர, வுருளுந் திருத்தேரூரவோன்" (குலோத்துங்கசோழனுலா) என்பவனவற்றுலும், பெரிய புராணத்திலுள்ள திருவாரூர்ச் சிறப்பாலுமுணர்க.

உகக. துயர்வினை - தீவினை. உகஉ - ௩. முன்னம் ஏற்றி.

உகச. கணிகைமகள் - மணிமேகலை.

க - உக௫. மண்டிலம் சீப்பப் புரிந்தோர் உரைப்பக்கேட்டு மாதவரெல்லாம் மணிமேகலையை நோக்கி, 'இதனை நீயறிவதுமுண்டோ' என,

(பி - ம்.) உ௦க. 'காவலன்றித் தங்காவலான்'

அவள் உரைத்தலும், அவளைச் சிறுவனொடு வேறிடத்தொளித்து இசைத்துச் சென்று குறுகி ஒரு மாதவனுரைத்தலும், கேட்டு வேந்தன், 'உரையும்' என, ஒரு மாதவனுரைக்கும்; அங்ஙனமுரைக்குமாதவன் எத்தி உரைத்தலும், வேந்து காவல் செய்கென்றனனென வினைமுடிவு செய்க.

---

## இருபத்துமூன்றுவது

# சிறைவிடுகாதை.

[இருபத்து மூன்றுவது மணிமேகலை சிறைவீடுசெய்த இராசமா
தேவி குறைகொண்டிரப்பச் சீலங்கொடுத்த பாட்டு.]

மன்னவ னருளால் வாசந் தவையெனு
நன்னெடுங் கூந்த னரைமூ தாட்டி
யரசர்க் காயினுங் குமரற் காயினுந்
திருநிலக் கிழமைத் தேவியர்க் காயினுங்
௫ கட்டுரை விரித்துங் கற்றவை பகர்ந்தும்
பட்டவை துடைக்கும் பயங்கெழு மொழியின
ளிலங்கரி நெடுங்க ணிராசமா தேவி
கலங்கஞ ரொழியக் கடிதுசென் றெய்தி
யழுதடி வீழா தாயிழை தன்னைத்
௧0 தொழுதுமுன் னின்று தோன்ற வாழ்த்திக்
கொற்றங் கொண்டு குடிபுறங் காத்துச்

---

உ. நரைக்கூந்தல் - வெண்மையையுடைய கூந்தல்.

௩ - ௪. ஆயினுமென்பது விகற்பப்பொருளைத் தருவதோரிடைச் சொல்; எண்ணிடைச்சொல்லுமாம்.

௫. கட்டுரை - பொருள் பொதிந்த சொல்.

௬. பட்டவை - உண்டான துன்பங்கள். பயம் - பிரயோசனம்.

௫ - ௬. விரித்தும் பகர்ந்தும் துடைக்கும் மொழியினள்.

அ. கலங்கஞர் - கலங்குதற்குக் காரணமாகிய துன்பம். கடிது சென்று - விரைவாகச் சென்று.

௧ - அ. வாசந்தவையெனுமூதாட்டி, மொழியினள், தேவியது அஞரொழிய மன்னவனருளாற் கடிதுசென்றெய்தியென்க.

௧0. தொழுது - அஞ்சலிசெய்து.

௧௧. கொற்றங்கொண்டு - அரசவுரிமையைக்கொண்டு; "கொற்றங் கொண்டு கோவினி தோச்சென" (பெருங். உ, ௫ : எ௩.) குடிபுறங்

(பி - ம்.) ௬. 'பட்டதுதுடைக்கும்' ௯. 'அழுதனளடிவீழ்ந்து'

செற்ற தெவ்வர் தேஎந்தம தாக்கியுந்
தருப்பையிற் கிடத்தி வாளிற் போழ்ந்து
செருப்புகன் மன்னர் செல்வுழிச் செல்கென
கரு மூத்து விளிதலிக் குடிப்பிறந் தோர்க்கு
நாப்புடை பெயராது நாணுத்தக வுடைத்தே
தன்மண் காத்தன்று பிறர்மண் கொண்டன்
றென்னெனப் படுமோ நின்மகன் மடிந்தது
மன்பதை காக்கு மன்னவன் றன்முன்

---

காத்து - குடிகளைப் பிறர் நலியாமற் பாதுகாத்து; "குடிபுறங் காத்தோம்பி" குறள்,ருசக.

கஉ. செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழ்வது. தெவ்வர் - பகைவர்.

கங. தருப்பையிற்கிடத்தி - பரப்பியதருப்பைப்புல்லிற் கிடத்தி. போழ்ந்து - பிளந்து.

கச. செருப்புகல் மன்னர் - போரின்கண்ணே புக்குப் போர் செய்து வீழ்தலையுடைய அரசர். செல்வுழிச் செல்க என - செல்லுமுலகத்திலே செல்கவென்று அந்தணர் கூறும் வண்ணம்.

கரு. மூத்துவிளிதல் - மூப்புற்று இறத்தல். இக்குடி - சோழபரம்பரை.

கஉ - சு. போரிலிறவாமல் முதுமையுற்று நோயால் இறந்த அரசருடம்பை அந்தணர் தருப்பைப்புல்லிற்கிடத்தி, தமது ஆண்மையே பற்றுக்கோடாக யுத்தத்திலேயிறந்த அரசர்செல்லும் உலகத்திலே இவர் செல்கவென்று அவ்வுடம்பை வாளாற் பிளந்து அடக்குதல் மரபாதலின் இங்ஙனங் கூறினர். இப்படியே, "ஓடன் மரீஇய பீடின் மன்னர்,...... திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி, மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த, நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென, வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர்" (புறநா. கூங), "மூப்பினும் பிணியினும் இறவாது அமர்க்களத்து வீழ்ந்தோரே துறக்கம்பெறுவர்" (தொல். அகத். சூ. சச, ந.) என வந்திருத்தல் காண்க; அகநா. சுக: க - ங, பார்க்க.

கசு. நாப்புடை பெயராது - இதனைக்கூறுதற்கு எனது நாவானது புடைபெயர மாட்டாது. நாணுத்தகவுடைத்து - நாணுந்தகுதியையுடைத்து; "மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே" புறநா. ங௬.

கஉ - சு. தமதாக்கியும் மூத்துவிளிதல் இக்குடிப்பிறந்தோர்க்கு நாணுத்தகவுடைத்து.

கஎ - அ. நின்மகன் மடிந்தது, தன் மண் காத்தமையாலன்று; பிறர் மண் கொண்டமையாலுமன்று; காமத்தால்; அவ்விறப்பு யாதென்று கூறப்படும்.

கக. மன்பதை - உயிர்ப்பன்மை.

(பி - ம்.) கஉ. 'செற்றதெவ்வர்தேயந்தமது' கசு. 'நாணுத்தக வுடைத்தென'

உ0 றுன்பங் கொள்ளே லென்றவள் போயபின்
கையாற் றுள்ளங் கரந்தகத் தடக்கிப்
பொய்யாற் றொழுக்கங் கொண்டுபுற மறைத்து
வஞ்சஞ் செய்குவன் மணிமே கலையையென்
றஞ்சி லோதி யரசனுக் கொருநாட்
உ௫ பிறர்பின் செல்லாப் பிக்குணிக் கோலத்
தறிவு திரிந்தோ னரசிய றனிலன்
கரும்புடைத் தடக்கைக் காமன் கையற
வரும்பெற லிளமை பெரும்பிறி தாக்கு
மறிவு தலைப்பட்ட வாயிழை தனக்குச்
௩0 சிறைதக் கன்று செங்கோல் வேந்தெனச்

---

உ0. கொள்ளேல் - கொள்ளாதே. அவள் - வாசந்தவை.

இராசமாதேவி, அரசனை யடைந்து மணிமேகலையைச் சிறைமீட்டு உடன்கொண்டு சென்று தன் காவலில்வைத்து வஞ்சித்தல் இனிக்கூறப் படும்.

உக. கையாற்றுள்ளங்கரந்து - செயலறவினையுடைய உள்ளத்தை மறைத்து ; என்றது புத்திரசோகத்தை வெளிப்படுத்தாமலென்றபடி.

உஉ. பொய்யாற்றொழுக்கங் கொண்டு - பொய்வழிக்கண் ஒழுகு தலைக்கொண்டு. புறமறைத்து - புறத்தே தோன்றாமல் மறைத்து ; என்றது மணிமேகலையை வஞ்சித்தற்கெண்ணிய தனது தீயவெண்ணத் தை ஒருவாற்றானும் வெளிப்படுத்தாமலென்றபடி.

உ௩. மணிமேகலையை வஞ்சஞ்செய்குவேனென்று கருதி.

உ௪. அஞ்சிலோதி - இராசமா தேவி.

உ௫. கோலத்து - வேடத்தைக்கண்டு.

உ௬. அறிவுதிரிந்தோன் - அறிவு வேறுபட்ட உதயகுமரன்.

உ௭. கையற - செயலற.

உ௮. இளமை - இளமையை. பெரும்பிறிதாக்கும் - பயன்படாது கெடச்செய்யும்.

உ௭ - ௮. கையறப் பெரும்பிறிதாக்குமென்க.

உ௯. தலைப்பட்ட - நேர்பட்ட ; முதன்மைப்பட்டவென்றுமாம்.

௩0. தக்கன்று - தக்கதன்று ; விகாரம். வேந்து : அண்மை விளி. என - என்று இராசமாதேவி சொல்ல.

உ௪ - ௩0. அஞ்சிலோதி ஒருநாள் அரசனுக்குச் சிறைதக்கன் றெனவென்க.

(பி - ம்.) உ௬. 'அறவியறிரிந்தோன்'

சிறப்பின் பாலார் மக்க ளல்லார்
மறப்பின் பாலார் மன்னர்க் கென்ப
தறிந்தனை யாயினிவ் வாயிழை தன்னைச்
செறிந்த சிறைநோய் தீர்க்கென் றிறைசொல
௩௫ வென்னோ டிருப்பினு மிருக்கவிவ் விளங்கொடி
தன்னோ டெடுப்பினுந் தகைக்குந ரில்லென்
றங்கவ டனைக்கூஉ யவடன் னோடு
கொங்கவிழ் குழலாள் கோயிலுட் புக்காங்
கறிவு திரித்திவ் வகனக ரெல்லா
௪0 மெறிதரு கோலம்யான் செய்குவ லென்றே
மயற்பகை யூட்ட மறுபிறப் புணர்ந்தா
ளயர்ப்பது செய்யா வறிவின ளாகக்

---

௩௧ - உ. சிறப்பின்பாலார் மக்கள்-கல்விமுதலிய விசேடமுடைய வர் புதல்வர். அல்லார் மறப்பின்பாலார் - அல்லாதவர் மறத்தற் குரியவர். என்பது - என்று பெரியோர் கூறுதலை. இவ்வடிகளின் கருத்து, "உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்.........ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளு, மூத்தோன் வருக வென்னா தவரு, ளறிவுடை யோனா றரசுஞ் செல்லும், வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங், கீழ்ப் பா லொருவன் கற்பின், மேற்பா லொருவனு மவன்கட் படுமே" (புறநா. க௮௩) என்பதன் பொருளையும், "அரம்போலும்" (குறள், ௯௯௭) என்ப தன் பொருளையும் ஒருவாறு தழுவி வந்திருத்தல் காண்க.

௩௩. ஆயிழை - மணிமேகலை.

௩௪. சிறைநோய்-சிறைத்துன்பம். தீர்க்கென்று - தீர்க்கவென்று. இறை - அரசன்.

௩௬. தன் ஓடு எடுப்பினும் - தனக்குரிய ஓட்டையேந்திப்பிச்சைக் குப் புகுவாளாயினும். தகைக்குநர் இல் - தடுப்பவர்களில்லை; "அணித் தகை யுடம்பு" (சீவக. ககஎஉ.) என்று - என்று கூறி.

௩எ. அவடனைக்கூஉய் - மணிமேகலையை யழைத்து.

௩௮. குழலாள் - இராசமாதேவி.

௩எ - ௮. குழலாள் அவளோடு கோயிலுட்புக்கு.

௩௯. அறிவுதிரித்து - அறிவைமருந்தால் வேறுபடச்செய்து; பித் தாக்கியென்றபடி.

௪0. எறிதருகோலம் - அடிக்குங்கோலத்தை; கல்லெறியுங் கோ லத்தை யென்றுமாம். செய்குவலென்று - இவளுக்குச் செய்வேனென்று கருதி.

௪க. மயற்பகையூட்ட - பித்தேறுதற்குக் காரணமாகிய மருந்தை யூட்ட; "வஞ்ச முண்டு மயற்பகை யுற்றோர்" (சிலப். ௫ : கஉஉ.) உணர்ந்தாள் - மணிமேகலை.

௪உ. அயர்ப்பது - மறப்பது.

௪க - உ. "மயற்பகை யூட்டினை மறுபிறப் புணர்ந்தே, னயர்ப்பது

கல்லா விளைஞ ரொருவனைக் கூஉய்
வல்லாங்குச் செய்து மணிமே கலைதன்
சரு னிணைவள ரிளமுலை யேந்தெழி லாகத்துப்
புணர்குறி செய்து பொருந்தின ளென்னும்
பான்மைக் கட்டுரை பலர்க்குரை யென்றே
காணம் பலவுங் கைந்நிறை கொடுப்ப
வாங்கவன் சென்றவ் வாயிழை யிருந்த
ருo பாங்கி லொருசிறைப் பாடுசென் றணைதலுந்
தேவி வஞ்ச மிதுவெனத் தெளிந்து
நாவியன் மந்திர நடுங்கா தோதி
யாண்மை கோலத் தாயிழை யிருப்பக்
காணம் பெற்றோன் கடுந்துய ரெய்தி
ருரு யரச ருரிமையி லாடவ ரணுகார்



---

செய்யா வறிவினே னாயினேன்" (கூஉ - ங) என்று பின்பு வருதல் காண்க. உணர்ந்தாள் அறிவினளாக.

சச. வல்லாங்குச்செய்து - வல்லபடி செய்து; "வடியா நாவின் வல்லாங்குப் பாடி" புறநா. சஎ.

சஅ. காணம் - பழங்காசு; சீவக. ககசஎ, ந. கைந்நிறை கொடுப்ப - கைந்நிறையக்கொடுப்ப; நிறை: விகாரம், "நிலநெளி பரந்த வன்றே" (சீவக. சஙங) என்பதில், 'நெளி' என்பதுபோல.

சங - அ. ஒருவனைக்கூஉய், 'வல்லாங்குச்செய்து புணர்குறி செய்து பொருந்தினளென்னுங் கட்டுரையைப் பலர்க்கும் உரை' என்று கூறிக் காணம்பலவும் கொடுப்பவென்க.

சகூ. ஆயிழை - மணிமேகலை.

ருo. பாங்கு இல் ஒரு சிறைப்பாடு - அழகில்லாத ஒரு பக்கத்தினிடத்தே; பக்கத்துள்ள ஒரு காவலிடத்தென்றுமாம்.

சகூ - ருo. அவன்சென்று பாடுசென்றணைதலுமென்க.

ருக. தேவி - இராசமாதேவி. இது - இவ்விளைஞன் வந்தது.

ருஉ. நாவியல் மந்திரம் - நாப் புடைபெயருமளவிலே உச்சரிக்கப் படும் மந்திரம்; என்றது வேற்றுருவெய்துவிக்கும்மந்திரத்தை; "ஆறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி, நாவியன் மருங்கி னவிலப் பாடி" முருகு. கஅசு - எ.

ருக - ங. ஆயிழை, இது தேவிவஞ்சமெனத்தெளிந்து மந்திரத்தை ஓதிக் கோலத்துடனிருப்பவென்க.

ருரு. அரசருரிமையில் ஆடவரணுகார் - அரசருடைய தேவிமாரிருக்கும் அந்தப்புரத்தில் ஆண்மக்கள் குறுகார்; "ஆடவர் குறுகா வருங்கடி வரைப்பின்" (நெடுநல். கoஎ); அந்தப்புரத்தை, "குழைமுகப் புரிசை" (சீவக. உஎரு) என்பர் திருத்தக்கதேவர்.

(பி - ம்.) ருங. 'ஆண்மைக்'

நிரயக் கொடுமக ணினைப்பறி யேனென்
றகநகர் கைவிட் டாங்கவன் போயபின்
மகனைநோய் செய்தாளை வைப்ப தென்னென்
றுய்யா நோயி னூணொழிந் தனளெனப்
௬௦ பொய்ந்நோய் காட்டிப் புழுக்கறை யடைப்ப
வூணொழி மந்திர முடைமையி னந்த
வாணுதன் மேனி வருந்தா திருப்ப
வையென விம்மி யாயிழை நடுங்கிச்
செய்தவத் தாட்டியைச் சிறுமை செய்தே
௬௫ னென்மகற் குற்ற விடுக்கண் பொறாது
பொன்னே ரனையாய் பொறுக்கென் றவடொழ

---

ருகூ. நரகத்தை யடைதற்குரிய கொடுமையையுடைய இவளது தீயவெண்ணத்தை நானறிந்திலேனெனக் கருதி; இராசமாதேவி வியபிசரிக்குங் கருத்துடையாளென்று அவ்விளைஞன் கருதினன்போலும்.

ருஎ. அகநகர் - அந்தப்புரம்.

ருசு - எ. காணம்பெற்றேன், துயரெய்தி அறியேனென்றுகைவிட்டுப்போயபினென்க. சங - ருஎ. மணி. உங : கூச - ரு.

ருஅ. உதயகுமரனுக்குக் காமநோயை உண்டாக்கிக் கொல்லுவித்த இவளை இனி உயிருடன் வைத்தல் நமதன்பிற்கு யாதுபயனென்று இராசமாதேவி கருதி.

ருகூ. உய்யாநோயின்-உயிரைத்தாங்கியிராமைக்குக் காரணமாகிய நோயினால்; மருந்தாற் போக்கவொண்ணாத நோயினாலென்றுமாம்.

௬௦. புழுக்கறை - புழுங்கச்செய்யும் அறை; "புழுக்கறைப் பட்டோர் போன்று" (ங : கூரு) என்றார் முன்னும்.

ருஅ - ௬௦. (இராசமாதேவி) வைப்பதென்னென்று காட்டி அடைப்ப வென்க.

௬உ. வாணுதல் - மணிமேகலை. ருஅ - ௬உ. மணி. உங : கூ௬ - எ.

௬ங. ஐயெனவிம்மி - விரையப்பொருமி; "ஐயென வளைப்ப" (சீவக. சசஅ); "மோதிரந்தொட் டையென்ன...நோக்கினள்" (ஷை. க0ச0.) ஆயிழை - இராசமாதேவி.

௬ச. செய்தவத்தாட்டியை - மணிமேகலைக்கு; ஐ: உருபு மயக்கம். சிறுமை - குற்றம்; என்றது மயற்பகையூட்டியது முதலிய மூன்றனையும்.

௬ச - ரு. பொறாது செய்தேனென்க.

௬௬. பொன்னேரனையாய் - திருமகளின்மறுதலைபோல்வாய்; திருமகளுக்கு நேராகிய அத்தன்மையையுடையாயெனினுமமையும் (மணி. உ: க௬); "கோளரிக்குந் நிகரன்னார்" (திருந்சிற். உஉரு.) அவள் - இராசமாதேவி.

மேல்வருவன மணிமேகலைகூற்று.

(பி - ம்.) ருகூ. 'நினைப்பதறியேனென்று' ௬௬. 'பொறுக்கென்றனடொழ'

-ல பதிதன் வயிற்றிற் றோன்றிய
வேலங் கமழ்தா ரிராகுலன் றன்னை
யழற்க ணாக மாருயி ருண்ண
௭0 விழித்த லாற்றே னென் னுயிர் சுடுநாள்
யாங்கிருந் தழுதனை யிளங்கோன் றனக்குப்
பூங்கொடி நல்லாய் பொருந்தாது செய்தனை
வுடற்கழு தனையோ வுயிர்க்கழு தனையோ
வுடற்கழு தனையே லுன்மகன் றன்னை
௭௫ யெடுத்துப் புறங்காட் டிட்டனர் யாரே
யுயிர்க்கழு தனையே லுயிர்புகும் புக்கில்
செயப்பாட்டு வினையாற் றெரிந்துணர் வரிய
தவ்வுயிர்க் கன்பினை யாயி னாய்தொடி
யெவ்வுயிர்க் காயினு மிரங்கல் வேண்டு
௮0 மற்றுன் மகனை மாபெருந் தேவி
செற்ற கள்வன் செய்தது கேளாய்
மடைக்கலஞ் சிதைய வீழ்ந்த மடையனை
யுடற்றுணி செய்தாங் குருத்தெழும் வல்வினை

---

௬௭ - ௮. தோன்றிய இராகுலன்றன்னை.

௬௯. அழற்கண் நாகம் - திட்டிவிடமென்னும்பாம்பு; அழல் - விடம்; "ஐந்தலை யரவின் சீற்றத் தாரழல் குளிக்க வுற்றார்" (சீவக. ௭௪௯); "அழல்வாய் நாகத் தாரெயி றழுந்தினர்" சிலப். ௫ : ௧௨௪.

௭0. விழித்தல் - உயிர் வாழ்தல்; நாகத்தின் தொழிலாக்கினுமமையும். [படி.

௭௧. இளங்கோன்றனக்கு யாங்கிருந்தழுதனை; அழுதிலாயென்ற

௭௫. புறங்காடு - மயானம்.

௭௬. புக்கில் - புகுமிடமாகிய உடம்பு; "நோக்கார்கொ னொய்ய தோர் புக்கிலை" நாலடி. ௪௧.

௭௭. வினையென்றது, நல்வினை தீவினையென்னும் இரண்டையும்.

௭௬ - ௭. வினையால் உயிர்புகும்புக்கில் தெரிந்துணர்வரியதென்க.

௭௮. அன்பினையாயின் - அன்பையுடையாயாயின். ஆய்தொடி: [விளி.

௭௯. எவ்வுயிர்க்காயினும் - எல்லாவுயிர்க்கும்.

௮0. மாபெருந்தேவி - இராசமாதேவி; விளி.

௮௧. கோபித்த காஞ்சனன் கொலை செய்தற்குக் காரணமான தீவினையைக்கேள். ௮௨. பூ. மணி. உ௧ : ௫௯.

௮௩. உடம்பைத் துண்டமாக வெட்டினமையால் தோன்றி யெழுந்த வலிய தீவினை.

(பி - ம்.) ௭0. 'இழிதலாற்றேன்' ௭௫. 'ஈமப்புறங்காடு' ௭௭. 'செயற்பாட்டுவினை' ௮௩. 'உருத்தெழுமவ்வினை', 'உருத்தெழுபாவம்.'

நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி
அ௫ விஞ்சையன் வாளால் வீட்டிய தன்றே
யாங்கறிந் தனையோ வீங்கிது நீயெனிற்
பூங்கொடி நல்லாய் புகுந்த திதுவென
மொய்ம்மலர்ப் பூம்பொழில் புக்கது முதலாத்
தெய்வக் கட்டுரை தெளிந்ததை யீறா
௯0 வுற்றதை யெல்லா மொழிவின் றுரைத்து
மற்று முரைசெயு மணிமே கலைதான்
மயற்பகை யூட்டினை மறுபிறப் புணர்ந்தே
னயர்ப்பது செய்யா வறிவினே னுயினேன்
கல்லாக் கயவன் காரிருட் டான்வர
௯௫ நல்லா யாணுரு நான்கொண் டிருந்தே
னாணொழி மந்திர முடைமையி னன்றே
மாணிழை செய்த வஞ்சம் பிழைத்த
தந்தரஞ் சேறலு மயலுருக் கோடலுஞ்

---

அ௪. அரவின் - அரவினால். நல்லுயிர் வாங்கியென்றது, முற்பிறப் பின் செய்தியை.

அ௫. வீட்டியது - கொன்றது; வீழ்த்தியதென்பதன் மரூஉவுமாம்.

அ௩ - ௫. வினை, முற்பிறப்பில் உயிரை அரவின் வாங்கி இப்பிறப் பில் விஞ்சையன் வாளால் வீட்டியது.

அ௬. இது - இச்செய்தியை. அ௭. புகுந்தது - சம்பவித்தது.

அ௮. பொழில் - உவவனம்.

அ௯. தெய்வக்கட்டுரை - கந்திற்பாவைத்தெய்வங்கூறிய பொருள் பொதிந்த சொல்.

௯0. ஒழிவின்று - விடாமல். அ௭ - ௯0. இதுவெனவுரைத்தென்க.

௯௧. மணிமேகலை பின்னும் சொல்லுவாள்.

௯௩. அயர்ப்பது - மறப்பது.

௯௪. கயவன் - கீழ்மகன்; கொடியவனுமாம். இருள் - இருளில்.

௯௫. நான் ஆணுருக்கொண்டிருந்தேன்.

௯௪ - ௫. மணி. உ௩ : ௪௩ - ௫௭.

௯௭. வஞ்சம் - ஊணொழிந்தனளென்று பொய்ந்நோய் காட்டிப் புழுக்கறையடைத்தது. பிழைத்தது - தப்பியது.

௯௬ - ௭. மந்திரமுடைமையினன்றே வஞ்சம் பிழைத்தது.

௯௮. அயலுருக்கோடல் - வேற்றுருவங் கொள்ளல்.

(பி - ம்.) ௯௬. ‘ உடைமையினன்றே ’

சிந்தையிற் கொண்டிலேன் சென்ற பிறவியிற்
௧௦௦ காதலற் பயந்தோய் கடுந்துயர் களைந்து
தீதுறு வெவ்வினை தீர்ப்பது பொருட்டாற்
றையா லுன்றன் றடுமாற் றவலத்
தெய்யா மையறீர்ந் தின்னுரை கேளா
யாள்பவர் கலக்குற மயங்கிய நன்னாட்டுக்
௧௦௫ காருக மடந்தை கணவனுங் கைவிட
வீன்ற குழவியொடு தான்வே றாகி
மான்றோர் திசைபோய் வரையாள் வாழ்வுழிப்
புதல்வன் றன்னையோர் புரிநூன் மார்பன்
பதியோ ரறியாப் பான்மையின் வளர்க்க

௯௮ - ௧௦௧. போனபிறப்பில் எனக்குக் கணவனுயிருந்தோனை இப்பிறப்பில் மகனாகப் பெற்ற உனது துயரைக்களைந்து வினையைத் தீர்த்தற் பொருட்டே சேறலும் கோடலும் சிந்தையிற் கொண்டிலே னென்க.

௧௦௨. தையால் : விளி.

௧௦௨ - ௩. தடுமாற்று அவலத்து எய்யா மையல் - தடுமாறுதற்குக் காரணமாகிய வருத்தத்தைச்செய்யும் அறியாமையாகிய மயக்கம்; மையல் - செல்வச் செருக்குமாம்; "மையன்மத யானைநிரை மன்னன்" சீவக. ௫௮௯.

மேல், காமம், கொலை, கள், பொய், களவு ஆகிய இவ்வைந்தும் நீக்கற்பாலனவென்று இராசமாதேவிக்கு மணிமேகலை உபதேசித்தல் முதலியன கூறப்படும்.

௧௦௪. அரசர் கொடுங்கோல் செலுத்துதலால், யாவரும் தத்தம் நிலை தடுமாறிய நல்ல நாட்டில்; கலி. ௫.

௧௦௫. காருகமடந்தை - இல்லறவொழுக்கினளாகிய ஒருத்தி; நெய்வோர் குலத்துப் பிறந்த ஒருத்தியென்றுமாம். கைவிட - இறக்க.

௧௦௬. குழவியும் தானும் வெவ்வேறிடத்துப் பிரிவுற்று.

௧௦௭. மான்று - மயங்கி. வரையாள் - தன்னலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதாரென்னும் வரையறை யில்லாளாய்.

௧௦௪ - ௭. நாட்டிற் காருகமடந்தை கணவன் கைவிடுதலால் வேறாகி மான்று போய் வரையாளாய் வாழ்வுழியென்க. இல்லறவொழுக்கினளாகிய இவள் கற்பொழிந்து வரைவின்றி வாழ்தற்கு அரசனது கொடுங்கோன்மை காரணமாதலின், 'ஆள்பவர் கலக்குற' என்பது கூறப்பட்டது; "மாதவர் நோன்பு மடவார் கற்புங், காவலன் காவ லின்றெனி னின்றால்" (உஉ : உ0அ - ௯) என்று இக்கருத்து முன்பு வந்திருத்தல் காண்க.

௧௦௮ - ௯. புரிநூன் மார்பன் புதல்வன்றன்னை வளர்க்க.

கக0 வாங்கப் புதல்வ னவடிற மறியான்
றுன்புணர்ந் தறிந்துபின் றன்னுயிர் நீத்தது
நீர்நசை வேட்கையி னெடுங்கட முழலுஞ்
சூன்முதிர் மடமான் வயிறுகிழித் தோடக்
கான வேட்டுவன் கடுங்கணை துரப்ப
ககரு மான்மறி விழுந்தது கண்டுமன மயங்கிப்
பயிர்க்குரல் கேட்டதன் பான்மைய னாகி
யுயிர்ப்பொடு செங்க ணுகுத்த நீர்கண்
டோட்டி யெய்தோ னோருயிர் துறந்ததுங்
கேட்டு மறிதியோ வாட்டடங் கண்ணி
கஉ0 கடாஅ யானைமுன் கட்கா முற்றோர்
விடாஅது சென்றதன் வெண்கோட்டு வீழ்வ
துண்ட கள்ளி னுறுசெருக் காவது
கண்டு மறிதியோ காரிகை நல்லாய்

---

கக0. ஆங்கப்புதல்வன் - அங்ஙனம் வளர்க்கப்பட்ட புதல்வன். அவள்திறம் - அவள் தன்னுடைய தாயென்னுந் தன்மையை.

ககக. பின்னறிந்தென்க.

ககஉ. நீர்நசை வேட்கையின் - நீரைநச்சிய விருப்பத்தால்; நசை வேட்கை; வினைத்தொகை; "கின்னசை வேட்கையி னிரவலர் வருவதை" (புறநா. ஙு); "நீர்நசைஇ வேட்கையின் மானின்று விளிக்கும்" (சிலப். கக : எஅ.) கடம் - காடு.

ககங. சூல் - கருப்பம். ககச. துரப்ப - செலுத்த.

ககரு. மான்மறி - பெண்மான்; மான்குட்டியுமாம்.

ககசு. பயிர்க்குரல் - பயிராகியகுரல்; பயிர் - மிருகங்களுள் ஒன்றை மற்றொன்று அழைக்கும் ஓசைக்குறிப்பு; "மடமா னருகு பிணை பயி ரழைப்பின்" புறநா. களிஎ.

ககஅ. ஓட்டியெய்தோன் - வேட்டுவன்; சுட்டு.

ககக - கூ. நீத்ததும் துறந்ததும் கேட்டும் அறிதியோ; இதனால் காமத்தையும் கொலையையும் நீத்தல் வேண்டுமென்பது கூறப்பட்டது.

கஉ0. கடாஅயானை - மதயானை; "கடாஅக் களிற்றின்மேல்" (குறள், க0அஎ.) கட்காமுற்றோர் - கள்ளை விரும்பியுண்டுகளித்தோர்.

கஉக. கோடு - கொம்பு.

கஉ0 - உங. கட்காமுற்றோா இங்ஙனமாதலை, "புதுக்கோள் யானைமுன் போற்றாது சென்று, மதுக்களி மயக்கத்து வீரை மாய்ந்த தூஉம்" (மணி. கஉ : சரு - சு) என்றதனாலுமுணர்க.

(பி - ம்.) ககஅ. 'ஓட்டியெய்தோன்'

பொய்யாற்றொழுக்கம் பொருளெனக் கொண்டோர்
கஉரு கையாற் றவலங் கடந்தது முண்டோ
களவேர் வாழ்க்கைய ருறாஉங் கடுந்துய
ரிளவேய்த் தோளாய்க் கிதுவென வேண்டா
மன்பே ருலகத்து வாழ்வோர்க் கிங்கிவை
துன்பந் தருவன துறத்தல் வேண்டுங்
கஙo கற்ற கல்வி யன்றாற் காரிகை
செற்றஞ் செறுத்தோர் முற்ற வுணர்ந்தோர்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோ ரென்போ
ரல்லன் மாக்கட் கில்லது நிரப்புநர்
திருந்தே ரெல்வளை செல்லுல கறிந்தோர்
கஙரு வருந்தி வந்தோ ரரும்பசி களைந்தோர்
துன்ப மறுக்குந் துணிபொரு ளுணர்ந்தோர்
மன்பதைக் கெல்லா மன்பொழி யாரென
ஞான நன்னீர் நன்கனந் தெளித்துத்

---

கஉச. பொய்யாற்றொழுக்கம் - பொய்வழிக்கணொழுகுதல். பொருளெனக் கொண்டோர் - காரியமாகக்கொண்டோர்.

கஉரு. கையாற்றவலம் - செயலறவாகிய துன்பம்.

கஉசு. களவேர்வாழ்க்கையர் - களவே உழவுபோலும் இல்வாழ்க்கைப் பொருளாகவுடையோர்; "கைப்பொருள் வெளவுங் களவேர் வாழ்க்கைக், கொடியோர்" (பெரும்பாண். சo - சக) கடுந்துயர் - மிக்க துன்பம். கஉஅ. இவை - காமமுதலிய இவ்வைந்தும்.

கஙo. கல்வி காரிகை அன்று - கல்வி அழகுடைத்தன்று; என்றது பின்பு கூறப்படும் நற்குணங்களில்லாதவழிக் கல்வி அழகுடையதன் றென்றவாறு. இவ்வடியை முன்னுள்ள அடியோடு கூட்டித் துன்பம் தருவனவற்றைத் துறவாவழிக் கல்வி அழகுடைத்தன்றென்று பொருள் கூறினும் பொருந்தும்.

கஙஉ. "மல்லன்மா ஞாலத்து வாழ்வோர்" சிலப். கூo : உoஉ.

கஙங. அல்லன்மாக்கட்கு - வறுமைத் துன்பமுடையார்க்கு.

கஙஉ - ங. நிரப்புநரே வாழ்வோரென்போர்.

கஙச. எல்வளை : விளி.

கஙச - ரு. அரும்பசி களைந்தோரே செல்லுலகறிந்தோர்.

கஙசு. துணிபொருள் - பரமார்த்த தத்துவஞானம்.

கஙசு - எ. அன்பொழியாரே துணிபொருளுணர்ந்தோர்.

கஙஅ. ஞானநன்னீர் - ஞானமாகிய நல்லநீரை. நன்கனம்-நன்றாக.

(பி - ம்.) கஙங. 'நிரப்பினர்'

தேனு ரோதி செவிமுதல் வார்த்து
௧௪௦ மகன்றுயர் நெருப்பா மனம்விற காக
வகஞ்சுடு வெந்தீ யாயிழை யவிப்பத்
தேறுபடு சின்னீர் போலத் தெளிந்து
மாறுகொண் டோரா மனத்தின ளாகி
யாங்கவ டொழுதலு மாயிழை பொறாஅ
௧௪௫ டான்றொழு தேத்தித் தகுதி செய்திலை
காதலற் பயந்தோ யன்றியுங் காவலன்
மாபெருந் தேவியென் றெதிர்வணங் கினளென்.

௨௩.—சிறைவிடுகாதை முற்றிற்று.

---

௧௩௯. தேனுரோதி - இராசமாதேவி. செவிமுதல் - செவியிடம்.

௧௪௦. மகன்றுயர் - புதல்வனிறந்த துயரம்; புத்திரசோகம்.

௧௪௧. அகம் - உள்ளிடம். ஆயிழை - மணிமேகலை.

௧௩௮ - ௪௧. ஞானநீரைத் தெளித்து வார்த்து வெந்தீயை அவிப்ப வென்க.

௧௪௨. தேறு - தேற்றாங்கொட்டை.

௧௪௩. மாறுகொண்டு - பகைமைகொண்டு.

௧௪௪. ஆங்கவள் - இராசமாதேவி. ஆயிழை - மணிமேகலை.

௧௪௬. காதலற் பயந்தோயன்றியும் - எனது முற்பிறப்பின் நாயகனை இப்பிறப்பிற் பெற்றதல்லாமலும்.

௧௪௬ - ௭. காவலன் மாபெருந்தேவியென்று - அரசன் பட்டத்துத் தேவியாகவுமுள்ளாயென்று.

௧ - ௧௪௭. வாசந்தவையென்னும்மூதாட்டி, மொழியினள், அவள் மன்னவனருளாற் சென்றெய்தித் தொழுது முன்னின்று வாழ்த்தி, 'மன்னவன்றன்முன் துன்பங்கொள்ளேல்' என்று போயபின், அஞ்சிலோதி கரந்து அடக்கிக் கொண்டு மறைத்து, 'மணிமேகலையை வஞ்சஞ் செய்குவல்' என்று ஒருநாள் அரசனுக்கு, 'சிறை தக்கன்று' என, 'தீர்க்க' என்று இறைசொல, குழலாள் அவளைக்கூஉய்ப் புக்கு, 'செய்குவல்' என்று ஊட்ட, அறிவினளாக, கொடுப்ப அணைதலும், இருப்ப, போயபின், அடைப்ப, இருப்ப, அவள் தொழ, மணிமேகலை ஒழிவின்றுரைத்து மற்றும் உரைசெய்யும்; அங்ஙனமுரைசெய்பவள் அவிப்ப, அவள் தொழுதலும், ஆயிழை பொறாஅளாய், 'மாபெருந்தேவி' என்று எதிர் வணங்கினளென வினைவுமுடிவு செய்க.

இருபத்துநான்காவது

# ஆபுத்திரனுடனடைந்த காதை.

[இருபத்துநான்காவது மணிமேகலை மாநகரோழிந்து ஆபுத்திரனுடனடைந்த பாட்டு.]

மன்ன குமரனை வஞ்சம் புணர்த்த
தொன்முது கணிகைதன் சூழ்ச்சியிற் போயவன்
விஞ்சையன் வாளின் விளிந்தோ னென்பது
நெஞ்சு நடுக்குறக் கேட்டுமெய் வருந்தி
௫ மாதவி மகடனை வான்சிறை நீக்கக்
காவலன் றேவி காற்கீழ் வீழ்ந்தாங்
கரவே ரல்கு லருந்தவ மடவா
ருரவோற் களித்த வொருபத் தொருவரு
மாயிரங் கண்ணோ னவிநயம் வழூஉக்கொள
க௦ மாயிரு ஞாலத்துத் தோன்றிய வைவரு
மாங்கவன் புதல்வனோ டருந்தவன் முனிந்த
வோங்கிய சிறப்பி னொருநூற்று நால்வருந்
திருக்கிளர் மணிமுடித் தேவர்கோன் றன்முன்
னுருப்பசி முனிந்த வென்குலத் தொருத்தியு
க௫ மொன்று கடைநின்ற வாறிரு பதின்மரித்

---

க. மன்னகுமரனை - உதயகுமரனை. புணர்த்த - சேர்த்திய.

உ. முதுகணிகை - சித்திராபதி; எழுவாய். தொன்முது: ஒருபொருட் பன்மொழி. போயவன் - உதயகுமரன்.

௩. விளிந்தோன் - இறந்தான்.

௫. மாதவிமகடனை - மணிமேகலையை. நீக்க - நீக்குதற்பொருட்டு.

௬. காவலன்றேவி - இராசமாதேவி. ௫ - ௬. நீக்க வீழ்ந்து.

உ - ௬. கணிகை, விளிந்தோனென்பதைக் கேட்டு வருந்தி வீழ்ந்து.

எ. 'அரவேர்' என்பது முதலியன சித்திராபதிகூற்று.

கக. புதல்வன் - சயந்தன். க௫. நூற்றிருபத்தொருவர்.

(பி - ம்.) ௫ - ௬. 'சிறைதவிர்த்த, காதலன்றேவி' க௫. 'ஒன்று கடையிட்ட'

தொன்றுபடு மாநகர்த் தோன்றிய நாண்முதல்
யானுறு துன்ப மியாவரும் பட்டிலர்
மாபெருந் தேவி மாதர் யாரினும்
பூவிலை யீத்தவன் பொன்றின னென்று
உ0 மாதவி மாதவர் பள்ளியு ளடைந்ததும்
பரந்துபடு மனைதொறும் பாத்திர மேந்தி
யரங்கக் கூத்திசென் றையங் கொண்டது
நகுத லல்லது நாடகக் கணிகையர்
தகுதி யென்னார் தன்மை யன்மையின்
உரு மன்னவன் மகனே யன்றியு மாதரா
லிந்நக ருறாஉ மிடுக்கணு முண்டா
லும்பளந் தழீஇய வுயர்மண னெடுங்கோட்டுப்
பொங்குதிரை யுலாவும் புன்னையங் கானற்
கிளர்மணி நெடுமுடிக் கிள்ளி முன்னா
ந0 விளவேனி லிறுப்ப விறும்பூது சான்ற

கசு. தொன்று - பழமை.
கஅ. மாபெருந்தேவி : விளி. மாதர் - நாடகக்கணிகைகள்.
கஎ - அ. மாதரெல்லாருள்ளும் யானுறுதுன்பம் யாவரும் பட்டில ரென இயைக்க.
கக. பூவிலை - அற்றைப்பரிசம் ; " பூவிலை மடந்தைய ரேவற் சில தியர் " (சிலப் : ரு : ருக.) ஈத்தவன் - கோவலன்.
உ0. மாதவர்பள்ளி - அறவணவடிகளுறையுமிடம்.
உஉ. அரங்கக்கூத்தி - மணிமேகலை.
உக - உ. அரங்கக்கூத்தி, பாத்திரமேந்திச் சென்று மனைதொறும் ஐயங்கொண்டதும்.
உ0 - உச. அடைந்ததும் கொண்டதும் நகுதற்குக் காரணமாவன வேயன்றி நாடகக் கணிகையர்களுடைய இயல்பன்மையால் அவற்றை அவர்க்குத் தகுதியென்று கூறார்; இனி, ' நாடகக்கணிகையர் ' என்பதை எழுவாயாகக்கொண்டு அவர் தகுதியென்னாரெனினுமமையும்.
உரு. மன்னவன் மகனேயன்றியும் - உதயகுமரனுக்கு உண்டான இடுக்கணல்லாமலும். மாதரால் - மணிமேகலையால்,
உசு. இடுக்கண் - துன்பம்.
உஎ. உம்பளம் - உப்பளம் ; விகாரம். கோடு - கரை.
உஅ. கானல் - கடற்கரைச்சோலை.
உக. நெடுமுடிக்கிள்ளி - ஓர் அரசன். முன்னா - முன்னாக.
ந0. இறுப்ப - தங்குதலால். இறும்பூது - அதிசயம். இறுப்பச் சான்ற.
(பி - ம்.) கஅ. ' மாதர்யாவரும் ', ' மாதவர்யாவளாயினும். '

பூநாறு சோலை யாருமி லொருசிறைத்
தானே தமிய ளொருத்தி தோன்ற
வின்ன ளார்கொ லீங்கிவ ளென்று
மன்னவ னறியான் மயக்க மெய்தாக்
௩௫ கண்ட கண்ணினுங் கேட்ட செவியினு
முண்ட வாயினு முயிர்த்த மூக்கினு
முற்றுண ருடம்பினும் வெற்றிச்சிலைக் காமன்
மயிலையுஞ் செயலையு மாவுங் குவளையும்
பயிலிதழ்க் கமலமும் பருவத் தலர்ந்த
௪0 மலர்வா யம்பின் வாசங் கமழப்
பலர்புறங் கண்டோன் பணிந்துதொழில் கேட்ப
வொருமதி யெல்லை கழிப்பினு முரையாள்
பொருவரு பூங்கொடி போயின வந்நாள்
யாங்கொளித் தனளவ் விளங்கொடி யென்றே
௪௫ வேந்தலை யுட்டோன் மெல்லியற் றேர்வுழி

---

௩௧. சோலை - சோலையில். ஒருசிறை - ஒருபக்கத்தில்.

௩௨. தானேதமியள் - தான்தனித்தவளாய்.

௨௯ - ௩௨. முன்னுத் தோன்றவென்க.

௩௩. ஈங்குளளாகியஇத்தன்மையையுடையாள்யாவளோ வென்று.

௩௪. அறியான் - அறியானுய். மன்னவன் மயக்கமெய்தி.

௩௬. வாயென்றது நாவினை. உயிர்த்த - மோந்த.

௩௭. உற்றுணருடம்பு - தீண்டியுணருமுடம்பு.

௩௮. மயிலை - மல்லிகைவிசேடம். செயலை - அசோகு.

௩௯. பயிலிதழ் - செறிந்த இதழ். ௪0. கமழ - கமழ்தலால்.

௩௮ - ௪0. மயிலை முதலியனவாகிய அம்பென்க.

௩௫ - ௪0. கண்ணினும் செவியினும் வாயினும் மூக்கினும் உடம்பினும் காமனுடைய மலரம்பின் வாசங்கமழ்தலால். ஈண்டுக்கூறிய, 'கண்ட கண்' முதலியன அரசனுடைய பொறிகள்; என்றது, வேறுவேறு காலங்களில் வேறு வேறு பொருள்களால் அனுபவிக்கப்படுவன ஒருகாலத்து அவள் கண்ணே அனுபவிக்கப்பட்டனவென்பதாம்.

௪௧. பலர் புறங்கண்டோன் - அரசன்.

௪௨. மதி - மாதம். கழிப்பினும் - கழித்தாளாயினும். உரையாள் - சொல்லாளாய். ௪௩. அந்நாள் - அந்நாளில்.

௪௫. தேர்வுழி - தேடும்பொழுது.

(பி - ம்.) ௩௩. 'இன்னளையார்கொல்' ௪௨. 'கழிப்ப வுரையாள்'

நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச்
சலத்திற் றிரியுமோர் சாரணன் றோன்ற
மன்னவ னவனை வணங்கி முன்னின்
றென்னுயி ரனையா ளீங்கொளித் தாளுள
௫0 ளன்னா ளொருத்தியைக் கண்டிரோ வடிகள்
சொல்லுமி னென்று தொழுதவ னுரைப்பான்
கண்டிலே னாயினுங் காரிகை தன்னைப்
பண்டறி வுடையேன் பார்த்திப கேளாய்
நாக நாடு நடுக்கின் றாள்பவன்
௫௫ வாகை வேலோன் வளைவணன் றேவி
வாச மயிலை வயிற்றுட் டோன்றிய
பீலிவளை யென்போள் பிறந்த வந்நா
ளிரவிகுலத் தொருவ னிணைமுலை தோயக்
கருவொடு வருமெனக் கணியெடுத் துரைத்தன

---

௪௬ நிலத்திற்குளித்து - நீரிற்புகுவதுபோல நிலத்திற்புகுந்து. நெடுவிசும்பேறி - சந்திரசூரியர்களை எட்டிப்பிடித்தற்குச் செல்வது போல நீண்ட ஆகாயத்திற்சென்று.

௪௭. சலத்தில் திரியும் - பூமிமேல் நடப்பது போல நீர்மேலே நடந்து திரியும்.

௪௬ - ௭. குளித்து ஏறித் திரியும் ஒருசாரணன் தோன்றவென்க. நிலத்திற் குளித்தல் முதலியன அற்புத சத்தியாகிய இருத்தியெனப்படும். தன் தந்தையாகிய சுத்தோதனனுக்கு ஞானமுண்டாக்குதற்பொருட்டு நிலத்திற் குளித்தல் முதலிய பலவற்புதங்களைப் புத்தன் காட்டினு னென்று அசுவகோஷபோதிசத்துவரென்பவராற் செய்யப்பட்டுள்ள புத்தசரித்த்தின் ௧௧ - ஆம் வர்க்கத்தாற் றெரிகின்றது; "நீரினிற் பூவில் வானி னினைத்துழி யொதுங்கு கின்ற, சாரண ரெண்ம ராவார் சமணரி லிருத்தி பெற்றோர்" (௨ : ௪) என்றார் சூடாமணிநிகண்டுடை யாரும்; "வானூ டிழிந்தோன்" (௧0 : ௩௩) என்று இந்நூலில் முன் வந் திருத்தல்காண்க; பெருங். ௩ - ௪ : ௮௬ - ௯, பார்க்க.

௪௮. அவனை - அச்சாரணனை. ௫0. அன்னாள் - அத்தன்மையாள்.

௪௮ - ௫௧. அவனை வணங்கி நின்று சொல்லுமினென்று மன்னவன் தொழவென்க.

௫௩. அறிவுடையேன் - அறிதலுடையேன். ௫௫. வாகை - வெற்றி.

௫௫ - ௬. தேவியாகிய வாசமயிலை. ௫௭. அந்நாள் - அந்நாளில்.

௫௯. கரு - கருப்பம். வரும் - வருவாள். கணி - நூல்வல்ல நிமித்திகன். ௫௭ - ௯. அந்நாளிற் கணியெடுத்துரைத்தனன்.

(பி - ம்.) ௪௭. 'திரியுஞ் சாரணன் சென்ற' ௪௮ - ௯. 'முன் சென்றே, யென்னுயிர்' ௫0. 'காணிரோ வடிகள்'

௬0 னுங்கப் புதல்வன் வரூஉ மல்லது
பூங்கொடி வாராள் புலம்ப லிதுகே
டீவகச் சாந்தி செய்யா நாளுன்
காவன் மாநகர் கடல்வயிறு புகூஉ
மணிமே கலைதன் வாய்மொழி யாலது
௬௫ தணியா திந்திர சாபமுண் டாகலி
னாங்குப்பதி யழிதலு மீங்குப்பதி கெடுதலும்
வேந்தரை யட்டோய் மெய்யெனக் கொண்டிக்
காசின் மாநகர் கடல்வயிறு புகாமல்
வாசவன் விழாக்கோண் மறவே லென்று
௭0 மாதவன் போயின வந்நாட் டொட்டுமிக்
காவன் மாநகர் கலக்கொழி யாதாற்
றன்பெயர் மடந்தை துயருறு மாயின்
மன்பெருந் தெய்வம் வருதலு முண்டென
வஞ்சினே னரசன் றேவியென் றேத்தி
௭௫ நன்மனம் பிறந்த நாடகக் கணிகையை
யென்மனைத் தருகென விராசமா தேவி
கள்ளும் பொய்யுங் காமமுங் கொலையு

---

௬0. வரூஉமல்லது - வருவானேயன்றி.
௬௧. பூங்கொடி - பீலிவளை. புலம்பல் - வருந்தாதே.
௬௨. தீவகச்சாந்தி - இந்திரவிழவு.
௬௩. நகர் - காவிரிப்பூம்பட்டினம்.
௬௪. மணிமேகலை - மணிமேகலா தெய்வம். அது - நகர் கடல் வயிறு புகுதல்.
௬௨ - ௪. செய்யாநாளில் வாய்மொழியால் நகர் கடல்வயிறுபுகூஉ மென்க. ௬௪ - ௫. இந்திரசாபமுண்டாதலின், அது தணியாது.
௬௬. ஆங்கு - அக்காலத்தே. பதியிரண்டில், முன்னது நகரம், பின்னது அரசன். ௬அ. காசு - குற்றம். ௬௯. மறவேல் - மறவாதே.
௭0. மாதவன் - சாரணன். ௭௧. கலக்கு - கலங்குதல்.
௭௨. மடந்தை - மணிமேகலை.
௭௩. தெய்வம் - மணிமேகலா தெய்வம்.
௭௫. நாடகக்கணிகை - மணிமேகலை.
௭௬. தருகென - தருவாயென்று சித்திராபதி கேட்ப
௭௭. 'கள்ளும் பொய்யும்' என்பது முதலியன இராசமாதேவி கூற்று.
(பி - ம்.) ௬௬. 'அழிதலுமூங்குப்பதிபுகுதலும்' ௭0 'மாதவனு ரைத்த வந்நாட்' ௭௨. 'துயருமாயின்' ௭௫. 'நஞ்சனையிறந்த நாடகக் கணிகை'

முள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை
தலைமையாக் கொண்டநின் றலைமையில் வாழ்க்கை
அ0 புலைமையென் றஞ்சிப் போந்த பூங்கொடி
நின்னொடு போந்து நின்மனைப் புகுதா
ளென்னொ டிருக்குமென் றீங்கிவை சொல்வுழி
மணிமே கலைதிற மாதவி கேட்டுத்
துணிகயந் துகள்படத் துளங்கிய வதுபோற்
அரு றெளியாச் சிந்தையள் சுதமதிக் குரைத்து
வளியெறி கொம்பின் வருந்திமெய்ந் நடுங்கி
யறவண ரடிவீழ்ந் தாங்கவர் தம்முடன்
மறவேன் மன்னவன் றேவிதன் பால்வரத்
தேவியு மாயமுஞ் சித்திர பதியு
கூ0 மாதவி மகளு மாதவர்க் காண்டலு
மெழுந்தெதிர் சென்றாங் கிணைவளைக் கையாற்

எஅ. உரவோர் - அறிவுடையோர். துறந்தவை - நீக்கியவை.

எஎ - அ. மணி. உஉ : கஎ0 - எஉ.

எகூ. தலைமையில் வாழ்க்கை - கடையான பரத்தைமைத்தொழில்; "மேலோ ராயினு நூலோ ராயினும், பால்வகை தெரிந்த பகுதியோ ராயினும், பிணியெனக் கொண்டு பிறக்கிட் டொழியுங், கணிகையர் வாழ்க்கை கடையே" (கக : க அ0 - அங) என்றார் சிலப்பதிகாரத்தும்.

எஎ - கூ. மணி. உ : ருஎ.

அ0. புலைமை - அசுத்தமுடையது. பூங்கொடி - மணிமேகலை.

அஉ. இருக்கும் - இருப்பாள். ஈங்கிவைசொல்வுழி - இவற்றை இராசமாதேவி சொல்லும்பொழுது.

இனி மணிமேகலையின் செய்திகேட்ட மாதவி அறவணவடிகளுடன் இராசமாதேவிபால் வருதல் கூறப்படும்.

அங. திறம் - காவலிலிருத்தல். திறத்தைக் கேட்டு.

அச. துணிகயம் - தெளிந்த நீர்நிலை. துளங்குதல் - கலங்குதல்.

அரு. சிந்தையள் - சிந்தையளாய்.

அசு. வளியெறிகொம்பின் - காற்றாலலைக்கப்பட்ட பூங்கொம்பு போல.

அஉ - அ. ஈங்கிவை சொல்வுழி மாதவி கேட்டுத் தெளியாச்சிந்தையளாய் உரைத்து வருந்தி நடுங்கி வீழ்ந்து அவருடன் இராசமாதேவி பால் வரவென்க.

அகூ. பு. மணி. உச : கசகூ. ஆயம் - சிலதியர்கூட்டம்.

(பி - ம்.) எகூ. 'தலைமையாகின்ற தன்மையில்'

றொழுந்தகை மாதவன் றுணையடி வணங்க
வறிவுண் டாகவென் றுங்கவன் கூறலு
மிணைவளை நல்லா ளிராசமா தேவி
கூ௫ யருந்தவர்க் கமைந்த வாசனங் காட்டித்
திருந்தடி விளக்கிச் சிறப்புச் செய்தபின்
யாண்டுபல புக்கநும் மிணையடி வருந்தவென்
காண்டகு நல்வினை நும்மையீங் கழைத்தது
நாத்தொலை வில்லை யாயினுந் தளர்ந்து
க00 மூத்ததிவ் யாக்கை வாழ்கபல் லாண்டெனத்
தேவி கேளாய் செய்தவ யாக்கையின்
மேவினே னாயினும் வீழ்கதிர் போன்றேன்
பிறந்தார் மூத்தார் பிணிநோ யுற்று
ரிறந்தா ரென்கை யியல்பே யிதுகேள்
க0௫ பேதைமை செய்கை யுணர்வே யருவுரு
வாயி லூறே நுகர்வே வேட்கை

---

கூச - கூ. நல்லாளாகிய தேவி ஆசனங் காட்டி விளக்கிச் சிறப்புச் செய்தபினென்க.

கூஎ. 'யாண்டு பலபுக்க' என்பது முதலியன இராசமாதேவிகூற்று.

கூஎ - அ. என் நல்வினை இணையடி வருந்த நும்மை ஈங்கழைத்தது.

கூகூ. நாத்தொலைவில்லையாயினும் - நுமது நா மெலிதலில்லையாயினும்; சொல்வன்மை குறைந்திலதென்றபடி

க00. இவ்யாக்கையென்றது, அறவணவடிகளுடம்பை. என - என்று இராசமாதேவி சொல்ல.

கூகூ - க00. "நரைமூதிர் யாக்கை நடுங்கா நாவி, னுரைமூதாளன்" (கஉ : ௩ - ச) என்று முன்னும் வந்திருத்தல் காண்க.

க0க. 'தேவிகேளாய்' என்பது முதலியன அறவணவடிகள் கூற்று. தவயாக்கை - தவவுடம்பு.

க0உ. வீழ்கதிர் - அத்தமிக்குஞ் சூரியன். மரணத்திற்குச் சூரியன் அத்தமித்தலை உவமை கூறுதல் பௌத்தநூன்மரபு; "சாக்காடென்ப தருவுருத் தன்மை, யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல்" (௩0 : க0உ - ௩) என இந்நூலிற் பின்பு வருதல் காண்க.

க0௩ - ச. பிறப்புப் பிணி மூப்பிறப்புக்கள் உடலுக்கு இயற்கையென்றபடி.

க0௫ - அ. பேதைமைமுதலிய பன்னிரண்டும் துவாதச நிதான

(பி - ம்.) கூ௫. 'காட்டத்' கூஎ. 'புக்கினுமிணையடிவருந்தக்' கூகூ. 'நாத்தொலைவில்லாயாயினுங்கிளர்ந்து' க00. 'மூத்தயாக்கை', 'மூத்தவிவ்யாக்கை.' க0ச. 'இதுகெடப்'

பற்றே பவமே தோற்றம் வினைப்பய
னிற்றென வகுத்த வியல்பீ ராறும்
பிறந்தோ ரறியிற் பெரும்பே றறிகுவ
ககo ரறியா ராயி னாழ்நர கறிகுவர்
பேதைமை யென்ப தியாதெனா வினவி
னோதிய விவற்றை யுணராது மயங்கி
யியற்படு பொருளாற் கண்டது மறந்து
முயற்கோ டுண்டெனக் கேட்டது தெளிதல்
ககரு லுலக மூன்றினு முயிரா முலக
மலகில பல்லுயி ரறுவகைத் தாகு
மக்களுந் தேவரும் பிரமரு நரகருந்
தொக்க விலங்கும் பேயு மென்றே
நல்வினை தீவினை யென்றிரு வகையாற்
கஉo சொல்லப் பட்ட கருவினுட் டோன்றி
வினைப்பயன் விளையுங் காலை யுயிர்கட்கு
மனப்பே ரின்பமுங் கவலையுங் காட்டுந்
தீவினை யென்ப தியாதெனா வினவி
னாய்தொடி நல்லா யாங்கது கேளாய்
கஉரு கொலையே களவே காமத் தீவிழை
வுலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்

---

மெனப்படும்; இவற்றினியல்பை, இந்நூல், ஙo - ஆம் காதையால் உணர்க. ககக. பேதைமை - அவிச்சை.

ககஉ. இவற்றை - துவாதச நிதானங்களை. ககச. கோடு - கொம்பு.

ககக - ச. பேதைமையென்பது மயங்கிக் கண்டது மறந்து கேட்டது தெளிதலென்க.

ககரு. 'உலகமூன்றினும்' என்பதுமுதற் செய்கை கூறப்படும்.

ககரு - சு. உயிராமுலகம் அலகில - உயிராகிய உலகம் அளவில்லாதன. செய்கை கூறுதற்கு அங்கமாக ஈண்டு அறுவகையுயிர்களும் கூறப்பட்டன. ககசு - அ. பேயுமென்றே அறுவகைத்தாகுமென்க.

கஉo. சொல்லப்பட்ட கரு - மேற்கூறிய மக்கட்கருமுதலிய ஆறும்; "தெய்வக் கருவுந் திசைமுகக் கருவும்" (பதி. உஅ) என்று முன்பு வந்திருத்தல் காண்க.

ககசு - உஉ. செய்கை, இருவகையால் தோற்றிக் காட்டுமென்க.

கஉரு. காமத்தீவிழைவு - காமமாகிய கொடிய விழைவு.

கஉரு - சு. கொலையும் களவும் காமமுமென உடம்பிற்றோன்றுவன மூன்றும்.

(பி - ம்.) கoஅ. 'இவ்வீராறும்' ககo. 'நரகடைகுவர்' கஉo 'பட்டபிறப்பினுட்டோன்றி' கஉரு. 'தீவழக்கு'

பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
கரு0 றுள்ளந் தன்னி னுருப்பன மூன்றுமெனப்
பத்து வகையாற் பயன்றெரி புலவ
ரித்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயு நரகரு மாகிக்
கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்
கருரு நல்வினை யென்ப தியாதென வினவிற்
சொல்லிய பத்தின் றொகுதியி னீங்கிச்
சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
தேவரு மக்களும் பிரமரு மாகி
கச0 மேவிய மகிழ்ச்சி வினைப்பய னுண்குவ
ரரைசன் றேவியொ டாயிழை நல்லீர்

---

கஉஎ. குறளை - கோள்.
கஉஎ - அ. பயனில் சொல் - அறம் பொருளின்பங்களுள் ஒன்றும் பயவாத சொல்.
கஉக. வெஃகல் - விரும்பல்; வெகுளல் - கோபித்தல்; வெஃகல் முதலிய மூன்றும் முறையே காமம் வெகுளி மயக்கமெனப்படும்.
கரு0. உருப்பன - தோன்றுவன.
கஉரு - ருக. தீவினையென்பது, மூன்றும் நான்கும் மூன்றுமெனப் பத்து வகைப்படும்.
கருஉ. இத்திறம்-கொலைமுதலிய தீயவழிகளில். படரார்-செல்லார்.
கருஉ - ச. நீல. மோககலை. செய். கசு0, சமய. மேற். இக் கருத்து, "விலங்கு நரகரும் பேய்களு மாக்குங், கலங்கஞர்த் தீவினை கடிமின்" (உரு : சக - உ) எனப் பின்னும் வருதல் காண்க.
கருசு. சொல்லியபத்து - கொலை, களவு, காமம், பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல், வெஃகல், வெகுளல், பொல்லாக் காட்சி யென்பன.
கருஎ. சீலம் - பஞ்சசீலமுதலியன. கருக. மணி. உச : ககஎ.
கருஎ - க. நீல. மோக்கலை. செய். கசு0, சமய. மேற்.
கஉரு - ருக. நீல. புத்த. செய். உஅ, சுகு, சமய. மேற்.
கச0. மகிழ்ச்சிவினை - நல்வினை.
க0கு - ச0. மணி. ரு0 : சகு - அக.
கசக. ஆயிழை நல்லீரென்றது, மாதவியையும் சுதமதியையும் ஆயத்தையும்.

(பி - ம்.) கஉஎ. 'பயமில' கஉக. 'வெகுடல' கரு0-ருக. 'மூன்றும், பத்துவகையெனப்' கருசு. 'நீக்கி' கசக. 'அரசன்'

புரைதீர் நல்லறம் போற்றிக் கேண்மின்
மறுபிறப் புணர்ந்த மணிமே கலைநீ
பிறவறங் கேட்ட பின்னாள் வந்துனக்
கசரு கித்திறம் பலவு மிவற்றின் பகுதியு
முத்தேர் நகையாய் முன்னுறக் கூறுவ
லென்றவ னெழுதலு மிளங்கொடி யெழுந்து
நன்றறி மாதவ னல்லடி வணங்கித்
தேவியு மாயமுஞ் சித்திரா பதியு
கருO மாதவர் நன்மொழி மறவா தும்மி
னிந்நகர் மருங்கினியா னுறைவே னாயின்
மன்னவன் மகற்கிவள் வருங்கூற் றென்குவ
ராபுத் திரனா டடைந்ததற் பின்னாண்
மாசின் மணிபல் லவந்தொழு தேத்தி
கருரு வஞ்சியுட் புக்கு மாபத் தினிதனக்
கெஞ்சா நல்லறம் யாங்கணுஞ் செய்குவ
லெனக்கிட ருண்டென் றிரங்கல் வேண்டா
மனக்கினி யீரென் றவரையும் வணங்கி
வெந்துறு பொன்போல் வீழ்கதிர் மறைந்த
கசுO அந்தி மாலை யாயிழை போகி
யுலக வறவியு முதியாள் குடிகையு
மிலகொளிக் கந்தமு மேத்தி வலங்கொண்

---

கசஉ. புரை - குற்றம். நல்லறம் - அருளறம்.
கசச. பிறவறம் - மற்றைச் சமயதருமம்.
கசரு - சு. இத்திறம் பலவற்றையும் இவற்றின் பகுதிகளையுங் கூறு[வேன்.
கசஎ. இளங்கொடி - மணிமேகலை. கசகூ. மணி. உச : அகூ.
கசஅ. நன்றறிமாதவன் : "நன்றறி செட்டி" மணி. கசு : கOஎ.
கருரு. கண்ணகியைத் தரிசித்தற்பொருட்டு வஞ்சிநகரத்திற் [புகுந்து.
கருஅ. அவரையும் : உம், இறந்தது தழீஇயது.
கசுO. அந்திமாலையில்.
கசுக. முதியாள் குடிகை - சம்பாபதி கோயில்.
கருகூ - சுO. "வெந்துறு பொன்னி னந்தி பூப்ப" அகநா. எக.
கசுஉ. கந்தம் - தூண்; என்றது கந்திற்பாவையை; ஆகுபெயர்; 'கலிகெழு கடவுள் கந்தங் கைவிட" புறநா.ருஉ.

(பி - ம்.) கசஉ. 'நல்வினை போற்றிக்' கசச - ரு. 'பின்னாளன் னைக்கு' கசசு. 'முத்தொகையாக முன்னர்க்கூறுவன்' கருO. 'மறவா தும்மின்' கருஉ. 'இவள் கூற்றெனவறைகுவர்' கருந. 'அடைந்தபின் னாள்' கருகூ. 'வெந்தாறு பொன்' கசுக. 'முதியாள் கோட்டமும்'

டந்தர மாரூப் பறந்துசென் றுயிழை
யிந்திரன் மருமா னிரும்பதிப் புறத்தோர்
கசுரு பூம்பொழி லகவயி னிழிந்து பொறையுயிர்த்
தாங்குவாழ் மாதவ னடியிணை வணங்கி
யிந்நகர்ப் பேர்யா திந்நக ராளு
மன்னவன் யாரென மாதவன் கூறு
நாக புரமிது நன்னக ராள்வோன்
கஎ0 பூமிசந் திரன்மகன் புண்ணிய ராச
னீங்கிவன் பிறந்த வந்நாட் டொட்டு
மோங்குயர் வானத்துப் பெயல்பிழைப் பறியாது
மண்ணு மரனும் வளம்பல தரூஉ
முண்ணின் றுருக்கு நோயுயிர்க் கில்லெனத்
கஎரு தகைமலர்த் தாரோன் றன்றிறங் கூறின
னகைமலர்ப் பூம்பொழி லருந்தவன் றனென்.

உச.—ஆபுத்திரனுடைந்தகாதை முற்றிற்று.

---

கசுங. அந்தரம் ஆரூ - ஆகாயமேவழியாக ; மணி. சு': உகக.

கசுச. இந்திரன் மருமான் - புண்ணியராசன் ; மருமான் - வழித்தோன்றல். பதி - நாகபுரம்.

கசுரு. அகவயின் - உள்ளிடத்தே.

கசுசு. மாதவன் - தரும சாவகன். [வான்.

கசுஅ. யாரென-யாரென்று மணிமேகலைகேட்ப. கூறும்-சொல்லு

கஎக. தொட்டும் - தொடங்கி ; மணி. கங: ருங.

கஎஉ. பெயல் - மழை. பிழைப்பு அறியாது - தவறுதலையறியாது.

கஎங. தரூஉம் - கொடுக்கும். கஎச. உயிர்களுக்கு நோயில்லை.

கஎரு. தகை - கட்டிய. தாரோன் றன் - புண்ணியராசனது.

கஎசு. அகைமலர் - மலர்ந்தமலர்; "அகைமத்தம்" (தக்க. கூஅ.) அருந்தவன் - தருமசாவகன்.

க - கஎசு. தொன்முதுகணிகை கேட்டு வருந்தி வீழ்ந்து, ஏத்தி, 'தருக' என, இராசமாதேவி ஈங்கிவை சொல்வுழி, மாதவி அறவணவடிகளுடன் வர, கண்டலும், எதிர்சென்று துணையடி வணங்க, அவன், 'அறிவுண்டாக' என்று கூறலும், இராசமாதேவி காட்டி விளக்கிச் செய்தபின், 'வாழ்க' என, 'தேவி கேளாய் ; நல்லீர் கேண்மின் ; மணிமேகலை, முன்னுறக் கூறுவல்' என்று அவனெழுதலும், இளங்கொடி எழுந்து வணங்கி என்று வணங்கிப் போகி ஏத்தி வலங்கொண்டுசென்று இழிந்து பொறையுயிர்த்து வணங்கி, 'யாது? யார்?' என மாதவன் கூறும் ; அங்ஙனங் கூறுமருந்தவன் கூறினனென வினைமுடிவுசெய்க.

இருபத்தைந்தாவது

# ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்த காதை.

[இருபத்தைந்தாவது மணிமேகலை ஆபுத்திரனை மணிபல்லவத்திடையழைத்துப் புத்தபீடிகைகாட்டிப் பிறப்புணர்த்தி வஞ்சிமாநகர்புக்கபாட்டு.]

அரச னுரிமையோ டப்பொழில் புகுந்து
தரும சாவகன் றன்னடி வணங்கி
யறனு மறனு மநித்தமு நித்தத்
திறனுந் துக்கமுஞ் செல்லுயிர்ப் புக்கிலுஞ்
௫ சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியு
மாரிய னமைதியு மமைவுறக் கேட்டுப்
பெண்ணிணை யில்லாப் பெருவனப் புற்றாள்
கண்ணிணை யியக்கமுங் காமனோ டியங்கா
வங்கையிற் பாத்திரங் கொண்டறங் கேட்கு

---

௧. அரசன் - புண்ணியராசன். உரிமை - மனைவி; "உரிமைமுன் போக்கி யல்லா லொளியுடை மன்னர் போகார்" சீவக. ௨௭௨.

௨. தருமசாவகனென்பது, அப்பொழிலில் நோற்றுவதியும் ஒரு முனிவன் பெயர். இப்பெயர்க்குத் தருமங்கேட்பவனென்பது பொருள்.

௩. மறன் - பாவம். அநித்தம் - அநித்தியப்பொருளின் வகை.

௩ - ௪. நித்தத்திறன் - நித்தியப் பொருளின் வகை. துக்கம் - பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு, விரும்பியன பெறாமை, வேண்டாதன பெறுதல் என்னும்ஆறும். புக்கில் - புகுமிடம்.

௫. சார்பிற்றோற்றம் - பேதைமை முதலிய பன்னிரண்டு நிதானத்தினது தோற்றம். உய்தி - பிழைத்தல்; "செய்தி கொன்றோர்க் குய்தியில்" (புறநா. ௩௪); "உய்திக் கால முரையீ ரோவென" சிலப். ௧௦ : ௨௪௦.

௬. ஆரியன் - ஆசிரியன்; என்றது புத்தனை.

௭. பெருவனப்பு - பேரழகு.

௮. இயக்கம் - இயங்குதல். இவ்வடியோடு, "உருவி லாளனொ டுருவம் பெயர்ப்ப" (௫ : ௬) என்று முன்வந்தது ஒப்புநோக்கற்பாலது.

(பி - ம்.) ௬. 'அறிவுறக்கேட்டு' ௯. 'அங்கைப் பாத்திரங்'

க0 மிங்கிணை யில்லா ளிவள்யா ரென்னக்
காவலற் றொழுது கஞ்சுக னுரைப்போ
னுவலந் தீவினிந் நங்கையை யொப்பார்
யாவரு மில்லை யிவடிற மெல்லாங்
கிள்ளி வளவனொடு கெழுதகை வேண்டிக்
கரு கள்ளவிழ் தாரோய் கலத்தொடும் போகிக்
காவிரிப் படப்பை நன்னகர் புக்கேன்
மாதவ னறவண னிவள்பிறப் புணர்ந்தாங்
கோதின னென்றியா னன்றே யுரைத்தே
னாங்கவ ளிவளவ் வகனகர் நீங்கி
உ0 யீங்கு வந்தன ளென்றலு மிளங்கொடி
நின்கைப் பாத்திர மென்கைப் புகுந்தது
மன்பெருஞ் செல்வத்து மயங்கினை யறியா
யப்பிறப் பறிந்திலை யாயினு மாவயிற்

---

க0. யாரென்ன - யாரென்று அரசன் கேட்ப. [வென்க.

க - க0. அரசன் புகுந்து வணங்கிக் கேட்டு, 'இவள் யார்' என்ன

கக. கஞ்சுகன் - சட்டையிட்ட பிரதானி.

கஞ்சுகன் மணிமேகலையின் வரலாற்றை அரசனுக்குக் கூறுதல் இனிக் கூறப்படும்.

கங. இவள் திறமெல்லாம் - இவளுடைய வரலாறு முழுதும்.

கச. கிள்ளிவளவனென்றது, உதயகுமரன் தந்தையை. கெழுதகை - உரிமை; என்றது நட்பை.

கசு. காவிரிப்படப்பை நன்னகர் - காவிரியைத் தோட்டக் கூற்றிற்கு எல்லையாகவுடைய காவிரிப்பூம்பட்டினம்; படப்பை - பக்கமுமாம்; "காவிரிப் படப்பைப் பட்டினம்" சிலப். கரு : கருக.

கஅ. அன்றே - யான் போய்வந்த அக்காலத்தே.

கங - அ. இவள்திறமெல்லாம் அன்றே யுரைத்தேன்.

உ0. இளங்கொடி - மணிமேகலை.

கக - உ0. உரைப்போனாகிய கஞ்சுகன், 'ஈங்குவந்தனள்' என்றலும்.

உக. 'நின்கைப் பாத்திரம்' என்பது முதலியன, புண்ணியராசனை நோக்கி மணிமேகலை கூறுங்கூற்று. பாத்திரம் - அமுதசுரபி.

உஉ. செல்வத்து - செல்வத்தால்.

உங. அப்பிறப்பு - போனபிறப்பு; என்றது, சாலிவயிற்றிற் பிறந்த பிறப்பை.

(பி - ம்.) கஅ. 'ஓதினனெறியானன்றே' ககூ. 'ஆங்கவடானவ்வக நகர்'

றிப்பிறப் பறிந்திலை யென்செய் தனையோ
உரு மணிப்பல் லவம்வலங் கொண்டா லல்லது
பிணிப்புறு பிறவியின் பெற்றியை யறியா
யாங்கு வருவா யரசநீ யென்றப்
பூங்கமழ் தாரோன் முன்னர்ப் புகன்று
மையறு விசும்பின் மடக்கொடி யெழுந்து
௩௰ வெய்யவன் குடபால் வீழா முன்னர்
வானின் றிழிந்து மறிதிரை யுலாவும்
பூநா றடைகரை யெங்கணும் போகி
மணிப்பல் லவம்வலங் கொண்டு மடக்கொடி
பிணிப்பறு மாதவன் பீடிகை காண்டலுந்
௩ரு தொழுதுவலங் கொள்ளவத் தூமணிப் பீடிகைப்
பழுதில் காட்சி தன்பிறப் புணர்த்தக்
காயங் கரையெனும் பேரியாற் றடைகரை
மாயமின் மாதவன் றன்னடி பணிந்து
தருமங் கேட்டுத் தாதொழு தேத்திப்
௪௰ பெருமகன் றன்னொடும் பெயர்வோர்க் கெல்லாம்
விலங்கு நரகரும் பேய்களு மாக்குங்

---

உசு. பிணிப்பு - பற்று. பெற்றி - தன்மை.

உஎ. ஆங்கு - மணிபல்லவத்திற்கு. நீ ஆங்கு வருவாயென்று.

உஅ. தாரோன் - புண்ணியராசன்.

உ௦ - உஅ. இளங்கொடி புகன்று.

உக. மடக்கொடி - மணிமேகலை.

௩௧. இழிந்து - இறங்கி. ௩௪. மாதவன் - புத்தன்.

உக - ௩௪. மடக்கொடி எழுந்து இழிந்து போகி வலங்கொண்டு காண்டலுமென்க.

௩சு. பழுது - குற்றம். ௩ரு - சு. பீடிகைக்காட்சி உணர்த்த.

௩எ. அடைகரை - அடைகரையிலுள்ள.

௩அ. மாதவன் - பிரமதருமன்.

௩௯. 'தருமங்கேட்டு' என்பது முதலியன, பிரமதருமனை முன்னிலையாக்கி மணிமேகலை கூறுங்கூற்று.

௪௰. பெருமகன் - அரசன்; என்றது அத்திபதியை. பெயர்வோர்க்கெல்லாம் - அவந்தி நகரத்திற்குச் செல்வோரெல்லோருக்கும்.

(பி - ம்.) உசு. 'பெற்றிமையுணராய்' உஅ. 'முன்னர்ப்பொருந்தி' ௩ரு. 'கொள்ளத்தூமணிப்' ௩சு - எ. 'பிறப்புணர்ந்த, சாயங்கரை'

கலங்கஞர்த் தீவினை கடிமின் கடிந்தாற்
றேவரு மக்களும் பிரமரு மாகுதி
ராகலி னல்வினை யயரா தோம்புமின்
சரு புலவன் முழுதும் பொய்யின் றுணர்ந்தோ
னுலகுயக் கோடற் கொருவன் றோன்று
மந்நா ளவனறங் கேட்டோ ரல்ல
தின்னாப் பிறவி யிழுக்குந ரில்லை
மாற்றருங் கூற்றம் வருவதன் முன்னம்
ருo போற்றுமி னறமெனச் சாற்றிக் காட்டி
நாக்கடிப் பாக வாய்ப்பறை யறைந்தீ
ரவ்வுரை கேட்டுநும் மடிதொழு தேத்த
வெவ்வுரை யெங்கட்கு விளம்பினி ராதலிற்

---

சஉ. கலங்கஞர்த்தீவினை - கலங்குதற்குக் காரணமாகிய துன்பத்தையுண்டாக்கும் கொலை முதலிய பத்துவகையினதாகிய பாவத்தை.

சச. நல்வினை - கொல்லாமை முதலிய பத்து வகையினதாகிய புண்ணியத்தை. அயராது ஓம்புமின் - மறவாது பாதுகாத்திடுமின்.

சரு. புலவன் - ஞானி; புத்தனென்பது இப்பொருட்டு. முழுதும் பொய்யின்றுணர்ந்தோன் - ஸர்வஜ்ஞன்.

சசு. உலகுயக் கோடற்கு - உலகைப் பிழைப்பித்தற் பொருட்டு. ஏகதேவனென்பது புத்தன் பெயர்களுள் ஒன்றாதலின் இங்கே, 'ஒருவன்' என்றார்.

சரு - சசு. புலவனும் உணர்ந்தோனுமாகிய ஒருவன் உலகை உயக் கோடற்குத் தோன்றுமென்க.

சஎ. அவனறம் - அவனாற் கூறப்படும் அறம்.

சஅ. இன்னா - துன்பம். இழுக்குநரில்லை - தப்புவோரில்லை.

சஎ - அ. மணி. கஉ : கூகூ - கOO.

சகூ. மாற்றருங் கூற்றம் - பிறரால் தடுத்தற்கரிய இயமன்; "மாற்றருங் கூற்றம்" (தொல். புறத்திணை. சூ. உச); "மருந்தில் கூற்றம்" புறநா. கூ.

ருo. அறம் போற்றுமினென்று சொல்லிப் பொருளை விளங்கச் செய்து; சாற்றி - நிறைத்தென்றுமாம்; "நிவந்துசெ னீத்தங் குளங் கொளச் சாற்றி" மதுரை. உசசு.

ருக. நாவே கடிப்பாக வாயாகிய பறையை அறைந்தீர்; கடிப்பு - பறையடிக்குங் குறுந்தடி; "நாக்கடிப் பாக வாய்ப்பறை யறையினும்" சிலப். கச : உக.

சo - ருக. பெயர்வோர்க்கெல்லாம் சாற்றிக் காட்டி அறைந்தீரென இயைக்க.

ருஉ. வெவ்வுரை - பதினாறுநாளில் இராகுலன் திட்டிவிடமென்னும் பாம்பால் இறப்பானென்றும், நீ அவனோடு தீயில் மூழ்குவையென்

(பி - ம்.) சசு. 'உலகுயக் கேட்டற்கு'

பெரியவன் றோன்றா முன்னரிப் பீடிகை
௫௫ கரியவ னிட்ட காரணந் தானு
மன்பெரும் பீடிகை மாய்ந்துயிர் நீங்கிய
வென்பிறப் புணர்த்தலு மென்னென் றியான்றொழ
முற்ற வுணர்ந்த முதல்வனை யல்லது
மற்றப் பீடிகை தன்மிசைப் பொறாஅது
௬௦ பீடிகை பொறுத்த பின்ன ரல்லது
வானவன் வணங்கான் மற்றவ் வானவன்
பெருமகற் கமைத்துப் பிறந்தார் பிறவியைத்
தரும பீடிகை சாற்றுக வென்றே
யருளின னாதலி னாயிழை பிறவியு
௬௫ மிருளறக் காட்டு மென்றெடுத் துரைத்த
தன்றே போன்ற தருந்தவர் வாய்மொழி
யின்றெனக் கென்றே யேத்தி வலங்கொண்
டிங்கிவ ளின்னண மாக விறைவனு

---

றும் சொன்ன சொற்கள்; இதனை, இந்நூல் ௧௦-ஆம் காதை, ௪௮ - ஆம் அடி முதலியவற்றாலுணர்க.

௫௪. பெரியவன் - புத்தன். பீடிகை - பீடிகையை.

௫௫. கரியவன் - இந்திரன்; "தேவர்கோ னிட்ட மாமணிப் பீடிகை" (௮ : ௫௨) என்று முன்பு வந்திருத்தல் காண்க.

௫௫ - ௭. காரணந்தானும் உணர்த்தற்குக் காரணமும் என்னவென்று யான்றொழ.

௫௮. முற்றவுணர்ந்தமுதல்வன் - எல்லாமறிந்தமுதல்வன்; ஸர்வஜ்ஞன்; மணி. ௫ : ௧0௧. ௫௯. பொறாஅது - சுமவாது; முற்று.

௬௧. வானவன் - இந்திரன்.

௬௨. பெருமகற்கமைத்து - புத்தனை அறிந்துகோடற் பொருட்டு இயற்றி. பிறந்தார்பிறவியை - பிறந்தோருடைய பழம்பிறப்பின் செய்தி

௬௩. சாற்றுக - உணர்த்துக. [யை.

௬௪. அருளினன் - ஆணைதந்தான். ஆயிழை பிறவியும் - உன் பிறவியையும்.

௬௧ - ௪. அவ்வானவன் அமைத்துச் சாற்றுகவென்று அருளின

௬௫. இருளற - மயக்கமற. [னென்க.

௬௬. அருந்தவர்: முன்னிலைக்கண்வந்தது.

௬௫ - ௬. அன்று உரைத்ததாகிய வாய்மொழி.

௬௬ - ௭. எனக்கு வாய்மொழி இன்றைக்குரைத்தது போன்றதென்று.

௬௮. இவள் - மணிமேகலை. இன்னணமாக - இப்படி இங்கேயிருக்க. இறைவன் - புண்ணியராசன்.

(பி - ம்.) ௫௯. 'பீடிகைதன்மமிசைப் பெறுஅப்' ௬௫ - ௬. 'மருளறக் காட்டுதுமென் றெடுத்துரைத்த, வன்றே'

மாங்கப் பொழில்விட் டகநகர் புக்குத்
எ0 தந்தை முனியாத் தாய்பசு வாக
வந்த பிறவியு மாமுனி யருளாற்
குடர்த்தொடர் மாலை சூழா தாங்கோ
ரடர்ப்பொன் முட்டையு ளடங்கிய வண்ணமு
மாமுனி யருளான் மக்களை யில்லோன்
எரு பூமிசந் திரன்கொடு போந்த வண்ணமு
மாய்தொடி யரிவை யமரசுந் தரியெனுந்
தாய்வாய்க் கேட்டுத் தாழ்துய ரெய்தி
யிறந்த பிறவியின் யாய்செய் ததூஉம்
பிறந்த பிறவியின் பெற்றியு நினைந்து
அ0 செருவேன் மன்னர் செவ்விபார்த் துணங்க
வரைசுவீற் றிருந்து புரையோர்ப் பேணி
நாடகங் கண்டு பாடற் பான்மையிற்
கேள்வி யின்னிசை கேட்டுத் தேவிய
ரூடற் செவ்வி பார்த்துநீ டாது

---

எ0. முனி - மண்முகமுனிவன்; மணி. கரு: சு.
எங. அடர் - தகடு. எஉ - ங. மணி. கரு: கங - சு.
எக - ங. அருளால் அடங்கியவண்ணமும்.
எரு. பூமிசந்திரன் - நாகபுரத்தரசன்.
எச - ரு. இல்லோனாகிய பூமிசந்திரன்.
எசு. அமரசுந்தரி - பூமிசந்திரன்மனைவி.
சுஅ - எஎ. இறைவனும் விட்டுப் புக்குப் பிறவியும் அடங்கியவண்ணமும் போந்தவண்ணமும் கேட்டுத் துயரெய்தியென்க.
எஅ. இறந்தபிறவி - போனபிறப்பு. யாய் - தாய்; என்றது, சாலியை. இறந்தபிறப்பின் செய்தியை மணிமேகலையாலுணர்ந்தான் போலும்.
எகூ. பெற்றி - பேறு; என்றது, பசுவயிற்றிற்பிறந்தது முதலிய வற்றை.
அ0. செவ்வி - தம் குறைகூறுதற்கேற்ற மனமொழிமெய்கள் இனியனாங்காலம். உணங்க - வாட.
அக. வீற்றிருந்து - வருத்தமின்றியிருந்து; செம்மாந்திருந்தென்றுமாம்; முருகு. எ0, நீ. புரையோர்ப்பேணி - பெரியோரைவழிபட்டு; அமைச்சர்களையும் புரோகிதர்களையும் விரும்பித் துணைக்கொண்டென்று மாம்.
அஉ - ங. பட்டினப். ககங.
அச. ஊடல் - பிணங்கல்; 'வழக்காட்டு' என்பர் வெண்பாமாலை உரையாசிரியர். நீடாது - தாமதியாமல்.
(பி - ம்.) எஉ. 'மாலை சூடியாங் கோர்' எசு. 'அரிவையாசுந்தரி யெனுந்'

அரு பாடகத் தாமரைச் சீறடி பணிந்து
தேமரு கொங்கையிற் குங்கும மெழுதி
யங்கையிற் றுறுமலர் சுரிகுழற் சூட்டி
நறுமுகை யமிழ்துறூஉந் திருநகை யருந்தி
மதிமுகக் கருங்கட் செங்கடை கலக்கக்
கூ0 கருப்பு வில்லி யருப்புக்கணை தூவத்
தருக்கிய காமக் கள்ளாட் டிகழ்ந்து
தூவறத் துறத்த னன்றெனச் சாற்றித்
தெளிந்த நாதனென் செவிமுத லிட்டவித்
தேத மின்றா யின்று விளைந்தது
கூரு மணிமேகலைதான் காரண மாகவென்
றணிமணி நீண்முடி யரசன் கூற
மனம்வே றாயினன் மன்னென மந்திரி

---

அரு. பாடகம் - ஒருவகைக்காலணி.

அசு. குங்குமம் - குங்குமச் சாந்து.

அஎ. அங்கையின் - அகங்கையினாலே. துறுமலர் - நெருங்கிய மலர். அங்கையிற் சூட்டி.

அஅ. முகை - அரும்பு. நறுமுகைபோலுந் திருநகை.

கூ0. கருப்புவில்லி - மன்மதன். அருப்புக்கணை - மொட்டாருமலராகிய அம்பு. வில்லி கணையைத்தூவ.

கூக. காமக்கள்ளாட்டு - காமமாகிய கள்ளையுண்டு விளையாடும் விளையாட்டு; (மணி. உஉ : உ0); "காமக் கள்ளாட் டடங்கினர் மயங்க" சிலப். உஉ : கஉஎ.

அஉ - கூக. 'நாடகங்கண்டு' என்பது முதலியன காமக்கள்ளாட்டிற்கு அடை.

கூஉ. தூவறத்துறத்தல் - பற்றுக்கோடறத்துறத்தல்; கலி. ககஅ.

கூரு. நாதன் - தருமசாவகன். முதல் - இடம். வித்து - அவன் கூறிய உபதேசமொழி. கூச. ஏதமின்றாய் - குற்றமில்லாமல்.

கூரு. நீண்முடி - தொன்று தொட்டுவந்தமுடி; குலத்தின்பெருமை கூறியவாறு; "நெடுமுடிக் குருசில்" (சீவக. உகூச.) அரசன் - புண்ணியராசன்.

கூரு - சு. வித்து, மணிமேகலை காரணமாக இன்று விளைந்ததென்று அரசன்கூற.

எஎ - கூரு. அரசன், துயரெய்தி நினைந்து இகழ்ந்து சாற்றிக் கூற.

கூஎ. மன் - அரசன்.

மேல்வருவன, சனமித்திரனென்னும் மந்திரிகூற்று.

(பி - ம்.) அரு. 'சீறடிபிடித்து' அஅ. 'அமிழ்தூறு திருநகை' கூ0. 'கருப்புவிலநங்கன்' கூஉ. 'துவரத்துறத்தல்'

சனமித் திரனவன் றூடொழு தேத்தி
யெங்கோ வாழி யென்சொற் கேண்மதி
௧00 நங்கோ னுன்னைப் பெறுவதன் முன்னாட்
பன்னீ ராண்டிப் பதிகெழு நன்னாடு
மன்னுயிர் மடிய மழைவளங் கரந்தீங்
கீன்றாள் குழவிக் கிரங்கா ளாகித்
தான்றனி தின்னுந் தகைமைய தாயது
௧0௫ காய்வெங் கோடையிற் கார்தோன் றியதென
நீதோன் றினையே நிரைத்தா ரண்ணா
றோன்றிய பின்னர்த் தோன்றிய வுயிர்கட்கு
வானம் பொய்யாது மண்வளம் பிழையா
தூனுடை யுயிர்க ளுறுபசி யறியா
௧௧0 நீயொழி காலை நின்னா டெல்லாந்
தாயொழி குழவி போலக் கூஉந்
துயர்நிலை யுலகங் காத்த லின்றிநீ
யுயர்நிலை யுலகம் வேட்டனை யாயி
னிறுதி யுயிர்க ளெய்தவு மிறைவ
௧௧௫ பெறுதி விரும்பினை யாகுவை யன்றே

---

௯௯. கேண்மதி - கேள்; மதி: முன்னிலையசை.
௧00. நங்கோன் - பூமிசந்திரன். [நாடு.
௧0௧. இப்பதிகெழுநன்னாடு - இந்நகரத்தினையுடைய நல்லசாவக
௧0௨. கரந்து - மறைந்து. ௧0௧ - உ. மணி. ௧௪: ௫௫ - ௬.
௧0௩. ஈன்றாள் - தாய். ௧0௩ - ௪. நாடு தகைமையதாயது.
௧0௩ - ௪. "தந்தையை மக்கள் முகம்பா ராமல், வெந்த சாகம் வெவ்வே றருந்தி" தமிழ்நா. ௧௮.
௧0௮. பிழையாது - தப்பாமல். ௧0௯. உயிர்கள் அறியா.
௧௧0. ஒழிகாலை - நீங்கியபொழுது.
௧௧௧. கூஉம் - கூப்பிடும்; முற்று.
௧௧0 - ௧௧. "தாயி லூவாக் குழவி போல, வோவாது கூஉம்" (புறநா. ௪); மணி. ௨௫: ௨௩௬ - ௭.
௧௧௩. உயர்நிலையுலகம் - முத்தியுலகம்; "உயர்நிலையுலகமுஞ் சிறிது" (குறுந். ௩௬௧: ௨.) வேட்டனை யாயின் - விரும்பினாயாயின்.
௧௧௪. இறுதி - மரணம். உயிர்கள் இறுதியெய்தவும்.
௧௧௫. பெறுதி - இலாபம்.
௧௧௩ - ௫. வேட்டனையாயின் விரும்பினையாகுவை.

(பி - ம்.) ௧00. 'நங்கோனின்னை' ௧0௨ - ௩. 'வளங்கரந்த, தீன்றாள்' ௧௧௨. 'காக்கலொன்றுநீ' ௧௧௪. 'இறுதியுலகமெய்தவு மிறைவன்'

தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பு
மன்னுயிர் முதல்வ னறமுமீ தன்றன்
மதிமா றோர்ந்தனை மன்னவ வென்றே
முதுமொழி கூற முதல்வன் கேட்டு
கஉ0 மணிபல் லவம்வலங் கொள்வதற் கெழுந்த
தணியா வேட்கை தணித்தற் கரிதா
லரசு முரிமையு மகநகர்ச் சுற்றமு
மொருமதி யெல்லை காத்தனின் கடனெனக்
கலஞ்செய் கம்மியர் வருகெனக் கூஉ
கஉரு யிலங்குநீர்ப் புணரி யெறிகரை யெய்தி
வங்க மேறினன் மணிபல் லவத்திடைத்
தங்கா தக்கலஞ் சென்றுசார்ந் திறுத்தலும்
புரைதீர் காட்சிப் பூங்கொடி பொருந்தி
யரைசன் கலமென் றகமகிழ் வெய்திக்
கங0 காவலன் றன்னொடுங் கடற்றிரை யுலாவுந்
தேமலர்ச் சோலைத் தீவகம் வலஞ்செய்து

---

கககூ. தன்னுயிர்க்கு - தன் உயிர் வருந்துதற்கு. ஓம்பும் - பாது காக்கும்.

ககஎ. மன்னுயிர் முதல்வன் - புத்தன். அறம் - காருணியம். ஈது - நீ துறந்து முத்தியடைதற்கெண்ணியது. ஈது முதல்வனது அறமுமன்று.

கககூ - எ. புத்தனை, 'பரதுக்கதுக்கி' (நீலகேசி) என்று கூறி யிருத்தல் காண்க.

ககஅ. மதி மாறோர்ந்தனையென்றான், பிறவுயிர்களின் வருத்தத்தை நீக்கக்கருதாது தன்பயனைக்கருதித் துறத்தற்கு எண்ணினமையால்.

ககக. முதுமொழி - அறிவுவாய்ந்த மொழி. முதல்வன் - புண்ணிய ராசன்.

கூஎ - ககக. சனமித்திரன், மன் மனம்வேறாயினனென்று தொழுது எத்தி முதுமொழிகூற. கஉங. மதி - மாதம்.

கஉச. கலஞ்செய்கம்மியர்-கப்பலில் தொழில்செய்வோர்; "கலம் புணர் கம்மியர்" மணி. எ : எ0. கஉரு. புணரி - கடல்.

கககூ - உசு. முதல்வன் அம்மொழியைக்கேட்டுக் காத்தல் நின் கடனெனக் கூறிக் கூஉய் எய்தி ஏறினனென்க.

கஉஎ. தங்காது - இடையே தங்காமல். இறுத்தலும் - தங்கலும்.

கஉஅ. புரை - குற்றம். காட்சி - அறிவு. பூங்கொடி-மணிமேகலை.

கங0 - ரு க. காவலன்றன்னொடும் வலஞ்செய்து.

(பி - ம்.) கஉச. 'கம்மியர் கடனெனக்கூஉய்'

பெருமகன் காணாய் பிறப்புணர் விக்குந்
தரும பீடிகை யிதுவெனக் காட்ட
வலங்கொண் டேத்தினன் மன்னவன் மன்னவற்
கஙரு குலந்த பிறவியை யுயர்மணிப் பீடிகை
கையகத் தெடுத்துக் காண்போர் முகத்தை
மையறு மண்டிலம் போலக் காட்ட
வென்பிறப் பறிந்தே னென்னிடர் தீர்ந்தேன்
றென்றமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்
கசo மாரி நடுநாள் வயிறுகாய் பசியா
லாரிரு ளஞ்சா தம்பல மணைந்தாங்
கிரந்தூண் வாழ்க்கை யென்பால் வந்தோர்க்
கருந்தூண் காணா தழுங்குவேன் கையி
னுடுவெறுங் கூரினுமிவ் வோடுவெறுங் கூரா
கசரு தேடா வமுதிய லெழுந்திது கொள்கென
வமுத சுரபி யங்கையிற் றந்தென்
பவமறு வித்த வானோர் பாவா
யுணர்விற் றோன்றி யுரைப்பொரு ளுணர்த்து



கஙஉ. பெருமகன் - அரசன்; அண்மைவிளி.
கஉஅ - ஙங. பூங்கொடி பொருந்தி மகிழ்வெய்தி வலஞ்செய்து காட்ட.
கஙரு. உலந்தபிறவி - போனபிறப்பில் நிகழ்ந்த செய்தியை.
கஙஎ. மையறுமண்டிலம் - குற்றமற்ற கண்ணாடி; "வயக்குறு மண்டிலம்" கலி. உரு.
கஙரு - எ. மண்டிலம்போலப் பீடிகை உலந்தபிறவியைக் காட்ட. மேல்வருவன, பழம்பிறப்புணர்ந்த புண்ணியராசன் கூற்று.
கஙக. தமிழ்மதுரை: சிறுபாண். சுகூ - எ. கலை - வித்தை.
கசo. மாரிநடுநாள் - மழையையுடைய நள்ளிரவில்.
கசஉ. இரந்துண்ணுமுணவையே வாழ்க்கைப் பொருளாகவுடைய என்பால்வந்தோர் பொருட்டு.
கசங. அழுங்குவேன் - வருந்துவேன்; பெயர்.
கசச - ரு. மணி. கச: கஉ - ங.
கசகூ. அங்கையின் - அழகிய கையினால்.
கசஎ. பவம் - கருமக் கூட்டம்.
கஙக - சஎ. இவ்வடிகளிற் கூறப்பட்டுள்ள சரித்திரத்தை, இந்நூலில் கச - ஆம் காதை, ங - ஆம் அடி முதலியவற்றால் உணர்க.
கசஅ. உரைப்பொருள் - சொற்பொருள்.

(பி - ம்.) கஙஅ - க. 'என்னிடர் தீர்த்த, தென்' கசங. 'காணா தழுவேன்' கசரு. 'ஏடாபரியல்'

மணிதிக ழுவிரொளி மடந்தை நின்னடி
கடுO தேவ ராயினும் பிரம ராயினு
நாமாசு கழூஉ நலங்கிளர் திருந்தடி
பிறந்த பிறவிகள் பேணுத லல்லது
மறந்து வாழேன் மடந்தையென் றேத்தி
மன்னவன் மணிமே கலையுட னெழுந்து
கடுடு தென்மேற் காகச் சென்று திரையுலாங்
கோமுகி யென்னும் பொய்கையின் கரையோர்
தூமலர்ப் புன்னைத் துறைநிழ லிருப்ப
வாயுத் திரளே டாயிழை யிருந்தது
காவற் றெய்வதங் கண்டுவந் தெய்தி
கசுO யருந்துயிர் மருந்துமுன் னங்கையிற் கொண்டு
பெருந்துயர் தீர்த்தவப் பெரியோய் வந்தனை
யந்நா ணின்னை யயர்த்துப் போயினர்
பின்னாள் வந்துநின் பெற்றிமை நோக்கி

---

கசக. மணி - பளிங்கு; "மணிமரு டெண்ணீர்" (மலைபடு. உடுO); முத்துமாம்.

கடுக. நா மாசு - நாக்குற்றம். கழூஉம் - போக்கும்.

கடுஉ. பிறவிகள் - பிறவிகள்தோறும். பேணுதல் - உட்கொண்டு வழிபடுதல். கடுங. மடந்தை: விளி.

கசக - டுங. நின்னடிகளைப் பிறவிகடோறும் பேணுதலல்லது மறவேன்.

கடுடு. உலாம் - உலாவும். கடுசு. கரை - கரையில்.

கடுங - எ. மன்னவன் ஏத்தி எழுந்து சென்று கரையில் நிழலில் இருப்பவென்க.

கடுக. தெய்வதம் - தீவதிலகை.

கசுO. 'அருந்துயிர் மருந்து' என்பது முதலியன, தீவதிலகை புண்ணியராசனை நோக்கிக்கூறும் கூற்று. உயிர்மருந்து - சோறு.

கசுக. பெருந்துயர் - பசித்துயர். வந்தனை - வந்தாய்.

கசுஉ. அந்நாள் - போனபிறப்பில் மதுரையிலிருந்து கப்பல்வழியே வந்து இத்தீவத்தை அடைந்த அந்நாளில். அயர்ந்து - மறந்து. போயினர்: பெயர்.

கசுங. பெற்றிமை - தன்மை; என்றது, "உண்ணு நோன்போ டுயிர்பதிப் பெயர்த்தமை" மணி. கச : கடு.

(பி - ம்.) கடுக. 'நாமுறைபுகழ்ந்த நலந்திகழ்திருந்தடி' கடுஅ. 'ஆயிழைதன்னைக்' கசுO. 'மருந்துன்னங்கையிற்' கசுக. 'வருந்துயிர் நீக்கிய மறவோன்'

நின்குறி யிருந்து தம்முயிர் நீத்தோ
க௬௫ ரொன்பது செட்டிக ளுடலென் பிவைகா
ணுங்கவ ரிடவுண் டவருடன் வந்தோ
ரேங்கிமெய் வைத்தோ ரென்பு மிவைகா
ணூர்திரை தொகுத்த வுயர்மணல் புதைப்ப
வாய்மலர்ப் புன்னை யணிநிழற் கீழா
க௭0 லன்புடை யாருயி ரரசற் கருளிய
வென்புடை யாக்கை யிருந்தது காணாய்
நின்னுயிர் கொன்றாய் நின்னுயிர்க் கிரங்கிப்
பின்னாள் வந்த பிறருயிர் கொன்றாய்
கொலைவ னல்லையோ கொற்றவ னாயினை
க௭௫ பலர்தொழு பாத்திரங் கையி னேந்திய
மடவர னல்லாய் நின்றன் மாநகர்
கடல்வயி றுபுக்கது காரணங் கேளாய்

---

க௬௪. நின்குறியிருந்து - நீ இறந்தவிடத்து உண்ணாநோன்புட னிருந்து ; குறி - இடம்.

க௬௬. ஆங்கவரிடவுண்டு - அவ்வொன்பது செட்டிகளும் உண வளிக்கவுண்டு.

க௬எ. மெய்வைத்தோர் - உயிர்நீங்கினோர் ; மணி. ௬ : க௩க.

க௬௮. ஊர்திரை தொகுத்த - பரந்த அலைகள் திரட்டிய.

க௬௯. ஆய்மலர் - அழகியமலர். கீழால் - கீழிடத்தே ; உருபு மயக்கம்.

க௭0. அன்பையுடைய அரியவுயிரை உனக்குக் கொடுத்த. ஆருயி ரென்றது, ஏண்டு விஞ்ஞானஸ்கந்தத்தை. க௭க. காணாய் - பாராய்.

க௬௮ - எக. புதைப்பக் கீழால் யாக்கையிருந்தது காணாயென்க.

க௭0 - எக. இவ்வடிகளோடு, " அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க், கென்போ டியைந்த தொடர்பு " (குறள், எ௩) என்பது ஒப்பு நோக்கற்பாலது.

க௭௪. கொலைவன் - கொல்லுதலைச்செய்பவன் ; " கொலைவன் யார்கொலோ கொலைவன் மற்றிவன் " புறநா. க௫உ.

க௭உ - ௪. 'நின்னுயிர் கொன்றாய்' என்பது முதலியன வஞ்சப் புகழ்ச்சி.

க௭௫. 'பலர்தொழுபாத்திரம்' என்பது முதலியன, தீவதிலகை மணிமேகலையை நோக்கிக் கூறுங்கூற்று.

க௭௬. நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

க௭௬ - எ. நகர் கடலிலழுந்திற்று.

(பி - ம்.) க௬௬. 'ஆங்கவர் மடவாரவருடன்வந்தோர்' க௬௮. 'ஊதையீட்டிய வுயிர்மணல்' க௭௬. 'மடவரலாய'

நாக நன்னா டாள்வோன் றன்மகள்
பீலிவளை யென்பாள் பெண்டிரின் மிக்கோள்
க அ0 பனிப்பகை வானவன் வழியிற் றோன்றிய
புனிற்றிளங் குழவியொடு பூங்கொடி பொருந்தியித்
தீவகம் வலஞ்செய்து தேவர்கோ னிட்ட
மாபெரும் பீடிகை வலங்கொண் டேத்துழிக்
கம்பளச் செட்டி கலம்வந் திறுப்ப
க அரு வங்கவன் பாற்சென் றவன்றிற மறிந்து
கொற்றவன் மகனிவன் கொள்கெனக் கொடுத்தலும்
பெற்ற வுவகையன் பெருமகிழ் வெய்திப்
பழுதில் காட்சிப் பைந்தொடி புதல்வனைத்
தொழுதனன் வாங்கித் துறைபிறக் கொழியக்
க கூ0 கலங்கொண்டு பெயர்ந்த வன்றே காரிரு
ளிலங்குநீ ரடைகரை யக்கலங் கெட்டது
கெடுகல மாக்கள் புதல்வனைக் கெடுத்தது
வடிவேற் கிள்ளி மன்னனுக் குரைப்ப

---

க எ அ. நாகநன்னாடாள்வோன் - வளைவணன்.

க அ 0. பனிப்பகைவானவன் - சூரியன். வழி - பரம்பரை.

க அ க. பூங்கொடி - பீலிவளை.

க அ 0 - அ க. பூங்கொடி பொருந்தியதனை இந்நூல், உச - ஆம் காதை, உகூ - ஆம் அடிமுதலியவற்றாலுணர்க.

க அ க - உ. இத்தீவகமென்றது மணிபல்லவத்தை.

க அ ங. பீடிகை - புத்தபீடிகை. ஏத்துழி - துதிக்கும்பொழுது.

க எ அ - அ ங. மகள் என்பாள் மிக்கோள் பூங்கொடி குழவியொடு பொருந்தி வலஞ்செய்து வலங்கொண்டு ஏத்துழியென்க.

க அ ச. இறுப்ப - தங்க. [தலை.

க அ ரு. அவன்றிறம் - அவன் காவிரிப்பூம்பட்டினத்திற்குச் செல்லு

க அ சு. கொடுத்தலும் - பீலிவளை கொடுத்தலும்.

க அ கூ. தொழுதனன்வாங்கி - தொழுதுவாங்கி ; மணி. க ங : உ0. பிறக்கு ஒழிய - பின்னொழிய.

க கூ 0. இருள் - இருளில். க கூ உ. கெடுத்தது - இழந்தசெய்தியை.

(பி - ம்.) க அ எ. 'உகவையன்' க அ கூ. 'தொழுதனன் வணங்கி' க கூ 0. 'கொண்டுபோயவனன்றே' க கூ உ. 'கெடுத்தமாக்கள் புதல்வனைக் கெடுத்து'

மன்னவன் மகனுக் குற்றது பொறாஅ
௧௯௫ னன்மணி யிழந்த நாகம் போன்று
கானலுங் கடலுங் கரையுந் தேர்வுழி
வானவன் விழாக்கோண் மாநக ரொழிந்தது
மணிமே கலாதெய்வ மற்றது பொறாஅ
ளணிநகர் தன்னை யலைகடல் கொள்கென
௨௦௦ விட்டனள் சாபம் பட்ட திதுவாற்
கடவுண் மாநகர் கடல்கொளப் பெயர்ந்த
வடிவேற் றடக்கை வானவன் போல
விரிதிரை வந்து வியனகர் விழுங்க
வொருதனி போயின னுலக மன்னவ
௨௦௫ னருந்தவன் றன்னுட னாயிழை தாயரும்
வருந்தா தேகி வஞ்சியுட் புக்கனர்
பரப்புநீர்ப் பௌவம் பலர்தொழக் காப்போ
ளுரைத்தன கேட்க வுறுகுவை யாயினின்
மன்னுயிர் முதல்வனை மணிமே கலாதெய்வ

---

௧௯௪. உற்றது பொறாஅள் - உண்டான துன்பத்தைப் பொறாளாகி.

௧௯௫. மணி. எ : ௧௩௧. ௧௯௬. தேர்வுழி - தேருமிடத்து.

௧௯௭. வானவன் விழாக்கோள் - இந்திரவிழாவெடுத்தலை.

௧௯௬ - எ. தேர்வுழி ஒழிந்தது.

௨௦௦. பட்டது - உண்டான செய்தி.

௨௦௪. ஒருதனி - துணையின்றி. மன்னவன் - நெடுமுடிக்கிள்ளி.

௨௦௫. அருந்தவன் - அறவணவடிகள். ஆயிழைதாயர் - உன் றாயர்; என்றது, மாதவியையும் சுதமதியையும்.

௨௦எ. பௌவம் - கடல். காப்போள் - மணிமேகலாதெய்வம். பலர்தொழப் பௌவத்தைக்காப்போளென்க.

௨௦அ. உரைத்தன - சொல்லப்பட்டன ; முற்று.

௨௦எ - அ. மேற்கூறிய செய்திகள், காப்போளால் எனக்கு உரைக்கப்பட்டனவென்க. இனி, 'உரைத்தன' என்பதைப் பெயராக்கி, 'கேட்கவுறுகுவையாயின்' என்பதனோடு கூட்டிப்பொருளுரைப்பினும் பொருந்தும்.

௨௦அ - ௯. நின்மன்னுயிர் முதல்வனென்றது, கோவலன் மரபில் முற்பட்டானொரு வணிகனை.

(பி - ம்.) ௧௯௪ - ௫. 'மன்னது தெய்வமற்றது பொறாஅளகனகர தனை' ௧௯௬. 'கானலும் பொழிலும்' ௨௦௦. 'விட்டது சாபம்' ௨௦௪-௫. 'போயினளருந்தவன் றன்னுடன்' ௨௦௬. 'புக்கனள்' ௨௦எ. 'பலர் கொளக காபபாள'

உக0 முன்னா ளெடுத்தது மந்நா ளாங்கவ
னறவர சாண்டது மறவணன் றன்பான்
மறுபிறப் பாட்டி வஞ்சியுட் கேட்பையென்
றந்தரத் தீவகத் தருந்தெய்வம் போயபின்
மன்னவ னிரங்கி மணிமே கலையுடன்
உகரு றுன்னிய தூமணா லகழத் தோன்றி
யூன்பிணி யவிழவு முடலென் பொடுங்கித்
தான்பிணி யவிழாத் தகைமைய தாகி
வெண்சுதை வேய்ந்தவ ணிருக்கையி னிருந்த
பண்புகொள் யாக்கையின் படிவ நோக்கி
உஉ0 மன்னவன் மயங்க மணிமே கலையெழுந்
தென்னுற் றனையோ விலங்கிதழ்த் தாரோய்
நின்னா டடைந்தியா னின்னையீங் கழைத்தது
மன்னா நின்றன் மறுபிறப் புணர்த்தி
யந்தரத் தீவினு மகன்பெருந் தீவினு
உஉரு நின்பெயர் நிறுத்த நீணில மாளு

---

உக0. முன்னாள் - மரக்கலமுடைந்த அக்காலத்தில்.

உகக. அறவரசாண்டது - புண்ணியதானஞ்செய்தது; மணி. உகூ : உஎ.

உகஙு. தெய்வம் - தீவதிலகை.

இனி, மணலைத்தோண்டித் தன்பழைய உடம்பைக்கண்டு புண்ணியராசன் வருந்துதலும் மணிமேகலை அவனைத்தேற்றுதலும் கூறப்படும்.

உகரு. தூ - தூய்மை. அகழ - தோண்ட.

உகசு. ஊன்பிணியவிழவும் - தசையின்பிணிப்பு நீங்கவும்.

உகஎ. தானென்றது யாக்கையை. பிணியவிழா - கட்டவிழாத.

உகஅ. வெள்ளிய சுண்ணச்சாந்தால் வேயப்பட்டு அவ்விடத்து இருத்தல் போல இருந்த.

உகக, படிவம் - வடிவம். உஉஉ. ஈங்கு - இத்தீவத்திற்கு.

உஉஙு. மறுபிறப்பு - பழம்பிறப்பு.

உஉச. அந்தரத்தீவினும் - இரண்டாயிரம் சிறுதீவுகளிலும். அகன் பெருந்தீவினும் - நான்கு பெருந்தீவுகளிலும்; மணி. சு : ககரு - சு.

உஉரு. பெயர் - புகழ்.

உஉஉ - ரு. நின்னையீங்கழைத்தது உணர்த்தி நிறுத்தற்பொருட்டேயென்க.

(பி - ம்.) உகக. 'ஆங்கவன்றன்னை' உகஉ. 'கேட்குவை' உகச. 'மன்னவன் வணங்கி' உகச - ரு. 'உடனுறனுன்னியது வாமணலகழத் தோன்றின' உகஎ. 'தகைமைத்தாகி' உகஅ. 'வேந்தவரிருக்கை' உகக. 'கொளாக்கை' உஉச. 'அந்தரதீவின'

மரசர் தாமே யருளறம் பூண்டாற்
பொருளு முண்டோ பிறபுரை தீர்த்தற்
கறமெனப் படுவ தியாதெனக் கேட்பின்
மறவா திதுகேண் மன்னுயிர்க் கெல்லா
உ௩0 முண்டியு முடையு முறையுளு மல்லது
கண்ட தில்லெனக் காவல னுரைக்கு
மென்னாட் டாயினும் பிறர்நாட் டாயினு
நன்னுத லுரைத்த நல்லறஞ் செய்கே
னென்பிறப் புணர்த்தி யென்னைநீ படைத்தனை
உ௩ரு நின்றிற நீங்க லாற்றேன் யானெனப்
புன்கண் கொள்ளனீ போந்ததற் கிரங்கிநின்
மன்பெரு நன்னாடு வாயெடுத் தழைக்கும்

உஉஎ. உலகத்திற் குற்றந்தீர்த்தற்குப் பொருளேயிராது ; எல்லா வுயிர்களும் குற்றமற்றனவாமென்றபடி. பிற : இடைச்சொல். புரை - குற்றம்.

உஉகூ - எ. இவ்வடிகளின்பொருள், 'மன்னவனெப்படி மன்னுயிரப்படி' என்னும் பழமொழியின் பொருளை விளக்கிற்று.

உ௩0. உண்டி முதலியவற்றையல்லாமல். உறையுள் - இருப்பிடம்; "பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர், தொகுத்தவற்று ளெல்லாந் தலை" (குறள், ௩உஉ); "உண்டி யுறையு ளுடுக்கை யிவையீந்தார்" ஏலாதி. கூ.

உ௩க. கண்டதில்லென - கண்டதில்லையென்று சொல்ல.

உஉஅ - ௩க. அறமெனப்படுவது, எல்லாவுயிர்கட்கும் உண்டி முதலியவற்றையீதலையன்றி வேறு கண்டதில்லையென்று மணிமேகலை சொல்ல; உண்டி முதலியவற்றை ஈதலே அறமென்றபடி.

உ௩உ. ஆயினும் : எண்ணிடைச்சொல்.

உ௩௩. நன்னுதல் உரைத்த - நீ சொல்லிய. செய்கேன் - செய்வேன்.

உ௩சு. என்பிறப்பு உணர்த்தி - என்பழம்பிறப்பை அறிவித்து. பழம்பிறப்புணர்ந்தது, நல்லறம் பூணுதற்குரிய விசேடவுணர்வினுதற்குக் காரணமாயிருந்ததுபற்றி, 'என்னைநீ படைத்தனை' என்றான். இது, "நானவன்றன் மகள்" (சிலப். உகூ : 'தென்னவன்') என்றாற் போன்றது.

உ௩ரு. நின்னிடத்தினின்றும் பிரியும் வன்மை யில்லேனென்று அரசன் சொல்ல.

உ௩௬. புன்கண் கொள்ளல் நீ - நீ துன்பங்கொள்ளாதே. போந்ததற்கு இரங்கி - நீ இங்குவந்ததற்கு வருந்தி.

உ௩எ. நாடு உன்னையழைக்கும்.

உ௩௬ - எ. மணி. உரு : கக0 - கக.

(பி - ம்.) உஉஎ. 'உண்டோபுரைதீர்தற்கென' உஉஅ. 'கேட்ப' உ௩0. 'உண்டியுமுறுதியு முறையுளும்வல்லது'

வங்கத் தேகுதி வஞ்சியுட் செல்வனென்
றந்தரத் தெழுந்தன ளணியிழை தானென்.

உரு.—ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்தகாதை முற்றிற்று.

---

உகூஅ. ஏகுதி - போவாய்.

உகூகூ. அந்தரத்து - ஆகாயத்தில். அணியிழை - மணிமேகலை.

க - உகூகூ. அரசன், புகுந்து வணங்கிக்கேட்டு, 'இவள் யார்' என்னக் கஞ்சுகன், 'ஈங்குவந்தனள்' என்றலும், 'இளங்கொடி, வருவாய்' என்று புகன்று எழுந்து இருந்து போகி வலங்கொண்டு பீடிகையைக் காண்டலும், அதனைத்தொழுது அவள் வலங்கொள்ள, அப்பீடிகை உணர்த்த, பணிந்து, 'போன்றது' என்று ஏத்தி வலங்கொண்டு இன்னண மாக, இறைவனும் விட்டுப் புக்குக் கேட்டு எய்தி நினைந்து கள்ளாட் டிகழ்ந்து சாற்றி, 'விளைந்தது' என்று கூற, மந்திரி சனமித்திரன், தொழுதேத்தி, 'மன்னவ, மதிமாறோர்ந்தனை' என்று முதுமொழி கூற, முதல்வன் கேட்டு, 'காத்தல் நின்கடன்' என்று கூறிக் கூஉய்க் கரையெய்தி ஏறினன்; அக்கலம், சென்று சார்ந்திறுத்தலும், பூங்கொடி, பொருந்தி மகிழ்வெய்தி வலஞ்செய்து, 'பீடிகை இது' எனக்காட்ட, மன்னவன் வலங்கொண்டு ஏத்தினன்; அவனுக்குப் பீடிகை பிறவியைக் காட்ட, மன்னவன், 'மறந்துவாழேன்' என்று ஏத்தி மணிமேகலையுடன் எழுந்து சென்று இருப்ப, தெய்வதம் கண்டு வந்தெய்தி, 'பெரியோய், வந்தனை; உடலென்பு இவைகாண்; என்புமிவைகாண்; காணாய்; கொன்றாய்; கொன்றாயாயினை. மடவரனல்லாய், நகர் கடல் வயிறு புக்கது; காரணங்கேளாய்; மணிமேகலா தெய்வம் சாபமிட்டனள்; இதுபட்டது; உலகமன்னவன் போயினன்; தாயரும் புக்கனர்; கேட்கஉறுகுவையாயின், வஞ்சியுட் கேட்பை' என்று தெய்வம் போயபின், மன்னவன் இரங்கிப் படிவம் நோக்கி மயங்க, மணிமேகலை எழுந்து, 'கண்டது இல்' என, காவலன் உரைக்கும்; அங்ஙனம் உரைப்பவன், 'நீங்கலாற்றேன் யான்' என, அணியிழை, 'ஏகுதி; செல்வன்' என்று எழுந்தனளென வினை முடிவு செய்க.

இருபத்தாறுவது

# வஞ்சிமாநகர்புக்ககாதை.

[இருபத்தாறுவது மணிமேகலை கண்ணகிகோட்டமடைந்து வஞ்சிமாநகர் புக்கபாட்டு.]

அணியிழை யந்தர மாறா வெழுந்து
தணியாக் காதற் றாய்கண் ணகியையுங்
கொடைகெழு தாதை கோவலன் றன்னையுங்
கடவு ளெழுதிய படிமங் காணிய
௫ வேட்கை துரப்பக் கோட்டம் புகுந்து
வணங்கி நின்று குணம்பல வேத்தி
யற்புக்கட னில்லாது நற்றவம் படராது
கற்புக்கடன் பூண்டு நுங்கடன் முடித்த

---

க. அணியிழை - மணிமேகலை.

உ. தணியா - குறையாத. தாய்கண்ணகி - தாயாகிய கண்ணகி.

௩. கொடைகெழுதாதை கோவலன் - ஈதல் பொருந்திய தாதையாகிய கோவலன்; கோவலன் கொடையிற் சிறந்தவனென்பது, கீரிப்பிள்ளையை அறியாது கொன்று கணவனால் நீப்புண்ட பார்ப்பனியின் கொலைப்பாவம் நீங்குதற்குத் தருமாசனத்தோருரைத்த நூல் வழியே தானஞ்செய்து அப்பார்ப்பனியைக் கணவனோடு கூட்டிப் பாதுகாத்தானென்றற்றொடக்கத்துச் சரித்திரங்களால் நன்கு புலப்படும்; இதனை, சிலப்பதிகாரத்திற் காண்க; கரு: ருச - எரு.

ச. (இமயமலைச்சிலையால்) தெய்வமாகப் பண்ணிய வடிவத்தைத் தரிசித்தற்பொருட்டு; "கைவினை முற்றிய தெய்வப் படிமத்து" (உஅ: உஉஅ) எனச் சிலப்பதிகாரத்து வந்திருத்தல் காண்க.

௫. வேட்கை துரப்ப - ஆசைசெலுத்துதலால். கோட்டம் - கோயில்; இது சேரன் செங்குட்டுவனாற் கட்டுவிக்கப்பட்டது.

எ. 'அற்புக்கடன்' என்பது முதலியன மணிமேகலை கூற்று. அற்புக்கடன் - காதலனிறப்ப உடனிறத்தலும் தீப்பாய்தலும். நற்றவம் படர்தல் - நல்ல தவவழியிற் சேறல்; அஃதாவது கைம்மை நோன்பை நோற்று உடம்பை வருத்துதல்.

அ. கற்புக்கடன் பூண்டு - கற்பைக்கடனாக மேற்கொண்டு; "கற்புக்கடம் பூண்ட வித்தெய்வ மல்லது, பொற்புடைத் தெய்வம் யாங்கண்

(பி - ம்.) ச. 'படிவங்காணிய' ரு. 'கோட்டம்புக்கு' எ - அ. 'நில்லா வற்றவஞ்சிறக்கக் கற்புக்கடம்பூண்டு'

தருளல் வேண்டுமென் றழுதுமுன் னிற்ப
௧௦ வொருபெரும் பத்தினிக் கடவுளாங் குரைப்போ
ளெம்மிறைக் குற்ற விடுக்கண் பொறாது
வெம்மையின் மதுரை வெவ்வழற் படுநாண்
மதுரா பதியெனு மாபெருந் தெய்வ
மிதுநீர் முன்செய் வினையின் பயனாற்
௧௫ காசில் பூம்பொழிற் கலிங்கநன் னாட்டுத்

---

டிலமால்" (சிலப். ௧௫ : ௧௪௩ - ௪) எனவும், "கற்புக்கடம் பூண்டு காதலன் பின்போந்த, பொற்றொடி நங்கைக்குத் தோழிநான் கண்டீர்" (ஷை ௨௧: 'தற்பயந்தாள்') எனவும் கண்ணகியை முறையே கவுந்தியடிகளும் அடித்தோழியும் சிறப்பித்துப் பாராட்டியிருத்தல் காண்க. கண்ணகி கற்பை மறக்கற்பென்றும் சீறியகற்பென்றுங் கூறுவர். நும்கடன் முடித்தது - உம்முடைய கடனை நிறைவேற்றியது; என்றது, இங்கே மதுரையை அழற்படுத்திச் சிதைத்துப் பதினான்காம்நாளிற் கோவலனைச் சென்று கூடியதை யுணர்த்திற்று.

எ - அ. இவ்வடிகளின் கருத்து இன்னதாதலை, "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி, யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா, தின்னுயிரீவ ரீயா ராயி, னன்னீர்ப் பொய்கையி னளியெரி புகுவர், நளியெரி புகாஅ ராயி னன்பரோ, டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர், பத்தினிப் பெண்டிர்..................மாபெரும் பத்தினி" (௨ : ௪௨ - ௫௫) என்று இந்நூலில் முன்பு வந்திருத்தலா லுணர்க.

௮ - ௯. அணியிழை எழுந்து புகுந்து வணங்கி நின்று ஏத்தி அருளல் வேண்டுமென்று அழுது நிற்பவென்க.

௧௦. பத்தினிக்கடவுள் - கண்ணகி.

௧௧. 'எம்மிறைக்கு' என்பது முதலியன, பத்தினிக்கடவுளாகிய கண்ணகி வார்த்தை. இறை - கோவலன். இடுக்கண் - துன்பம்; இங்கே கொலை.

௧௨. வெம்மையின் - கோபத்தால். மதுரை - மதுரையை. படுநாள் - படுத்தும்நாளில்; விகாரம்.

௧௩. மதுராபதியென்பது, மதுரையம்பதியின் அதிதேவதையின் பெயர்; "மதுரா பதியென்னு மாது" (சிலப். ௨௨ : 'மாமகளும்') "மாபெருங் கூடன் மதுரா பதியென்பேன்" ஷை ௨௩ : ௨௨.

௧௪. 'இதுநீர்' என்பது முதலியன, மதுராபதி தனக்குக் கூறியதைக் கொண்டுகூறும் பத்தினிக்கடவுள் வார்த்தை. வினை - தீவினை. பயன் - பிரயோசனம். இது பயன். ஆல் : அசை.

௧௫. காசு - குற்றம்.

(பி -ம்.) ௯. 'என்றெழுந்தனணிற்ப', 'என்றழுதனணிற்ப.' ௧௩-௪. 'தெய்வத, மதுநீர்செய்தவினை'

தாய மன்னவர் வசுவுங் குமரனுஞ்
சிங்க புரமுஞ் செழுநீர்க் கபிலையு
மங்காள் கின்றோ ரடற்செரு வுறுநாண்
மூவிரு காவத முன்னுந ரின்றி
உ0 யாவரும் வழங்கா விடத்திற் பொருள்வேட்டுப்
பல்கலன் கொண்டு பலரறி யாம
லெல்வளை யாளோ டரிபுர மெய்திப்
பண்டக் கலம்பகர் சங்கமன் றன்னைக்
கண்டனர் கூறத் தையனின் கணவன்
உரு பார்த்திபன் றொழில்செயும் பரத னென்னுந்
தீத்தொழி லாளன் றெற்றெனப் பற்றி
யொற்ற னிவனென வுரைத்து மன்னற்குக்
குற்றமி லோனைக் கொலைபுரிந் திட்டன
ளுங்கவன் மனைவி யழுதன ளரற்றி

கசு. ஞாதியராகிய வசுவும் குமரனும். கஎ. கபிலை - கபிலபுரம்.

கசு - எ. சிங்கபுரம் வசுவுக்கும், கபிலை குமரனுக்கும் உரிய நக

கஅ. ஆள்கின்றோர் : பெயர். நாள் - நாளில். [ரங்கள்.

கக. மூவிருகாவதம் - ஆறுகாதம். முன்னுநர் - முற்படுவோர் ; அணுகுபவருமாம்.

உ0. வழங்கா - செல்லாத. வேட்டு - விரும்பி.

உக. கலன் - ஆபரணம்.

உஉ. எல்வளை - ஒளிபொருந்தியவளையையுடையாள் ; என்றது, நீலியை. அரிபுரம் - சிங்கபுரம்.

உங. பண்டக்கலம் - பொன்னாலாகிய அணிகலம் ; பண்டம் - பொன் ; பண்டமும் கலமுமாம் ; பண்டம் - சரக்கு. பகர் சங்கமன் றன்னை - விற்கும் சங்கமனென்னும் வணிகனை.

உச. தையல் : விளி.

உரு. பார்த்திபனென்றது வசுவை. பரதனென்றது, கோவலனுடை பழம்பிறப்பிலுள்ள பெயர்.

உசு. தெற்றென - விரைவாக.

உஎ. ஒற்றன் - வேய்த்து அறிபவன். மன்னர்க்கு உரைத்து.

உகூ. மனைவி - நீலியென்பவள். அழுது அரற்றி.

(பி - ம்.) கஎ. 'செழுநீர்க்கயிலையும்' உ0. 'இடத்துப்பொருள்' உஉ. 'எரிபுரமெய்தி' உங. 'படைக்கலம்பகர்' உச. 'கண்டவர்கூறத் தையலென்' உஎ. 'உரைத்துமன்னவனற்'

௩௦ யேங்கிமெய் பெயர்ப்போ ளிறுவரை யேறி
யிட்ட சாபங் கட்டிய தாகு
மும்மை வினைவந் துருத்தலொழி யாதெனு
மெய்ம்மைக் கிளவி விளம்பிய பின்னுஞ்
சீற்றங் கொண்டு செழுநகர் சிதைத்தேன்
௩௫ மேற்செய்நல் வினையின் விண்ணவர்ச் சென்றே
மவ்வினை யிறுதியி னடுசினப் பாவ
மெவ்வகை யானு மெய்துத லொழியா
தும்ப ரில்வழி யிம்பரிற் பல்பிறப்
பியாங்கணு மிருவினை யுய்த்துமைப் போல
௪௦ நீங்கரும் பிறவிக் கடலிடை நீந்திப்
பிறந்து மிறந்து முழல்வோம் பின்னர்
மறந்து மழைமறா மகதநன் னாட்டுக்

---

௩௦. மெய்பெயர்ப்போள் - உயிர்விடுவோள். இறுவரை - பெரிய மலை; "இறுவரை யிவர்வதோ ரிலங்கெயிற் றரியென" சீவக. ௧௮௩௩.

௩௧. கட்டியதாகும் - பந்தித்ததாகும்.

௩௨. உம்மைவினை - பழவினை. உருத்தல் - தோன்றுதல்; "ஊழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉம்" (சிலப். பதி. ௫௭); "ஒளிப்பினு மூழ்வினை யூட்டாது கழியாது" இறை. சூ. உ, உரை.

௩௩. கிளவி - சொல்.

௧௩ - ௩௩. மாபெருந்தெய்வம் விளம்பியபின்னுமென்க.

௧௫ - ௩௩. இச்சாபவரலாறு, "கடிபொழி லுடுத்த கலிங்கநன் னாட்டு, வடிவேற் றடக்கை வசுவுங் குமரனும்,............வழுவில் சாபம், பட்டனிர்" (சிலப். ௨௩ : ௧௩௮ - ௭௦) என்று கண்ணகிக்கு மதுரைமா நகர்த்தெய்வங் கூறியதாக இளங்கோவடிகள் கூறியிருத்தலாலும் விளங்கவுணரப்படும்.

௩௪. நகர் - மதுரை.

௩௫. விண்ணவர்ச்சென்றேம் - கணவனும் யானும் தேவராய்ச் சென்றேம்.

௩௬. அவ்வினை - மேற்செய்நல்லவினை. அடுசினப்பாவம் - மதுரையை யழித்த கோபத்தாலுண்டான பாவம்.

௩௬ - ௭. பாவம் எய்துதலொழியாது.

௩௮. உம்பர் இல்வழி - தேவருலகத்தில் நல்வினை நுகர்ச்சியில்லாத விடத்து.

௩௮ - ௯. பல்பிறப்பியாங்கணும் - எல்லாப்பிறவியின் கண்ணும். இருவினையுய்த்து - இருவினைகளாற் செலுத்தப்பட்டு.

௪௨. மகதநன்னாட்டுக்கு - மகதநாட்டுக்கு.

(பி - ம்.) ௩௦. 'மெய்வைப்போள்' ௩௧. 'சாபங்கிட்டிய' ௩௪. 'கொண்டுதிருநகர்' ௩௬ - ௭. 'பாவை வெம்பகை' 'உறழ்வோம் பின்' ௪௨. 'மழைவறாமந்தநன்'

கொருபெருந் திலகமென் றுரவோ ருரைக்குங்
கரவரும் பெருமைக் கபிலையம் பதியி
ருடு னளப்பரும் பாரமிதை யளவின்று நிறைத்துத்
துளக்கமில் புத்த ஞாயிறு தோன்றிப்
போதி மூலம் பொருந்திவந் தருளித்
தீதறு நால்வகை வாய்மையுந் தெரிந்து
பன்னிரு சார்பின் பகுதித் தோற்றமு
ருய மந்நிலை யெல்லா மழிவுறு வகையு
மிற்றென வியம்பிக் குற்றவீ டெய்தி

சங. திலகம் - மேலாதல். கபிலை இராசதானியாதலின், இங்ஙனம் கூறப்பட்டது.

சச. கரவு - மறைத்தல். கபிலையம்பதி - கபிலநகர்; இது, கபில ரென்று பெயருள்ள ஒருமுனிவர் தவஞ்செய்தற்கு முன்னம் இடமாயிருந் ததுபற்றி இப்பெயர் பெற்றதென்பர்; கபிலவஸ்துவெனவும் வழங்கும்.

சரு. பாரமிதை - உடம்பு நேரவும் உறுப்பு நேரவும் பொருள் நேரவும் தானமுதல் ஞானமீறாகவுள்ள பத்தும் பூரித்தல் (மணி. உக: உகூ); (க) தானபாரமிதை, (உ) சீலபாரமிதை, (ங) க்ஷமாபாரமிதை, (ச) வீரியபாரமிதை, (ரு) தியானபாரமிதை, (சு) ப்ரஜ்ஞாபாரமிதை, (எ) உபாயபாரமிதை, (அ) தயாபாரமிதை, (கூ) பலபாரமிதை, (கo) ஞானபாரமிதையென்பன. இவை தசபாரமிதையெனவும் தசாபார மெனவும் வழங்கும்; இதனை, "தானஞ்சீ லம்பொறை தக்க தாய வீரிய, மூன மிலாற்றி யானமே புணர்ச்சியோ டுபாயமு, மானமில் லருளினை வைத்தவே வலிம்மையு, ஞான மீரைம் பாரமிதை நாடுங்கா லிவை களும்" (நீல மொக்கல. அஅ), "இன்பஞ்சால் பெரும்பார மீரைந்து முட்டினிறைத்து, நன்கன நிலைபெற்ற நாதன்" (நீல. மொக்கல. அஅ, சமய.), "தானமே முதலாகத் தசபார நிறைத்தருளி, யூனமொன் றில் லாமை யொழிவின்றி யியற்றினையே" (வீர. யாப்பு. கக, உதாரணம்) என வருவனவற்றாலுணர்க. அளவின்று - அளவில்லாமல்.

சசு. புத்தஞாயிறு - புத்தனாகிய ஞாயிறு.

சஎ. போதி - அரசமரம்; என்றது மகாபோதியை.

சஅ. நால்வகைவாய்மை - துக்கமுதலியன.

சகூ. பன்னிருசார்பு - பேதைமைமுதலிய துவாதச நிதானங்கள்.

ருo. பன்னிருசார்பின் அழிவும்.

சகூ - ருo. "சார்பிற் றோற்றமுஞ் சார்பறுத் துய்தியும்" (உரு: ரு) என்று முன்பு வந்திருத்தல் காண்க.

ருக. இற்று - இத்தன்மைத்து; இதனைத் தோற்றத்தோடும் வகை யோடும் தனித்தனியே கூட்டுக. குற்றவீடெய்தி - காமம்முதலிய குற்றங் களினின்றும் விடுதல்பெற்று; "குற்றவீ டாராக மாதிக் குணங்களைக் குறைத்த லாகும்" சிவ - சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், சு.

(பி - ம்.) சச. 'கயிலையம்' சரு. 'அளவின்று நிறைந்து' சஎ. 'பொதிந்துவந்தருளி'

யெண்ணருஞ் சக்கர வாள மெங்கணு
மண்ண லறக்கதிர் விரிக்குங் காலைப்
பைந்தொடி தந்தை யுடனே பகவ
ருரு னிந்திர விகார மேழுமேத் துதலிற்
றுன்பக் கதியிற் றோற்ற வின்றி
யன்புறு மனத்தோ டவனறங் கேட்டுத்
துறவி யுள்ளந் தோன்றித் தொடரும்
பிறவி நீத்த பெற்றிய மாகுவ
கூ0 மத்திற மாயினு மநேக கால

---

ருங. அண்ணல் - தலைமை. முன்பு புத்தனை ஞாயிறாக உருவகித்ததற்கேற்ப ஈண்டு அவனாலுபதேசிக்கப்படும் அறங்களைக் கதிராக உருவகஞ் செய்தார்.

சஉ - ருங. மகதநாட்டிற் கபிலையம்பதியில் நிறைத்துத்தோன்றி வந்தருளித் தெரிந்து இயம்பி எய்தி விரிக்குங்காலையென்க.

ருச. பைந்தொடி : முன்னிலைப்பெயர்.

ருரு. இந்திரவிகாரம் ஏழும் - இந்திரனால் நிருமிக்கப்பட்ட அரங்குகள் ஏழனையும்; இவை காவிரிப்பூம்பட்டினத்துள்ளவை; ஆகாயசாரிகளாகிய சாரணர் இருந்து பௌத்தாகமத்தின் பொருளை யாவர்க்கும் விளங்க உணர்த்துவதற்கு இடமாக இருப்பவை; இதனை, "பணையைந் தோங்கிய பாசிலைப் போதி, யணிதிகழ் நீழ லறவோன் றிருமொழி, யந்தர சாரிக ளறைந்தனர் சாற்று, மிந்திர விகார மேழுடன் போகி" (சிலப். க0 : கக - சு) என்பதனாலுணர்க. ஏத்துதலின் - ஏத்தியபுண்ணியத்தால்; இதனால், கோவலனும் கண்ணகியும் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்தபொழுது இவற்றை ஏத்தி வழிபட்டார்களென்பது பெறப்பட்டது.

ருசு. துன்பக்கதி - துன்பத்தைச்செய்யும் இழிந்தபிறப்பு. தோற்றரவு - தோன்றுதல். 'இன்றி' என்றதனால், நற்கதியிற்பிறத்தல் கூறப்பட்டது.

ருஎ. அவனறம் - அவன்செய்யும் தருமோபதேசமொழிகளை.

ருங - எ. காலையிற் கேட்டென்க.

ருஅ. துறவி - துறத்தல். உள்ளத்தே துறவி தோன்றியென்க; "மாதவி துறவிக்கு" (உ : க0) என்று இந்நூலில் முன்பு வந்திருத்தல் காண்க; திருச்சிற்றம்பலக்கோவையாரில், "அளவியை" என்னும் க0-ஆம் செய்யுளின் விசேட வுரையில், 'துறவு துறவியென நின்றாற்போல அளவு அளவியென நின்றது' என்று பேராசிரியர் எழுதியிருக்கின்றனர்.

ருகூ. பெற்றி - நிருவாணம்.

ருரு - கூ. ஏத்துதலின், இன்றிக் கேட்டுத் தோன்றி நீத்த பெற்றியமாகுவமென்க.

(பி - ம்.) ருங. 'விரிக்கும்போது' ருச. 'பைந்தொடித்தந்தை' ருரு. 'விகாரமேழுந் துதித்தலிற்' ருஎ. 'அன்பறுமனத்தேர்பற்றறம்'

மெத்திறத் தார்க்கு மிருத்தியுஞ் செய்குவ
நறைகமழ் கூந்த னங்கை நீயு
முறைமையி னிந்த மூதா ரகத்தே
யவ்வவர் சமயத் தறிபொருள் கேட்டு
௬௫ மெய்வகை யின்மை நினக்கே விளங்கிய
பின்னர்ப் பெரியோன் பிடகநெறி கடவா
யின்னதிவ் வியல்பெனத் தாயெடுத் துரைத்தலு

---

௬௧. இருத்தி - விருத்தி.

௬௨. ‘நறைகமழ்கூந்தல்’ என்பது முதலியவற்றால் மணிமேகலைக்குப் பின்நிகழ்வன கூறுவாள்.

௬௩. இந்தமூதாரென்றது வஞ்சிநகரத்தை.

௬௫. மெய்வகையின்மை - உண்மையில்லாமை.

௬௬. பெரியோன் பிடகநெறி - புத்தன் அருளிச்செய்த ஆகமங்களின் வழியை. புத்த தன்ம சங்கமென்னும் மூன்று மணிகளும் யாதோரிடையூறுமின்றி இருத்தற்குஇடமாய்க் கூடைபோலுதலின், பௌத்தாகமங்கள் பிடகமெனப் பட்டனவென்பர்; பிடகம் - கூடை. பிடகம், வினயபிடகம் ஸூத்திரபிடகம் அபிதர்மபிடகமென மூன்று வகைப்படும்; இவற்றைத் திரிபிடகமென்றும், பிடகத்திரயமென்றும் வழங்குவர்; இவற்றுள் முதலாவது வினயபிடகம், விபங்கம் கண்டகம் பரிவாரபாடமென மூன்று வகைப்படும். இவற்றுள், விபங்கம் பாராஜிகாதி பிரதமபாகமென்றும் (இது சங்கத்திலிருந்து விலக்குதற்குரிய குற்றங்களைக் கூறுவது), பிராயச்சித்தாதி துவிதீய பாகமென்றும் (இது பிராயச்சித்தத்தால் நிவிர்த்தித்தற்குரிய குற்றங்களைக் கூறுவது) இரண்டு பகுதியுடைத்து; கண்டகம், மஹாவர்க்கம் க்ஷுல்லவர்க்கமென இரண்டுபகுதியுடைத்து. இரண்டாவது ஸூத்திரபிடகம், தீர்க்கநிகாயம், மத்தியமநிகாயம், ஸம்யுக்தநிகாயம், அங்கோத்ரநிகாயம், க்ஷுத்திரக நிகாயமென ஐந்து வகையினையுடைத்து; [நிகாயம் - கூட்டம்.] இவற்றுள், க்ஷுத்திரக நிகாயம் க்ஷுத்திரகபாடம், தருமபதம், உதானம், இத்தியுக்தம், ஸூத்திரநிபாதம், விமானவஸ்து, பிரேதவஸ்து, ஸ்தேரகாதை, ஸ்தேரீகாதை (ஸ்தேரரென்றும், ஸ்தவிரரென்றும் உத்தம பிக்ஷுக்களுக்குப்பெயர்), ஜாதகம், நிர்த்தேசம், பிரதிஸம்பிதா மார்க்கம், அபதானம், புத்தவம்சம், சரியாபிடகமெனப் பதினைந்து பகுதியுடைத்து. மூன்றாவது அபிதர்மபிடகம் தருமசங்கினி, விபங்கம், கதாவஸ்துப்பிரகரணம், புத்கலப் பிரஜ்ஞப்தி, தாதுகதை, யமகம், பிரஸ்தானப் பிரகரணமென ஏழு வகையினையுடைத்து; “ஆத்த னேயெனத் தெளிந்தவ னமர்ந்திருந் தவர்க்குச், சூத்தி ரம்மிது வினயமு மிதுவிது பிறிதாஞ், சாத்தி ரம்மிவை மூன்றென வன்றவத் தோன்றல், பாத்து ரைக்குந்தன் பதப்பொருள் பலவகைப் படவே” நீல. புத்த. ௬௫.

௬௭. தாய் - கண்ணகியாகிய பத்தினிக்கடவுள்.

(பி - ம்.) ௬௧. ‘இத்திறத்தார்க்கு’ ௬௫ - ௬. ‘விளங்கிப்பின்னர்ப் பெரியான்’

பிளையள் வளையோ ளென்றுனக் கியாவரும்
விளைபொரு ளுரையார் வேற்றுருக் கொள்கென
௭0 மையறு சிறப்பிற் றெய்வதந் தந்த
மந்திர மோதியோர் மாதவன் வடிவாய்த்
தேவ குலமுந் தெற்றியும் பள்ளியும்
பூமலர்ப் பொழிலும் பொய்கையு மிடைந்து
நற்றவ முனிவருங் கற்றடங் கினரு
௭௫ நன்னெறி காணிய தொன்னூற் புலவரு
மெங்கணும் விளங்கிய வெயிற்புற விருக்கையிற்
செங்குட் டுவனெனுஞ் செங்கோல் வேந்தன்
பூத்த வஞ்சி பூவா வஞ்சியிற்
போர்த்தொழிற் றுனை குஞ்சியிற் புனைய

---

இனி, மணிமேகலை வேற்றுருக்கொண்டு வஞ்சிநகரத்துள்ளே செல்லுதல் கூறப்படும்.

௬௮ - ௯. மணி. ௧0 : ௭௯ - ௮0.

௭0. தெய்வதம் - மணிமேகலாதெய்வம்.

௭௧. மந்திரம் - வேற்றுருவெய்துவிக்கும் மந்திரம்.

௭௨. குலம் - கோயில்; "தேவகுலநிழல்" (ஆசார. ௯௨.) தெற்றி- வேதிகை; திண்ணையுமாம். பள்ளி - சாலை; "ஒதுக்கின் றிணிமணற் புதுப்பூம் பள்ளி" புறநா. ௩௩.

௭௩. மிடைந்து - நெருங்கி. ௭௫. காணிய - கண்ட.

௭௨ - ௬. தேவகுலம் முதலியன மிடைந்து முனிவர் முதலியோர் எங்கணும் விளங்கிய இருக்கையென்க.

௭௭. செங்குட்டுவன் - சேரன்; இவன் இளங்கோவடிகளின் தமையன்; கண்ணகியின்படிவத்தைப் பிரதிட்டிப்பித்தோன்.

௭௮. பூத்தவஞ்சி - வஞ்சிமலர்; பகைவர் நாட்டைக் கொள்ள நினைந்து போர்செய்தற்கு அவர்மேற்செல்வோர் அதற்கு அறிகுறியாக அணிந்துகொள்வது; இது முதலுக்கேற்ற அடையடுத்து நின்றது. பூவா வஞ்சி - வஞ்சிநகர்; வெளிப்படை; இந்நகரை வாடாவஞ்சி யென்றுங் கூறுவர்; "பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி, வாய்வா ளனேந்தகை மணி முடிக் கணிந்து" (௨௬ : ௫0 - ௫௧) எனச் சிலப்பதிகாரத்தும் வருதல் காண்க.

௭௬ - ௮. இருக்கையினையுடைய பூவா வஞ்சியென்க.

௭௯. தானை - சேனை. குஞ்சி - குடுமி.

௭௮ - ௯. பூவாவஞ்சியிற் பூத்தவஞ்சியைத் தானை குஞ்சியிற்புனைய வென்க.

(பி - ம்.) ௬௮. 'என்றுநீயுணர' ௬௯. 'வேண்டுருக் கொள்கென' ௭௨. 'தெய்வகுலனும்' ௭௮. 'பூவாவஞ்சியிற் பூத்தவஞ்சி' ௭௯ - ௮0. 'புனைந்து நிலைநாடெல்லை'

அ0 நிலநா டெல்லைதன் மலைநா டென்னக்
கைம்மலைக் களிற்றினந் தம்முண் மயங்கத்
தேரு மாவுஞ் செறிகழன் மறவருங்
கார்மயங்கு கடலிற் கலிகொளக் கடைஇக்
கங்கையம் பேர்யாற் றடைகரைத் தங்கி
அரு வங்க நாவியி னதன்வடக் கிழிந்து
கனக விசயர் முதற்பல வேந்த
ரனைவரை வென்றவ ரம்பொன் முடிமிசைச்
சிமைய மோங்கிய விமைய மால்வரைத்
தெய்வக் கல்லுந் தன்றிரு முடிமிசைச்
கூ0 செய்பொன் வாகையுஞ் சேர்த்திய சேரன்

---

அக. கையையுடைய மலைபோலுங் களிற்றினம். மயங்க - கலக்க.

அ0 - அக. மலைநாடென்று சொல்லும்வண்ணம் களிற்றினங்கள் மயங்க வென்க; செல்லும் நெறிக்கணுள்ள நாடுகள், யானைகளின் மிகுதியால் மலைநாடென்று சொல்லப்பட்டன.

அந. கலிகொள - முழங்க. கடைஇ - செலுத்தி.

அரு. நாவி - மரக்கலவிசேடம்; இம்மொழி மலைநாட்டில் வழங்குகின்றது. வங்கநாவி: இருபெயரொட்டுப் பண்புத்தொகை. இழிந்து - இறங்கி.

அசு. கனகவிசயர் - கனகனும் விசயனும்; இவர் ஆரியவரசர். பலவேந்தர் - உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரன், சிங்கன், தனுத்தரன், சிவேதன் முதலியோர்; இதனை, சிலப்பதிகாரம், உசு - ஆம் காதை, கஅஉ - ஆம் அடி முதலியவற்றிற்காண்க.

அஎ. அனைவரைவென்று - எல்லோரையும்வென்று; உம்மை விகார வகையால் தொக்கது. அவரென்றது கனகவிசயரை.

அஅ. சிமையம் - உச்சி.

அகூ. தெய்வக்கல் - பத்தினிக்கடவுளாகிய கண்ணகிவடிவம் அமைத்தற்குரிய கல்.

கூ0. வாகை - வாகைமலர்; பகைவரை வென்றோர் வென்றதற்கு அறிகுறியாக அணிந்துகொள்ளுவது; அரசர் அம்மலரைப் பொன்னாற் செய்து அணிந்துகொள்ளுதல் இயல்பாதலின், 'செய்பொன்வாகை' என்றார்; "பொலந்தோட்டுப் பைந்தும்பை" (உஉ) எனவும், "பொலந் தும்பை" (கஎ) எனவும் புறநானூற்றிற் கூறியிருத்தல் காண்க.

அஎ - கூ0. அவர் முடிமிசைக் கல்லும் தன் முடிமிசை வாகையுஞ் சேர்த்திய சேரனென இயைக்க.

எகூ - கூ0. புனைய மயங்கக் கலிகொளக் கடைஇத் தங்கி இழிந்து வென்று சேர்த்திய சேரனென்க.

(பி - ம்.) அச. 'கங்கைப் பேரியாற்றடை' அரு. 'வங்கநாவாயி தன் வடகிழக்கிழிந்து' அசு. 'முதற்சின வேந்தர்' கூ0. 'செம்பொன்'

விற்றிறல் வெய்யோன் றன்புகழ் விளங்கப்
பொற்கொடிப் பெயர்ப்படூஉம் பொன்னகர்ப் பொலிந்தன
டிருந்துநல் லேது முதிர்ந்துள தாதலிற்
பொருந்துநால் வாய்மையும் புலப்படுத் தற்கென்.

௨௬.—வஞ்சிமாநகர் புக்ககாதை முற்றிற்று.

---

'சேரன் செங்குட்டுவன் வடநாடு சென்று ஆரியவரசரை வென்று கற்கொண்டுமீண்ட வரலாற்றை, சிலப்பதிகாரம், கால்கோட்காதை முதலியவற்றால் உணர்க.

௯௧. விற்றிறல்வெய்யோன் - வில்வலியை விரும்பினோன்; "வெம்முனை வெற்றி விறல்வெய்யோன்" பு - வெ. ௬௮.

௭௭ - ௯௧. வேந்தன் சேரன் வெய்யோன்; அவன்றன்புகழென்க.

௯௨. பொற்கொடி - அழகியகொடி; என்றது வஞ்சிக்கொடியை. நகர் - வஞ்சி; "பூங்கொடிப் பெயர்ப்படூஉந், திருந்திய நன்னகர்" (௨௮ : ௧0௧ - ௨) என்று பின்வருதல் காண்க.

௯௧ - ௨. விளங்கப் பொலிந்தனள்.

௯௩. நல்லேது - நல்வினையாகிய காரணம்.

௯௨ - ௩. ஆதலிற் பொலிந்தனள்.

௯௪. நால்வாய்மை - நான்குவகைப்பட்ட சத்தியம்; அவை துக்கம் முதலியன; அவற்றை ஸத்திய சதுஷ்டயமென்பர்.

௯௨ - ௪. புலப்படுத்தற்குப் பொலிந்தனளென்க.

௧ - ௯௪. அணியிழை, எழுந்து புகுந்து நின்று எத்தி, 'அருளல் வேண்டும்' என்று அழுதுநிற்ப, பத்தினிக்கடவுள் உரைப்பாள்; அங்ஙனமுரைப்பவளாகிய தாய், 'இன்ன திவ்வியல்பு' என எடுத்துரைத்தலும், மணிமேகலை ஒதி வடிவாய்ப் பொன்னகர்ப் பொலிந்தனளென வினை முடிவு செய்க.

(பி - ம்.) ௯௨. 'கொடிபெயர்ப்' ௯௩. 'திருந்தால்லேது' ௯௪. 'நல்வாய்மை'

இருபத்தேழாவது

# சமயக்கணக்கர்தந்திறங்கேட்டகாதை.

[இருபத்தேழாவது வஞ்சிமாநகர்ப்புறத்துச் சமயக்கணக்கர்தந் திறங்கேட்டபாட்டு.]

நவையறு நன்பொரு ளுரைமி னோவெனச்
சமயக் கணக்கர் தந்திறஞ் சார்ந்து
வைதிக மார்க்கத் தளவை வாதியை
யெய்தின ளெய்திநின் கடைப்பிடி யியம்பென
௫ வேத வியாதனுங் கிருத கோடியு
மேதமில் சைமினி யெனுமிவ் வாசிரியர்
பத்து மெட்டு மாறும் பண்புறத்
தத்தம் வகையாற் றம்பகர்ந் திட்டனர்
காண்டல் கருத லுவம மாகம
௧0 மாண்டைய வருத்தா பத்தி யோடியல்

---

௧. நவை - குற்றம். பொருள் - தத்துவம்.

௨. சமயக்கணக்கர் - சமயநூலுணர்ந்தவர். வாதிகள். திறம் - தொகுதி; இடமுமாம்.

௧ - ௨. மணி. பதி. அஎ - அ. உரைமினோவெனச்சார்ந்து.

௩. அளவைவாதி - பிரமாணவாதி.

௪. கடைப்பிடி - சித்தாந்தம். இயம்பென - சொல்லென்று மணிமேகலை வினவ.

௩ - ௪. அளவைவாதியை எய்தி இயம்பென.

௫. 'வேதவியாதனும்' என்பது முதலியன அளவை வாதியின் [வார்த்தை.

௬. ஏதம் - குற்றம்.

௫ - அ. வேதவியாதன் பத்தளவையும் கிருதகோடி எட்டளவையும் சைமினி ஆறளவையும் பகர்ந்திட்டனரென்க.

௯. 'காண்டல்' என்பது முதலியவற்றால் பத்தளவைகளின் பெயரும், அவற்றினிலக்கணமுங் கூறப்படும். காண்டல் - பிரத்தியக்கம். கருதல் - அனுமானம்; இது கருத்தெனவும் வழங்கும்.

௧0. இயல்பு - ஸ்வபாவலிங்கம்.

(பி - ம்.) ௩. 'அளவையாதியை' அ. 'பகிர்ந்திட்டனர்' ௯. 'காண்டல்கருத்தே' ௧0. 'ஆண்டவருத்தாபத்தியோடியையபு'

பைதிக மபாவ மீட்சி யொழிவறி
வெய்தியுண் டாநெறி யென்றிவை தம்மாற்
பொருளி னுண்மை புலங்கொளல் வேண்டு
மருளில் காட்சி யைவகை யாகுங்
கரு கண்ணால் வண்ணமுஞ் செவியா லோசையு
நண்ணிய மூக்கா னாற்றமு நாவாற்
சுவையு மெய்யா லூறுமெனச் சொன்ன
விவையிவை கண்டுகேட் டுயிர்த்துண் டுற்றுத்
துக்கமுஞ் சுகமு மெனத்துயக் கறவறிந்
உ० துயிரும் வாயிலு மனமுமூ றின்றிப்
பயிலொளி யொடுபொரு ளிடம்பழு தின்றிச்
சுட்ட றிரிதல் கவர்கோட றின்றாது
கிட்டிய தேச நாம சாதி
குணக்கிரி யையி னறிவ தாகுங்
உரு கருத்தள வாவது

கக. ஐதிகம் - ஐதிஹ்யம். அபாவம் - இன்மை. மீட்சியொழி வறிவு - மீட்சியினால் ஒழிந்த பொருளையறியுமளவை; என்றது பாரி சேடத்தை.

கஉ. உண்டாநெறி - சம்பவம். இவை தம்மால் - காண்டல் முத லிய இந்தப்பத்துப் பிரமாணங்களாலே.

கரு. புலங்கொளல் - அறிதல்.

கச. 'மருளில்' என்பது முதலாகக் காட்சியளவையின் இலக்கணம் கூறப்படும். மருள் - மயக்கம். காட்சி - பிரத்தியக்கப் பிரமாணம்.

கக. துயக்கு - தடை.

உ०. வாயில் - இந்திரியம். ஊறு - இடையூறு.

உக. ஒளி - சோமசூரியாக்கினிகள்.

உஉ. சுட்டல் - பொருளுண்மை மாத்திரை காண்டல். திரிதல் - ஒன்றை மற்றொன்றாகக் கருதல்; இது விபரீதமெனப்படும். கவர்கோ டல் - சந்தேகம்; "கண்ட பொருளை யிரட்டுறவே கருத லையந் திரியவே, கொண்ட றிரிவாம்" சிவ - சித்தி. சுபக்கம், அளவை. ரு.

உரு. 'கருத்தளவு' என்பது முதல் அனுமானப்பிரமாணம் கூறப் படும்; கருத்தளவு - அனுமானப்பிரமாணம்.

(பி - ம்.) கக. 'மீட்சிமொழி' கஉ - ரு. 'உண்டானெறியென்றிவை தம்மாற்போ பொருளினுண்மையுளங்' கரு-சு. 'ஓசையு, மூக்கானாற்றமு நாக்காற்சுவையும்' கஅ - கூ. 'உண்டுயிர்த்துற்றுத், துக்க சுகமெனத் துயத்தறவறிந்து' உ० - உக. 'மனமுமூன்றிப், பயிலொழியொடும் பொருள்'

குறிக்கொ ளனுமா னத்தனு மேயத்
தகைமை யுணருந் தன்மைய தாகு
மூவகை யுற்றது பொதுவெச்ச முதலாம்
பொதுவெனப் படுவது சாதன சாத்திய
௩௦ மிவையந் நுவய மின்றி யிருந்துங்
கடந்திகழ் யானைக் கானவொலி கேட்டோ
னுடங்கெழில் யானையங் குண்டென வுணர்த
லெச்ச மென்பது வெள்ளவே துவினு
னிச்சயித் தத்தலை மழைநிகழ் வுரைத்தன்
௩௫ முதலென மொழிவது கருக்கொண் முகில்கண்
டிதுமழை பெய்யு மெனவியம் பிடுத

உசு. அனுமானத்து - அனுமானத்தால்; "அனுமானமாவது: சாத்தியத்தையொழியச் சம்பவியாததாகிய சாதனத்தாற் சாத்தியத்தைப் பற்றிப் பிறக்கும் ஞானமாகும்" (நீல. தருக. செய். கூஉ, சமய.) அனுமேயம் - அனுமித்து உணரப்படுவது.

உஅ. அது - அவ்வனுமானஅளவை; அது பொதுவெனவும், எச்சமெனவும், முதலெனவும் மூன்று வகைப்படும்.

உகூ. சாதனம் - ஏது. சாத்தியம் - துணிபொருள்.

௩௦. இவை - இவற்றிற்கு. அந்நுவயம் - சேர்க்கை; அஃதாவது நியதமான உடனிகழ்ச்சி.

௩௧. கடம் - மதம். கானம் - காடு. ௩உ. உடங்கு - உடனே.

உசு - ௩உ. பொதுவெனப்படுவது உணர்தலென்க. பொதுவைச் சாமானியானுமானமென்பர்.

௩௩ - ௪. வெள்ள ஏதுவினால் - வெள்ளமாகிய சாதனத்தால். அத்தலை - அவ்விடம். எச்சமென்பது வெள்ளவேதுவினால் அத்தலை மழைநிகழ்வு நிச்சயித்துரைத்தல். இதனைச் சேஷானுமானமெனவும் காரியானுமானமெனவும் கூறுவர்.

௩௫. கரு - சூல். முகில் - மேகம். ௩௬. இது - இம்மேகம்.

௩௫ - ௬. முதலென மொழிவது சூற்கொண்ட மேகத்தைக்கண்டு இது மழை பெய்யுமென்று நிச்சயித்தல். இதனைக் காரணானுமானமெனவும், பூர்வானுமானமெனவும் கூறுவர். இது, வரற்பாலதை முன்னமே அனுமிப்பது.

௩௩ - ௬. இவ்வடிகளிற் கூறப்பட்டுள்ள அனுமானங்களை, "இடித்து மின்னி யிருண்டு மேக மெழுந்த போதிது பெய்யுமென், றடுத்த தும்மலில் சந்த முந்தி யலைத்து வார்புன லாறுகொண், டெடுத்து வந்திட மால்வரைக்க ணிருந்து கொண்டல் சொரிந்ததென்று, முடித்த தும் மிவை காட்சியன்றனு மானமென்று மொழிந்திடே" (சிவ - சித்தி. பரபக்கம், உலோகாயதன்மதமறுதலை, உ) என்பதனாலுமுணர்க.

(பி - ம்.) உசு. 'குறிகொள்' ௩௦. 'இவைதமொடந்நுவய'

லென்னு மேதுவி னென்றுமுக் காலந்
தன்னி லொன்றிற் சார்ந்துள தாகி
மாண்ட வுயிர்முதன் மாசின் ருகிக்
௪௦ காண்டற் பொருளாற் கண்டில துணர்த
லுவம மாவ தொப்புமை யளவை
கவய மாவாப் போலுமெனக் கருத
லாகம வளவை யறிவ னூலாற்
போக புவன முண்டெனப் புலங்கொள
௪௫ லருத்தா பத்தி யாய்க்குடி கங்கை
யிருக்கு மென்றுற் கரையிலென் றெண்ண
லியல்பி யானைமே லிருந்தோன் ரேட்டிக்
கயலொன் றீயா ததுவே கொடுத்த

௩௮. தன்: பன்மையொருமை மயக்கம்.

௩௯. உயிர்முதல் - உயிரும் இந்திரியமும் மனமும்; "உயிரும் வாயிலு மனமுமூ றின்றி" (உஎ : உ௦) என்ரூர் முன்னும்.

உவமவளவை:—

௪உ. கவயமா - ஒருவகைமிருகம். ஆப்போலும்-பசுவையொக்கும்.

௪௧ - உ. "கண்ணன் கருமுகில்போல் வண்ணனெனக் கேட்டவனைக், கண்ணுமுணர் வொப்பெனவே காண்" என்றும் வரும்.

ஆகமவளவை:—

௪௩. அறிவனூல் - ஆப்தன் வாக்கியமாகிய நூல்.

௪௪. போகபுவனம் - சுவர்க்கநரகங்கள். புலங்கொளல் - அறிதல்.

௪௩ - ௪. ஆகமவளவையாவது புலங்கொளலென்க. இதனைச் சாத்தமென்றும், உரையளவையென்றும் கூறுவர்.

அருத்தாபத்தியளவை:—

௪௫. ஆய்க்குடி - இடைச்சேரி.

௪௫ - ௬. இது பொருளளவையென்றும் கூறப்படும்; "அடுத்துல கோதும்பொருளருத் தாபத்தி யாமதுதா, னெடுத்த மொழியினஞ் செப்புவ தாகுமிவ் வூரிலுளர், படைத்தவ ரென்னிற் படையா தவருமுண் டென்றுமிவன், கொடுப்பவ னென்னிற் கொடாதாரு முண்டென் றுங் கொள்வதுவே" என்றும் வரும்.

இயல்பளவை:—

௪எ. இருந்தோன் ஒன்றுதாவெனிலென வருவித்துக் கொள்க. தோட்டி - அங்குசம்.

௪எ - அ. "மாமே லிருந்தொரு கோரூ வெனிற்சுள்ளிக் கோறரலுஞ், சோமே லிருந்தொரு கோரூ வெனிற்ற லேதுணிந்து, பூமேவு

(பி - ம்.) ௪எ. 'இயைபிலியானை'

ஐதிக மென்ப துலகுரை யிம்மரத்
௫௦ தெய்திய தோர்பே யுண்டெனத் தெளிதல்
அபாவ மென்ப தின்மையோர் பொருளைத்
தவாதவ் விடத்துத் தானிலை யென்றல்
மீட்சி யென்ப திராமன்வென் றனென
மாட்சியி லிராவணன் றோற்றமை மதித்தல்
௫௫ உள்ளநெறி யென்பது நாராசத் திரிவிற்
கொள்ளத் தகுவது காந்தமெனக் கூறல்

---

கண்ணெழுத் தங்கோல் கொடுத்தலும் பூதலத்தே, நாமே வியல்பென்று கூறுவர் நல்லசொன் னாவலரே" என்றும்வரும்; சோ - மதில்.

ஐதிகவளவை:—

சக. உலகுரை - உலோகவாதம்; அஃதாவது, கர்ணபரம்பரையால் வரும்வாக்கியம்.

சக - ௫௦. "கொன்பயில் வேலைக் கடல்புடை சூழுங் குவலயத்தோ, ரன்புட னாலி லலகையுண் டென்பர்க ளென்பதுவு, மின்பயில் புற்றில் விடநாக முண்டென்ப ரென்பதுவு, மென்பர்க ளாவல ரென்பதை மைதிக மென்பர்களே" என்றும் வரும்.

அபாவவளவை:—

௫க - உ. அபாவமாவது இன்மையாகும்; அஃது ஒருபொருளை இல்லையென்பது.

மீட்சியளவை:—

௫௩. மாட்சிஇல் - பெருமையில்லாத.

௫௩ - ௪. இஃது ஒழிபெனவும் பாரிசேடமெனவும் கூறப்படும்; "சீரா ரொழிபென்று செப்பப் படுவது திண்புவிமேற், போராடி நின்று பொருதா ரிருவர்தம் போர்க்களத்துப், பாரா ரிராகவன் வென்றானிற்றன் பரிசழிந்து, நேரா மிராவணன் றோற்றசொல் லாகி நிகழ்வதுவே" என்றும் வரும். மூன்று பெயரிலே இருவரைக் கள்வரல்லரென்றால் நின்றவொருவனைக் கள்வனென்றறிகையுமது.

சம்பவவளவை:—

௫௫. நாராசத்திரிவின் - இருப்புச்சலாகையின் சலனத்தால்.

௫௫ - ௬. உள்ளநெறியெனினும், உண்டாநெறியெனினும், சம்பவமெனினுமொக்கும்; "துயக்கற வுண்மை யெனநா வலர்க ணிகழ்ந்துரைப்ப, தியற்கைப் பொருளினை யிற்றென லாமிது தானுரைக்கின், வியக்குற்ற கால்சலிக் குந்தீச் சுடும்விய னீர்குளிரும், வயக்குற்ற மண்வலி தென்றுபட் டாங்கு வழங்குவதே" என்றும்வரும்; ஆயிரத்தில் நூறுண்டென்பதும், நூற்றிலே தொண்ணூறுண்டென்பதுமது.

மேல் உவமைமுதலிய அளவைகளுக்குக் காட்டிப்போந்த, "கண்ணன் கருமுகில்போல்" என்றற்றொடக்கத்துச் செய்யுட்கள், சிவஞானசித்தியார், சுபக்கம், அளவை இலக்கணத்திற்கு மறைஞானதேசிகர் எழுதிய உரையிற்காணப்பட்டன.

லெட்டுள பிரமா ணுபா சங்கள்
சுட்டுணர் வொடுதிரி யக்கோடலையந்
தேராது தெளிதல் கண்டுணா ராமை
௬0 யெய்து மில்வழக் குணர்ந்ததை யுணர்த
னினைப்பென நிகழ்வசுட் டுணர்வெனப் படுவ
தெனைப்பொரு ளுண்மை மாத்திரை காண்ட
றிரியக் கோட லொன்றையொன் றென்றல்
விரிகதி ரிப்பியை வெள்ளியென் றுணர்த
௬௫ லைய மென்ப தொன்றைநிச் சயியா
மையற் றறியோ மகனோ வென்ற
றேராது தெளிதல் செண்டு வெளியி
லோராது தறியை மகனென வுணர்தல்
கண்டுணா ராமை கடுமாப் புலியொன்
௭0 றண்டலை முதலிய கண்டுமறி யாமை
யில்வழக் கென்பது முயற்கோ டொப்பன
சொல்லின்மாத் திரத்தாற் கருத்திற் றோன்ற
லுணர்ந்ததை யுணர்த லுறுபனிக் குத்தீப்
புணர்ந்திடன் மருந்தெனப் புலங்கொள நினைத்த
௭௫ னினைப்பெனப் படுவது காரண நிகழாது
நினக்கிவர் தாயுந் தந்தையு மென்று
பிறர்சொலக் கருதலிப் பெற்றிய வளவைகள்

---

இதுகாறும் காட்சிமுதலிய அளவைகள் பத்தும் அவற்றினிலக்கணங்களும் முறையே கூறப்பட்டன.

இனி, சுட்டுணர்வு முதலிய பிரமாணுபாசங்களெட்டும் அவற்றினிலக்கணங்களும் முறையே கூறப்படும்.

பிரமாணுபாசங்கள் எட்டு:—

௫௭. பிரமாணுபாசங்கள் - பிரமாணப்போலிகள்.

௬௨. எனைப்பொருள் - எல்லாப்பொருள். ௬௪. இப்பி - சிப்பி.

௬௬. மையல் - மயக்கம். தறி - கட்டை.

௬௭. செண்டுவெளி - ஒருவகை முற்றம்.

௬௮. ஓராது - உணராது.

௬௯. கடுமாவாகிய புலி; கடுமை - சினம். கண்டுணாராமையை உபேட்சாத்மக ஞானமென்பர்.

௭0. அண்டலை; ஐ: சாரியை. ௭௧. கோடு - கொம்பு.

௭௪. மருந்து - பரிகாரம்.

௭௭. இப்பெற்றிய - இத்தன்மையையுடையன; முற்று.

(பி - ம்.) ௬௫. 'நிச்சயியாது' ௬௯. 'கடுமருப்புலியிலோர்ந்து'

பாங்குறு முலோகா யதமே பௌத்தஞ்
சாங்கிய நையா யிகம்வை சேடிக
௮0 மீமாஞ் சகமாஞ் சமயவா சிரியர்
தாம்பிரு கற்பதி சினனே கபில
னக்க பாதன் கணாதன் சைமினி
மெய்ப்பிரத் தியமனு மானஞ் சாத்த
முவமான மருத்தா பத்தி யபாவ
௮௫ மிவையே யிப்போ தியன்றுள வளவைக
ளென்றவன் றன்னைவிட் டிறைவ னீசனென
நின்ற சைவ வாதிநேர் படுதலும்
பரசுநின் றெய்வ மெப்படித் தென்ன
விருசுட ரோடிய மானனைம் பூதமென்
௯0 றெட்டு வகையு முயிரும்யாக் கையுமாய்க்

எஅ. பாங்கு - பகுதி. அக. சினன் - புத்தன்.

அஉ. அக்கபாதன் - அக்ஷபாத முனிவர்; இவருக்குக் கௌதம முனிவரென்றும் பெயருண்டு. கணாதனென்பதற்கு நொய்யைப் புசிப்பவனென்று பொருள்; கணம் - நொய்; இவர் இக்காரணத்தாற் கணாசனரென்றும் பெயர் பெறுவர்.

அ௩. பிரத்தியம் - பிரத்தியக்கம். சாத்தம் - ஆகமம்.

எஅ - அ௫. உலோகாயதம் முதலிய அறுவகைச் சமயங்கட்கும் முறையே பிருகஸ்பதிமுதலிய அறுவரும் ஆசிரியரெனவும், மேற்கூறிய பத்தளவைகளுள் அவர்களாற் கைக்கொள்ளப்பட்டு இப்பொழுது வழங்கும் அளவைகள் பிரத்தியக்கமுதல் அபாவமிறுதியாகிய ஆறுமேயெனவுங் கொள்க. உலோகாயதம் முதலிய அறுவகைச்சமயங்களுள், உலோகாயதத்திற்குப் பிரத்தியக்கமொன்றும், பௌத்தத்திற்குப் பிரத்தியக்கத்தோடு அனுமானமும், சாங்கியத்திற்கு அவ்விரண்டனோடு ஆகமும், நையாயிகத்திற்கு அம்மூன்றனோடு உவமானமும், வைசேடிகத்திற்கு அந்நான்கனோடு அருத்தாபத்தியும், மீமாஞ்சகத்திற்கு அவ்வைந்தனோடு அபாவமும் பிரமாணமாமெனக் கொள்க.

அ௬. என்றவன் - அளவைவாதி.

**சைவவாதம் :—**

அ௬. இறைவன் - எப்பொருளினுந் தங்குகின்றகடவுள்; இறை - தங்குதல்.

அஅ. துதிக்கப்படும் நின்துதெய்வம் எத்தன்மையையுடையதென்று மணிமேகலை வினவ.

அ௯. இருசுடர் - சந்திரசூரியர். இயமானன் - யாகத்தலைவன்.

கட்டிநிற் போனுங் கலையுருவி னோனும்
படைத்துவிளை யாடும் பண்பி னோனுந்
துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனுந்
தன்னில் வேறு தானொன் றிலோனு
௯௫ மன்னோ னிறைவ னாகுமென் றுரைத்தனன்
பேருல கெல்லாம் பிரம வாதியோர்
தேவ னிட்ட முட்டை யென்றனன்
காதல் கொண்டு கடல்வணன் புராண
மோதினன் நாரணன் காப்பென் றுரைத்தனன்
௧௦௦ கற்பங் கைசந் தங்கா லெண்கண்
ணொற்றெ னிருத்தஞ் செவிசிக் கைமூக்
குற்ற வியாகர ணமுகம் பெற்றுச்

௯௩. கலையுருவினோன் - கலைகளை உருவாகவுடையவன்; "ஐயா றதன்மிசை யெட்டுத் தலையிட்ட, மையில் வான்கலை மெய்யுடன் பொருந்தி" என்றார்; திருச்சிற். ௧, பேர்.

௯௫. துடைத்து - சங்கரித்து. துயர்தீர்தோற்றத்தோன் - உயிர்களது இளைப்பொழிக்கும் பெருமையையுடையவன்.

பிரமவாதம்:—

௯௬ - ௭. உலகெல்லாம் ஒரு தேவனிட்ட முட்டையென்று பிரமவாதி கூறினன்.

வைணவவாதர்:—

௯௮. கடல்வணன் - திருமால். புராணம் - பழமை.

௯௯. ஓதினன் - வைணவவாதி.

வேதவாதம்:—

௧௦௦. 'கற்பம்' என்பது முதல் வேதவாதி கூற்று. சந்தம் - சந்தோவிசிதி. எண் - சோதிடம்.

௧௦௧. நிருத்தம் - நிருக்தம். சிக்கை - சிக்ஷை.

௧௦௦ - ௧௦௨. கற்பம் சந்தோவிசிதி சோதிடம் நிருத்தம் சிக்ஷை வியாகரணம் என்னுமிவ்வாறும் முறையே வேதத்திற்குக் கை கால் கண் காது மூக்கு முகம் என்னும் உறுப்புக்களாகவுள்ளன; இதனை, "முகம் வ்யாகரணந் தஸ்ய ஜ்யோதிஷந் நேத்ர முச்யதே, நிருக்தம் ச்ரோத்ர முத்திஷ்டஞ் சந்தஸாம்விசிதிঃபதே, சிக்ஷாக்ராணந்து வேதஸ்ய ஹஸ்தௌ கல்பாந்ப்ரசக்ஷதே" என்னும் சுலோகத்தாலுமறிந்து கொள்க; இது பாணினீயவ்யாகரணத்தைச் சார்ந்ததும், பட்டோஜிதீக்ஷிதராற் செய்யப்பட்டதுமாகிய சப்தகௌஸ்துபமென்னும் வடநூலின் முதலிலுள்ளதாகிய பஸ்பசமென்னுமாந்நிகத்தில் உதகரிக்கப்பட்டதென்பர். இதுபற்றியே கற்பம் முதலியவாறும் வேதாங்கமெனப்படும்; "ஆறங்கமாவன: உலகியற் சொல்லையொழித்து வைதிகச் சொல்லையாராயும் நிருத்தமும், அவ்விரண்டையும் உடனாராய்ந்த ஐந்திரத் தொடக்கத்து வியாகரணமும், போதாயனீயம் பாரத்துவாசம் ஆபத்தம்பம் ஆத்திரேயம் முதலிய கற்பங்களும், நாராயணீயம் வாராகம் முதலிய கணிதங்களும், எழுத்தாராய்ச்சியாகிய பிரமமும், செய்யுளிலக்கணமாகிய சந்தமு

சார்பிற் றோன்று வாரண வேதக்
காதி யந்த மில்லையது நெறியெனும்
௧0௫ வேதிய னுரையின் விதியுங் கேட்டு
மெய்த்திறம் வழக்கென விளம்புகின்ற
வெத்திறத் தினுமிசை யாதிவ ருரையென
வாசீ வகநூ லறிந்த புராணனைப்
பேசுநின் னிறையார் நூற்பொருள் யாதென
௧௧0 வெல்லையில் பொருள்களி லெங்குமெப் பொழுதும்
புல்லிக் கிடந்து புலப்படுகின்ற

---

மாம்" (தொல். புறத். சூ. உ0; கலி. கடவுள்.) என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

௧0௩. சார்பிற்றோன்று - ஓரிடத்திற்றோன்றுத; ஸ்வயம்புவென்றபடி. திருவள்ளுவமாலையில் வெள்ளிவீதியார் (௩உ) பாட்டில் வேதம், "செய்யாமொழி" என்று கூறப்பட்டிருத்தல் காண்க; இக்கருத்தை, "நாத்திக மல்லது சொல்லலை யாயின்மு னுள்பயந்த, சாத்திர மாவது வேதமன் றேவது தான்சயம்பு, சூத்திரி நீயது வல்லை யலாமையிற் சொல்லுகிலாய்,போத்தந்தி யோவதன் றீமையென் றன்பொங்கிப் பூதிகனே", "பூதிகன் றனது சொல்லலும் யானது வல்லனெல்லாஞ், சாதிகண் டாயெனத் தான்றளா ராதது சாற்றுகென்றுட், காதியென் றனுமொ ரந்தமென் றனுமுண் டேலதற்கு, நீதினுயி னுலுரை நீயினி யானது நேர்வனென்றான்" (நீல. வேத. செய். ௩-௪) என வருவனவற்றா லுணர்க. வேதக்கு-வேதத்திற்கு ௧0௫. வேதியன் - வேதவாதி.

௧0௬. மெய்த்திறம் - நூல்வகைகள்; மெய்யுணர்த்துவனவற்றை மெய்யென்றார்; "மெய்த்திறம் வழக்கு நன்பொருள் வீடு" (௧:௧௧) என முன்பு வந்திருத்தல் காண்க. "யாமெய்யாக் கண்டவற்றுள்" (௩00) என்னும் திருக்குறளில், 'மெய்' என்பது இப்பொருளதாதலறிக. வழக்கு-உலகியல்.

௧0௬ - எ. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ளவை மணிமேகலையின் உட்கோள்.

ஆசீவகவாதம்:—

௧0அ. ஆசீவகநூல் - சமணசமயத்தின் பாகுபாடு இரண்டனுள் ஒருவகைக்குரிய நூல்; "அன்னதோர் வாய்மை யாசீ வகனம ணர்களிற் கூறும்" (சிவ. சித்தி. பரபக்கம், ஆசீவகமதம், ௧.) புராணன் - முதியோன். ஆசீவகமதம், முற்காலத்துச் சமதண்டமென்று பெயருள்ள ஓரூரிற் பரவியிருந்ததென்று தெரிகின்றது; நீல.

௧0௯. இறை யார் - கடவுள் யாவன். நூற்பொருள் யாதென - உனது நூலிற் சொல்லப்படும் பொருள் என்னவென்று மணிமேகலை கேட்ப.

௧0அ-௯. "ஆத்தனு நூலும் பொருளு நிகழ்ச்சியும், பாத்தன சொல்லிற் பயம்பெரி தாதலி, னேத்துரை யேயிங் குரையென் றுரைத்தனள், சாத்திரம் யாவையுந் தன்னிக ரில்லாள்" நீல. ஆசீவக. செய் ௧உ.

(பி - ம்.) ௧0௩ - ௪. 'வேதத், தாதியந்த மில்லை யதுவே நெறியெனும்'

வரம்பி லறிவ னிறைநூற் பொருள்களைந்
தூரந்தரு முயிரோ டொருநால் வகையணு
வவ்வணு வுற்றுங் கண்டு முணர்ந்திடப்
௧௧௫ பெய்வகை கூடிப் பிரிவதுஞ் செய்யு
நிலநீர் தீக்காற் றெனநால் வகையின
மலைமர முடம்பெனத் திரள்வதுஞ் செய்யும்
வெவ்வே றாகி விரிவதுஞ் செய்யு
மவ்வகை யறிவ துயிரெனப் படுமே
௧௨௦ வற்ப மாகி யுறுநிலந் தாழ்ந்து
சொற்படு சீதத் தொடுசுவை யுடைத்தா
யிழினென நிலஞ்சேர்ந் தாழ்வது நீர்தீத்
தெறுதலு மேற்சே ரியல்பு முடைத்தாங்

---

௧௧௨. வரம்பிலறிவன் இறை - அநந்தஞானியாகிய மற்கலிதேவனே எமது கடவுள், நூற்பொருள்கள் ஐந்து - நவகதிரென்னும் நூலிற் கூறப்பட்டுள்ள பொருள்கள் ஐந்தாகும்.

௧௧௩. அப்பொருள்கள் உயிரும் நால்வகை அணுக்களுமாம்.

௧௧௨ - ௩. ஆசீவக மதத்தினர்க்குத் தெய்வம் மற்கலியென்பதூஉம், நூல் நவகதிரென்பதும், அதிற் கூறப்பட்ட பொருள்கள ஐந்தென்பதும் ஆகிய இவற்றை, "என்றலு மற்கலி தானே யிறையினி, யொன்பது வாங் கதிர் நூல்யா முடையன, மன்பெறு நுண்பொரு ளைந்தியல் பாயவை, யின்ப நிகழ்ச்சியுங் காழ்ப்பா டெனச்சொல" (நீல. ஆசீவக. செய். ௩௩) என்பதனாலறிந்துகொள்க; "மற்கலி நூலின் வகையிது" (௧௬௫) என்று இக்காதையிலேயே பின்வருதல் காண்க.

௧௧௪. அவ்வணுவென்றது உயிரை.

௧௧௫. கூடி - நிலவணுமுதலிய நால்வகையணுக்களோடுங்கூடி.

௧௧௪ - ௫. இவ்வடிகள் உயிரணுவின் இலக்கணங்கூறின.

௧௧௬. மேற்கூறிய நால்வகையணுக்களும் இவையென்றபடி.

௧௧௭ - ௮. அந்நால்வகையணுக்களும் திரள்வதுஞ்செய்யும்; விரிவதுஞ்செய்யும்.

௧௧௬ - ௮. இவ்வடிகளால் மேற்கூறிய நால்வகையணுக்களின் பொதுவிலக்கணம் கூறப்பட்டது.

௧௨௦. வற்பம் - வன்மை. நிலம் வற்பமாகியுறும்.

௧௨௦ - ௨௨. தாழ்ந்து உடைத்தாய்ச்சேர்ந்து ஆழ்வது நீரென்க.

௧௨௩. தெறுதல் - சுடுதல்.

௧௨௨ - ௩. தீ, பெறுதலும் மேற்சேரியல்பும் உடைத்து.

(பி . ம்.) ௧௧௩ - ௪. 'நால்வகையினு, மூவணு'

காற்று விலங்கி யசைத்தல் கடனிவை
௧௨௫ வேற்றியல் பெய்தும் விபரீ தத்தா
லாதி யில்லாப் பரமா ணுக்க
டீதுற் றியாவதுஞ் சிதைவது செய்யா
புதிதாய்ப் பிறந்தொன் றொன்றிற் புகுதா
முதுநீ ரணுநில வணுவாய்த் திரியா
௧௩௦ வொன்றிரண் டாகிப் பிளப்பதுஞ் செய்யா
வன்றியு மவல்போற் பரப்பதுஞ் செய்யா
வுலாவுந் தாழு முயர்வதுஞ் செய்யுங்
குலாமலை பிறவாக் கூடும் பலவும்
பின்னையும் பிரிந்துதந் தன்மைய வாகு
௧௩௫ மன்னிய வயிரமாய்ச் செறிந்துவற் பமுமாம்
வேயாய்த் துளைபடும் பொருளா முளைக்குந்
தேயா மதிபோற் செழுநில வரைப்பா
நிறைந்தவிவ் வணுக்கள் பூதமாய் நிகழிற்
குறைந்து மொத்துங் கூடா வரிசையி



---

௧௨௪. விலங்கி - குறுக்கிட்டு. இவை - இவ்வணுக்கள்.

௧௧௯ - ௨௪. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள ஐந்துபொருள்களின் இயல்பைப் பின்வருஞ் செய்யுட்களாலுமறிக: "நிலநீ ரெறிகாற் றுயிரின் னியல்பும், பலநீ ரவற்றின் படிபா லவைதாம், புலமா கொலியொன் றொழிய முதற்காஞ், சலமா யதுதண் மையையே முதலாம்", "எறித்தன் முதலா யினதீ யினவாஞ், செறித்தல் லொலியோ டிவைகாற் றினவா, மறித்தல் லறிதல் லவைதா முயிராங், குறித்த பொருளின் குணமா லிவையே." நீல. ஆசீவக. ௭ - ௮.

௧௨௫. வேற்றியல்பு - வேறுதன்மை.

௧௨௭. யாவதும் - சிறிதும். சிதைவது - அழிதல்.

௧௩௧. அவல்போல் - அவலைப்போல. ௧௩௫. வற்பம் - வன்மை.

௧௩௬. வேய் - மூங்கில். ௧௩௭. தேயாமதி - முழுமதி.

௧௩௯. குறைந்தும் ஒத்தும் கூடா - பின் சொல்லப்படுமளவிற் குறைந்தும் அளவொத்துங் கூடுவனவல்ல.

௧௩௯ - ௪௧. "ஒன்றினை யொருவி மூன்றங் குற்றிடா விரண்டு விட்டு, நின்றிடா திரண்டு கூடு நெறியில நான்கு நீர்மூன், றின்றிரண் டழல்கா லொன்று விசைந்திடும் பூமி யிவ்வா, றென்றுநீர் நீகா லாதி யீண்டுவ தென்றி யம்பும்" (சிவ - சித்தி. பரபக்கம், ஆசீவகன்மதம், ௭) எனவருதல் காண்க.

(பி - ம்.) ௧௨௪. 'ஆற்றுவிலங்கே யசைத்தல்கடிவை' ௧௨௫. 'வேற்றியலெய்தும்' ௧௨௭. 'யாதுஞ்சிதைவது' ௧௨௮. 'புத்தாப்பிறந்தொன்று' ௧௩௩. 'பிறவாய்க் கூடுமலையும்' ௧௩௪-௫. 'தன்மையதாக, வன்னிய' ௧௩௬. 'வேயிரத்துளைப்படும்' ௧௩௭. 'வரைப்பால்' ௧௩௯. 'கூடாவரியின்'

௧௪0 ஞென்று முக்கா லரைகா லாயுறுந்
துன்றுமிக் கதனற் பெயர்சொலப் படுமே
யிக்குணத் தடைந்தா லல்லது நிலனுய்ச்
சிக்கென் பதுவு நீரா யிழிவதுந்
தீயாய்ச் சுடுவதூங் காற்றாய் வீசலு
௧௪௫ மாய தொழிலை யடைந்திட மாட்டா
வோரணுத் தெய்வக் கண்ணோ ருணர்குவர்
தோரார் பூதத் திரட்சியு ளேனோர்
மாலைப் போதி லொருமயி ரறியார்
சாலத் திரண்மயிர் தோற்றுதல் சாலுங்
௧௫0 கருமம் பிறப்புங் கருநீலப் பிறப்பும்
பசும்ம் பிறப்பும் செம்ம் பிறப்பும்
பொன்ன் பிறப்பும் வெண்ண் பிறப்பு
மென்றிவ் வாறு பிறப்பினு மேவிப்
பண்புறு வரிசையிற் பாற்பட்டுப் பிறந்தோர்
௧௫௫ கழிவெண் பிறப்பிற் கலந்துவீ டணைகுவ

---

௧௪௩. சிக்கென்பதுவும் - வன்மை யுற்றிருத்தலும்; "வற்பமாகி யுறுநிலம்" (௧௨0) என்று இக்காதையில் முன்பு வந்திருத்தல் காண்க.

௧௪௬. தெய்வக்கண்ணோர் - கேவலஞானிகள்.

௧௪௭. தோரார் - அறியார். ஏனோர் - மற்றையோர்; என்றது, கேவல ஞானிகளல்லாதாரை.

௧௪௬ - ௭. ஓரணுவை ஏனோர் தேராரென்க.

௧௪௮. போது - காலம்.

௧௪௯. சாலும் - மேற்கூறியதற்கு உவமையாக அமையும்.

௧௫0. கரும்பிறப்பென்றது நரக சன்மத்தை.

௧௫௫. கழிவெண்பிறப்பு - மிகவெள்ளிய பிறப்பு.

௧௫0 - ௫௫. இவ்வடிகளிற் கூறிய கரும்பிறப்பு முதலியவைகள் முறையே ஒன்றற்கொன்று ஏற்றமுடையவை; "வெண்மைநன் பொன்மை செம்மை நீல்கழி வெண்மை பச்சை, புண்மையிவ் வாறி னுள்ளுங் கழிவெண்மை யோங்கு வீட்டின், வண்மைய தாகச் சேரு மற்றிவை யுருவம் பற்றி, புண்மையவ் வொட்டுத் தீட்டுக் கலப்பினி லுணரு மென்றான்" (சிவ - சித்தி. பரபக்கம், ஆசிவகன்மதம், ௮.) ஈண்டுப் பிறப்புக்களை

(பி - ம்.) ௧௪0. 'அரைக்காலாயுங்' ௧௪௧. 'மிக்கவதனிற்' ௧௪௩. 'சிக்கென்பதூஉ நீராயிழைவதூங்' ௧௪௪. 'தீயாச்சுடுவதுங் காற்றாய் வீசுவதும்' ௧௪௫-௬. 'மாட்டா, தோரணு' ௧௪௭. 'நோலாபூதத் திரட்சியுளானோர்' ௧௪௮. 'மயிருமறியார்' ௧௫௪ - ௫. 'பாற்படக் கழிந்த, கழிவேய் பிறப்பிற் கலந்து வீடணைவர்'

ரழியல் வேண்டா ரதுவுறற் பாலா
ரிதுசெம் போக்கி னியல்பிது தப்பு
மதுமண் டலமென் றறியல் வேண்டும்
பெறுதலு மிழத்தலு மிடையூ றுறுதலு
௧௬௦ முறுமிடத் தெய்தலுந் துக்கசுக முறுதலும்
பெரிதவை நீங்கலும் பிறத்தலுஞ் சாதலுங்
கருவிற் பட்ட பொழுதே கலக்கு
மின்பமுந் துன்பமு மிவையுமனு வெனத்தகு
முன்னுள வூழே பின்னுமுறு விப்பது
௧௬௫ மற்கலி நூலின் வகையிது வென்னச்
சொற்றடு மாற்றத் தொடர்ச்சியை விட்டு

வகுத்துக் கூறியதுபோல, "மணியுயிர் பொன்னுயிர் மாண்ட வெள்ளியி, னணியுயிர் செம்புயி ரிரும்பு போலவாம், பிணியுயி ரிறுதியாப் பேசி னேனினித், துணிமின மெனத்தொழு திறைஞ்சி வாழ்த்தினர்" (சீவக. ௩௧௧௧) என்று உயிர்களை வகுத்துக் கூறியிருத்தல் காண்க.

௧௫௬. 'அது' என்றது, கழிவெண்பிறப்பினை.

௧௫௭. 'இது' என்றது, கரும்பிறப்புமுதல் கழிவெண் பிறப்பு இறுதியாகவுள்ள பிறப்புக்களில் முறையே பிறந்து வீடுபெறுதலை.

௧௫௯ - ௬௨. பெறுதல்முதற் சாதலீறாகவுள்ளவைகள் கருவிற் சேர்ந்தபொழுதே கலப்பனவாம். [படும்.

௧௬௩. இன்பதுன்பங்களாகிய இவைகளும் அணுவென்று கூறப்

௧௫௯ - ௬௪. இவ்வடிகளின் பொருளோடு, "பேறிழ விடையூ றின்பம் பிரிவிலா திருக்கை மற்றும், வேறொரு நாட்டிற் சேறல் விளைந்திடு மூப்புச் சாதல், கூறிய வெட்டு முன்னே கருவினுட் கொண்ட தாகுந், தேறிய வூழிற் பட்டுச் செல்வதிவ் வுலக மென்றான்", "புண்ணிய பாவ மென்னு மிரண்டணுப் பொருந்த வைத்தே, யெண்ணிய விவற்றி னோடு மேமென வெங்களோடு, நண்ணிய வொருவன் கூறு ஞானமிவ் வாற தென்று, கண்ணிய கருத்தி னோர்கள் கதியினைக் காண்ப ரென்றான்" (சிவ-சித்தி. பரபக்கம், ஆசீவகன். ௯-௧௦) என்னும் செய்யுட்களை ஒப்பிடுக.

௧௬௫. மற்கலிதேவனது ஒன்பது கதிரென்னும் நூலிற் கூறப்பட்டுள்ள வகை இதுவாகுமென்று ஆசீவகமதத்தோன் சொல்ல.

௧௬௬. சொற்றடுமாற்றத்தொடர்ச்சி - தடுமாற்றச் சொற்றொடர்ச்சி; என்றது, பூர்வோத்தர விரோதமுள்ள ஆசீவகமதத்தோன் கூற்றை.

(பி - ம்.) ௧௫௬. 'அழியல்வேண்டா வதுவுறற்பாலர்' ௧௫௮. 'வேண்டுதலும்' ௧௫௯. 'இறத்தலும்' ௧௬௦. 'உடமிறுத்தெய்தலுந் துக்கமுஞ் சுகமிறுறலும்' ௧௬௨. 'பொழுதேபிறக்கு', 'பொழுதேயிறக்கும்.' ௧௬௩. 'இவையிவையெனத்தகு' ௧௬௫. மறக்கலின்னூலின் வகையிதுவென்று.' ௧௬௬. 'சொற்றமாற்றத்'

நிகண்ட வாதியை நீயுரை நின்றற்
புகழுந் தலைவன்யார் நூற்பொருள் யாவை
யப்பொரு ணிகழ்வுங் கட்டும் வீடு
௧௭௦ மெய்ப்பட விளம்பென விளம்ப லுறுவோ
னிந்திரர் தொழப்படு மிறைவனெம் மிறைவன்
றந்த நூற்பொரு டன்மாத்தி காயமு
மதன்மாத்தி காயமுங் காலா காயமுந்
தீதில் சீவனும் பரமா ணுக்களு
௧௭௫ நல்வினை யுந்தீ வினையுமவ் வினையாற்
செய்வுறு பந்தமும் வீடுமித் திறத்த
வான்ற பொருடன் றன்மைய தாயுந்
தோன்றுசார் வொன்றின் றன்மைய தாயு

---

௧௭௦. மெய்ப்பட - உண்மைப்பட.

௧௬௭ - ௭௦. நிகண்ட வாதியை நோக்கி உங்கள் தலைவன் யார்? நூற்பொருள்கள் யாவை? அப்பொருள்களின் நிகழ்ச்சியையும், பந்தத்தையும், வீட்டினையும் சொல்லுவாயென்று மணிமேகலைகேட்ப. நிகண்ட வாதி - சமணர் இருதிறத்தாரில் ஒருவகையான்; இவன் நிர்க்கந்தவாதி யென்றும் திகம்பரவாதி யென்றுங் கூறப்படுவன். இறைவன், நூல், பொருள், பொருணிகழ்வு என்னும் இந்நான்கினையும் முறையே ஆப்தன், ஆகமம், பதார்த்தம், பிரவர்த்தியென்பர்.

நிகண்டவாதம்:—

௧௭௧. சதேந்திரர்களாலே வணங்கப்படும் அருகனே எமது ஸ்வாமி; சதேந்திரராவார்: பவனேந்திரர் நாற்பத்திருவரும், வியந்தரேந்திரர் முப்பத்திருவரும், கற்பேந்திரர் இருபத்திருவரும், சந்திரனும் சூரியனும் நரேந்திரனும் மிருகேந்திரனுமென்பார்.

௧௭௨. தந்த நூற்பொருள் - அருகன் உண்டுபண்ணியஅங்காகமம் பூர்வாகமம் பகுசுருதியாகமமென்னு மூன்று ஆகமங்களிலும் கூறப்பட்டுள்ள பொருள்கள்.

௧௭௩. காலமும் ஆகாசமும்.

௧௭௨ - ௬. தந்தநூற்பொருள்கள் தருமாத்திகாயம் முதல் வீடு இறுதியாகவுள்ள இந்தப் பத்துப் பகுதியின.

௧௭௧ - ௬. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள இறைவனையும் அவன் கூறிய நூற்பொருள்கள் பத்தையும், "எனக்கேட்டாங் கெடுத்துரைப்பா னிந்திரர்க டொழப்படுவான், றனக்காய தருமமு மதருமமுங் காலமு, மனப்பாட்டி லாகாய முயிருருவும் புண்ணியமே, நினைக்குங்காற் பாவமே கட்டுவீ டெனவிறுத்தி" (நீல. மொக்கல. ௨௨) என்னும் செய்யுளாலும் அறிந்துகொள்க.

(பி - ம்.) ௧௬௮. 'புகழ்ந்த தலைவன்'

மநித்தமு நித்தமு மாகி நின்று
௧௮௦ நுனித்த குணத்தோர் கணத்தின் கண்ணே
தோற்றமு நிலையுங் கேடு மென்னு
மாற்றரு மூன்று மாக்கலு முரித்தா
நிம்ப முளைத்து நிகழ்த னித்திய
நிம்பத் தப்பொரு ளன்மை யநித்தியம்
௧௮௫ பயற்றுத் தன்மை கெடாதுகும் மாய
மியற்றி யப்பய றழிதலு மேதுத்
தருமாத்தி காயந் தானெங்கு முளதாய்ப்
பொருள்களை நடத்தும் பொருந்த நித்தியமா

---

௧எ௯ - ௮௦. ஒருபொருள் ஒரேகணத்தில் அநித்தியத்தன்மை நித்தியத்தன்மையென்னும் இரண்டையும் அடையுமென்பதை, "கல்வியா னல்லனே காமாதி யாற்றீயன், செல்வத் துயர்ந்தான் குலத்தினிற் றாழ்ந் தனனும், வல்லுவா னென்றொன்று வல்லா னிதுவன்றே, நில்லாமை நித்த நிலை" (நீல. மொக்கல. ௧௧ரு, சமய.) என்பதனாலு முணர்க. கணம் - க்ஷணம்.

௧௮௦ - ௮௨. ஒருபொருள் ஒரேகணத்தில் உற்பத்தி ஸ்திதி நாச மென்று மூன்றையுமடையுமென்பதை, "உருவப் பிழம்பப் பொருளென் றுரைப்பனிப் பாறயிர்மோர், பருவத்தி னும்பரி யாயப் பெயரென்பன் பாலழிந்து, தருவித் துரைத்த தயிருரு வாய்மும்மைத் தன்மையதாந், திருவத்த தென்பொரு ளாதலைத் தேர தெளியிதென்றான்" (நீல. மொக்கல. ௧உஉ) என்னுஞ் செய்யுளாலும், 'உருவப்பிழம்பாகிய புற்கலத் தைப் பொருளென்பேன்; பால்தயிர் முதலாயின அதனது பரியாய மென்பேன்; பாற் பரியாயத்து நின்ற புற்கல திரவியம் தயிர்ப்பரியாய மடைந்து பரிணமித்தலின் உற்பத்தி ஸ்திதி விநாசாத்மகமாகித் தூஷிக் கப்படாத பெருமைத்தாம் என்பொருளென்று தெளியென்று சொன் னார்' என்னும் அதனுரையாலு மறிந்துகொள்க.

௧எஎ - ௮உ. பொருள் உரித்தாமென்க. ௧௮ரு. நிம்பம் - வேம்பு.

௧௮௫ - ௬. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள திருஷ்டாந்தத்தின் இயல்பை, "பெற்றது தானுங்கும் மாயத் திரிபு பயற்றியல்பே, யிற்ற திதுவென திட்டமென் பாயிவ் விருமையினுக், தெற்றெனத் தீர்ந்தோர் பொருளென்னை தேற்றினித் தேற்றலையேன், மற்றது வாமை மயி ரெனச் சொல்லுவன் மன்னுமென்றான்" (நீல. மொக்கல. ௧உரு) என் பதனாலுமுணர்க. கும்மாயம் - புழுக்கிய பச்சைப்பயற்றோடு சருக் கரை முதலியன கூட்டி ஆக்கப்படுவதொரு சிற்றுண்டி; இஃது இப் பெயரோடு விஷ்ணுவாலயங்களில் இக்காலத்தும் வழங்கிவருகின்றது; "கும்மாயத்தொடு வெண்ணெய்விழுங்கி" (திவ். பெரியாழ்வார். ரு. ரு: ரு) என்பதில், 'கும்மாயம்' என்பதற்கு ஸ்ரீமணவாளமாமுனிகள், 'குழையச்சமைத்தபருப்பு' என்று பொருள்செய்திருக்கின்றனர்; "பயற் றது கும்மாயம்" நன். சூ. உ௬௬, மயிலை. மேற்.

௧௮எ - ௮. தருமாத்திகாயம் எங்குமுளதாகி எக்காலத்தும் பொருள்களை நடத்துமென்க.

வப்படித் தாகி யதன்மாத் திகாயமு
கக௱ மெப்பொருள் களையு நிறுத்த லியற்றுங்
காலங் கணிக மெனுங்குறு நிகழ்ச்சியு
மேலுங் கற்பத் தின்னெடு நிகழ்ச்சியு
மாக்குமா காய மெல்லாப் பொருட்கும்
பூக்குமிடங் கொடுக்கும் புரிவிற் றுகுஞ்
கக௫ சீவ னுடம்போ டொத்துக் கூடித்
தாவில்சுவை முதலிய புலன்களை நுகரு
மோரணு புற்கலம் புறவுரு வாகுஞ்

---

கஅக - க௦. அதன்மாத்திகாயம் எப்பொருள்களையும் நிற்கச்செய்யும்.

கஅஎ - க௦. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள தருமாத்திகாயம் அதருமாத்திகாயங்களின் இலக்கணங்களைப் பின்வருபவைகள் நன்கு புலப்படுத்தும்: "அத்தியா யமூர்த்தியா யளவி றேசியா, யொத்தள வுலகினோ டுலக லோகமாந், தத்துவந் தனைச்செய்து தம்மத் தம்மமா, மத்திகள் செலவொடு நிலையிற் கேதுவாம்", "அச்சுநீர் தேரொடு மீனை யீர்த்திடா, வச்சுநீ ரன்றியத் தேரு மீன்செலா,வச்சுநீர் போலத்தம் மத்தி சேறலை, யிச்சையு முயற்சியு மின்றி யாக்குமே", "அந்தரத் தறுபத்து மூன்ற தாகிய, விந்திர படலமு நிரைய மேழ்களு, மந்தர மலைமண்ணு மற்று நின்றிடா, வந்தமி னிலையதம் மத்தி யில்லையேல்", "பறவையின் சிறகொடு பாத நின்றுழி, நெறியினாற் செலவொடு நிலையை யாக்குமா, லுறவிபுற் கலமிவை யோட நிற்றலைச், செறிவுறத் தம்மத்தம் மத்தி செய்யுமே" (மேருமந்தர. வைசயந்தன்முத்தி. அஅ, க௦, கக, கஉ); "தருமாத்திகாயம், குயவன் திகிரிக்குக் கீழிட்டசிலைபோலவும், தேருக்கு அச்சுப்போலவும், கலத்திற்குக்கடல்போலவுமாம்", "தருமாத்தியும் அதருமாத்தியும் பக்ஷிக்குச் சிறகுங் காலும்போற் சீவபுற்கலங்களுடைய கமனத்திற்கும் ஸ்திதிக்கும் அப்பிரேரகசாதனமாம்" நீல. மொக்கல. உஎ - அ, சமய. கககக. கணிகம் - க்ஷணிகம்.

கககக - ந. காலம் குறுநிகழ்ச்சியையும் நெடுநிகழ்ச்சியையுமாக்கு மென்க; "க்ஷணிகமென்பது எழுசெங்கழுநீரிதழை ஒரு குறட்டிலடுக்கிப் பலவானுயினொருவன் மிகவுங் கூரியதோருளிவைத்துக் கூடமிட்டுப் புடைத்தால் ஆறும்புரையற்று ஏழாம்புரையிற் செல்லுமளவாம்; இனிக்கற்பமாவது, ஒசனையகன்றுயர்ந்ததோர் வச்சிரமலை கருப்பிணியுடுத்த பட்டாடைத் தோகைபட்டுக் கையறத்தேய்ந்ததாம்" நீல. மொக்கல. நக, சமய.

கககந - ச. ஆகாயம் எல்லாப்பொருட்கும் இடங்கொடுக்குஞ் செயலையுடையது; "பரந்திடங் கொடுக்கும் விசும்புதோ யுள்ளம்" மலைபடு. ௫௫அ.

கக௫ - சு. சீவன் உடம்போடொத்துக்கூடிப் புலன்களை நுகரும்.

ககஎ. ஓரணு - பரமாணு; அவ்வணு புற்கலமும் புறவுருவுமாகும். புற்கலமென்றது உடம்பை; புறவுருவென்றது மற்றை வடிவங்களை.

(பி - ம்.) கக௫. 'ஒத்துத் தோன்றி'

சீர்சா னல்வினை தீவினை யவைசெயும்
வருவழி யிரண்டையு மாற்றி முன்செ
உ00 யருவினைப் பயனனு பவித்தறுத் திடுத
லதுவீ டாகு மென்றன னவன்பி
னிதுசாங் கியமத மென்றெடுத் துரைப்போன்
றனையறி வரிதாய்த் தான்முக் குணமாய்
மனநிகழ் வின்றி மாண்பமை பொதுவா
உ0ரு மெல்லாப் பொருளுந் தோன்றுதற் கிடமெனச்
சொல்லுதன் மூலப் பகுதிசித் தத்து
மானென் றுரைத்த புத்தி வெளிப்பட்
டதன்கணு காயம் வெளிப்பட் டதன்கண்
வாயு வெளிப்பட் டதன்க ணங்கி
உக0 யானது வெளிப்பட் டதன்க ணப்பின்
றன்மை வெளிப்பட் டதின்மண் வெளிப்பட்
டவற்றின் கூட்டத் தின்மனம் வெளிப்பட்
டார்ப்புறு மனத்தாங் கார விகாரமு
மாகா யத்திற் செவியொலி விகாரமும்

---

ககஅ. நல்வினை நல்வினையையும், தீவினை தீவினையையும் உண்டாக்கும்; இன்பதுன்பங்களை யுண்டாக்குமெனினும் பொருந்தும்.

பந்தத்தினிலக்கணங்கூறிற்றிலர், "அவ்வினையாற், செய்வுறு பந்தமும்" (களரு - கூ) என்று முன்னர்க் கூறினமையின்.

ககக. வருவழியிரண்டு - நல்வினைவரும்வழியும் தீவினைவரும்வழியும். முன்செய் - முற்பிறப்பிற்செய்த.

உ0க. என்றனன் - என்று நிகண்டவாதி கூறினன்.

ககக - உ0க. வீட்டிலக்கணம் இவ்வடிகளாற் கூறப்பட்டது போல, "பெரும்பாவ மறத்துய்த்துப் பெறுதும்யாம் வீடென்றே, மரும்பாவ காரிநீ யாவர்வா யதுகேட்டாய், வரும்பாவ மெதிர்காத்து மன்னுந்தம் பழவினையு, மொருங்காக வுதிர்த்தக்கா லுயிர்த்தூய்மை வீடென்றாள்" (நீல. மொக்கல. சஎ) என்னும் செய்யுளில் வந்திருத்தல் காண்க.

**சாங்கியவாதம்:—**

உ0கூ. சொல்லுதல் மூலப்பகுதி - சொல்லப்படுவது மூலப்பகுதி. சித்தம் - மூலப்பகுதி.

உ0எ. மான் - மகத்தத்துவம். மகத்தத்துவத்திற்குப் புத்தியென்றும் ஒருபெயருண்டு.

உ0கூ. அங்கி - அக்கினி. உக0. அப்பு - நீர்.

உகஉ. கூட்டம் - ஸமஷ்டி.

௨௧௫ வாயுவிற் றெக்கு மூறெனும் விகாரமு
மங்கியிற் கண்ணு மொளியுமாம் விகாரமுந்
தங்கிய வப்பில்வாய் சுவையெனும் விகாரமு
நிலக்கண் மூக்கு நாற்ற விகாரமுஞ்
சொலப்பட் டிவற்றிற் றெக்கு விகாரமாய்
௨௨௦ வாக்குப் பாணிபாத பாயு ருபத்தமென
வாக்கிய விவைவெளிப் பட்டிங் கறைந்த
பூத விகாரத் தான்மலை மரமுத
லோதிய வெளிப்பட் டுலகாய் நிகழ்ந்து
வந்தவழியே யிவைசென் றடங்கி
௨௨௫ யந்தமில் பிரளய மாயிறு மளவு
மொன்றா யெங்கும் பரந்துநித் தியமா
மறிதற் கெளிதாய் முக்குண மன்றிப்
பொறியுணர் விக்கும் பொதுவு மன்றி
யெப்பொரு ளுந்தோன் றுதற்கிட மன்றி
௨௩௦ யப்பொரு ளெல்லா மறிந்திடற் குணர்வா
யொன்றா யெங்கும் பரந்துநித் தியமாய்
நின்றுள வுணர்வாய் நிகழ்தரும் புருடன்
புலமார் பொருள்க ளிருபத் தைந்துள
நிலநீர் தீவளி யாகா யம்மே
௨௩௫ மெய்வாய் கண்மூக் குச்செவி தாமே
யுறுசுவை யொளியூ றோசைநாற் றம்மே
வாக்குப் பாணிபாத பாயு ருபத்த

---

௨௧௫. தொக்கு - துவக்கிந்திரியம். ஊறு - பரிசம்.

௨௧௮. நிலக்கண் - நிலத்தின்கண்

௨௨௧. இவையென்றது கருமேந்திரிய பஞ்சகத்தை.

௨௨௩. ஓதிய : வினையாலணையும்பெயர்.

௨௨௭ - ௩௨. இவ்வடிகளாற் புருஷ தத்துவத்தின் இலக்கணம் கூறப்பட்டது; இதனை, "எத்திறத் தினுஞ்செய் யான்குண மொன் றிலன், றத்துவ னின்பி னபேதன லேபக, னித்திய னெங்கு முளனெங் காட்சியன், றுய்த்த லுடையனென் றோன்றலு மென்றான்" (நீல. சாங்கிய. ௭) என்பதனாலுமறிந்துகொள்க.

(பி - ம்.) ௨௨௭. 'முக்குணமின்றி' ௨௨௮. 'பொருளுமின்றி'

மாக்கு மனோபுத்தி யாங்கார சித்த
முயிரெனு மான்மா வொன்றொடு மாமெனச்
உ௪0 செயிரறச் செப்பிய திறமுங் கேட்டு
வைசே டிகநின் வழக்குரை யென்னப்
பொய்தீர் பொருளுங் குணமுங் கருமமுஞ்
சாமா னியமும் விசேடமுங் கூட்டமு
மாமா று கூறு மதிப்பொரு ளென்பது
உ௪௫ குணமுந் தொழிலு முடைத்தா யெத்தொகைப்
பொருளுக்கு மேதுவா மப்பொரு ளொன்பான்
ஞாலநீர் தீவளி யாகா யந்திசை
கால மான்மா மனமிவற் றுண்ணில
மொலியூறு நிறஞ்சுவை நாற்றமொ டைந்தும்
உ௫0 பயில்குண முடைத்து நின்ற நான்குஞ்
சுவைமுத லொரோகுண மவைகுறை வுடைய

உ௩௮ புத்தி - மகத்தத்துவம். சித்தம் - பிரகிருதி.

உ௩௩ - ௯. இவ்வடிகளால் இருபத்தைந்து தத்துவங்களும் கூறப்பட்டன; இதனை, "மன்னுயிர் தெற்றெனவில்லது மான்செருக், கென்னவு மிந்திய மைந்தைந் தொருமன, மன்னதன் மாத்திரை யைந்தைந்து பூதமும், பன்னிய வையைம் பதப்பொரு ளென்றான்" (நீல. சாங்கிய. ௬) என்பதனாலுமுணர்க; தெற்றெனவில்லது - பிரகிருதி. செருக்கு - அகங்காரம்.

உ௪0. கேட்டு - மணிமேகலை கேட்டு.

உ௪௧. உரையென்ன - சொல்வாயென்று மணிமேகலை கேட்ப.

வைசேடிகவாதம்:—

உ௪௩. சாமானியம் - பொதுமை. விசேடம் - சிறப்பு. கூட்டம் - சமவாயம்; இதனை உடன்புணர்ப்பென்றும் கூறுவர்.

உ௪௪. ஆறுகூறும் - ஆறுபகுதியாகும்.

உ௪௬. அப்பொருள் ஒன்பான் - அந்தப்பொருள் ஒன்பது வகைப் [படும்.

உ௪௪ - ௬. பொருளென்பது உடைத்தாய் ஏதுவாகும்.

உ௫0. நின்றநான்கு - நீர் தீ காற்று ஆகாயமென்பன.

உ௫௧. சத்தம் முதல் நாற்றம் இறுதியாகிய ஐந்தனுள், நீர் சத்தம் முதலிய நான்கு குணங்களையும், தீ சத்தம்முதலிய மூன்றினையும், காற்றுச் சத்தம் முதலிய இரண்டினையும், ஆகாயம் சத்தமொன்றினையு முடையன.

திசை முதலிய நான்கின் இலக்கணங்களும் ஒரு பிரதியிலும் காணப் படவில்லை; பின் வருவனவற்றுள்ளும் சில இப்படியே யுள்ளன.

வோசை யூறு நிறநாற் றஞ்சுவை
மாசில் பெருமை சிறுமை வன்மை
மென்மை சீர்மை நொய்ம்மை வடிவ
உருரு மென்னு நீர்மை பக்கமுத லனேகங்
கண்ணிய பொருளின் குணங்க ளாகும்
பொருளுங் குணமுங் கரும மியற்றற்
குரிய வுண்மை தருமுதற் பொதுத்தான்
போதலு நிற்றலும் பொதுக்குண மாதலிற்
உசுo சாதலு நிகழ்தலு மப்பொருட் டன்மை
யொன்றணு கூட்டங் குணமுங் குணியுமென்
றொன்றிய வாதியு முரைத்தன னுடனே
பூத வாதியைப் புகனீ யென்னத்
தாதகிப் பூவுங் கட்டியு மிட்டு
உசுரு மற்றுங் கூட்ட மதுக்களி பிறந்தாங்

உருஉ - சு. இவ்வடிகளாற் குணங்கள் பகுத்துக் கூறப்பட்டன.

உருஎ - அ. பொருளும் குணமும் கருமத்தைச் செய்தற்கு உரிமையையுடையன; பொருள் குணமென்னும் இரண்டாலும் நிகழ்வது கருமமென்றபடி. உண்மை - ஸத்துவம். முதற்பொது - பரசாமானியம்; முதற்பொது உண்மை தருமென்க.

உசுக. ஒன்று - விசேடம். அணு - பிருதிவிமுதலிய நான்கு பூதங்களின் பரமாணுக்கள். ஒன்று அணுவிலுள்ளதென்க. கூட்டம் - ஸமவாயம். இவ்வடி விசேடத்தின் இலக்கணமும், சமவாயத்தின்இலக்கணமும் கூறிற்று.

உசுஉ. ஒன்றியவாதி - விசேடவாதி.

உசஉ - சுஉ. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள பொருள்கள் ஆறினியல்பை, "நெறியெனப் படுவது நின்ற மெய்ம்மையங், கறிதலுக் கரியன வாறு சொற்பொருள், செறியயான் சொலிறி ரப்பியங் குணந் தொழில், பொறியினுய் பொதுச்சிறப் புடன்பு ணர்ப்பதே", "பூதமைந் தொடுதிசை மனம் பொழுதுயி, ரோதினப் பொருள்கடா மொன்பதாமவை, நீதியிற் குணமவற் றியல்பு செய்கையும், போதரும் பொருட்புடை பெயர்ச்சி யாகுமே", "பெரியதும் பின்னது மாய தப்பொது, வுரிதினிற் பொருள்களைச் செலுத்து மொற்றுமை, தெரிவுற வருவது சிறப்ப தாங்குணக், கிரியைக ளிதற்கெனக் கிளத்தல் கூட்டமே" (நீல. வைசேடிக. ரு-டு) எனவருஞ் செய்யுட்களாலுமுணர்க.

உசுரு. புகல் நீ என்ன - நீசொல்வாயென்று மணிமேகலைசொல்ல.

**பூதவாதம்:—**

உசுச. தாதகிப்பூ - ஆத்திப்பூ. கட்டி - கருப்புக்கட்டி.

உசுடு. மற்றுங்கூட்ட - கூட்டற்குரிய மற்றைப் பொருள்களையுங் கூட்ட. மதுக்களி பிறந்தாங்கு - மதுவினிடத்துள்ள மதசக்தி தோன்றினாற்போல.

குற்றிடும் பூதத் துணர்வு தோன்றிடு
மவ்வுணர் வவ்வப் பூதத் தழிவுகளின்
வெவ்வேறு பிரியும் பறையோ சையிற்கெடு
முயிரொடுங் கூட்டிய வுணர்வுடைப் பூதமு
உ௭0 முயிரில் லாத வுணர்வில் பூதமு
மவ்வப் பூத வழியவை பிறக்கு
மெய்வகை யிதுவே வேறுரை விகற்பமு
முண்மைப் பொருளுமுலோ காயத னுணர்வே
கண்கூ டல்லது கருத்தள வழியு
உ௭௫ மிம்மையு மிம்மைப் பயனுமிப் பிறப்பே
பொய்ம்மை மறுமையுண் டாய்வினை துய்த்த

---

உ௬௬. பிருதிவி முதலிய ஐந்து தத்துவங்களின் சமவாயத்தில் அறிவு உதிக்கும்; பூதங்கள் ஐந்து உண்டென்பது பூதவாதியின் கொள்கை. நிலம், நீர், தீ, வளியெனப்பூதம் நான்கேயென்பது உலோகாயதன்கொள்கை.

உ௬அ. பறை - பேரிகை. ஓசையின் - ஓசையைப்போல.

உ௬௪ - அ. "மாமுதலாகிய ஐந்து திரவியத்தின் கூட்டத்தில் மத சக்தி பிறந்தாற்போலப் பிருதிவியாதி பஞ்சபூதசமவாயத்து ஞான சுகாதி தோன்றி அவை வளர வளர்ந்து அந்தப் பூதங்கள் பிரிந்தால் அவை தம்மினமாகிய பூதங்களிற் சென்று சேரும்" நீல. பூத. ௫, சமய.

உ௭உ. வேறு உரைவிகற்பமும் - யான்கூறும் வேறுள்ள சொல் விகற்பங்களும்.

உ௭௩. உண்மைப்பொருளும் - தத்துவங்களும். உலோகாயத னுணர்வே - உலோகாயதனுணர்ந்தவைகளே; உலோகாயதன் கொள் கையினை, சிவஞானசித்தியார் பரபக்கத்துள்ள உலோகாயதன் மதத்தா லும், "காட்சியே அளவை யாவதென்றும், நிலம் நீர் தீ வளியெனப் பூதம்நான்கேயென்றும், அவற்றது புணர்ச்சிவிசேடத்தாற்றோன்றிப் பிரிவால் மாய்வதாய உடம்பின்கண்ணே அறிவு மதுவின்கட் களிப்புப் போல வெளிப்பட்டழியுமென்றும், இறந்தவுயிர் பின் பிறவாதென்றும், இன்பமும் பொருளும் ஒருவனுற் செய்யப்படுவனவென்றுஞ் சொல்லும் உலோகாயதம்" (குறள், உ௮௧) என்று பரிமேலழகரெழுதியவாற்றானு முணர்க.

உ௭உ - ௩. உலோகாயதன் கொள்கைகளுள் பூதம்நான்கேயென்ப தொழிந்தவைகள் தன்கொள்கையோடொக்குமாதலின், 'வேறுரை விகற்பமும் உண்மைப்பொருளு முலோகாயதனுணர்வே' என்றான்.

உ௭௪. கண்கூடு - பிரத்தியக்கப் பிரமாணம். கருத்தளவு - அனு மானப் பிரமாணம்.

உ௭௫. இப்பிறப்பே - இப்பிறப்பிலேதானே கழிவன. ஈண்டு, 'கழிவன' என்று ஒருசொல்வருவிக்க.

உ௭௬. துய்த்தல் - அனுபவித்தல். துய்த்தல் பொய்மை.

லென்றனு மெல்லா மார்க்கமுங் கேட்டு
நன்றல வாயினு நான்மா றுரைக்கிலேன்
பிறந்தமுற் பிறப்பை யெய்தப் பெறுதலி
௨௮0 னறிந்தோ ருண்டோ வென்றுநக் கிடுதலுந்
தெய்வ மயக்கினுங் கனவுறு திறத்தினு
மைய லுறுவார் மனம்வே றாம்வகை
யைய மன்றி யில்லையென் றனுமின்
றந்தை தாயரை யனுமானத் தாலல
௨௮௫ திந்த ஞாலத் தெவ்வகை யறிவாய்
மெய்யுணர் வின்றிமெய்ப் பொருளுணர் வரிய

௨௭௭. என்றலும் - என்று பூதவாதி சொல்லலும். கேட்டு - மணிமேகலைகேட்டு.

௨௬௪ - ௭௭. இவ்வடிகளிற் கூறப்பட்டுள்ளவற்றைப் பின்வருஞ் செய்யுட்கள் நன்குபுலப்படுத்தும்: "அணிகொ ளாரத் தரசவை கேட்கெனப், பிணிகொண் மூஞ்சிப் பிசாசகன் சொல்லுவான், குணிகு ணம்மெனுங் கூற்றில னலதென், றணிவைம் பூதங்க ளேதொழில் சொல்லுவேன்", "திண்ணென் நீநில நீர்வளி காயத்தாற், கண்ணு மூக்கொடு நாமெய் செவிகளாய், வண்ண நாற்றஞ் சுவையினொ டோசைலி, யெண்ணுங் காலை யியைந்துழி யெய்துமே", "ஐந்துங்கூடி யறிவின்ப மாதியா, வந்து தோன்றி மதுமயக் காற்றலி, னந்தி நாளுங் குடஞ்சுடர் நாட்டம்போற், சிந்தி னுலவை சென்றினஞ் சேருமே", "உலகெலாமவை யேயுயி ருண்டெனச், சொலவ லாருரை சொற்றெளிந் தேகின்று, பலக லாங்களுஞ் செய்ப பயனிலார், புலவ ராவதன் றேவங் குப் போந்ததே", "சென்ற காலத்துஞ் செல்கின்ற காலத்து, நின்ற காலத்தி லும்மிந் நிகழ்ச்சியே, யென்று மிவ்வுல கத்தன்மைத் தேயிது, வன்ற தென்றுரைப் பாரயர்ப் பார்களே" நீல. பூத. ௩ - ௭.

௨௭௯. முற்பிறப்பை எய்தப்பெறுதலின் - முற்பிறப்புணர்ச்சியைப் புத்தபீடிகையால் நான் அடையப்பெற்றதை; சாரியைநிற்க இரண்டனுருபு தொக்கது. 'நன்றலவாயினும்' (௨௭௮) என்பதுமுதல் 'உண்டோ' (௨௮0) என்பது இறுதியாகவுள்ளவை மணிமேகலையின் உட்கோள்.

௨௮0. என்று நக்கிடுதலும் - என்று மணிமேகலை உட்கொண்டு மறுபிறப்பில்லையென்ற பூதவாதிகூற்றை நினைந்து நகைத்து, நகைத்ததென்னை யென்று வினவிய அவனுக்குத் தான் பழம்பிறப்புணர்ந்ததைத் தெரிவித்தலும்.

௨௮௧ - ௩. நீ பழம்பிறப்புணர்ந்தேனென்றது, மையலுறுவார் மனம், தெய்வமயக்கினும் கனவுறுதிறத்தினும் வேறுபடும் விதமேயாகும்; அது, பிரத்தியக்கமன்மையாற் சந்தேகமேயன்றி வேறில்லை யென்று அவன் கூறலும்.

௨௮௩ - ௫. இவ்வடிகள், பிரத்தியக்கமன்றி அநுமான அளவை கொள்ளாத பூதவாதிக்கு அவ்வளவையுண்டென்று கூறுமுகத்தால் மறுமையுண்டென்ன மணிமேகலை சாதித்ததைக்கூறின.

௨௮௬. மெய்யுணர்வு - சத்தியஞானம். மெய்ப்பொருள் - பரமார்த்ததத்துவங்கள்.

வைய மல்லதிது சொல்லப் பெறுயென
வுள்வரிக் கோலமோ டுன்னிய பொருளுரைத்
தைவகைச் சமயமு மறிந்தன ளாங்கென்.

உஎ.—சமயக்கணக்கர்தந்திறங்கேட்டகாதை முற்றிற்று.

---

உஅஎ. ஐயமல்லது இது - இது சந்தேகமன்று. சொல்லப்பெறுய் - சொல்லாதே.

உ௯௪ - அஎ. இவ்வடிகளிற் கூறப்பட்டுள்ள பூதவாதிகூற்றுக்களும் அவற்றிற்கு மணிமேகலை கூறிய விடையுமாகிய இவை, "இறைவனு மில்லை யிறந்தோர் பிறவா, ரறனே டென்னையென் றறைந்தோன் றன்னைப், பிறவியு மறவியும் பெற்றியி னுணர்ந்த, நறுமலர்க் கோதை யெள்ளினை நகுதி, யெள்ளினை போலு மிவ்வுரை கேட்டிங், கொள்ளிய துரையென வுன்பிறப் புணர்த்துவை, யாங்குநிற் கொணர்ந்த வருந் தெய்வ மயக்கக், காம்பண தோளி கனமயக் குற்றனை, யென்றவ னுரைக்கு மிளங்கொடி நல்லா, யன்றென் றவன்மு னயர்ந்தொழி வாயலை" (உக: க0௩ - க௨)எனக் கந்திற்பாவை மணிமேகலைக்கு வருவதுரைத்ததாக முன்வந்ததனோடு ஒப்புநோக்கற்பாலன.

உஅஅ. உள்வரிக்கோலம் - மறைந்த வேடம்.

உஅ௯. இக்காதையிற் கூறியவை பத்துமதங்களாகவிருப்ப, இங்கே, 'ஐவகைச்சமயம்' என்றது இழுக்கன்றோவெனின், அளவைவாதமுதலிய ஐந்தும் ஒருவகையிலும், ஆசீவகவாதம் நிகண்டவாதமென்னும் இரண்டும் ஒருவகையிலும் அடங்குமென்பராதலின், அன்றென்க; "அவ்வுரு வென்ன வைவகைச் சமயமுஞ், செவ்விதின் மையிற் சிந்தையின் வைத்திலேன்" (உ௯ : ௪௨ - ௪) என்று அறவணவடிகளுக்கு மணிமேகலை கூறியதாகப் பின்னும் வருதல் காண்க; "ஐம் பெருஞ் சமயமு மறந்தோற் றனவென" (பெருங். க. ௩௬ : உ௪௯.) ஆங்கு - வஞ்சிநகரத்தில்.

க - உஅ௯. (மணிமேகலை) சார்ந்து அளவைவாதியை எய்தி இயம்பென, அவன் அளவைகளென்றனன்; என்றவன்றன்னைவிட்டுச் சைவவாதியை நின்தெய்வம் எப்படித்தென்ன, அவன் இறைவனொருமென்றுரைத்தனன்; பிரமவாதி முட்டை யென்றனன்; கடல்வணன் புராணமோதினன் காப்பென்றுரைத்தனன்; அவற்றோடு வேதியனுரையின் விதியுங்கேட்டு இவருரை இசையாவென்று நினைந்து, ஆசீவகனை நோக்கி, 'இறை யார்? நூற்பொருள்யாது?' என, அவன், 'வகையிது' என்ன, நிகண்டவாதியை நோக்கி, 'மெய்ப்படவிளம்பு' என அவன் அது வீடாகுமென்றனன்; அவன்பின் சாங்கியன் செப்பியதிறமுங் கேட்டு, 'வைசேடிக! நின்வழக்கையுரை' என்ன, அவனும் உரைத்தனன்; உடனே பூதவாதியைநோக்கி, 'நீபுகல்' என்ன அவன், 'வினைதுய்த்தல் பொய்ம்மை' என்றலும், நக்கிடுதலும், அவன் இல்லையென்றலும், 'எவ்வகையறிவாய்; இது சொல்லப் பெறுய்' என உரைத்து ஐவகைச் சமயமுமறிந்தனளென வினைமுடிவுசெய்க.

## இருபத்தெட்டாவது

# கச்சிமாநகர்புக்ககாதை

[இருபத்தெட்டாவது தாயரோடு அறவணரடிகளையுந் தேர்ந்து கச்சிமாநகர்க்கட்சென்றபாட்டு.]

ஆங்குத் தாயரோ டறவணர்த் தேர்ந்து
வாங்குவிற் றானை வானவன் வஞ்சியின்
வேற்று மன்னரு முழிஞைவெம் படையும்
போற்புறஞ் சுற்றிய புறக்குடி கடந்து
௫ சுருங்கைத் தூம்பின் மனைவளர் தோகையர்
கருங்குழல் கழீஇய கலவை நீரு
மெந்திர வாவியி லிளைஞரு மகளிருந்
தந்தமி லாடிய சாந்துகழி நீரும்

---

௧. ஆங்கு - வஞ்சிநகரத்தில். தாயர் - மாதவி சுதமதி.

௨. வாங்குவில் - வளைந்தவில். வானவன் - சேரன்.

௩. வேற்றுமன்னர் - பகையரசர். உழிஞைவெம்படை - உழிஞை மாலையைச்சூடி அரணைக்காக்கும் வெவ்வியபடை. உழிஞை, புறமதிலை வளைப்போரும் அதனைக்காப்போருமாகிய இருதிறத்தினரும் அணிதற்கு உரியது.

௪. போல்: உவம உருபு. புறக்குடி - புறத்தேயிருத்தற்குரிய பல வகைமாந்தரும் குடியிருக்குமிடம்; என்றது புறநகரத்தை; இது புறஞ் சிறையென்றும், புறப்படைவீடென்றும், புறஞ்சேரியென்றுங் கூறப் படும்.

௩ - ௪. புறநகர், நால்வகைப் படைவீரரும் பிறருஞ் செறிந்திருத் தற்கு இடமாதலின், இங்ஙனங்கூறப்பட்டது.

௫. சுருங்கை - நீர்செல்லுதற்குக் கற்களாற் காந்துபடுத்தது. தூம்பு - சலதாரை. சுருங்கையாகிய தூம்பென்க; "நீணிலம் வகுத்து நீர் நிரந்துவந் திழிதரச், சேணிலத் தியற்றிய சித்திரச் சுருங்கைசேர் கோணிலத்து வெய்யவாங் கொடுஞ்சுறத் தடங்கிடங்கு" (சீவக. ௧௪௨); "சுருங்கை வீதி மருங்கிற் போகி" (சிலப். ௧௪ : ௬௫); சுருங்கையின் இயல்பு இருபதாம் பரிபாடலாலுமுணரப்படும்.

'சுருங்கைத்தூம்பின்' (௫) என்பது, 'பாய்தலின்' (௧௭) என மேல்வருவதனோடு சென்றியையும்.

௬. கழீஇய - கழுவிய.

௭. எந்திரவாவி - வேண்டும்பொழுது நீரை நிறைத்தற்கும் வேண் டாதபொழுது போக்குதற்கும் உரிய யந்திரங்களையுடைய நீர்நிலை; இஃது இலவந்திகையெனவுங் கூறப்படும். இளைஞர் - ஆடவர்.

௮. ஆடிய - பூசிய. சாந்து - சந்தனம்.

புவிகா வலன்றன் புண்ணிய நன்னாட்
௧0 சிவிறியுங் கொம்புஞ் சிதறுவிரை நீரு
மேலை மாதவர் பாதம் விளக்குஞ்
சீல வுபாசகர் செங்கைநறு நீரு
மறஞ்செய் மாக்க ளகின்முதல் புகைத்து
நிறைந்த பந்தற் றசும்புவார் நீரு
௧௫ முறப்புமுர ணுறுமற் கந்தவுத் தியினாற்
செறித்தரைப் போர்தஞ் செழுமனை நீரு
மென்றிந் நீரே யெங்கும் பாய்தலிற்
கன்றிய கராமு மிடங்கரு மீன்களு
மொன்றிய புலவொழி யுடம்பின வாகித்

---

௯. காவலன் - அரசன். புண்ணியநன்னாள்- புண்ணியத்தையுடைய நல்ல நட்சத்திரத்தில்; என்றது, அரசனுடைய சன்ம நட்சத்திரத்தி லென்றவாறு.

௧0. சிவிறி கொம்பு என்னுமிரண்டும் நீரை வீசுங் கருவிவிசேடங்கள்; சிவிறியைப் பெருந்துருத்தியென்று கூறுவர்.

௯ - ௧0. ஒருவன் சீவித்திருக்குங்காறும் அவன் பிறந்த நட்சத்திரத்திலும் இறந்த பின்பு அவன் இறந்த திதியிலும் சிறப்புச் செய்ய வேண்டுமென்பது தருமநூற்றுணிபு. பிறந்தநாள் விழவை வெள்ளணி நாளென்பர்.

௧௧. மேலைமாதவர் - மேன்மையையுடைய முனிவர்; ஐ: சாரியை.

௧௨. சீலவுபாசகர் - பஞ்சசீலத்தையுடையஉபாசகர்; பௌத்தரில் இல்லறம் நடத்தும் ஆடவரையும் மகளிரையும் முறையே உபாஸகரென்றும் உபாஸகைகளென்றுங் கூறுதல் மரபு.

௧௪. பந்தல் தசும்பு - தண்ணீர்ப்பந்தலிலுள்ள நீர்க்குடம். வார் நீர் - ஒழுகுகின்றநீர்.

௧௫. உறுப்பு முரணுறுமல் - உறுப்புக்கள் மாறுபடாமல்; "நேர்கட்டி செந்தே னிரியாசம் பச்சிலை, யார மகிலுறுப்போ டாறு" (சிலப். ௫: ௧௪, அடியார். மேற்.) கந்தவுத்தியினால் - சேர்த்தற்குரிய வாசனைப் பண்டங்களால்; உத்தி - சேர்த்தல்; இது யுக்தியென்னும் வடமொழிச் சிதைவு.

௫ - ௧௭. சுருங்கைத் தூம்பிற் பாய்தலினென்க.

௧அ. கன்றிய - பகைமையிற்றழும்பிய. கராம் இடங்கர் என்னும் இரண்டும் முதலைச்சாதி விசேடங்கள்; "கொடுந்தாண் முதலையு மிடங்கருங் கராமும்" குறிஞ்சி. ௨௭௫.

௧௭ - ௯. பாய்தலிற் புலவொழிந்தன.

(பி - ம்.) ௧௪. 'தசும்பமர்நீரும்' ௧௫. 'கந்தபுந்தியினால்' ௧௯. 'செறித்தமைப் போர்தஞ் செழுமணிநீரும்' ௧௭. 'எங்கும்பரத்தலின்'

௨0 தாமரை குவளை கழுநீ ராம்பற்
பூமிசை பரந்து பொறிவண் டார்ப்ப
விந்திர தனுவென விலங்கக ழுடுத்து
வந்தெறி பொறிகள் வகைமாண் புடைய
கடிமதி லோங்கிய விடைநிலை வரைப்பிற்

---

௨0. தாமரைமுதலிய மூன்றும் பகற்பூவென்றும், ஆம்பல் இராப்பூவென்றுங் கூறுவர் அடியார்க்கு நல்லார்; இதனை, சிலப்பதிகாரம், ௨-ஆம் காதை, கச-ருஆம் அடிகளின் விசேடவுரையிற் காண்க.

௨க. மிசைபரந்து - மேலேபரவப் பெற்று; இவ்வெச்சம் காரணப் பொருட்டு, ஆர்ப்பப் பரந்தென்க.

௨௨. கலவைநீர் முதலியன பாயப்பெற்றுப் பலநிறப்பூக்களையுடைமையின், அகழிக்கு வானவில் உவமையாயிற்று; "சுந்த ரம்ம லர்களெண்ணெய் சுண்ணந் தாது குங்குமஞ், சந்த னக்குழம்பு மேற்பரந்து பாடி சூழ்ந்தக, முந்த ரத்த ருக்க னைய ணிந்து சூழ்கிடந்ததோ, ரிந்தி ரத்த னுவின் வண்ண மென்ன தன்ன தாகுமே" மேருமந்தர. வைசயந்தன் முத்தி.

ரு-௨௨. கலவைநீரும் சாந்துகழிநீரும் விரைநீரும் நறுநீரும் வார்நீரும் மனைநீரும் ஆகிய இந்நீர் சுருங்கைத் தூம்பினுல் எங்கும்பாய்தலின், உடம்பினவாகிப் பரத்தலான் இலங்கு அகழென்க.

௨௩. பொறிகள் - யந்திரங்கள்; அவற்றின் வகையைப் பின்வருவனவற்றாலுணர்க: "மாற்றவர் மறப்படை மலைந்துமதில் பற்றி, னூற்றுவரைக் கொல்லியொடு நூக்கியெறி பொறியுந், தோற்றமுறு பேய்களிறு துற்றுபெரும் பாம்புங், கூற்றமன கழுகுதொடர் குந்தமொடு கோண்மா", "விற்பொறிகள் வெய்யவிடு குதிரைதொட ரயில்வாள், கற்பொறிகள் பாவையன மாடமடு செந்தீக், கொற்புனைசெய் கொள்ளிபெருங் கொக்கெழில்செய் கூகை, நற்றலைக டிருக்கும்வலி நெருக்குமர நிலையே", "செம்புருகு வெங்களிக ளுமிழ்வதிரிந் தெங்கும், வெம்புருகு வட்டுமிழ்வ வெந்நெய்முகந் துமிழ்வ, வம்புமிழ்வ வேலுமிழ்வ கல்லுமிழ்வ வாகித், தம்புலன்க ளால்யவனர் தாட்படுத்த பொறியே", "கரும்பொனியல் பன்றிகத நாகம்விடு சகடங், குரங்குபொரு தகரினொடு கூர்ந்தரிவ நுண்ணூல், பரந்தபசும் பொற்கொடி பதாகையொடு கொழிக்குந், திருந்துமதி றெவ்வர்தலை பனிப்பத்திருந் தின்றே" (சீவக. க0க - ச); "வளைவிற் பொறியுங், கருவிர லூகமுங் கல்லுமிழ் கவணும், பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியுங், காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையுந், தூண்டிலுந் தொடக்கு மாண்டலை யடுப்புங், கவையுங் கழுவும் புதையும் புழையு, மையவித் துலாமுங் கைபெய ரூசியுஞ், சென்றெறி சிரலும் பன்றியும் பணையு, மெழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமுங், கோலுங் குந்தமும் வேலும் பிறவும்" சிலப். கரு: ௨0எ - கஅ.

௨ச. கடிமதில் - காவலாகியமதில்; என்றது, ஏணியெய்தாத உயர்ச்சியும் புறத்தோர்க்கு அகழலாகா அடியகலமும் அகத்தோர்க்கு நின்று வினைசெய்யலாந்தலையகலமும் கல் இட்டிகைகளாற் செய்யப்பட்டிருத்தலிற் குத்தப்படாமையுமுடையதென்றவாறு.

௨௩-ச. "உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி, னமைவர

௨௫ பசுமிளை பரந்து பஃறெருழி னிறைந்த
வெள்ளிக் குன்ற முள்கிழிந் தன்ன
நெடுநிலை தோறு நிலாச்சுதை மலரும்
கொடிமிடை வாயில் குறுகினள் புக்குக்
கடைகாப் பமைந்த காவ லாளர்
௩0 மிடைகொண் டியங்கும் வியன்மலி மறுகும்
பன்மீன் விலைஞர் வெள்ளுப்புப் பகருநர்
கண்ணொடை யாட்டியர் காழியர் கூவியர்
மைந்நிண விலைஞர் பாசவர் வாசவ
ரென்னுநர் மறுகு மிருங்கோ வேட்களுஞ்
௩௫ செம்பு செய்ஞ்ஞருங் கஞ்ச காரரும்
பைம்பொன் செய்ஞ்ஞரும் பொன்செய் கொல்லரு
மரங்கொஃ றச்சரு மண்ணீட் டாளரும்

---

ணென்றுரைக்கு நூல்" குறள், ௭௪௩.

௨௫. மிளை - காவற்காடு. ௪ - ௨௮. கடந்து குறுகினன் புக்கென்க.

௨௬ - ௮. உள் கிழிந்தன்ன வாயில். புக்கு - புகுந்து.

௨௯. கடைகாப்பமைந்த - வாயில் காத்தற்கமைந்த.

௩0. மிடைகொண்டு - நெருங்குதல் கொண்டு.

௩௧. மீன்விலைஞர் - மீன்விலைப்பரதவர். உப்புப்பகருநர் - உப்பு விற்பார்; ஆவார், உமணரும் உமட்டியரும்; அளவருமாம்; பகர்தல் - விற்றல்.

௩௨. கள் நொடையாட்டியர் - கள்ளைவிற்கும் வலைச்சியர்; நொடை - விலை; "நறவுநொடை" (பெரும்பாண். ௧௪௧.) காழியர் - பிட்டுவாணிகர். கூவியர் - அப்பவாணிகர்; "காரகற் கூவியன் பாகொடு பிடித்த" பெரும்பாண். ௩௭௭.

௩௩. மைந்நிண விலைஞர் - ஆட்டுவாணிகர். பாசவர் - இலையமுதிடுவார்; அன்றி, கயிறுதிரித்துவிற்பாரும், பச்சிறைச்சி குட்டிறைச்சி விற்பாருமாம். வாசவர் - பஞ்சவாசம்விற்பார்; அவை, "தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கம், கப்பூரஞ் சாதியோ டைந்து" (சிலப். ௫ : ௨௬, அடியார். மேற்.) என்பன.

௩௪. கோவேட்கள் - குயவர்; இப்பெயர் வேட்கோவரெனவும் வழங்கும்.

௩௫. செம்பு செய்ஞ்ஞர் - செம்பு கொட்டிகள். கஞ்சகாரர் - வெண்கலக்கன்னார்.

௩௬. பைம்பொன் செய்ஞ்ஞர் - பொற்பணிசெய்வோர், பொன் செய் கொல்லர் - உருக்குத்தட்டார்.

௩௭. மரங்கொஃறச்சர் - மரத்தைவெட்டுந்தச்சர்; கொல்லல் -
(பி - ம்.) ௨௭. 'நெடுநிலைமனைதொறும்' ௩௩. 'மைந்நிணவிலைநர்' ௩௫. 'செய்நரும்' ௩௭. 'மரங்கொறச்சர்'

வரந்தர வெழுதிய வோவிய மாக்களுந்
தோலின் றுன்னருந் துன்ன வினைஞரு
௪0 மாலைக் காரருங் காலக் கணிதரு
நலந்தரு பண்ணுந் திறனும் வாய்ப்ப
நிலங்கலங் கண்ட நிகழக் காட்டும்
பாண ரென்றிவர் பல்வகை மறுகும்
விலங்கரம் பொரூஉம் வெள்வளை போழ்நரோ
௪ரு டிலங்குமணி வினைஞ ரிரீஇய மறுகும்
வேத்தியல் பொதுவிய லென்றிவ் விரண்டின்
கூத்தியல் லறிந்த கூத்தியர் மறுகும்
பால்வே றுக வெண்வகைப் பட்ட
கூலங் குவைஇய கூல மறுகு
ரு0 மாகதர் சூதர்வே தாளிகர் மறுகும்

---

வெட்டல். மண்ணீட்டாளர்-சிற்பாசாரிகள்; அன்றிச் சுதையாற் பாவையுள்ளிட்டன பண்ணுவாரென்றும் குயவரென்றுமாம்; மணி. ௬ : ௪எ.

௩அ. ஓவியமாக்கள் - சித்திரகாரிகள்.

௩௯. தோலின் துன்னர் - செம்மார்; உறைகாரரும், பறம்பர் முதலாயினருமாம், துன்னவினைஞர் - தையற்காரர்.

௪0. மாலைக்காரர் - மாலைதொடுப்போர். காலக்கணிதர் - சோதிடநூலோர்; இவர்கள் கணிகளெனவுங் கூறப்படுவர்.

௪௧. பண் - இசை; பாலை குறிஞ்சி மருதம் செவ்வழியென்னும் பெரும்பண்ணுமாம்; திறம் - அவற்றின் கிளைகள்; அவை இருபத்தொரு வகைப்படும்.

௪௨. நிலம் - மூவகைத்தானம்; அவை எழுத்தும் அசையும் சீரும். கலம் - யாழ். கண்டம் -. குரல்.

௪௩. பாணர் - இசைக்காரர்; இசைப்பாணரும், யாழ்ப்பாணரும், மண்டைப்பாணருமெனப் பாணர் பலவகையினராவார்.

௪௪. விலங்கரம் - வாளரம். வளைபோழ்நர் - சங்கறுப்பார்.

௪ரு. மணிவினைஞர் - முத்துக்கோப்பார்.

௪எ. கூத்தியல்பு - கூத்தினிலக்கணம். கூத்தியர் - பதியிலார்.

௪௬ - எ. மணி. உ : ௧அ - ௯. ௪அ. பால் - பகுதி.

௪௯. குவைஇய - குவித்த. கூலமறுகு - கூலக்கடைத்தெரு.

௪அ - ௯. எண்வகைக் கூலங்களாவன: "நெல்லுப் புல்லு வரகு தினை சாமை, யிறுங்கு தோரையொடு கழைவிளை நெல்லே" (சிலப். ரு : உ௩, அடியார். மேற்.) என்பன; கூலம் பதினெண்வகைத்தென்பர் கூத்தநூலார்; சிலப். ப. ௧ருரு, ௧௧௯.

ரு0. மாகதர் - இருந்தேத்துவார்; சூதர் - நின்றேத்துவார்; வேதாளிகர் - பலவகைத்தாளத்திலாடுவார்; "சூதர் வாழ்த்த மாகதர் (பி - ம்.) ௩அ. 'வரந்தரவெழுதும்' ௩௯. 'தோலின்றொழினரும்'

போகம் புரக்கும் பொதுவர்பொலி மறுகுங்
கண்ணுழை கல்லா நுண்ணூற் கைவினை
வண்ண வறுவையர் வளந்திகழ் மறுகும்
பொன்னுரை காண்போர் நன்மனை மறுகும்
௫௫ பன்மணி பகர்வோர் மன்னிய மறுகு
மறையோ ரருந்தொழில் குறையா மறுகு
மரைசியன் மறுகு மமைச்சியன் மறுகு
மெனைப்பெருந் தொழில்செ யேனோர் மறுகு
மன்றமும் பொதியிலுஞ் சந்தியுஞ் சதுக்கமும்
௬௦ புதுக்கோள் யானையும் பொற்றார்ப் புரவியுங்
கதிக்குற வடிப்போர் கவின்பெறு வீதியுஞ்
சேணோங் கருவி தாழ்ந்தசெய் குன்றமும்

---

நுவல, வேதா ளிகரொடு நாழிகை யிசைப்ப'' (மதுரை. ௬௭௦ - ௭௧); ''சூதர் மாகதர் வேதா ளிகரொடு'', '' மாகதப் புலவரும் வைதா ளிகருஞ், சூதரும்'' சிலப். ௫: ௪௮, ௨௬: ௭௪ - ௫.

௫௧. பொதுவர் - பொதுமகளிர். ௫௨. நுழைகல்லா- நுழையாத.

௫௩. வண்ணவறுவையர் - பலநிறங்களையுடைய உடைநெய்வோர்; புடைவை விற்பாருமாம்; ''நோக்குநுழை கல்லா நுண்மைய.........அறுவை'' பொருந. அ௨ - ௩.

௫௪. பொன்னுரை காண்போர் - பொன்னை உரைத்தவுரையை அறுதியிடும் பொன்வாணிகர்.

௫௫. பன்மணிபகர்வோர் - பலவகைப்பட்ட இரத்தினங்களை விற்கும் வாணிகர்.

௫௬. அந்தணர் வீதி.

௫௭. இராசப் பெருந்தெருவும் மந்திரிகள்வீதியும். [யோர்.

௫௮. எனை - ஏனை; விகாரம். ஏனோர் - சேனாதிபதிகள் முதலி

௫௯. '' மன்றமும் பொதியிலும்'' (மணி. ௨௦ : ௩௦.) சந்தி - முச்சந்தியும் ஐஞ்சந்தியும். சதுக்கம் - நாற்சந்தி; '' சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு, மன்றமும் பொதியிலும்'' முருகு. ௨௨௫ - ௬.

௬௦. புதுக்கோள் யானை - புதிதாகப்பிடிக்கப்பட்டு வந்த யானை; (மணி. ௧௨ : ௬௫, ௧௮ - ௧௯௮.) பொற்றார்ப்புரவி - பொன்னாலாகிய கிண்கிணி மாலையையணிந்த குதிரை.

௬௧. கதிக்குற - நடையில் மேம்பாடுற. வடிப்போர் - பயிற்றும் யானைப்பாகரும், வாசிவாரியரும்; வடித்தல் - பயிற்றல்; ''வடிகயிறுய்ந்து'' சீவக. ௭௧௪.

௬௨. சேண் - நெடுந்தூரம். செய்குன்றம் - கட்டுமலை.

(பி - ம்.) ௫௧. 'போகம்புரக்குமுழவர்' ௫௨. 'ஒண்ணூற்கைவினை' ௫௯. 'மன்றமுங் கவலையும்' ௬௧. 'கவின்கொள்வீதியும்'

வேணவா மிருக்கும் விரைமரக் காவும்
விண்ணவர் தங்கள் விசும்பிட மறந்து
௬௫ நண்ணுதற் கொத்த நன்னீ ரிடங்களுஞ்
சாலையுங் கூடமுந் தமனியப் பொதியிலுங்
கோலங் குயின்ற கொள்கை யிடங்களுங்
கண்டுமகிழ் வுற்றுக் கொண்ட வேடமோ
டந்தர சாரிக ளமர்ந்தினி துறையு
௭௦ மிந்திர விகார மெனவெழில் பெற்று

௬௩. வேணவா - வேட்கையாலுண்டாகிய அவா; வேட்கையாவது, பொருள்கண்மேற் றோன்றும் பற்றுள்ளம்; அவாவாவது, அப்பொருள்களைப் பெறவேண்டுமென்று மேன்மேல் நிகழும் ஆசை; "செய்யுண் மருங்கின் வேட்கை யென்னு, மையெ னிறுதி யவாமுன் வரினே, மெய்யொடுங் கெடுத லென்மனார் புலவர், டகார ணகார மாதல்வேண்டும்" (தொல். உயிர். சூ. ௨௮௮) என்பதனால் முடித்துக்கொள்க.

௬௫. நீரிடங்கள் - பொய்கை முதலியவைகள்.

௬௬. சாலை - அறச்சாலைகள். தமனியப்பொதியில் - பொன்னாலாகிய அம்பலம்; "பொன்னம்பலமு முண்டு" (சிலப். பதி. ௪௦ - ௪௧) என்பர் அடியார்க்குநல்லார்; "கண்ணெலாங் கவர்வன கனக கூடமும்" (சூளா. நகர. ௭) என்று வருதல் காண்க.

௬௭. கோலங்குயின்ற - சித்திரமெழுதப்பெற்ற. கொள்கையிடங்கள் - விரதங்களை அனுட்டித்திருத்தற்குரிய தவச்சாலைகள்; கொள்கை - விரதம்; "தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்" (முருகு. ௮௯); "கோவலன் சென்றக் கொள்கையி னிருந்த, காவுந்தி யையையைக் கைதொழு தேத்தி" சிலப். ௧௪ : ௧௫ - ௬.

௨௧ - ௬௮. வியன்மலி மறுகுமுதற் கொள்கை யிடங்களிறுதியாகவுள்ள இடவிசேடங்களை மணிமேகலை கண்டென்க. இவ்வடிகளிற் போலப் பற்பலசாதியாருடைய குடியிருப்புக்களையும் இளங்கோவடிகள் கூறியிருத்தல் காண்க: "வேயா மாடமும் வியன்கல விருக்கையும்...... ......பாடல்சால் சிறப்பிற் பட்டினப் பாக்கமும்" சிலப். ௫ : ௭ - ௫௮.

௬௯. அந்தரசாரிகள் - ஆகாயசாரிகள். அமர்ந்து - விரும்பி.

௭௦. இந்திரவிகாரம் - புத்தனாலயத்தில் இந்திரனால் நிருமிக்கப்பட்ட அரங்கு; 'விகாரம் - கையாற் கருவியாற் பண்ணாது மனத்தால் நிருமித்தல்' என்பர் அடியார்க்குநல்லார்; சிலப். ௧௦ : ௧௪.

௬௯ - ௭௦. இந்திர விகாரமென்றது, காவிரிப்பூம்பட்டினத்துப் புத்த சைத்தியத்துள்ள ஏழரங்கினையும்; இஃது, 'அந்தர சாரிக ளமர்ந்தினிதுறையும்' என்பதனாற் பெறப்பட்டது; "அந்தர சாரிக ளறைந்தனர் சாற்று, மிந்திர விகார மேழுடன் போகி" (௧௦ : ௧௩ - ௪), "இந்திர விகார மேழுடன் புக்காங், கந்தர சாரிக ளாறைம் பதின்மர்" (௨௭ : ௯௨ - ௩) எனச் சிலப்பதிகாரத்து வருதல் காண்க.

(பி - ம்.) ௬௪. 'விசும்பிடை'

நவையறு நாத னல்லறம் பகர்வோ
ருறையும் பள்ளிபுக் கிறைவனை நல்லாள்
கோவலன் றாதை மாதவம் புரிந்தோன்
பாதம் பணிந்துதன் பாத்திர தானமுந்
எடு தானப் பயத்தாற் சாவக மன்னவ
னானமொன் றின்றி யுலகாள் செல்வமுஞ்
செல்வற் கொணர்ந்தத் திவகப் பீடிகை
யொல்காது காட்டப் பிறப்பினை யுணர்ந்தது
முணர்ந்தோன் முன்ன ருயர்தெய்வந் தோன்றி

---

எக. நவை - குற்றம். நாதன் - புத்தன். நல்லறம் - அருளறம். பகர்வோர் - சங்கத்தார்.

எஉ. பள்ளி - தவத்தோருறைவிடம்; "ஐயருறை பள்ளியிடம்" சீவக. கஎஅஉ.

எ0 - எஉ. இந்திரவிகாரம் பள்ளிக்கு உவமம்.

எரு. கோவலன்றாதை-மாசாத்துவான்; இவன், மதுரையிற்கோவலன் கொலையுண்டது முதலியவற்றை மாடலனென்னும் மறையவன் கூறக்கேட்டுத் தன்பொருளையெல்லாம் தானஞ்செய்துவிட்டுக் காவிரிப் பூம்பட்டினத்திற் புத்தசைத்தியத்துள்ள எழு விகாரங்களிலுமிருந்து நோற்கும் பௌத்த முனிவர்களுக்கு முன்னேசென்று துறவுபூண்டானாதலின், 'மாதவம்புரிந்தோன்' என்றார்; இதனை, "மைந்தற் குற்றது மடந்தைக் குற்றதுஞ், செங்கோல் வேந்தற் குற்றதுங் கேட்டுக், கோவலன் றாதை கொடுந்துய ரெய்தி, மாபெருந் தானமா வான்பொரு ளீத்தாங், கிந்திர விகார மேழுடன் புக்காங், கந்தர சாரிக ளறைம் பதின்மர், பிறந்த யாக்கைப் பிறப்பற முயன்று, துறந்தோர் தம்முன் றுறவி யெய்தவும்" (உஎ: அஅ - கடு), "மாசாத்துவான் றுறப்பவும்" (உக: உரைப்பாட்டுமடை) எனச் சிலப்பதிகாரத்து வருதலாலும், இக்காதையிற் பின்னேவரும், "தையல்கேள்" (கரு) என்பது முதலியவற்றாலும் அறிந்துகொள்க.

எச. தன் பாத்திரதானம் - தன்கையிலுள்ள அமுதசுரபியென்னும் பாத்திரத்தாற் செய்யப்படும் அன்னதானம்.

எடு. தானப்பயம் - முற்பிறப்பிற் செய்த அன்னதானத்தாலுண்டாகிய புண்ணியம்; பயம் - பிரயோசனம். சாவகமன்னவன் - சாவக நாட்டரசனாகிய புண்ணியராசன்.

எடு - கூ. உலகாளுதற்குக்காரணம் தானப்பயன்.

எஎ. செல்வற் கொணர்ந்து - புண்ணியராசனை அழைத்துவந்து. பீடிகை - புத்தபீடிகை.

எஅ. ஒல்காது - தளராது. எஎ - அ. பீடிகையைக்காட்ட.

எகூ. உணர்ந்தோன் - புண்ணியராசன். தெய்வம் - தீவதிலகை.

(பி - ம்.) எச. 'பாத்திரத்தாலனமுந்' எஅ. 'ஒல்லாதுகாட்ட'

அ0 மனங்கவல் கெடுத்தது மாநகர் கடல்கொள
வறவண ரடிகளுந் தாயரு மாங்குவிட்
டிறவா திப்பதிப் புகுந்தது கேட்டதுஞ்
சாவக மன்னன் றன்னா டெய்தத்
தீவகம் விட்டித் திருநகர் புகுந்ததும்
அ௫ புக்கபி னந்தப் பொய்யுரு வுடனே
தக்க சமயிக டந்திறங் கேட்டது
மவ்வவர் சமயத் தறிபொரு ளெல்லாஞ்
செவ்வி தன்மையிற் சிந்தைவை யாதது
நாத னல்லறங் கேட்டலை விரும்பி
௯0 மாதவற் றேர்ந்து வந்த வண்ணமுஞ்
சொல்லின ளாதலிற் றூயோய் நின்னையென்
னல்வினைப் பயன்கொ ணுன்கண் டதுவெனத்
தையல் கேணின் றாதையுந் தாயுஞ்
செய்ததீ வினையிற் செழுநகர் கேடுறத்

அ0. மனங்கவல் கெடுத்ததும் - உள்ளம் கவலைகொள்ளுதலைக் கெடுத்ததும் : கவல் - கவலுதல்; முதனிலைத்தொழிற்பெயர். நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

அ௨. இப்பதியென்றது வஞ்சியை. கேட்டதும் - (தீவதிலகை யால்) தான் கேட்டதும்.

அ௪. தீவகம் - மணிபல்லவம்.

அ௫. புக்கபின் - புகுந்து கண்ணகி கோட்டம் தொழுதபின். பொய்யுரு - மாதவன் வடிவு.

அ௬. சமயிகள் - அளவைவாதிமுதலியோர்.

அ அ. செவ்விது அன்மையின் - திருத்தமுடையன அல்லாமை யின் ; செவ்விது : பன்மை யொருமைமயக்கம்.

அ௯. நாதன் நல்லறம் - புத்தன் கூறிய தருமங்களை ; மணி. ௨அ : ௭௧.

௯0. மாதவற்றேர்ந்து - அறவணவடிகளைத்தேடி.

௯௧. 'தூயோய்' என்றது முதலியன கோவலன்றாதை வார்த்தை.

௯௩. தையல் : விளி. தாதையும் தாயும் - கோவலனுங் கண்ணகி யும்.

௯௪. தீவினை - முற்பிறப்பிற் சங்கமனைக்கொல்வித்ததனாலாகிய பாவம். நகர் - மதுரை.

(பி - ம்.) அ௨. 'புகுந்ததுங் கேட்டதும்' அ௩. 'தன்னுடெய்த' அ௪. 'தீவகம் விடீஇத்திரு' அ௫. 'புக்கவளிந்த' அ அ. 'செவ்வித் தன்மை' ௯௪. 'திருநகர்'

௯௫ துன்புற விளிந்தமை கேட்டுச் சுகத
னன்புகொ ளறத்திற் கருகனே னாதலின்
மனைத்திற வாழ்க்கையை மாயமென் றுணர்ந்து
தினைத்தனை யாயினுஞ் செல்வமும் யாக்கையு
நிலையா வென்றே நிலைபெற வுணர்ந்தே
௧௦௦ மலையா வறத்தின் மாதவம் புரிந்தேன்
புரிந்த யானிப் பூங்கொடிப் பெயர்ப்படூஉந்
திருந்திய நன்னகர் சேர்ந்தது கேளாய்
குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை
விடர்ச்சிலை பொறித்த வேந்தன் முன்னாட்

---

௯௫. விளிந்தமை - இறந்தமை. சுகதன் - புத்தன்; நல்ல வருகையையுடையவனென்று பொருள்; நல்ல நடையையுடையவனென்றுமாம்.

௯௪ - ௫. தீவினையிற் கொலையுண்டிறந்தமையைக்கேட்டு.

௯௬. அன்புகொள் அறம் - நல்லறம். அருகன் - பக்குவி.

௯௭. மனைத்திறவாழ்க்கை - இல்வாழ்க்கை. மாயம் - பொய்.

௯௮. தினைத்தனையாயினும் - தினையளவாவது.

௯௮ - ௯. மணி. உஉ : ௧௩௫ - ௬.

௧௦௦. பௌத்ததருமம் பூர்வோத்தர விரோதமில்லாததென்பாரா தலின், 'மலையாவறத்தின்' என்றார்; மலைதல் - மாறுபடல்; "மாறுணத் திருவற மூர்த்தியை" (௬), "முன்பின் மலையா மங்கலமொழியின்" (உ௬௧) என இந்நூல், ௩௦ - ஆம் காதையில் வருதலுங்காண்க. புரிந்தேன் - செய்தேன்.

௧௦௧. கொடி - வஞ்சி. ௧௦உ. நகர் - வஞ்சிநகர்.

௧௦௧-உ. இந்நகர், "பொற்கொடிப் பெயர்ப்படூஉம் பொன்னகர்" (உ௬ : ௬உ) என்று முன்னும் கூறப்பட்டது.

௧௦௩. குடக்கோச்சேரலன் - மேனாட்டிற்கு அரசனாகிய சேரன்; குடக்கு - மேற்கு; கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுள் ஒன்றாகிய குடநாட்டிற்கு அரசனென்பதுபற்றிக் குடக்கோவென்றாரெனினுமமையும்; "குடக்கோ முனிசேரன்" (சிலப். சிறப்.) குட்டுவர் பெருந்தகை-குட்ட நாட்டார்க்கு அரசன்; குட்டமும் கொடுந்தமிழ் நாடுகளுள் ஒன்று; "குடக்கோக் குட்டுவன்" (சிலப். உ௬ : ௬௧); "இயறேர்க் குட்டுவன்" சிறுபாண். ௪௯.

௧௦௪. விடர்ச்சிலை பொறித்த வேந்தன் - நெடுஞ்சேரலாதன்; இவன் வடநாட்டரசர்களை வென்று சென்று இமயமலையில் தனது இலச்சினையாகிய விற்பொறியைப் பொறித்தமையால், இமயவரம்பனெனவும், விடர்ச்சிலை பொறித்த வேந்தனெனவும் பெயர்பெற்றான்; இவனை இமய

(பி - ம்.) ௯௫ - ௬. 'விளிந்தமைகேட்டுச் சுகத்த, னங்கொன்றறத்திற்கு' ௯௮. 'தினைத்தனைத்தானும்' ௯௯. 'நிலையாதென்றே விலைபெற வுணர்ந்து' ௧௦௧ - உ. 'பெயர்படு, திருந்திய'

௧௦௫ துப்படு செவ்வாய்த் துடியிடை யாரொடு
மிப்பொழில் புகுந்தாங் கிருந்த வெல்லையு
ளிலங்கா தீவத்துச் சமனொளி யென்னுஞ்
சிலம்பினை யெய்தி வலங்கொண்டு மீளுந்
தரும சாரணர் தங்கிய குணத்தோர்
௧௧௦ கருமுகிற் படலத்துக் ககனத் தியங்குவோ
ரரைசற் கேது வவ்வழி நிகழ்தலிற்
புரையோர் தாமுமிப் பூம்பொழி லிழிந்து
கற்றலத் திருந்துழிக் காவலன் விரும்பி
முற்றவ முடைமையின் முனிகளை யேத்திப்

---

வரம்பன் நெடுஞ்சேரலாதனெனவும் கூறுவர்; இது, பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்தாலுணரப்படும்; "இமயஞ் சூட்டிய வேம விற்பொறி, மாண்வினை நெடுந்தேர் வானவன்" (௩௯) எனப் புறநானூற்றிலும், "விடர்ச்சிலை பொறித்த விறலோன்" (௨௮ : ௧௩௬) எனச் சிலப்பதிகாரத்திலும் இவன் கூறப்பட்டிருத்தல் காண்க.

௧௦௫. துப்பு - பவளம். துடி - உடுக்கை.

௧௦௫ - ௬. சேரலனும் பெருந்தகையுமாகிய வேந்தன் முன்னொருகாலத்துத் துடியிடையாரொடும் இப்பொழிலிற் புகுந்து இருந்தவிடத்தென்க.

௧௦௭ - ௯. இலங்கைத் தீவத்துள்ள சமனொளியென்னும் மலையையடைந்து வலங்கொண்டு மீண்ட சாரணர். இம்மலை, சமந்தமென்றும் சமந்தகூடமென்றும் பெயர்பெறும். இதன் வரலாறு, இந்நூல் ௧௧-ஆம் காதை ௨௨-ஆம் அடியின்குறிப்பிற் கூறப்பட்டது. தங்கிய குணத்தோர்- குணங்கள் தங்கப்பெற்றோர்.

௧௧௦. முகிற்படலம் - மேகக்கூட்டம். ககனம் - ஆகாயம். ககனத்தியங்கல் இருத்திகளில் ஒன்று.

௧௧௧. அரசற்கு - இமயவரம்பனுக்கு. ஏது அவ்வழி நிகழ்தலின் - நல்வினையாகிய காரணம் பயனளித்தற்கு அவ்விடத்தே தோற்றுதலினாலே.

௧௧௨. புரையோர் - மேற்கூறிய தருமசாரணர்.

௧௦௯ - ௧௨. சாரணரும் குணத்தோரும் இயங்குவோருமாகிய புரையோர்.

௧௧௩. கற்றலத்து - சிலாதலத்தில். காவலன் - சேரன்.

௧௦௪ - ௧௩. வேந்தன் இருந்தவெல்லையுள் அவனுக்கு ஏது நிகழ்தலிற் புரையோரும் இழிந்து அப்பொழிலிற் கற்றலத்திருந்தபொழுது.

௧௧௪. முனிகளை - தருமசாரணரை.

(பி - ம்.) ௧௦௫. 'துவர்படுசெவ்வாய்' ௧௦௯ - ௧௦. 'தருமசாதனர், தன்னின் மூத்தார்க்கு முகிற்படலத்திற்ககன' ௧௧௪. 'முனிகளையேவிப்'

௧௧௫ பங்கயச் சேவடி விளக்கிப் பான்மையி
னங்கவர்க் கறுசுவை நால்வகை யமிழ்தம்
பாத்திரத் தளித்துப் பலபல சிறப்பொடு
வேத்தவை யாரொடு மேத்தின னிறைஞ்சலிற்
பிறப்பிற் றுன்பமும் பிறவா வின்பமு
௧௨0 மறத்தகை முதல்வ னருளிய வாய்மை
யின்ப வாரமு திறைவன் செவிமுதற்
றுன்ப நீங்கச் சொரியு மந்நா
ணின்பெருந் தாதைக் கொன்பது வழிமுறை
முன்னோன் கோவலன் மன்னவன் றனக்கு
௧௨௫ நீங்காக் காதற் பாங்க னாதலிற்
றீங்கா நல்லறந் தானுங் கேட்டு
முன்னோர் முறைமையிற் படைத்ததை யன்றித்
தன்னா னியன்ற தனம்பல கோடி
யெழுநா ளெல்லையு மிரவலர்க் கீத்துத்
௧௩0 தொழுதவம் புரிந்தோன் சுகதற் கியற்றிய

---

௧௧௬. அறுசுவையாவன: கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு என்பன; (குறள், ௪௨௮, பரிமேல்.) நால்வகையமிழ்தமாவன: உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன; மணி. ௨௮: ௨௪௧-௨. அமிழ்தம் - உணவு.

௧௧௫-௮. கோவலன், விரும்பி ஏத்தி விளக்கி அளித்து ஏத்தி இறைஞ்சலினென்க.

௧௨0. அறத்தகைமுதல்வன் - புத்தன்; தருமராசனென்றவாறு. வாய்மை - நால்வகைச்சத்தியம்.

௧௧௯ - ௨0. மணி. ௨: ௬௪ - ௭, ௫0: ௧௮௬ - ௮.

௧௨௧. இறைவன் செவிமுதல் - அரசனுடைய செவியிடத்தே.

௧௨0 - ௨௧. வாய்மையாகிய அமுதை.

௧௨௩. நின்பெருந்தாதைக்கு - உன் தந்தையாகிய கோவலனுக்கு.

௧௨௭. முறைமையின் - நல்வழியாலே. முன்னோர் தேடிவைத்த பொருளையல்லாமல்.

௧௨௯. எழுநாளென்றல் ஒருமரபு.

௧௩0. புரிந்தோன் - முற்கூறிய முன்னோனாகிய கோவலன். சுகதற்கு - புத்தனுக்கு.

(பி - ம்.) ௧௧௫. 'விளக்கிய பான்மையின்' ௧௧௬. 'அமிர்தம்' ௧௧௮. 'வேந்தனிறைஞ்சலின்' ௧௨௨. 'சொரியு முன்னாளில்' ௧௨௯. 'எல்லையிர வலர்க்களித்து'

வானோங்கு சிமையத்து வாலொளிச் சயித்த
மீனோர்க் கெல்லா மிடர்கெட வியன்றது
கண்டுதொழு தேத்துங் காதலின் வந்தித்
தண்டாக் காட்சித் தவத்தோ ரருளிக்
௧௫௫ காவிரிப் பட்டினங் கடல்கொளு மென்றவத்
தூவுரை கேட்டுத் துணிந்திவ ணிருந்த
தின்னுங் கேளாய் நன்னெறி மாதே
தீவினை யுருப்பச் சென்றநின் றாதையுந்
தேவரிற் றோற்றிமுற் செய்தவப் பயத்தா
௧௬௦ லாங்கத் தீவினை யின்னுந் துய்த்துப்
பூங்கொடி முன்னவன் போதியி னல்லறந்
தாங்கிய தவத்தாற் றன்றவந் தாங்கி
காதலி தன்னொடு கபிலையம் பதியி

௧௫௧. சிமையத்து - மலையில். வாலொளிச்சயித்தம் - வெள்ளிய ஒளியையுடைய ஆலயம்; சயித்தம் - சைத்தியமென்னும் வடமொழிச் சிதைவு; இதுசேதியமெனவும் வழங்கப்பெறும்; மணி. உஅ : ௧எ௰.

௧௫௨. ஈனோர்க்கு - இவ்வுலகத்தோர்க்கு; "ஈனோர்வடிவில்" (சிலப். பதி. ௫௫, உ௫ : ௧எ௬); "ஈனோர்க் குரைப்பாம் பதிகத்து ளியன்ற வாறே" சீவக. உ௯.

௧௫௪. தண்டாக்காட்சி - நீங்காத அறிவு.

௧௫௫ - ௬. இத்தவத்தோரென்றது, ஆண்டுள்ள முனிவர்களை.

௧௫௬. யான் இவ்விடமிருந்தது தூவுரை கேட்டமையாலேயே யென்க.

இதுகாறும், தான் துறந்ததற்கும் வஞ்சிநகரடைந்ததற்கும் ஆண்டே வதிவதற்கும் காரணங்கூறிய மாசாத்துவான், மேலே பெரியோர் தனக்குக்கூறிய செய்தி முதலியன கூறுவான்.

௧௫அ. சென்ற - கொலையுண்டிறந்த.

௧௫௯. முற்செய் தவப்பயத்தால் தேவரிற் றோற்றியென்க.

௧௬௦. ஆங்கத்தீவினை - முற்கூறிய தீவினையின் பயனை. துய்த்து அனுபவித்து.

௧௬௧. பூங்கொடி : விளி. முன்னவன் - புத்தன்.

௧௬௩. காதலி - கண்ணகி. கபிலையம்பதி - கபிலநகர்; இது புத்தன் பிறந்தஇடம்; கபிலவஸ்துவென்றுங் கூறப்படும்.

(பி - ம்.) ௧௫௧ - உ. 'வால்வளைச் சயிந்தம், மேனோர்க் கெல்லா மடர்கெட' ௧௫௫. 'காதலன்வந்து' ௧௫௫ - ௬. 'மென்ற, தூழுரை கேட்டுத் துணிந்தியா னிருந்தேன்' ௧௫அ. 'தீவினையிறுப்ப' ௧௫௯. 'தோற்றமுன்' ௧௬௧. 'போதியர்நல்லறம்'

ஞாத னல்லறங் கேட்டுவீ டெய்துமென்
கசரு றற்புதக் கிளவி யறிந்தோர் கூறச்
சொற்பய னுணர்ந்தேன் றோகை யானு
மங்கா ளாங்கவ னறநெறி கேட்குவ
னின்னது தன்மையந் நெடுநிலைக்கந்திற் றுன்னிய
துவதிக னுரையிற் றுணிந்தனை யன்றோ
கரு0 தவநெறி யறவணன் சாற்றக் கேட்டன
னாங்கவன் றானுமின் னறத்திற் கேதுப்
பூங்கொடி கச்சி மாநக ராதலின்
மற்றம் மாநகர் மாதவன் பெயர்நாட்
பொற்றொடி தாயரு மப்பதிப் படர்ந்தன
கருரு ரன்னதை யன்றியு மணியிவை கேளாய்
பொன்னெயிற் காஞ்சி நாடுகவி னழிந்து
மன்னுயிர் மடிய மழைவளங் கரத்தலி
னந்நகர் மாதவர்க் கைய மிடுவோ

---

கசச. நாதன் - புத்தன். எய்தும் - அடைவான்.

கசரு. கிளவி - சொல்.

கசகூ. பயன் - பிரயோசனம். தோழாய் : விளி.

கசஎ. அவனறநெறி - புத்தன் உபதேசிக்கும் அறவழிகளை.

கசகூ - எ. யானும் அறநெறிகேட்குவன்.

கசஅ. நின்னது தன்மை - உனது பிற்காலச் செய்தியை.

கசஅ - கூ. நினது தன்மையைத் துவதிகனுரையால் தெளிந்தா யன்றோ.

கரு0. (கந்திற்பாவையால் நீ அறிந்தாயென்பதை) அறவணவடிகள் சொல்லக்கேட்டேன்.

கருக. அவன்றானும் - அறவணவடிகளும். ஏது - ஏதுநிகழ்ச்சிக் குரிய இடம்.

கருஉ. பூங்கொடி : விளி.

கருச. பொற்றொடிதாயரும் - உன்னுடைய தாயராகிய மாதவியும் சுதமதியும்.

கருங - ச. பெயர்நாளில் தாயரும் உடன்சென்றார்.

கருகூ. காஞ்சிநாடு - காஞ்சிநகரத்தையுடைய நாடு.

கருஎ. பூ. மணி. கக : அங. மடிய - இறக்க. கருஅ. ஐயம் - பிச்சை.

கருகூ - எ. மணி. உக : கசஎ - அ.

(பி - ம்.) கசரு - கூ. 'கழறச்சொற்பய' கசஎ. 'அறநெறிகடவேன்' கசகூ. 'துணிந்தனை தவநெறி' கருச. 'பொற்றொடித்தாயரும்' கருரு. 'அன்னதன்றியும்'

ரின்மையி னிருந்த ரெய்தினர் காணு
௧௬0 யாருயிர் மருந்தே யந்நாட் டகவயிற்
காரெனத் தோன்றிக் காத்தனின் கடனென
வருந்தவ னருள வாயிழை வணங்கித்
திருந்திய பாத்திரஞ் செங்கையி னேந்திக்
கொடிமதின் மூதூர்க் குடக்கணின் றோங்கி
௧௬௫ வடதிசை மருங்கின் வானத் தியங்கித்
தேவர் கோமான் காவன் மாநகர்
மண்மிசைக் கிடந்தென வளந்தலை மயங்கிய
பொன்னகர் வறிதாப் புல்லென் றுயது
கண்டுளங் கசிந்த வொண்டொடி நங்கை
௧௭0 பொற்கொடி மூதூர்ப் புரிசை வலங்கொண்டு
நடுநக ரெல்லை நண்ணின ளிழிந்து
தொடுகழற் கிள்ளி துணையிளங் கிள்ளி
செம்பொன் மாச்சினைத் திருமணிப் பாசடைப்
பைம்பூம் போதிப் பகவற் கியற்றிய

---

௧௫௯. எய்தினர் - (அம்மாதவர்) வந்தார். ௧௬0. மருந்தே : விளி.

௧௬0 - ௬௧. மணி. ௨௧ : ௧௫எ - அ.

௧௬௧. காரை உவமைகூறினர், இவள் கைம்மாறு கருதாமலளிக்கின்றமையின் ; "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ வுலகு" (குறள், ௨௧௧); "வந்து தோன்றினண் மாமழை போலெனு" (௨அ : ௧அ௩) என்பரின்.

௧௬௨. மாசாத்துவானை 'அருந்தவன்' என்றார், துறவு பூண்டமையின்.

௧௬௪. மூதூர்க்குடக்கண் - பழைமையாகிய வஞ்சிநகரத்தின் மேற்றிசைக் கண்ணே. ௧௬௬. மாநகர் - அமராவதி.

௧௬அ. பொன்னகர் - காஞ்சிநகர். வறிதாப் புல்லென்றுயது - செல்வமின்றிப் பொலிவிழந்திருந்ததை.

௧௬௯. நங்கை - மணிமேகலை. ௧௭0. புரிசை - மதில்.

௧௭௨. தொடுகழற் கிள்ளியின் தம்பியாகிய இளங்கிள்ளி ; கிள்ளி - சோழன்.

௧௭௩. சினை - கிளை. திருமணி - அழகிய மரகதமணி. பாசடை - பசிய இலை.

௧௭௩ - ௪. இவ்வடிகளிற் கூறியது போலவே, "பவளச் செழுஞ்

(பி - ம்.) ௧௫௯ - ௬0. 'காணுவாருயிர்' ௧௬௨. 'அருந்தவரருள' ௧௬எ. 'மிசைகிடந்தனவளந்தலை மயக்கிப்' ௧௬அ. 'வறிதாய்ப்புல்' ௧எ0 - எ௧. 'புரிசை புலங்கொண்டு, நடுகரெல்லை நண்ணாநள்ளிழிந்து'

கஎ௫ சேதியந் தொழுது தென்மேற் காகத்
தாதணி பூம்பொழி லுன்சென் றெய்தலும்
வையங் காவலன் றன்பாற் சென்று
கைதொழு திறைஞ்சிக் கஞ்சுக னுரைப்போன்
கோவலன் மடந்தை குணவதம் புரிந்தோ
கஅ0 ளுவலந் தீவிற் றுனனி மிக்கோ
ளங்கையி னேந்திய வமுத சுரபியொடு
தங்கா திப்பதித் தருமத வனத்தே
வந்து தோன்றினண் மாமழை போலெனா
மந்திரச் சுற்றமொடு மன்னனும் விரும்பிக்
கஅ௫ கந்திற் பாவை கட்டுரை யெல்லாம்
வாயா கின்றென வந்தித் தேத்தி
யாய்வளை நல்லா டன்னுழைச் சென்று
செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ

---

சுடர் மரகதப் பாசடைப், பசும்பொன் மாச்சினை விசும்பகம் புதைக்கும், போதி" (வீர. யாப்பு. கக, உதாரணம்) என்று மகாபோதியை இங்ஙனம் சிறப்பித்துக் கூறியிருத்தல் காண்க. மகாபோதி பொன்மயமாயிருந்த தென்பதுபற்றிப் பௌத்தர் இக்காலத்தும் அரசமரத்தைப் பொற்றகட்டால் அலங்கரித்து வழிபடுவர்.

கஎ௫. சேதியம் - கோயில்.

கஎஉ - ௫. துணையிளங்கிள்ளி பகவற்கியற்றிய சேதியத்தைத் தொழுது.

கஎஎ. வையங்காவலன் - துணையிளங்கிள்ளி.

கஎஅ. கஞ்சுகன் - சட்டையிட்ட பிரதானி.

கஎகூ. 'கோவலன்மடந்தை' என்பது முதலியன கஞ்சுகன்கூற்று, மடந்தை - மகள்.

கஅஉ. தருமதவனம் - தருமத்தைக்கொடுக்கும் வனம்.

கஅ௩. மழைபோல் வந்து தோன்றினளென்று கஞ்சுகன் கூற.

கஅ௪. மந்திரச்சுற்றம் - மந்திரிகள்.

கஅ௫. கந்திற்பாவையென்றது, காஞ்சியில் ஒரு தூணில் உறையும் தெய்வத்தை.

கஅ௬. வாயாகின்றென - உண்மையாகின்றதென்று. வந்தித்தேத்தியது. மேற்கூறிய கந்திற்பாவையை.

கஅஎ. நல்லாள்தன்னுழை - மணிமேகலையிடத்து.

கஅஅ. 'செங்கோல்' என்பதுமுதல் துணையிளங்கிள்ளி கூற்று.

கஅஅ. மணி. எ : அ - க0.

(பி -ம்.) கஎ௫. 'சேதிமந்தொழுது' கஅஉ. 'தருமதாவனத்தே' 'தருமசார்வனத்தே' கஅஅ. 'தெய்வம்பிழைத்தோ'

கொங்கவிழ் குழலார் கற்புக்குறை பட்டோ
௧௯௦ நலத்தகை நல்லாய் நன்னா டெல்லா
மலத்தற் காலை யாகிய தறியேன்
மயங்குவேன் முன்னரோர் மாதெய்வந் தோன்றி
யுயங்கா தொழிநின் னுயர்தவத் தாலோர்
காரிகை தோன்று மவள்பெருங் கடிஞையி
௧௯௫ லாருயிர் மருந்தா லகனில முய்யு
மாங்கவ ளருளா லமரர்கோ னேவலிற்
றூங்கா மாரியுந் தானனி பொழியு
மன்னா ளிந்த வகனகர் புகுந்த
பின்னா ணிகழும் பேரறம் பலவாற்
௨௦௦ கார்வறங் கூரினு நீர்வறங் கூராது
பாரக வீதியிற் பண்டையோ ரிழைத்த
கோமுகி யென்னுங் கொழுநீ ரிலஞ்சியொடு
மாமணி பல்லவம் வந்த தீங்கெனப்
பொய்கையும் பொழிலும் புனைமினென் றறைந்தத்
௨௦௫ தெய்வதம் போயபிற் செய்தியா மமைத்த
திவ்விட மென்றே யவ்விடங் காட்டவத்

௧௯௧. அலத்தற்காலை - வறுமைக்காலம். அறியேன் - அறியேனாகி.

௧அஅ - ௯௧. மணி. ௧௫ : ௪௯ - ௫௦.

௧௯௩. உயங்காதொழி - வருந்தவேண்டா.

௧௯௪. தோன்றும் - தோன்றுவாள். கடிஞை - பிச்சைப்பாத்திரம்.

௧௯௫. ஆருயிர்மருந்து - சோறு. ௧௯௭. மாரி - மேகம்.

௧௯௬ - ௭. அவளருளால் கோன் ஏவலிற் பொழியும்.

௧௯௮. அன்னாள் - அம்மங்கை. ௧௯௯. பின்னாள் - பிற்காலத்து.

௨௦௦. கார்வறங்கூரினும் - மழைபெய்யாதொழியினும். கூராது : [முற்று.

௨௦௧. பண்டையோரிழைத்த - முன்னோர் செய்த.

௨௦௨. இலஞ்சி - பொய்கை.

௨௦௪. புனைமின் - அலங்கரித்துச் செய்மின் ; பிறரையும் உளப்படுத்திக் கூறியது இது.

௨௦௬. (துணையிளங்கிள்ளி) காட்ட.

(பி - ம்.) ௧௯௨. 'முன்னரோமாதெய்வந்' ௨௦௪ - ௫. 'பொதியிலும் புனைமினென்றறைந்த, தெய்வதம்'

தீவகம் போன்ற காவகம் பொருந்திக்
கண்டுளஞ் சிறந்த காரிகை நல்லாள்
பண்டையெம் பிறப்பினைப் பான்மையிற் காட்டிய
உ௧௦ வங்கப் பீடிகை யிதுவென வறவோன்
பங்கயப் பீடிகை பான்மையின் வகுத்தாத்
தீவ திலகையுந் திருமணி மேகலா
மாபெருந் தெய்வமும் வந்தித் தேத்துதற்
கொத்த கோயி லுளத்தகப் புணர்ந்து
உ௧௫ விழவுஞ் சிறப்பும் வேந்த னியற்றத்
தொழுதகை மாதர் தொழுதன ளேத்திப்
பங்கயப் பீடிகைப் பசிப்பிணி மருந்தெனு
மங்கையி னேந்திய வமுத சுரபியை
வைத்துநின் றெல்லா வுயிரும் வருகெனப்
உஉ௦ பைத்தர வல்குற் பாவைதன் கிளவியின்
மொய்த்த மூவறு பாடை மாக்களிற்
காணார் கேளார் கான்முட மானோர்
பேணா மாக்கள் பேசார் பிணித்தோர்
படிவ நோன்பியர் பசிநோ யுற்றோர்

---

உ௦௭. தீவகம் - மணிபல்லவம். காவகம் - சோலையினுள்ளே.

உ௧௦. அங்கப்பீடிகை - மணிபல்லவத்திருந்த புத்த பீடிகை. அற வோன் - புத்தன்.

உ௧௧. வகுத்து - செய்து.

உ௧௪. உளத்தக - நினைத்தற்குத்தக. உ௧௬. மாதர் - மணிமேகலை.

உ௧௭. பங்கயப்பீடிகை - பாதபீடிகையில்.

உ௧௯. வருகென - வருகவென்று மணிமேகலை சொல்ல.

உ௧௭ - ௯. பீடிகையில் அமுதசுரபியை வைத்தென்க.

உஉஉ. காணார் - குருடர். கேளார் - செவிடர். அவயவஹீனர்க்கு இரங்குதலைப் பத்துநிஷ்டைகளுள் ஒன்றென்பர்.

உஉ௩. பேணாமாக்கள் - பாதுகாக்கப்படாதமாக்கள்; என்றது அகதிகளை.

உஉஉ - ௩. மணி. ௧௩. : ௧௧௧ - உ.

உஉ௪. படிவநோன்பியர் - தவவேடத்தையும் நோன்பையுமுடைய வர்.

(பி - ம்.) உ௧௩. 'மாதெய்வந்தன்னையும்' உ௧௬. 'துதித்தனளேத்தி' உ௧௯. 'எல்லாவகையிரும்' உஉ௦. 'தன்கையின்'

௨௨௫ மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்
பன்னூருயிரம் விலங்கின் ருெகுதியு
மன்னுயி ரடங்கலும் வந்தொருங் கீண்டி
யருந்தியோர்க் கெல்லா மாருயிர் மருந்தாய்ப்
பெருந்தவர் கைப்பெய் பிச்சையின் பயனு
௨௩௦ நீரு நிலமுங் காலமுங் கருவியுஞ்
சீர்பெற வித்திய வித்தின் விளைவும்
பெருகிய தென்னப் பெருவளஞ் சுரப்ப
வசித்தொழி லுதவி வளந்தந் ததுவெனப்
பசிப்பிணி தீர்த்த பாவையை யேத்திச்
௨௩௫ செல்லுங் காலைத் தாயர் தம்முட
னல்லவை கடிந்த வறவண வடிகளு
மல்லன் மூதூர் மன்னுயிர் முதல்வி
நல்லறச் சாலை நண்ணினர் சேறலுஞ்

---

௨௨௫. மடிநல்கூர்ந்த மாக்கள் - உடுத்தற்கு ஆடையுமின்றி வறுமையுற்றமாக்கள்; சோம்புதலால் வறுமையுற்ற மாக்களெனினுமமையும்.

௨௨௯. பெருந்தவர் கைப்பெய் பிச்சையின்பயன் பெருகுதலை, "அறப்பயனுந், தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான் சிறிதாப் போர்த்து விடும்" (நாலடி. ௩௮) என்பதனுலுணர்க; மணி. ௧௭ : ௩ - ௪.

௨௩௧. வித்திய வித்து - விதைத்தவிதை.
௨௩௨. (அப்பாத்திரம்) சுரப்ப.

௨௨௯ - ௩௨. பிச்சையின் பயனும் வித்தின் விளைவும் பெருகிய தென்னச் சுரப்ப.

௨௩௩. வசி - மழை; மணி. ௧ : ௭௧.

௨௩௪. பாவையை - மணிமேகலையை. ஏத்தி - மேற்கூறியகாணர் முதலியோர் துதித்து.

௨௩௫. காலை - காலத்தில். தாயர்தம்முடன் - மாதவி சுதமதி யென்னும் இருவருடன்.

௨௩௬. அல்லவைகடிந்த - அறமல்லாதவற்றை நீக்கிய.

௨௩௭. உயிர்முதல்வி - மணிமேகலை.
௨௩௮. அறச்சாலை - தரும சாலையை.

௨௩௫ - ௮. தாயர்தம்முடன் அறவணவடிகளும் உயிர்முதல்வியின் அறச்சாலையை நண்ணுதலும்.

(பி - ம்.) ௨௨௫. 'நல்கூர்ந்தலமககளயாவரும்' ௨௨௮ - ௯. 'மருந்து, பெருங்' ௨௩௩. 'தொழிலுதவிவந்ததுவென்ன'

சென்றவர் தம்மைத் திருவடி வணங்கி
௨௪௦ நன்றென விரும்பி நல்லடி கழுவி
யாசனத் தேற்றி யறுசுவை நால்வகைப்
போனக மேந்திப் பொழுதினிற் கொண்டபிற்
பாசிலைத் திரையலும் பளிதமும் படைத்து
வாய்வ தாகவென் மனப்பாட் டறமென
௨௪௫ மாயைவிட் டிறைஞ்சினள் மணிமே கலையென்.

உஅ.—கச்சிமாநகர்புக்ககாதை முற்றிற்று.

---

௨௩௯. சென்று வணங்கி. ௨௪௦. கழுவி - விளக்கி.

௨௪௨. பொழுதினில் - காலம்பெற.

௨௩௯ - ௪௨. மணி. உஅ : ௧௧௪ - எ.

௨௪௩. திரையல் - வெற்றிலை. பளிதம் - பச்சைக் கருப்பூரம்.

௨௪௪. வாய்வதாக - தப்பாது பலித்திடுக.

௨௪௫. மாயை - மாய உருவம்; என்றது அவள் கொண்ட ஆடவர் உருவத்தை.

௧ - ௨௪௫. மணிமேகலை, தேர்ந்து கடந்து வாயில்குறுகினள் புக்குக் கண்டு மகிழ்வுற்றுப் பள்ளிபுக்குப் பணிந்து சொல்லினளாதலின், அருந்தவன், 'நின்னைக்கண்டது என் நல்வினைப்பயன்கொல்' என்றுகூறி, 'காத்தல் நின்கடன்' என அருள, ஆயிழை வணங்கி ஏந்தி ஓங்கி இயங்கி வலங்கொண்டு இழிந்து தொழுது சென்றெய்தலும், கஞ்சுகனுரைப்போன், 'வந்துதோன்றினள்' என, மன்னனும் விரும்பி ஏத்திச்சென்று காட்ட நல்லாள் பொருந்தி வகுத்துப் புனைந்து ஏத்தி வைத்து, 'வருக' என, காணார் முதலியோரும் விலங்கின் தொகுதியும் மன்னுயிரடங்கலும் வந்து ஈண்டி ஏத்திச் செல்லுங்காலையில் தாயர்தம்முடன் அறவணவடிகளும் நண்ணினர் சேறலும் மணிமேகலை வணங்கி விரும்பிக் கழுவி ஏற்றி ஏந்திப் படைத்து விட்டு இறைஞ்சினளென வினைமுடிவு செய்க.

(பி - ம்.) ௨௩௯. 'திருவடிதொழுது' ௨௪௦. 'நல்லடி விளக்கி', 'நல்லடிதழுவி.' ௨௪௨. 'ஏந்தப்'

இருபத்தோன்பதாவது

# தவத்திறம்பூண்டு தருமங்கேட்ட காதை.

[இருபத்தோன்பதாவது மணிமேகலை, காஞ்சிமாநகர்க்கட்சென்று பின்னர் அறவணரடிகளும் தாயருஞ்செல்ல அவரைக்கண்டு இறைஞ்சித் தருமங்கேட்ட பாட்டு.]

இறைஞ்சிய விளங்கொடி தன்னை வாழ்த்தி
யறந்திகழ் நாவி னறவண னுரைப்போன்
வென்வேற் கிள்ளிக்கு நாகநா டாள்வோன்
றன்மகள் பீலி வளைதான் பயந்த
ரு புனிற்றிளங் குழவியைத் தீவகம் பொருந்தித்
தனிக்கலக் கம்பளச் செட்டிகைத் தரலும்
வணங்கிக் கொண்டவன் வங்க மேற்றிக்
கொணர்ந்திடு மந்நாட் கூரிரு ளியாமத்
தடைகரைக் கணித்தா வம்பி கெடுதலு
கO மரக்கலங் கெடுத்தோன் மைந்தனைக் காணு

---

க. இளங்கொடிதன்னை - மணிமேகலையை.

௩. வென் - வென்றி. கிள்ளி - நெடுமுடிக்கிள்ளி. நாகநாடாள்வோன் - வளைவணன்.

௪. மகளாகிய பீலிவளை. பயந்த - பெற்ற.

ரு. குழவியை - குழந்தையை. தீவகம் - மணிபல்லவம்.

௬. தனிக்கலம் - ஒற்றைக்கப்பல்.

௩ - ௬. பீலிவளை, தான் கிள்ளிக்குப் பயந்த குழவியைத் தீவகத்தைப் பொருந்திக் கம்பளச் செட்டியின் கையில் தரலும்.

எ. அவன் - கம்பளச்செட்டி.

அ. கூரிருள்யாமத்து - மிக்க இருளையுடைய இடையிரவில்.

௯. அணித்தா - சமீபமாக. அம்பி - கப்பல்.

கO. கெடுத்தோன் - கம்பளச்செட்டி. மைந்தனை - குழந்தையை.

(பி - ம்.) க. 'இறைஞ்சிய நின்றவிளங்' ரு. 'தீபம்பொருந்தி'

தரைசற் குணர்த்தனு மவனயர் வுற்று
விரைவனன் றேடி விழாக்கோண் மறப்பத்
தன்விழாத் தவிர்தலின் வானவர் தலைவ
னின்னுயிர்த் தந்தை நெடுங்குலத் துதித்த
கரு மன்னுயிர் முதல்வன் மகர வேலையுண்
முன்னிய வங்க முங்கிக் கேடுறப்
பொன்னி னூசி பசுங்கம் பளத்துத்
துன்னிய தென்னத் தொடுகட லுழந்துழி
யெழுநா ளெல்லை யிடுக்கண்வந் தெய்தா
உ0 வழுவாச் சீலம் வாய்மையிற் கொண்ட
பான்மையிற் றனது பாண்டு கம்பளந்
தானடுக் குற்ற தன்மை நோக்கி
யாதி முதல்வன் போதி மூலத்து
நாத னுவோ னளிநீர்ப் பரப்பி

கக. அரைசற்கு - நெடுமுடிக்கிள்ளிக்கு. அயர்வுற்று - வருந்தி.

கஉ. விரைவனன் - விரைபவனாகி. தேடி - குழந்தையைத்தேடு தலால். விழாக்கோள் - இந்திரவிழாக்கொள்ளுதலை.

கஙு. வானவர்தலைவன் - இந்திரன்.

கச. நின்னுயிர்த்தந்தை - கோவலன்.

கரு. மன்னுயிர் முதல்வனென்றார், அருளறம்பூண்டோனாதலின்.

கசு. முங்கி - முழுகி.

கஎ. ஊசி வணிகனுக்கும், பசுங்கம்பளம் கடலுக்கும் உவமம்.

கஅ. உழந்துழி - வருந்தி நீந்தியபொழுது.

கரு - கக. எழுநாளெல்லை உயிர்முதல்வன் தொடுகடலுழந்துழி யென்க (மணி. உஅ: கஉங - ஙு0); "நண்ணுவழி யின்றி நாள்சில நீந்த" (கரு: ஙக) என்றார் சிலப்பதிகாரத்தும்.

'எழுநாள்' (கக) என்பதைப் பின்வரும் 'கொண்ட' (உ0) என்பதனோடு கூட்டினும் பொருந்தும்.

உ0. சீலத்தை நால்வகைவாய்மையுடன் கொண்ட.

உக. பாண்டுகம்பளம் - வெள்ளைக்கம்பளமாகிய ஆசனம்.

உக - உ. மணி. கச: உஅ - கக.

உங - ச. ஆதிமுதல்வனாகிய நாதனாகற்பாலோன்; என்றது, முற் கூறிய வணிகனை; இங்ஙனம் புத்தனாகற்பாலோரைப் போதிசத்துவ ரென்பர். நளி - பெருமை.

(பி - ம்.) கக. 'அரசர்க்குரைத்தலும்' கசு. 'முருங்கிக் கேடுற' கஅ. 'கடனீந்துழி' கக. 'எல்லையுருவந்தெய்த' உக - உ. 'கம்பளத் தானடுக்குற்ற' உங. 'அதிரமுதல்வன்' உச - ரு. 'நாதநாவான...நீர் பரப்பி, யெவ்வம்'

௨௫ னெவ்வமுற் றுன்றன தெவ்வந் தீரெனப்
பவ்வத் தெடுத்துப் பாரமிதை முற்றவு
மறவ ர சாளவு மறவாழி யுருட்டவும்
பிறவிதோ றுதவும் பெற்றிய ளென்றே
சாரண ரறிந்தோர் காரணங் கூற
௩௦ வந்த வுதவிக் காங்கவள் பெயரைத்
தந்தையிட் டனனினைத் தையனின் றுறவியு
மன்றே கனவி னனவென வறைந்த
மென்பூ மேனிமணி மேகலா தெய்வ
மென்பவட் கொப்ப வவனிடு சாபத்து

---

௨௪ - ௫ சாதனுவோன் கடலில் துன்பமுற்றான்; அவனது துன்பத்தைத் தீர்ப்பாயென்று மணிமேகலாதெய்வத்திற்கு இந்திரன்சொல்ல.

௨௬. பாரமிதை: மணி. ௨௬: ௪௫; பாரமிதையத்தும் உயிருறுப்புப் பொருணோர்ச்சிவகையான் முப்பதாமென்பர்; "அருணெறியாற் பாரமிதை யாறைந்து முடனடக்கிப், பொருண்முழுதும் போதியின்கீழ் முழுதுணர்ந்த முனிவரன்ற, னருண்மொழியா னல்வாய்மை யறிந்தவரே பிறப்பறுப்பார், மருணெறியாம் பிறநூலு மயக்கறுக்கு மாறுளதோ" (சித்தாந்தத்தொகை; சிவ - சித்தி. பரபக்கம், சௌத்ராந்திகன்மதம், ௨, ஞானப்.) பாரமிதையென்பதற்குக் கரையை அடைவதென்றுபொருள். ஈண்டுக்கூறிய தானமுதலியபத்தும் நிரம்பப்பெற்றவனுனமையின், புத்தன் தசபலனென்று வழங்கப்படுவன். இப்பத்தினுள், தானபாரமிதையை விளங்கக் கூறுவதாகிய தானபாரமிதையென்னும் நூலொன்று வடமொழியிலிருப்பதாகத் தெரிகின்றது. இது ஸ்ரீஹர்ஷகவி செய்த ஸம்ஸ்கிருத நைஷதம், ௫ - ஆம் ஸர்க்கத்துள்ள ௧௧ - ஆவது சுலோகத்தாலும் அதற்கு ஸ்ரீமல்லிநாதஸூரிசெய்த வியாக்கியானத்தாலும் உணரப்படுமென்பர். முற்றவும் - பூரிக்கவும்.

௧௪ - ௨௬. மணி. ௨௧: ௧௮௧ - ௨. ௨௭. அறவாழி - தருமசக்கரம்.

௨௬ - ௮. எடுத்துப் பிறவிதோறும் உதவும்பெற்றியள்.

௨௮ - ௯. பெற்றியளென்றுகூற.

௩௦. அந்தவுதவிக்கு - மேற்கூறிய வணிகனைக் கரையேற்றிய அவ்வுபகாரத்தைத் தான் மறவாதிருத்தலைப் புலப்படுத்தற்பொருட்டு.

௩௧. தந்தை - கோவலன். நினை - நினக்கு. துறவியும் - துறத்தலையும்.

௧௪ - ௩௧. சிலப். ௧௫: ௨௮ - ௩௭.

௩௦ - ௩௩. மணி. ௭: ௩௩ - ௮.

௩௪. என்பவட்கொப்ப அவனிடுசாபத்து என்றதனுல், மணிமேகலா தெய்வம் சாபமிட்டமை பெறப்பட்டது; அது, ௨௫: ௧௬௮ - ௨௦௦-ஆம் அடிகளால் உணரப்படும்.

(பி - ம்.) ௨௯. 'அறிந்தோராரணங்கூற' ௩௧. 'தாதையிட்டனன்' ௩௪. 'என்பவட்குரைப்பவ வனிடுசாபத்து'

௩௫ நகர்கடல் கொள்ளநின் றுயரும் யானும்
பகருநின் பொருட்டா லிப்பதிப் படர்ந்தன
மென்றலு மறவணன் றாளிணை யிறைஞ்சிப்
பொன்றிகழ் புத்த பீடிகை போற்றுந்
தீவ திலகையு மித்திறஞ் செப்பின
௪௦ ளாதலி னன்ன வணிநகர் மருங்கே
வேற்றுருக் கொண்டு வெவ்வே றுரைக்கு
நூற்றுறைச் சமய நுண்பொருள் கேட்டே
யவ்வுரு வென்ன வைவகைச் சமயமுஞ்
செவ்வி தன்மையிற் சிந்தையின் வைத்தில
௪௫ னடிகண் மெய்ப்பொரு ளருளுக வென்ன
நொடிகுவெ னங்காய் நுண்ணிதிற் கேணீ
யாதி சினேந்திர னளவை யிரண்டே
யேதமில் பிரத்தியங் கருத்தள வென்னச்

---

௩௫. நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

௧௩ - ௩௫. தன்விழாத்தவிர்தலின், மணிமேகலா தெய்வத்திற் கொப்ப வானவர் தலைவனாகிய அவன் இட்ட சாபத்தால் நகரைக் கடல் கொள்ளவென்க.

௩ - ௩௫. மணி. ௨௪ : ௨௧ - ௬௧. ௩௬. பதி - காஞ்சிநகரம்.

௩௫ - ௬. மணி. ௨௮ : ௧௫௧ - ௪.

௩௭. என்றலும் - என்று அறவணவடிகள் கூறலும்.

௩௮ - ௯. புத்தபீடிகை போற்றும் தீவதிலகை: மணி. ௧௧: ௨௭ - ௯.

௩ - ௩௯. மணி. ௨௫ : ௧௭௬ - ௨௧௩. ௪௦. நகர் - வஞ்சிநகரம்.

௪௨. சமயம் - அளவைவாதமுதல் பூதவாதமிறுதியாகிய சமயங்கள்.

௪௩. மணி. ௨௭ : ௨௮௯.

௪௪. செவ்விது : பன்மையொருமை மயக்கம்.

௪௫. அடிகள்: விளி. என்ன - என்று மணிமேகலை கேட்ப.

௪௬. நொடிகுவென் - சொல்லுவேன்.

'நொடிகுவென்' என்பது முதலியன அறவணவடிகளுடைய கூற்று.

௪௭. சினேந்திரன் - புத்தன்.

௪௮. ஏதம் - குற்றம். பிரத்தியம் - பிரத்தியக்கப் பிரமாணம்; மணி. ௨௭ : ௮௩. கருத்தளவு - அனுமானப்பிரமாணம்.

௪௭ - ௮. என்ன இரண்டேயென்க.

(பி - ம்.) ௩௭. 'அறவணனடியிணை' ௩௮. 'திகழ்பவுத்தபீடிகை' ௩௯. 'தீவலதிலகையும்' ௪௦. 'ஆதலினந்தவணி' ௪௨. 'நூற்றியச்சமய நுண்'

*சுட்டுணர் வைப்பிரத் தியக்க மெனச்சொலி
௫௦ விட்டனர் நாம சாதிகுணக் கிரியைகண்
மற்றவை யனுமா னத்துமடை யும்மெனக்
காரண காரிய சாமா னியக்கருத்
தோரிற் பிழைக்கையு முண்டுபிழை யாதது
கனலிற் புகைபோற் காரியக் கருத்தே
௫௫ யேனை யளவைக ளெல்லாங் கருத்தினி
லான முறைமையி னனுமான மாம்பிற
பக்க மேதுத் திட்டாந்த முபநய
நிகமன மென்ன வைந்துள வவற்றிற்
பக்க மிம்மலை நெருப்புடைத் தென்றல்

---

* இவ்வடிமுதலியவற்றால் இக்காதையிற் கூறப்பட்டுள்ள பிரத்தியக்கம் அனுமானமென்னும் இரண்டளவையிலக்கணங்களும், அவற்றின் பாகுபாடுகளும் இன்ன நூலின் கருத்தைத் தழுவிவந்தனவென்று விளங்காமையாலும், தமிழிலுள்ள தருக்கசங்கிரகம், அன்னம்பட்டீயம் முதலியவற்றிலும், சிவஞானசித்தியார் சுபக்கத்துள்ள அளவையிலக்கணத்திற்குப் பலரெழுதிய உரைகளிலும் வந்துள்ள குறியீடு முதலியவைகள் வேறு முறையாக இருத்தலாலும், இயன்றவளவு விசாரித்தும் இந்த முறையுள்ள பழைய நூல்கள் இக்காலத்து வழங்கவில்லையென்று வடமொழித் தருக்கநூல்கள் பலவற்றிலும் மிக்க பாண்டித்தியமுள்ளவரும், முன்பு கும்பகோணத்தில் வசித்தவருமாகிய குறிச்சி மஹாமஹோபாத்யாய ஸ்ரீ ரங்காசாரியாரவர்கள் முதலிய மஹாவித்துவான்கள் பலரும் சொல்லிவிட்டமையாலும், இவற்றைப்பற்றி இலங்கையிலுள்ள வித்தியோதய பாடசாலைத்தலைவரும் பௌத்தமதாசாரியருமாகிய ஸ்ரீ ஸுமங்களரை விசாரிக்கும்படி செய்ததற்கு அவர் பிரத்தியக்கம் அனுமேயம் ஸூராத்தேயமெனப் பிரமாணம் மூன்றுவகைப்படுமென்றும், அவற்றுட் பிரத்தியக்கத்தினிலக்கணம் அங்கோத்தரநிகாயமென்னும் நூலிலுள்ள காலாமசூத்திரத்திலும் மத்தியமநிகாயமென்னும் நூலிலுள்ள மஹாஹஸ்திபதோபமசூத்திரத்திலும் அனுமேயத்தினிலக்கணம் மேற்கூறிய நூல்களிலுள்ள அனுமானசூத்திரங்களிலும் ஸூராத்தேயத்தினிலக்கணம் மேற்கூறிய நூலிலுள்ள மஹாஸிஹ்மநாதசூத்திரத்திலும் கூறப்பட்டுள்ளனவென்றுமட்டுந் தெரிவித்தமையாலும், அந்நூல்களும் அவற்றைப் புலப்படுத்துவோரும் கிடைக்காமையாலும், இந்தப்பாகத்திற்குக் குறிப்புரை எழுதப்படவில்லை; ஆயினும் முதலில் கூறிய வித்துவான்களுடைய முன்னிலையிற் பலமுறை ஆராய்ச்சிசெய்து ஏட்டில் இருந்தவாறே மூலம் மாத்திரம் பதிப்பிக்கப்பட்டது.

(பி - ம்.) சக. 'வைகப்பிரத்தியக்கம்' ௫க. 'மானத்தடையுமெனக்' ௫உ. 'காரியஞ்சாமானிய' ௫௩. 'கனலியிற்புகைபோல்' ௫௫. 'ஏனையரளவைகள்' ௫எ - அ. 'திருட்டாந்தமுபனபளிகமெனவைந்து'

௬0 புகையுடைத் தாதலா லெனல்பொருந் தேது
வகையமை யடுக்களை போற்றிட் டாந்த
முபநய மலையும் புகையுடைத் தென்ற
னிகமனம் புகையுடைத் தேநெருப் புடைத்தென
னெருப்புடைத் தல்லா தியாதொன் றதுபுகைப்
௬௫ பொருத்த மின்று புனல்போ லென்றன்
மேவிய பக்கத்து மீட்சி மொழியாய்
வைதன் மியதிட் டாந்த மாகுந்
தூய காரிய வேதுச் சுபாவ
மாயிற் சத்த மநித்த மென்றல்
௭0 பக்கம் பண்ணப் படுத லாலெனல்
பக்க தன்ம வசன மாகும்
யாதொன்று யாதொன்று பண்ணப் படுவ
தநித்தங் கடம்போ லென்றல் சபக்கத்
தொடர்ச்சி யாதொன் றநித்தமல் லாதது
௭௫ பண்ணப் படாத தாகாசம் போலெனல்
விபக்கத் தொடர்ச்சி மீட்சிமொழி யென்க
வநன்னு வயத்திற் பிரமாண மாவ
திவ்வெள் ளிடைக்கட் குடமிலை யென்றல்
செவ்விய பக்கந் தோன்றுமை யில்லெனல்
அ0 பக்க தன்ம வசன மாகு
மின்மையிற் கண்டில முயற்கோ டென்ற
லந்நெறிச் சபக்கம் யாதொன் றுண்டது
தோற்றர வடுக்குங் கைநெல்லி போலென
லேற்ற விபக்கத் துரையென லாகு
அ௫ மிவ்வகை யேதுப் பொருள்சா திப்பன
வென்னைகா ரியம்புகை சாதித்த தென்னிற்

(பி - ம்.) ௬௨ - ௩. ‘முபநயமு மலையுடை...புகையுடைத் தென்னி கமனம்’ ௬௩ - ௪. ‘நெருப்புடைத்தன நெருப்புடைத்தல்லாதியாது’ ௬௫. ‘புலன்போலென்றல்’ ௬௬. ‘மேயவிப்பக்கத்து’ ௭க - ௨. ‘பககந் தன்ம வசனமாகும், யாதொனமியாதொன்று’ ௭௩ - ௫. ‘அநித்தியங் கடம்போலென்றல் சகபக்கத், தொடர்ச்சியாதொன்றணித்த மல்லாது, பண்ணையிலாகாதாகாசம்போலென்றல்’ ௭௭. ‘அனுனுபவயத்திற்’ அ0. ‘பக்கந்தன்ம’ அ௫. ‘எய்துப்பொருள்’ அ௬ - ௭ ‘புகைசாதித்தல், புகை யுள்ள விடத்திது நெருப்பு’

புகையுள விடத்து நெருப்புண் டென்று
மன்னுவயத் தாலு நெருப்பிலா விடத்துப்
புகையில்லை யென்னும் வெதிரேகத் தாலும்
௯0 புகைஇ நெருப்பைச் சாதித்த தென்னி
னோரிய புகையி னிகழ்ந்துண் டான
வூர்த்தச் சாமங் கௌடிலச் சாமம்
வாய்த்த நெருப்பின்வரு காரிய மாதலின்
மேனோக் கிக்கறுத் திருப்பபகைத் திருப்ப
௯௫ தாமே நெருப்பைச் சாதிக்க வேண்டு
மன்னு வயஞ்சா திக்கின் மூன்னுங்
கழுதை யையுங் கணிகை யையுந்
தம்மி லொருகா லத்தோ ரிடத்தே
யன்னு வயங்கண் டான்பிற் காலத்துக்
௧00 கழுதை யைக்கண்ட விடத்தே கணிகையை
யனுமிக்க வேண்டு மதுகூ டாநெருப்
பிலாவிடத் துப்புகை யிலையென னோரத்
திருத்தகு வெதிரேகஞ் சாதிக்கு மென்னி
னுய்வா ணில்லாக் கழுதையின் பிடரி
௧0௫ னரிவாலு மிலையாக் காணப் பட்ட
வதனையே கொண்டு பிறிதோ ரிடத்து
நரிவாலி னுைய் வாலையனு மித்த
லரிதா மதனு லதுவு மாகா
தொட்டிய வுபநய நிகமன மிரண்டுந்
௧௧0 திட்டாந் தத்தி லேசென் றடங்கும்
பக்க மேதுத் திட்டாந் தங்க
ளொக்க நல்லவுந் தீயவு முளவதில்
வெளிப்பட் டுள்ள தன்மி யினையும்

---

(பி - ம்.) அஅ. 'அன்னியத்தாலு' ௯௨ - ௫. 'ஊர்திததிசசாம வணணயகௌடச் சாயம,வாய்த்த நெருப்பினவரு காரியங்களயிர்தறின மேனோககிறுததிருப்பகான நெருப்பை' ௯௬. 'அனனுவயசாதிக்கின்' ௯௯ - ௧0௧. 'எனனுவயங்கலிறககாலததுங், கணிகையைக் கண்டவிடத் தே கழுதை, யனுபவிக்கவேணுமேதுவேண்டா' ௧0௧ - ௩. 'நெருப் பில்லாத விடத்துப் புகையில்லை யென்று நெருதிருததரு' ௧0௫ - ௬. 'பட்டத்தனையே' ௧0எ - அ. 'வாலையனு மிக்கவரிதாமனனுனதுவு' ௧0௯. 'ஒட்டியவுபாயமிகமண' ௧௧௧. 'பக்கமேதுந திருட்டானநதங்கள்'

வெளிப்பட் டுளசாத் தியதன் மத்திறம்
௧௧௫ பிறிதில் வேறாம் வேறுபாட் டினையுந்
தன்கட் சார்த்திய நயந்தருத லுடையது
நன்கென் பக்கமென நாட்டுக வதுதான்
சத்த மநித்த நித்தமென் றொன்றைப்
பற்றி நாட்டப் படுவது தன்மி
௧௨௦ சத்தஞ் சாத்திய தன்ம மாவது
நித்தா நித்த நிகழுநல் லேது
மூன்றாய்த் தோன்று மொழிந்த பக்கத்
தூன்றி நிற்றலுஞ் சபக்கத்துண் டாதலும்
விபக்கத் தின்றியே விடுதலுஞ் சபக்கஞ்
௧௨௫ சாதிக் கிற்பொரு டன்னாற் பக்கத்
தோதிய பொதுவகை யொன்றி யிருத்தல்
சத்த வநித்தஞ் சாத்திய மாயி
னொத்த வநித்தங் கடாதி போலெனல்
விபக்கம் விளம்பில் யாதொன் றியாதொன்
௧௩௦ றநித்தமல் லாதது பண்ணப் படாத
தாஅ காசம் போலென் றாகும்
பண்ணப் படுதலுஞ் செயலிடைத் தோன்றலு
நண்ணிய பக்கஞ் சபக்கத் திலுமாய்
விபக்கத் தின்றி யநித்தத் தினுக்கு
௧௩௫ மிகத்தரு மேதுவாய் விளங்கிற் றென்க
வேதமி றிட்டாந் தம்மிரு வகைய
சாதன் மியம்வை தன்மி யம்மெனச்
சாதன் மியமெனப் படுவது தானே
யநித்தங் கடாதி யன்னுவயத் தென்கை
௧௪௦ வைதன் மியதிட் டாந்தஞ் சாத்திய
மெய்தா விடத்தி லேதுவு மின்மை
யித்திற நல்ல சாதனத் தொத்தன

---

(பி - ம்.) ௧௧௫, 'இனைவுந்' ௧௧௬. 'சாத்தியயநதருதலு' ௧௧௮. 'மனித்தமென் றொன்றை' ௧௧௯. 'பற்றநாட்ட' ௧௧௯ - ௨௦. 'தன மிரதகஞ் சாத்திய' ௧௨௨. 'தோன்றிமொழிந்த' ௧௨௫. 'சாதிக்க பொரு டன்னாற்' ௧௩௦. 'அனித்தமொன்றுபண்ண' ௧௩௦-௩௧. 'பண்ணப்படா தாகாசம்' ௧௩௨. 'செய்தலுடைத் தோன்றலும்' ௧௩௪. 'அணித்திணுக்கு மிதததகு' ௧௩௬ - ௭. 'இருவகைசாதன'

தீய பக்கமுந் தீய வேதுவுந்
தீய வெடுத்துக் காட்டு மாவன
௧௪௫ பக்கப் போலியு மேதுப் போலியுந்
திட்டாந்தப் போலியு மாஅ மிவற்றுட்
பக்கப் போலி யொன்பது வகைப்படும்
பிரத்தி யக்க விருத்த மனுமான
விருத்தஞ் சுவசன விருத்த முலோக
௧௫௦ விருத்த மாகம விருத்த மப்பிர
சித்த விசேடண மப்பிர சித்த
விசேடிய மப்பிர சித்த வுபய
மப்பிர சித்த சம்பந் தம்மென
வெண்ணிய விவற்றுட் பிரத்தியக்க விருத்தங்
௧௫௫ கண்ணிய காட்சி மாறுகொள லாகுஞ்
சத்தஞ் செவிக்குப் புலனன் றென்றன்
மற்றனு மான விருத்த மாவது
கருத்தள வையைமா றுகக் கூற
லநித்தியக் கடத்தை நித்திய மென்றல்
௧௬௦ சுவசன விருத்தந்தன் சொன்மாறி யியம்பு
லென்றாய் மலடி யென்றே யியம்ப
லுலக விருத்த முலகின்மா றுமுரை
யிலகுமதி சந்திர னல்ல வென்ற
லாகம விருத்தந்தன் னூன்மா றறைத
௧௬௫ லநித்த வாதியா யுள்ளவை சேடிக
னநித்தி யத்தைநித் தியமென நுவற
லப்பிர சித்த விசேடண மாவது
தத்த மெதிரிக்குச் சாத்தியந் தெரியாமை
பௌத்தன் மாறாய் நின்றசாங் கியனைக்
௧௭௦ குறித்துச் சத்தம் விநாசி யென்றா
லவனவி நாச வாதி யாதலிற்
சாத்திய விநாசமப் பிரசித்த மாகு

(பி - ம்.) ௧௪௩-௪. ‘ஏதுவு நடுத்தீய வேதுக்காட்’ ௧௪௬. ‘போலியு மென விவற்’ ௧௪௮-௯. ‘பிரத்தியக்கமனுமான, விருததஞ்சுவன விருத்த முதலோத’ ௧௫௧-௨. ‘சிததசேடணமாப் பிரசித்திய விசேடிய’ ௧௫௮. ‘அளவை மாறுகூறல்’ ௧௫௯. ‘அநித்தக்’ ௧௬௨ - ௩. ‘உலகவுரையிலகு மதிதந்திர’ ௧௬௪. ‘தன்னூதைமாறறைத’

மப்பிர சித்த விசேடிய மாவ
தெதிரிக்குத் தன்மி பிரசித்த மின்றி
௧௭௫ யிருத்தல் சாங்கியன் மாறாய் நின்ற
பௌத்தனைக் குறித்தான் மாச்சை தனியவா
னென்று லவன நான்ம வாதி
யாதலிற் றன்மி யப்பிர சித்த
மப்பிர சித்த வுபய மாவது
௧௮௦ மாறு னோர்க்குத் தன்மி சாத்திய
மேறு தப்பிர சித்தமா யிருத்தல்
பகர்வை சேடிகன் பௌத்தனைக் குறித்துச்
சுகமுத லியதொகைப் பொருட்குக் காரண
மான்மா வென்றாற் சுகமுமான் மாவுந்
௧௮௫ தாமிசை யாமையி லப்பிரசித் தோபய
மப்பிர சித்த சம்பந்த மாவ
தெதிரிக் கிசைந்த பொருள்சா தித்தன்
மாறும் பௌத்தற்குச் சத்த வநித்தங்
கூறி லவன்ன் கொள்கையஃ தாகலில்
௧௯௦ வேறுசா திக்க வேண்டா தாகு
மேதுப் போலி யோதின்மூன் றாகு
மசித்த மநைகாந் திகம்விருத் தம்மென
வுபயா சித்த மன்னியதா சித்தஞ்
சித்தா சித்த மாசிரயா சித்த
௧௯௫ மெனநான் கசித்த முபயா சித்தஞ்
சாதன வேது விருவர்க்கு மின்றிச்
சத்த மநித்தங் கட்புலத் தென்ற
லன்னியதா சித்த மாறாய் நின்றாற்
குன்னிய வேது வன்று யொழிதல்
௨௦௦ சத்தஞ் செயலுற லநித்த மென்னிற்
சித்த வெப்பா டல்லது செயலுற




---

(பி - ம்.) ௧௭௩ - ௪. 'யாவது தனமி யெதிரிக்குத் தன்மமாசித்த மின்றி' ௧௭௭. 'என்றாலவனுறமவாதி' ௧௮௫ - ௬. 'அப்பிரசித்த, மப்பிர சித்த சம்பந்த' ௧௮௭. 'எதிரிகருதியிருந்த பொருள்சாதிக்கை' ௧௮௮-௯. 'அனித்தங், கூடுலவன்' ௧௯௧ - ௨. 'என்றுகுஞ்சித்தம்' ௧௯௪ - ௫. 'சித்த மாச்சியாசித்தமுமன' ௧௯௫ - ௬. 'சித்தமாவது சாதன' ௨௦௦. 'செய லுறுதலினித்த' ௨௦௧. 'சத்த வெளிப்பாடு'

னுய்த்த சாங்கியனுக் கசித்த மாகுஞ்
சித்தா சித்த மாவ
தேதுச் சங்கய மாய்ச்சா தித்த
௨0௫ லாவி பனியென வையுறு நின்றே
தூய புகைநெருப் புண்டெனத் துணித
லாசிரயா சித்த மாறு னவனுக்
கேற்ற தன்மி யின்மை காட்டுத
லாகாசம், சத்த குணத்தாற் பொருளா மென்னி
௨௧0 ஞகா சம்பொரு ளல்லவென் பாற்குத்
தன்மி யசித்த மநைகாந் திகமூஞ்
சாதா ரணமசா தாரணஞ் சபக்கைக
தேச விருத்தி விபக்க வியாபி
விபக்கைக தேச விருத்தி சபக்க
௨௧௫ வியாபி யுபயைக தேச விருத்தி
விருத்த வியபி சாரியென் றாறு
சாதா ரணஞ்சபக்க விபக்கத் துக்கு
மேதுப் பொதுவா யிருத்தல் சத்த
மநித்த மறியப் படுதலி னென்று
௨௨0 லறியப் படுதனித் தாநித்த மிரண்டுக்குஞ்
செறியுங் கடம்போ லநித்தத் தறிவோ
வாகாசம் போல நித்தத் தறிவோ
வென்ன லசாதா ரணமா வதுதா
னன்னிய பக்கத் துண்டா மேதுச்
௨௨௫ சபக்க விபக்கந் தம்மிலின் றுதல்
சத்த நித்தங் கேட்கப் படுதலி
னென்னிற் கேட்கப் படலெனு மேதுப்
பக்கத் துள்ள தாயி னல்லது
சபக்க விபக்கத்து மீட்சித் தாதலிற்
௨௩0 சங்கய மெய்தி யநேகாந் திகமாஞ்
சபக்கைக தேச விருத்தி விபக்க

---

(பி - ம்.) ௨0௪. 'ஏதுசங்கயமாயநிச்சயி' ௨0௬. 'உண்டெனத்தெளி தல்' ௨௧௨ - ௫. 'சாதாரணவபசகனகதெருவிதநிவிபககவிபாபிவிபகக தெசவிருத்தி' ௨௧௬. 'விருத்தாவியாபிசாரி' ௨௨௯ - ௩௧. 'பககததுமீடத்தாதலிற், சபக்க தேசவிருத்தி'

வியாபி யாவ தேதுச் சபக்கத்
தோரிடத் தெய்தி விபக்கத் தெங்கு
முண்டாத லாகுஞ் சத்தஞ் செயலிடைத்
௨௩௫ தோன்று தாகு மநித்த மாகலி
னென்று லநித்த மென்ற வேதுச்
செயலிடைத் தோன்று மைக்குச் சபக்க
மின்னினு மாகா சத்தினு மின்னி
னிகழ்ந்தா காசத்திற் காணு தாகலி
௨௪௦ னநித்தங் கடாதியி னைத்தலிற் கடம்போ
லழிந்து செயலிற் றேன்றுமோ மின்போ
லழிந்து செயலிற் றேன்று தோவெனல்
விபக்கைக தேச விருத்தி சபக்க
வியாபி யாவ தேது விபக்கத்
௨௪௫ தோரிடத் தூற்றுச் சபக்கத்தொத் தியறல்
சத்தஞ், செயலிடைத் தோன்று மநித்தமா தலினெனி
னநித்த வேதுச் செயலிடைத் தோன்றற்கு
விபக்க வாகா யத்தினு மின்னினு
மின்னி னிகழ்ந்தா காசத்துக் காணுது
௨௫௦ சபக்கக் கடாதிக டம்மி
லெங்குமா யேகாந்த மல்ல மின்போ
லநித்தமாய்ச் செயலிடைத் தோன்றுதோ கடம்போ
லநித்தமாய்ச் செயலிடைத் தோன்று மோவென
லுபயைக தேச விருத்தி யேதுச்
௨௫௫ சபக்கத் தினும்விபக் கத்தினு மாகி
யோர்தே சத்து வர்த்தித்தல் சத்த
நித்த மமூர்த்த மாதலி னென்னி
னமூர்த்த வேது நித்தத் தினுக்குச்
சபக்கவா காச பரமா ணுக்களி
௨௬௦ னுகா சத்து நிகழ்ந்து மூர்த்தமாம்

---

(பி - ம்.) ௨௩௪. 'உண்டாதலாம்' ௨௩௫. 'ஆகுநித்த மாதலின்' ௨௩௬. 'என்றுநித்த' ௨௩௮ - ௪௦. 'மின்னி நிகழாகாசததாதலினத தங் கடாதியின்' ௨௪௩. 'விபக்கவறதேசவிருத்தி' ௨௪௫ - ௭. 'இயறல, செயலிடைத் தோன்றலிற் சொல்லனித்த மென்னித்த வேறுச்' ௨௫௦. 'கடதிகடனின்றெங்குமா' ௨௫௩-௪. 'தோன்றுமோ வென்று, முபயத தேசவிருத்தி'

பரமா ணுவினிக ழாமை யானும்
விபக்க மான கடசுகா திகளிற்
சுகத்து நிகழ்ந்து கடத்தொழிந் தமையினு
மேகதே சத்து நிகழ்வதே காந்தமன்
உசுரு றமூர்த்த மாகாசம் போல நித்தமோ
வமூர்த்த சுகம்போ லநித்த மோவெனல்
விருத்த வியபிசாரி திருந்தா வேதுவாய்
விருத்த வேதுவிற் கும்மிடங் கொடுத்தல்
சத்த மநித்தஞ் செயலிடைத் தோன்றலி
உஎ0 னுத்த தெனினச் செயலிடைத் தோன்றற்குச்
சபக்கமா யுள்ள கடாதி நிற்கச்
சத்த நித்தங் கேட்கப் படுதலிற்
சத்தத் துவம்போ லெனச்சாற் றிடுத
லிரண்டினுஞ் சங்கயமா யேகாந்த மல்ல
உஎரு விருத்தந் தன்னைத் திருத்தக விளம்பிற்
றன்மச் சொரூப விபரீத சாதனந்
தன்ம விசேட விபரீத சாதனந்
தன்மிச் சொரூப விபரீத சாதனந்
தன்மி விசேட விபரீத சாதன
உஅ0 மென்ன நான்கு வகைய தாகுமத்
தன்மச் சொரூப விபரீத சாதனஞ்
சொன்ன வேதுவிற் சாத்திய தன்மத்
துருவங் கெடுதல் சத்த நித்தம்
பண்ணப் படுதலி னென்றுற் பண்ணப்
உஅரு படுவ தநித்தமா தலிற்பண்ணப் பட்ட
வேதுச் சாத்திய தன்மநித் தத்தைவிட்
டநித்தஞ் சாதித்த லான்விப ரீதந்
தன்ம விசேட விபரீத சாதனஞ்

---

(பி - ம்.) உசுங. 'சுகததிநிகழ்ந்து' உசுரு. 'ஆகாசமபோனித்தமோ' உசுசு. 'அமூர்தமோசசுகமம போலநிததமோ' உசுஎ. 'வியாபிசாரியாவது விருத்தவேதுவவிற' உசுஅ - எ0. 'கொடுத்த, மனித்தஞ் செயலிடைத் தோன்ற, லொத்தெநினசெயலிடை' உஎ0 - எக. 'தோனறறகு சனைசுபக்கமா' உஎங - சு. 'சாடுத, லிரணடிவங்கய' உஎசு - அங. 'தனமசசருமவிபரீத சாதனஞ், சொன்னவிசற சாநதியதனமத, தருவங்கெடல' உஅஅ - க. 'விபரீதஞ் சொன்ன'

சொன்ன வேதுச் சாத்திய தன்மந்
உ௯0 தன்னிடை விசேடங் கெடச்சா தித்தல்
கண்முத லோர்க்கு மிந்திரி யங்க
ளெண்ணிற் பரார்த்தந் தொக்குநிற் றலினாற்
சயன சனங்கள் போல வென்றுற்
றொக்கு நிற்றலி னென்கின்ற வேதுச்
உ௯௫ சயன சனத்தின் பரார்த்தம்போற் கண்முத
லிந்தியங் களையும் பரார்த்தத்திற் சாதித்துச்
சயன சனவா னைப்போ லாகிக்
கண்முத லிந்தியத் துக்கும் பரனுய்ச்
சாதிக் கிறநிர வயவமா யுள்ள
௩00 வான்மா வைச்சா வயவ மாகச்
சாதித் துச்சாத் தியதன் மத்தின்
விசேடங் கெடுத்த லின்விப ரீதந்
தன்மிச் சொரூப விபரீத சாதனந்
தன்மி யுடைய சொருபமாத் திரத்தினை
௩0௫ யேதுத் தானே விபரீதப் படுத்தல்
பாவந் திரவியங் கன்ம மன்று
குணமு மன்றெத் திரவிய மாமெக்
குணகன் மத்துண் மையின்வே றுதலாற்
சாமா னியவிசே டம்போ லென்றுற்
௩௧0 பொருளுங் குணமுங் கருமமு மொன்றாய்
நின்றவற் றின்னிடை யுண்மைவே றுதலா லென்று
காட்டப் பட்ட வேது மூன்றினுடை
யுண்மை யேதுப் படுத்தும் பொதுவா
முண்மை சாத்தியத் தில்லா மையினுந்
௩௧௫ திட்டாந் தத்திற் சாமானிய விசேடம்

(பி - ம்.) உ௮௯ - ௯0. ‘ஏதுச்சாதியை, தமைந்தனனிடை’ உ௯௧. ‘கண்ணறிவோர்க்கு மிந்திரி’ உ௯உ. ‘தொகுத்து நிற்றலினற்’ உ௯௩ - ௪. ‘போலவென்றுற், றொருகுத்துநிற்றலி னெனனிறை’ உ௯௬ - ௮. ‘சாதிச்சயனப்பானை, போறகண’ உ௯௮ - ௯. ‘பாயனுக, சாககினிர வயவ’ ௩00. ‘சாமயமாகச’ ௩0உ. ‘விசேடங்கொடுத்தலின்’ ௩0௩ - ௪. ‘விபாதந, தனமிசசரூபரிததசானந்’ ௩0௭. ‘குணமனறெதிரவியாமா மெக’ ௩௧௧. ‘நினறவயிற்றிடை’ ௩௧உ - ௪. ‘ஏதுமனறினுடை, யுண்மைபேதுப்படுத்தும்பொருளா, முண்மை சாத்திய சத்தியத்தி லில்லா’

போக்கிப் பிறிதொன் றில்லாமை யானும்
பாவ மென்று பகர்ந்ததன் மியினை
யபாவ மாக்குத லான்விப ரீதந்
தன்மி விசேட விபரீத சாதனந்
௩௨௦ தன்மி விசேட வபாவஞ் சாதித்தன்
முன்னங் காட்டப் பட்ட வேதுவே
பாவமா கின்றது கருத்தா வுடைய
கிரியையுங் குணமுமா மதனை விபரீத
மாக்கிய தாதலாற் றன்மி விசேடங்
௩௨௫ கெடுத்தது தீய வெடுத்துக்காட் டாவன
தாமே திட்டாந்த வாபா சங்க
டிட்டாந் தம்மிரு வகைப்படு மென்றுமுற்
கூறப் பட்டன விங்க ணவற்றுட்
சாதன் மியதிட் டாந்தவா பாச
௩௩௦ மோதி லைந்து வகையுள தாகுஞ்
சாதன தன்ம விகலமுஞ் சாத்திய
தன்ம விகலமு முபய தன்ம
விகலமு மநன்னு வயம்விப ரீதான்
னுவய மென்ன வைதன் மியதிட்
௩௩௫ டாந்த வாபா சமுமை வகைய
சாத்தி யாவி யாவி ருத்தி
சாத னாவி யாவி ருத்தி
யுபயாவி யாவிருத்தி யவ்வெதி ரேகம்
விபரீத வெதிரேக மென்ன விவற்றுட்
௩௪௦ சாதன தன்ம விகல மாவது
திட்டாந் தத்திற் சாதனங் குறைவது
சத்த நித்த மமூர்த்த மாதலான்
யாதொன் றியாதொன் றமூர்த்தமது நித்த
மாதலாற் காண்புற்றது பரமாணு விலெனிற்

---

(பி - ம்.) ௩௧௬ - எ. 'யானு, மயவாபமென்று பகர்ந்ததன்' ௩௨௩ - ச. 'கிரிகையாகுமதனைவிபரீத, மாதலாலதன்விசேட' ௩௩௧ - ௩. 'தன் மியமிகலஞ் சாத்திக, மகனம விகலவுபைய விகவ மனனனுவையம் விபரீ தானனு' ௩௩௪ - ரு. 'எனமதனினமிய திருட், டாந்தமுமையவகைய' ௩௩௬ - கூ. 'சாத்தியாவியா...விருததி, யவவிதிரேகவிபரீதவிதிரேக மிவற்றுட்' ௩௪௪. 'காணவுற்றது'

௩௪௫ றிட்டாந் தப்பர மாணு
நித்தத் தோடு மூர்த்த மாதலாற்
சாத்திய தன்ம நித்தத்துவ நிரம்பிச்
சாதன தன்மவமூர்த் தத்துவங் குறையுஞ்
சாத்திய தன்ம விகல மாவது
௩௫௦ காட்டப் பட்ட திட்டாந் தத்திற்
சாத்திய தன்மங் குறைவு படுதல்
சத்த நித்த மமூர்த்த மாதலால்
யாதொன் றியாதொன் றமூர்த்தமது நித்தம்
புத்திபோ லென்றூற்
௩௫௫ றிட்டாந்த மாகக் காட்டப் பட்ட
புத்தி யமூர்த்த மாகி நின்றே
யநித்த மாதலாற் சாதன வமூர்த்தத்துவ
நிரம்பிச் சாத்திய நித்தத்துவங் குறையு
மூபய தன்ம விகல மாவது
௩௬௦ காட்டப் பட்ட திட்டாந் தத்திலே
சாத்திய சாதன மிரண்டுங் குறைத
லன்றியு மதுதான் சன்னு மசன்னு
மென்றிரு வகையா மிவற்றுட்சன் னுவுள
வுபய தன்ம விகல மாவ
௩௬௫ துள்ள பொருட்கட் சாத்திய சாதனங்
கொள்ளு மிரண்டுங் குறையக் காட்டுதல்
சத்த நித்த மமூர்த்த மாதலான்
யாதொன் றியாதொன் றமூர்த்தமது நித்தங்
கடம்போ லெனிற்றிட் டாந்த மாகக்
௩௭௦ காட்டப் பட்டகடந் தானுண் டாகிச்
சாத்திய மாயுள நித்தத் துவமுஞ்
சாதன மாயுள வமூர்த்தத் துவமுங் குறையு
மசன்னு வுள்ள வுபயதன்ம விகல
மில்லாப் பொருட்கட் சாத்திய சாதன
௩௭௫ மென்னு மிரண்டுங் குறையக் காட்டுதல்

(பி - ம்.) ௩௪௮ - ௫௦. 'அமூர்த்தங் குறையும், சோத்தியனம விகலங், காட்டப்பட்ட' ௩௬௧ - ௩. 'குன்றைத, லின்றியும்மதுதான் சனன சனனு, மென்றிருவகையாமவற்றுட்' ௩௬௯. 'கடம்போலெனத் திருட்டாந்தங்' ௩௭௪ - ௫. 'சாதன, வெல்லையிரண்டுங் காட்டுதல்'

சத்த மநித்த மூர்த்த மாதலான்
யாதொன் றியாதொன்று மூர்த்தம தநித்த
மாகாசம் போலெனுந் திட்டாந் தத்துச்
சாத்திய தன்மமா யுள்ள வநித்தமுஞ்
௩௮0 சாதன தன்மமா யுள்ள மூர்த்தமு
மிரண்டு மாகாச மசத்தென் பானுக்
கதன்க ணின்மை யானே குறையு
முண்டென் பானுக் காகாச நித்த
வமூர்த்த மாதலா லவனுக்குங் குறையு
௩௮௫ மநன்னுவய மாவது சாதன சாத்தியந்
தம்மிற் கூட்ட மாத்திரஞ்சொல் லாதே
யிரண்ட னுடைய வுண்மையைக் காட்டுதல்
சத்த மநித்தங் கிருத்த மாதலின்
யாதொன்று யாதொன்று கிருத்தம தநித்தமெனு
௩௯0 மன்னுவயஞ் சொல்லாது குடத்தின் கண்ணே
கிருத்த வநித்தங் காணப் பட்ட
வென்று லன்னுவயந் தெரியா தாகும்
விபரீதான் னுவயம் வியாபகத் துடைய
வன்னுவயத் தாலே வியாப்பியம் விதித்தல்
௩௯௫ சத்த மநித்தங் கிருத்தந் தாலெனின்
யாதொன்று யாதொன்று கிருத்த மநித்தமென
வியாபகத் தால்வியா பகத்தைக் கருதா
தியாதொன் றியாதொன் றநித்தமது கிருத்தமென
வியாபகத் தால்வியாப் பியத்தைக் கருதுத
௪00 லப்படிக் கருதின் வியாபகம் வியாப்பியத்தை
யின்றியு நிகழ்த லின்விப ரீதமாம்
வைதன்மிய திட்டாந் தத்துச்
சாத்தி யாவியா விருத்தி யாவது
சாதன தன்ம மீண்டு
௪0௫ சாத்திய தன்ம மீளா தொழிதல்

---

(பி - ம்.) ௩௭௨ - ௪. 'இன்னமையான் குறையு, நிததாவமூர்த்த முண்டென்பானுக், காகாசநிததாவத்தமாதலா, லவனுக்குங்குறையும்' ௩௮௫. 'சாதியசாதனந்' ௩௮௯ - ௯0. 'கிருத்தமநித்த, மன்னுவயஞ்' ௩௯௧ - ௨. 'பட்ட, தொன்றுலன்று' ௩௯௪. 'வியாபியம்விபித்தல்' ௩௯௬. 'மனித்தமே' ௩௯௭ - ௪0௧. 'விபாபகத்தை, யின்றியும்'

சத்த நித்த மமூர்த்தத் தென்றால்
யாதொன் றியாதொன்று நித்தமு மன்றது
வமூர்த்தமு மன்று பரமாணுப் போலெனி
னப்படித், திட்டாந்த மாகக் காட்டப் பட்ட
சக0 பரமாணு நித்தமாய் மூர்த்த மாதலிற்
சாதன வமூர்த்த மீண்டு
சாத்திய நித்த மீளா தொழிதல்
சாத னவியா விருத்தி யாவது
சாத்திய தன்ம மீண்டு
சசரு சாதன தன்ம மீளா தொழிதல்
சத்த நித்த மமூர்த்தத் தென்றால்
யாதொன் றியாதொன்று நித்த மன்றஃ
தமூர்த்தமு மன்று கன்மம்போ லென்றால்
வைதன் மியதிட் டாந்த மாகக்
ச௨0 காட்டப் பட்ட கன்ம
மமூர்த்தமாய் நின்றே யநித்த மாதலிற்
சாத்திய மான நித்திய மீண்டு
சாதன மான வமூர்த்த மீளா
துபயாவி யாவிருத்தி கா.் டப் பட்ட
ச௨ரு வைதன் மியதிட் டாந்தத்தி னின்று
சாதன சாத்தியங்கண் மீளாமை யன்றியு
முண்மையி னுபயா வியாவி ருத்தி
யின்மையி னுபயா வியாவி ருத்தி
யெனவிரு வகையுண் மையி
சௌ0 னுபயாவி யாவிருத்தி யுள்ள பொருட்கட்
சாத்திய சாதன மீளா தபடி
வைதன் மியதிட் டாந்தங் காட்டல்
சத்த நித்த மமூர்த்த மாதலி
னென்றாற் கியாதொன் றியாதொன்று நித்தமன்

---

(பி - ம்.) ச0அ - க. 'மனறறுபரமனுபபோலெனின், படிவைதன மியதிருட்டாந்தம்' சகக உக. 'மாகாட்டப்பபட்டதனமமூர்தத மாகினறே யனித்தமாதலின்' ச௨ச - ரு. 'காட்டப்பட்ட, தன்மிய திருட்டாந்த' ச௨கூ. 'மீளாதுமையின்றியும்'

௪௩௫ றமூர்த்தமு மன்றா காசம்போ லென்றால்
வைதன்மிய திட்டாந்த மாகக் காட்டப் பட்ட
வாகா சம்பொரு ளென்பாற்
காகாச நித்தமு மமூர்த்தமு மாதலாற்
சாத்திய நித்தமுஞ் சாதனயா வுள்ள
௪௪0 வமூர்த்தமு மிரண்டு மீண்டில வின்மையி
னுபயாவி யாவிருத்தி யாவது
சத்த மநித்த மூர்த்த மாதலா
னென்றவிடத் தியாதொன் றியாதொன் றநித்த
மூர்த்தமு மன்ன் றாகாசம் போலென
௪௪௫ வைதன் மியதிட் டாந்தங் காட்டி
லாகா சம்பொரு ளல்லவென் பானுக்
காகாசந் தானே யுண்மையின் மையினாற்
சாத்திய வநித்தமுஞ் சாதன மூர்த்தமு
மீட்சியு மீளா மையுமிலை யாகு
௪௫0 மவ்வெதி ரேக மாவது சாத்திய
மில்லா விடத்துச் சாதன மின்மை
சொல்லாதே விடுத லாகுஞ் சத்த
நித்தம் பண்ணப் படாமையா லென்றால்
யாதொன் றியாதொன்று நித்த மன்று
௪௫௫ பண்ணப் படுவ தல்லா ததுவு
மன்றெனு மிவ்வெதி ரேகந் தெரியச்
சொல்லாது குடத்தின் கண்ணே பண்ணப்
படுதலு மநித்தமுங் கண்டே மாதலா
னென்னின் வெதிரே கந்தெரி யாது
௪௬0 விபரீத வெதிரேக மாவது
பிரிவைத் தலைதடு மாறச் சொல்லுதல்
சத்த நித்த மூர்த்த மாதலி
னென்றா லென்று நின்ற விடத்து
யாதோ ரிடத்து நித்தமு மில்லையவ்

---

(பி - ம்) ௪௩௬. 'திருட்டாந்தரமாகக் காட்டப்பட்ட' ௪௩௮. 'ஆகாசத்தின்கண்ணே நித்தமும்' ௪௪௧. 'இன்மையாயவிருத்தி' ௪௪௯. 'மீட்சியு மீளாமையுமாகும்' ௪௫௮. 'படுதலுமநித்த மனித்தங்கண்டே' ௪௬0 'விதிராவிதிரைக' ௪௬௩-௪. 'இடததுள், யாதொரிடத்து நித்தியமில்லை'

௪௬௫ விடத்து மூர்த்தமு மில்லை யெனுமே
யாதோ ரிடத்து மூர்த்தமு மில்லையவ்
விடத்து நித்தமு மில்லை யென்றால்
வெதிரேக மாறு கொள்ளுமெனக் கொள்க
நாட்டிய விப்படித் தீயசா தனத்தாற்
௪௭௦ காட்டு மனுமான வாபா சத்தின்
மெய்யும் பொய்யு மித்திற விதியா
லைய மின்றி யறிந்துகொ ளாய்ந்தென்.

உக—தவத்திறம்பூண்டு தருமங்கேட்டகாதை முற்றிற்று.

---

(பி - ம்.) ௪௭௦ - ௭௧. 'ஆபாச, மெய்யும் பொய்யும்'

---

முப்பதாவது

# பவத்திறமறுகெனப் பாவைநோற்றகாதை.

[முப்பதாவது பவத்திறமறுகெனப்பாவைநோற்ற பாட்டு.]

தானந் தாங்கிச் சீலந் தலைநின்று
போன பிறப்பிற் புகுந்ததை யுணர்ந்தோள்

---

க. மணி. ௩௦ : ௭௮. சீலம் - பஞ்சசீலம், அஷ்டாங்கசீலம், தசசீல மென மூன்று வகைப்படும்; இவற்றினியல்பை, இந்நூல் உக - ஆம் காதை, ௫௭ - ஆம் அடியின்குறிப்பாலும் அறிக; மணிமேகலை பிக்குணி யாதலின், இவற்றுள், தசசீலமே ஈண்டுக்கொள்ளற்பாலன; "எண்ணி கந்த காலங்க ளெம்பொருட்டான் மிகவுழன், றெண்ணிகந்த வுலகங்க ளிருடீர வொருங்குணர்ந், தெண்ணிகந்த தானமுஞ் சீலமு மிவையாக்கி, யெண்ணிகந்த குணத்தினு னெம்பெருமா னல்லனே" (நீல. சமய.) என்றும், "தோடா ரிலங்கு மலர்கோதி வண்டு வரிபாட நீடு துணர் சேர், வாடாத போதி நெறிநீழன் மேய வாதன் பயந்த வறநூல், கோடாத சீல விதமேவி வாய்மை குணனாக நாளு முயல்வார், வீடாத வின்ப நெறி சேர்வர் துன்ப வினைசேர்த லானு மிலரே" (வீர. யாப்பு. ௩, மேற்.) என்றும் தானசீலங்கள் கூறப்பட்டு வருதல்காண்க.

உ. உணர்ந்தோள் - மணிமேகலை. பழம்பிறப்பில் நிகழ்ந்தவற்றை அறிதற்குரிய அறிவும் யோகவித்தியைப்போன்ற இருத்தியும் பக்குவி களுக்கு எப்படியேனும் உண்டாகுமென்பது பௌத்தநூற்றுணிபு. இப் பழம்பிறப்புணர்ச்சியையும் இருத்தியையும் முறையே மணிபல்லவத்

புத்த தன்ம சங்க மென்னு
முத்திற மணியை மும்மையின் வணங்கிச்
௫ சரணா கதியாய்ச் சரண்சென் றடைந்தபின்
முரணாத் திருவற மூர்த்தியை மொழிவோ

---

துள்ள புத்தபீடிகைக் காட்சியாலும் மணிமேகலாதெய்வத்தாலும் மணிமேகலை அடைந்தாளென்று இந்நூலிலுள்ள ௯, ௪௦ - ஆம் காதைகளிற் கூறுதல் காண்க. மஹாபோதிவிருக்ஷத்தினடியிலிருந்தபொழுது ஸித்தார்த்தனுக்கு முற்பிறப்புக்களில் நிகழ்ந்தசெய்திகள் மனத்திற்றோற்றிய பின்னரே ஸத்யசதுஷ்டயஞானம் தோற்றியதென்று புத்தசரித்திரங் கூறும்.

௩. புத்த தன்ம சங்கமென்னும் - புத்தனும் தருமமும் சங்கமுமென்கிற. புத்தன் - ஸர்வஜ்ஞன்; பாளீபாஷையிலுள்ளதாகிய மகாவர்க்கமென்னும் நூலிலுள்ள மகாகண்டகமென்னும் பாகத்திலும், மத்தியமநிகாயத்துள்ள ஆரியபரியேஷண ஸூத்திரத்திலும், தீர்க்கநிகாயத்துள்ள மகாபரிநிர்வாணஸூத்திரத்திலும், மஹாபதான ஸூத்திரத்திலும் புத்தசரிதம் கூறப்பட்டுள்ளதென்பர். தருமம் - அவன்கூறிய அருளறங்கள்; அவை, அபிதருமம், ஸூத்திர தருமம், வினயதருமமென மூன்றுவகைப்படுமென்றும், அவற்றுள் அபிதருமவகைகள் அபிதர்மார்த்த ஸங்கிரகமென்னும் நூலிலும், ஸூத்திர தர்மவகைகள் ஸாரஸங்கிரகமென்னும் நூலிலும், வினயதர்மவகைகள் பிராதிமுக்தகவினயவினிச்சயமென்னும் நூலிலும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளனவென்றும், இம்மூன்றுவகைத்தருமங்களும் பிடகத்திரயத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளனவென்றும் கூறுவர். ஸங்கம் - பௌத்தரில் துறந்தோர்களின்கூட்டம்; இதில்துறந்த இருபாலாரும் கலப்பின்றி வேறுவேறிடங்களில் இருத்தல்வேண்டுமென்பதும், அவர்களில் பிக்ஷுக்களுக்குப் பிக்ஷுணிகள் வணங்கி நடத்தல்வேண்டுமென்பதும், பதின்மருக்குக் குறையாமலிருத்தல்வேண்டுமென்பதும் விதி.

௪. முத்திறமணி - த்ருமணி; மேற்கூறிய புத்த தரும சங்கத்தை த்ருமணியென்பர்; மும்மையின் வணங்கலாவது - "புத்தம் சரணங்கச்சாமி, தர்மம் சரணங்கச்சாமி, ஸங்கம் சரணங்கச்சாமி" என்பனவற்றை மூன்றுமுறை ஜபித்து மூன்றுமுறை பணிதல்; இனி, 'மும்மையின் வணங்கி' என்பதற்கு மனோவாக்குக்காயங்களென்னும் முக்கரணங்களால் வணங்கி யெனினும் பொருந்தும்.

௫. சரணாகதி - அடைக்கலம் அடைதல்.

௨ - ௫. உணர்ந்தோன் வணங்கிச்சென்று அடைந்தபின் என்க; என்றது, மூன்று ரத்நங்களையும் மணிமேகலை வணங்கியபின் என்றவாறு.

௬. முரணாத் திருவறமூர்த்தியை - பூர்வோத்தர விரோதமில்லாத தர்மஸ்வரூபத்தை; "மலையா வறத்தின் மாதவம் புரிந்தேன்" (௨௮ : ௪௦௦); "முன்பின் மலையா மங்கல மொழி" (௩௦ : ௨௬௧) என இந்நூலுள்ளே வந்திருத்தல் காண்க; தங்கள் தருமத்தை முதலிலும் இடையிலும் கடையிலும் உத்தமமானதென்று கூறுவர் பௌத்தர்.

மேல்வருவன அறவணவடிகள் கூற்று.

(பி - ம்.) ௪. 'முறைமையின் வாங்கிச்'

னறிவு வறிதா யுயிர்நிறை காலத்து
முடிதயங் கமரர் முறைமுறை யிரப்பத்
துடித லோக மொழியத் தோன்றிப்
௧0 போதி மூலம் பொருந்தி யிருந்து

---

எ. அறிவு வறிதாய் - நிருவாண இலக்கணத்தை ஆராய்ந்து அதனைப் பெறுவதற்குரிய ஞானமின்றி ; காரணகாரியஞான மின்றியென்றுமாம் ; மணி. ௧0 : எ. [தேவர்கள் ; மணி. பதி : ௨அ - ௯.

அ. அமரர் - மஹாராஜிகலோகம் முதலிய ஆறு உலகிலுமுள்ள

௯. துடிதலோகம் - துஷிதலோகம் ; கௌதம புத்தராக அவதரித்த பிரபாபாலரென்னும் போதிஸத்துவர் இங்ஙனம் அவதரிப்பதற்கு முன்பு இருந்தவிடமென்பர் ; "தொழுதடிய ரிதயமல ரொருபொழுதும் பிரிவரிய துணைவ னெனலா, மெழுமிரவி கிரணநிக ரிலகுதுகில் புனைசெய்தரு ளிறைவ னிடமாங், குழுவுமறை யவருமுனி வரருமரி பிரமருர கவனு மெவருந், தொழுதகைய விமையவரு மறமருவுதுதிசெய்தெழு துடித புரமே" (வீர. யாப்பு. ௩௩, மேற்.) என்னுஞ் செய்யுள் துடிதபுரமென்று ஒரு புத்தஸ்தலம் பூமியிலிருந்ததாகத் தெரிவிக்கின்றது ; துடிதவிமானமென்ற ஒரு விமானமிருப்பதாக நீலகேசியுரை (புத்த. ௧௪௨) கூறுகின்றது. தோன்றி - கோசலதேசத்திற் கபிலவாஸ்துவிற் சாக்கியசக்கரவர்த்தியாகிய சுத்தோதனனுடைய பட்டமகிஷியான மாயாதேவியின் வயிற்றிலிருந்து அவள் வலமருங்குல் வழியே உலும்பினிவனத்தில் அவதரித்து ; இங்ஙனம் அவதரித்ததை, "உலும்பினி வனத்து ளொண்குழைத் தேவி, வலம்படு மருங்குல், வடுநோ யுறும, லான்றே னவ்வழித் தோன்றின னுதலி, னீன்றேளேழ்நா ளின்னுயிர் வைத்தாள்" (விம்பசாரகதை ; சிவ - சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன் மதமறுதலை, ௫ ; நீல. குண்டல. ௪௧) என்னும் செய்யுளாலுணர்க.

அ - ௯. ஈண்டுக் கூறியதுபோலவே, "சக்கர வாளத்துத் தேவரெல்லாந், தொக்கருங் கீண்டித் துடித லோகத்து, மிக்கோன் பாதம் விழுந்தன ரிரப்ப" (௧௨ : எ௨ - ௪) என்று முன்பு வந்திருத்தல் காண்க.

௧0. போதிமூலம் - இக்காலத்துப் புத்தகயையென்று வழங்கப்படுவதும் நைரஞ்சரா அல்லது பல்குனியென்று கூறப்படும் நதிக்கரையிலுள்ளதுமாகிய இடத்தில் ஐந்து கிளையையுடைத்தாய் விளங்கிய அரசமரத்தின் அடியில் ; போதி - அரசமரம் ; இஃது ஐந்துகிளையையுடைத்தாதல், "பணையைந் தோங்கிய பாசிலைப் போதி, யணிதிகழ் நீழலறவோன்" (சிலப். ௧0 : ௧௧ - ௨) என்பதனாற் பெறப்படுகின்றது. விதார்த்தன் உண்மையறிவை யடைதற்குத் துறவுபூண்டு பலவிடத்தும் சென்று பலவாறுமுயன்று முடிவில் இம்மரத்தடியில்வந்து சீலசமாதியிலிருந்து பழம்பிறப்புக்களை யறிந்து தசபாரமிதையும் நிறையப்பெற்று (மணி. ௨௯ : ௨௫) ஆராய்ந்தபொழுது ஸத்தியசதுஷ்டய ஞானமுழுதும் அவனுக்குத் தோற்றினமையால், இம்மரம் மஹாபோதிவிருக்ஷமென்று பௌத்தர்களால் மிகப்பாராட்டி, நெடுந்தூரத்திருந்தும் திக்குநோக்கி வணங்கப்படுவது. பண்டைக்காலத்தில் இத்தென்னாட்டிலிருந்த பௌத்

(பி - ம்.) எ. 'அறிவுதோயவுயிர்நின்ற' ௯. 'துடிசலோகரம்'

மாரனை வென்று வீரனாகிக்
குற்ற மூன்று முற்ற வறுக்கும்
வாமன் வாய்மை யேமக் கட்டுரை

---

தர்கள் வடதிசைநோக்கி இதனைத் தொழுதுவந்தார்களென்றும் தெரிகின்றது; "போதிவிருட்சம் வடக்கேயிருப்பதென்று பௌத்தன் தொழுதலால் திக்குளதென்க" (சிவ - சித். சௌத்ராந்திகன் மதமறுதலை, ௩௩ - உரை.) இம்மரத்தின்கீழிருந்து ஞானம்பெற்றமையால், புத்தன் போதிவேந்தனென்று கூறப்படுவன்.

௧௧. மாரன் - நற்குணநற்செய்கைகளை நீக்கித் தீக்குணந்தீச்செய்கைகளை விளைவிப்பவனாகிய ஒருதேவன்; இவனுக்கு அறுவகைத் தேவலோகங்களிலும் அதிகாரமுண்டு. இவன் புத்தனுக்கு ஞானமுண்டாகாவண்ணம் தன்மகளிர் மூவரும் தானுமாகவந்து பலவகையான இடையூறுகளைச்செய்து முடிவில் தோல்வியுற்றான்; "தாமநறுங் குழன் மழைக்கட் டளிரியலார் தம்முன்னர்க், காமனையே முனந்தொலைத்தாற் கண்ணோட்டம் யாதாங்கொல்" (வீர. யாப்பு. ௧௧, மேற்.) மாரனை வென்றமையால், புத்தனை மாரஜித்தென்று கூறுவர்; வீரியம், தசபாரமிதையுளொன்றாதலின், அதனையுடையா னென்பார் 'வீரன்' என்றார்; வீரியமென்றது, இங்கே அறிவு பெறுந்துணையும் பலவகையான இடையூற்றினுக்குமஞ்சாது மடிவின்றி முயன்ற முயற்சியை; அது, "விளைவாய போதியை யுறுமளவும் வினையடியான், றளர்வின்றி யோடியதாளினானல்லனோ" (நீல. மொக்கல. ௮௮, சமய.) என்பதனாற் பெறப்படும்; "காமற் கடந்த வாமன்" (௫ : ௭௭); "மாரனை வெல்லும் வீர" (௧௧ : ௬௧) என்றார் முன்னும்; இராமனை யுத்த வீரனென்றும், கன்னனைத் தானவீரனென்றும், புத்தனைத் தயாவீரனென்றும் கூறுவர் வடநூலார்.

௧௨. குற்றம் மூன்று - காமம் வெகுளி மயக்கங்கள்; "காமம் வெகுளி மயக்கங் காரணம்" (௨௫௩) என்று இக்காதையிற் பின்னுங் கூறுவர்; இம்மூன்றையும் அவரத் துறந்தமையின், புத்தன் முக்குற்றங் கடிந்தோனென்று கூறப்படுவன்; மணி. ௫ : ௪00, அடிக்குறிப்பைப் பார்க்க; 'அறுக்கும்' என்றதனால், குற்றமூன்றையும் கட்டென்றாராயிற்று; "போய்க் குற்ற மூன்று மறுத்தான்புகழ் கூறுவேற்கென், வாய்க்குற்ற சொல்லின் வழுவும் வழுவல்ல வன்றே" (குண்டலகேசி, அவையடக்கம்.) இனி, பொய், கொலை, கள், காமம், களவு என்பனவற்றை ஐங்குற்றமென்று வழங்குவதுமுண்டு; "கள்ளும் பொய்யும்......துறந்தவை" (மணி. ௨௪ : ௭௭ - ௮); "வீடு கொண்ட நல்லறம் பகர்ந்து மன்பதைக் கெலாம் விளங்கு திங்க ணீர்மையால் விரிந்திலங்கு மன்பினோன், மோடுகொண்ட வெண்ணுரைக் கருங்கடற் செழுஞ்சுடர் முளைத்தெழுந்த தென்னலாய் முகிழ்ந்திலங்கு போதியி, னாடுகின்ற மூவகைப் பவங்கடந்து குற்றமான வைந்தொடுங்கொர் மூன்றறுத்த நாதன்" (வீர. யாப்பு. ௩, மேற்.) என வருதல் காண்க.

௧௩. புத்தனது நால்வகைச் சத்தியங்களாகிய, இன்பத்தை விளைவிக்கும் பொருள் பொதிந்த சொல்.

௭ - ௧௩. காலத்து இராப்பத் தோன்றி இருந்து வென்று வீரனாகி அறுக்கும் வாமனது வாய்மையாகிய கட்டுரையென்க; மணி. ௧௨:௫௮-௭௪.

(பி - ம்.) ௧௩. 'எனக் கட்டுரை'

இறந்த காலத் தெண்ணில்புத் தர்களுஞ்
௧௫ சிறந்தருள் கூர்ந்து திருவாய் மொழிந்த
ஈராறு பொருளி னீர்தநெறி யுடைத்தாய்ச்
சார்பிற் றோன்றித் தத்தமின் மீட்டு
மிலக்கணத் தொடர்தலின்

௧௪. கௌதம புத்தருடைய காலத்திற்கு முன்பு தருமங்குறைந்த ஒவ்வொருகாலத்தும் ஒவ்வொருவராகப் புத்தர்கள் பலர் அவதரித்து உபதேசஞ்செய்து தருமஸ்தாபனஞ் செய்தார்களென்பது பௌத்த நூற்றுணிபாதலின், 'இறந்த காலத் தெண்ணில்புத் தர்களும்' என்றார்; கௌதம புத்தருடைய சரித்திரத்திலும், புத்த ஜாதக கதையிலும் இக்கருத்து ஆங்காங்குப் பெறப்படும்; கௌதம புத்தருக்கு முன்னேயுள்ள புத்தர்களுள்,இருபத்தெழுவர் பெயர்கள்மட்டும் இப்பொழுது தெரிகின்றன. அவைவருமாறு:—(௧) தண்ணகாரர், (௨) மேதங்கரர், (௩) சரணங்கரர், (௪) தீபங்கரர், (௫) கௌண்டின்னியர், (௬) மங்களர், (௭) ஸுமங்களர், (௮) இரேவதர், (௯) சோபிதர், (௧0) அநோமதர்சி, (௧௧) பதுமர், (௧௨) நாரதர், (௧௩) பதுமோத்தரர், (௧௪) ஸுமேதர், (௧௫) ஸுஜாதர், (௧௬) பிரியதர்சி, (௧௭) அர்த்ததர்சி, (௧௮) தர்மதர்சி, (௧௯) ஸித்தார்த்தர், (௨0) திஷ்யர், (௨௧) புஷ்யர், (௨௨) விபச்சித், (௨௩) சிகி, (௨௪) விருஷபர், (௨௫) ககுந்தர், (௨௬) கோவகாமர், (௨௭) கசியபர். இவ்விருபத்தெழுவரும் கௌதமபுத்தரும் ஸர்வஜ்ஞ புத்தரென்று கூறப்படுவர். இஃது, இலங்கையிலுள்ள வித்தியோதய பாடசாலைத் தலைவராகிய ஸ்ரீ ஸுமங்களரால் தெரியவந்தது. தண்ணங்காரன், மஹாவீரன் முதலிய இருபத்துமூன்று புத்தரென்பாரும் உளர்.

௧௩ - ௫. யான்கூறுவது, ஏமக்கட்டுரையும் திருவாய்மொழிந்ததுமாகவுள்ளதென்று அறவணவடிகள் கூறினரென்க.

௧௬. ஈராறு பொருளின் - பன்னிரண்டுபொருள்களால்; என்றது, பேதைமை முதலியவற்றை. அவையாவன: பேதைமை, செய்கை, உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகர்வு, வேட்கை, பற்று, பவம், தோற்றம், வினைப்பயன் (மணி. ௨௪: ௧0௫ - ௮); இவற்றை முறையே அவித்யை, கர்மம் அல்லது ஸம்ஸ்காரம், விஞ்ஞானம், நாமரூபம் அல்லது ரூபாரூபம், ஷடாயதனம், ஸ்பரிசம், வேதனை, த்ருஷ்ணை, உபாதானம், பவம், ஜன்மம், கர்மபலம் என்பர் வடநூலார். இவை துவாதச நிதானமெனப்படும்; சிவ - சித்தி. சௌத்திராந்திகன்மதம், ௧௧. உரை.

'ஈராறுபொருளின்' (௧௬) என்றது முதலியவற்றிற்குப் பின்வரும் 'பேதைமை' (௪௫) என்பது முதலியவற்றால் விவரணம் கூறப்படும்.

௧௭ - ௮. சார்பிற்றோன்றி - சம்பந்தத்தால் உண்டாகி; சம்பந்தமென்றது காரணகாரியத் தொடர்ச்சியை; "சார்பிற்றோற்றம்" (௨௫: ௫) என்று முன்பு வந்திருத்தல் காண்க. மேற்கூறிய பன்னிரண்டனுள் பேதைமையிருந்து செய்கையும், அதிலிருந்து உணர்வும், அதிலிருந்து அருவுருவும், அதிலிருந்து வாயிலும், அதிலிருந்து ஊறும், அதிலிருந்து

(பி - ம்.) ௧௫ - ௬. 'மொழிந்த,தீதறு பொருளினீர்மை யுடைத்தாய்'

மண்டில வகையா யறியக் காட்டி
௨0 யெதிர்முறை யோப்ப மீட்சியு மாகி
யீங்கி தில்லா வழியில் லாகி
யீங்கி துள்ள வழியுண் டாகலிற்
றக்க தக்க சார்பிற் றோற்றமெனச்
சொற்றகப் பட்டு மிலக்கணத் தொடர்பாற்
௨௫ கருதப் பட்டுங் கண்டநான் குடைத்தாய்
மருவிய சந்தி வகைமூன் றுடைத்தாய்த்

---

நுகர்வும், அதிலிருந்து வேட்கையும், அதிலிருந்து பற்றும், அதிலிருந்து பவமும், அதிலிருந்து தோற்றமும், அதிலிருந்து வினைப்பயனும்தோன்று மெனக்கொள்க (மணி. ௩0 : ௪0௪ - அ); இசனுல் முதன்முறைத் தோற்றம் கூறியவாறுயிற்று. தத்தமில் மீட்டும் இலக்கு அண்ணத் தொடர்தலின் - அப்பன்னிரண்டனுள் செய்கை முதலிய ஒவ்வொன்றும் தத்தமக்கு முன்னுள்ளவற்றில் நின்றும் தோன்றியதுபோலப் பன்னிரண் டாவதாகிய வினைப்பயனினின்றும் எண்ணு முறையில் முதற்கண்ணின்ற தாகிய பேதைமைதோன்ற அதனினின்று திரும்பவும் செய்கை முதலி யன முன்தோன்றியவாறே தோன்றுதலால்; மீட்டும் : உம்மை, இறந் ததுதழீஇயது. பேதைமை முதலிய பன்னிரண்டும் தங்கட்டோன்றுவன வற்றைநோக்கப் பகுதியாதலும், தமக்குமுதலானவற்றை நோக்க விகுதி யாதலுமுடையனவென்பது பௌத்தர் கொள்கை. இலக்கு - குறி.

௧௯. மண்டிலம் - வட்டம்; "ஊழின்மண் டிலமாச் சூழுமிந் நுகர்ச்சி" (௧௧௮) என்பர் பின்னும்.

௨0. எதிர்முறை ஒப்ப - தோன்றும் முறைமையைநீக்க; எதிர் தல் - தோன்றுதல்; என்றது, காரணத்தை இல்லையாக்கவென்றபடி. பேதைமைமீளச் செய்கையும், அதுமீள உணர்வும் அதுமீள அருவுருவும், அதுமீள வாயிலும், அதுமீள ஊறும், அதுமீள நுகர்வும், அதுமீள வேட்கையும், அதுமீளப் பற்றும், அதுமீளப் பவமும், அதுமீளத் தோற் றமும், அதுமீள வினைப்பயனு மீளுமென்றவாறுயிற்று. மீளுதல் : ஈண்டு இன்மைப்பொருட்டு; மணி. ௩0 : ௧௧௯ - ௩௩.

௨௧. இதுவென்றது காரணத்தை. இல்லாகி - காரியங்கள் இல்லை யாகி.

௨௫. மேற்கூறிய பேதைமை முதலிய பன்னிரண்டனுள், பேதைமை, செய்கை என்னும் இந்த இரண்டும் முதற்கண்டமென்றும், உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகர்வு என்னும் இவ்வைந்தும் இரண் டாங்கண்டமென்றும், வேட்கை, பற்று, பவம் என்னும் இம்மூன்றும் மூன் றுங் கண்டமென்றும், தோற்றமும் வினைப்பயனும் நான்காங்கண்ட மென்றுங் கூறப்படும்; மணி. ௩0 : ௧௩௫ - ௭௭.

௨௬. செய்கையும் உணர்வுஞ்சேர்தலை முதற்சந்தியென்றும், நுகர்

(பி - ம்.) ௧௭ - ௯. 'மீட்டுத், தொடர்தலினமனம்வகையறிய' ௨0 'முறைபிறப்பமீட்சி' ௨௨ - ௩. 'ஈங்கில்லவழியுண்டாதலாறறக்க கசார்பிற்' ௨௪. 'சொற்றகப்படுமிலக்கணத்'

தோற்றம் பார்க்கின் மூன்று வகையாய்த்
தோற்றற் கேற்ற காலமூன் றுடைத்தாய்க்
குற்றமும் வினையும் பயனும் விளைந்து
௨௦ நிலையில வறிய துன்பமென நோக்க
வுலையா வீட்டிற் குறுதி யாகி
நால்வகை வாய்மைக்குச் சார்பிட னாகி
யைந்துவகைக் கந்தத் தமைதி யாகி
மெய்வகை யாறு வழக்குமுக மெய்தி
௨௫ நயங்க ணான்காற் பயன்க ளெய்தி
யியன்றநால் வகையால் வினாவிடை யுடைத்தாய்
நின்மிதி யின்றி யூழ்பா டின்றிப்
பின்போக் கல்லது பொன்றக் கெடாதாய்ப்

வும் வேட்கையுஞ்சேர்தலை இரண்டாஞ்சந்தியென்றும், பவமுந் தோற்ற முஞ் சேர்தலை மூன்றாஞ்சந்தியென்றும் கூறுவர்; மணி. ௩௦: ௧௪௮ - ௯௨.

௨௭. தோற்றம் - பிறப்பு; மணி. ௩௦: ௧௫௩ - ௮.

௨௮. மணி. ௩௦: ௧௫௩ - ௬௮.

௨௯. மணி. ௩௦: ௧௬௯ - ௭௪.

௩௦ - ௩௧. மணி. ௩௦: ௧௭௫ - ௮.

௩௨. நால்வகை வாய்மைக்கு - நான்குவகைப்பட்ட சத்தியங்களுக்கு; மணி. ௨: ௬௪ - ௭; ௩௦. ௧௮௯ - ௮.

௩௩. ஐந்துவகைக்கந்தம் - பஞ்சஸ்கந்தம்; ஸ்கந்தம் - கூட்டம்; மணி. ௩௦: ௧௮௯ - ௯௦.

௩௪. ஆறுவழக்காவன: உண்மைவழக்கு, இன்மைவழக்கு, உள்ளது சார்ந்த உண்மைவழக்கு, இல்லதுசார்ந்த இன்மைவழக்கு, உள்ளதுசார்ந்த இன்மைவழக்கு, இல்லதுசார்ந்த உண்மைவழக்கு; மணி. ௩௦: ௧௯௧ - ௨௧௯.

௩௫. நயங்கள்நான்கு - ஒற்றுமைநயம், வேற்றுமைநயம், புரிவின்மை நயம், இயல்பு நயம்; மணி. ௩௦: ௨௧௭ - ௨௮. பயன்கள் - பிரயோசனங்கள்; அவை நான்குவகைப்படும்; மணி. ௩௦: ௨௨௯ - ௩௪.

௩௬. நால்வகையால் வினாவிடையுடைமை - துணிந்துசொல்லல், கூறிட்டு மொழிதல், வினாவின்விடுத்தல், வாய்வாளாமை; மணி. ௩௦: ௨௩௫ - ௪௧.

௩௭. நின்மிதி - நிர்மாணம், உண்டாக்குதல். ஊழ்பாடு - முடிவுபடுதல். தொடக்கமும் ஈறுமின்றியென்பதாம்.

௩௮. பின்போக்கு - தொடர்ச்சி; இதனை ஸந்தானமென்பர்; அது வாயுஸந்தானம், தீபஸந்தானம், தாராஸந்தானம், பிபீலிகாஸ்தானம்

(பி - ம்.) ௨௭ - ௯. 'மூன்றுவகையாத, தோன்றமூன்றுடைத்தாய் வினையும் பயனுங்குற்றமும்விளைந்து' ௩௭ - ௮. 'நின்மதனினறியூழ் பாடின பேபினபோககலலது'

பண்ணுந ரின்றிப் பண்ணப் படாதா
௪0 யானு மின்றி யென்ன து மின்றிப்
போனது மின்றி வந்தது மின்றி
முடித்தலு மின்றி முடிவு மின்றி
வினையும் பயனும் பிறப்பும் வீடு
மினையன வெல்லாந் தானே யாகிய
௪௫ பேதைமை செய்கை யுணர்வே யருவுரு
வாயி லூறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப்பய
னிற்றென வகுத்த வியல்பீ ராறும்
பிறந்தோ ரறியிற் பெரும்பே றறிகுவ
௫0 ரறியா ராயி னாழ்நர கறிகுவர்
பேதைமை யென்ப தியாதென வினவி
னோதிய விவற்றை யுணராது மயங்கி
யியற்படு பொருளாற் கண்டது மறந்து
முயற்கோ டுண்டெனக் கேட்டது தெளித

---

என நான்குவகைப்படும். பொன்றக்கெடாதாய் - முற்றக்கெடாததாகி.

௩அ - ௪௪. மணி. ௩0 : ௨௫0 - ௫க.

இனிப் பேதைமைமுதலிய பன்னிரண்டுசார்பும் அவற்றின் இலக்கணங்களும் முறையே கூறப்படும்.

௪௫. செய்கை - கர்மம். உணர்வு - விஞ்ஞானம். அருவுரு - நாமரூபம்; "அருவுருத் தன்மை, யாக்கை" (க0௨ - ௩) என்பர்பின்.

௪௬. வாயில் - ஷடாயதனம்; ஆவது, ஞானேந்திரியங்கள் ஐந்தும் மனமும். ஊறு - ஸ்பரிசம்; அஃதாவது, இந்திரியவிஷயசம்பந்தம். நுகர்வு - வேதனை; அஃதாவது, சுகதுக்க அனுபவம். வேட்கை - த்ருஷ்ணை; அஃதாவது, இன்பத்தை அடையவேண்டுமென்றும் துன்பத்தைப் போக்கவேண்டுமென்றும் உண்டாகுமாசை.

௪எ. பற்று - உபாதானம்; அஃதாவது, இன்பத்தைக் கொடுக்கும் பொருள்களோடு ஒட்டிக் கொள்ளுதல். வினைப்பயன் - கர்மபலம்.

௪அ. இயல்பு - ஸ்வபாவம். ௪௯. பெரும்பேறு - நிர்வாணம்.

௫௨. இவற்றையென்றது, நான்கு சத்தியங்களையும் அவற்றை நன்கு விளக்குந் துவாதச நிதானங்களையும்.

௫க - ௪, பேதைமையென்பது, மயங்கிக் கண்டதுமறந்து கேட்டது தெளிதலென்க; "பேய்மை யாக்குமிப் பேதைமைக் கள்வனே

(பி - ம்.) ௪க. 'போனது மின்றி முடிதலுமின்றி' ௪அ. 'வகுத்த வீராறும்' ௫0 - ௫க. 'நரகமிகுவாபேதையென்ப' ௫௨ - ௩. 'மயங்கவியற்படும்'

௫௫ னுலக மூன்றினு முயிரா முலக
மலகில பல்லுயி ரறுவகைத் தாகு
மக்களுந் தேவரும் பிரமரு நரகருந்
தொக்க விலங்கும் பேயு மென்றே
நல்வினை தீவினை யென்றிரு வகையாற்
௬0 சொல்லப் பட்ட கருவிற் சார்தலுங்
கருவிற் பட்ட பொழுதினுட் டோற்றி
வினைப்பயன் விளையுங் காலை யுயிர்கட்கு
மனப்பே ரின்பமுங் கவலையுங் காட்டுந்
தீவினை யென்ப தியாதென வினவி
௬௫ னாய்தொடி நல்லா யாங்கது கேளாய்
கொலையே களவே காமத் தீவிழை

டேனுய்க், காமமுற் ருமதன் பயத்தினிற் காமனைக் கடந்து, நாம ரூஉம் புகழ் கொடுப்பதோர் நன்னெறி நண்ணும், வாமன் வாய்மொழி மறந்திட்டு மறந்தொழி கின்றும்" (வீர. யாப்பு. ௫, மேற்.) என்று கூறப்பட்டிருத்தல்காண்க. இவ்வடிகளாற் பேதைமையதிலக்கணம் கூறப்பட்டது,

௫௫. உலகமூன்றினும் - மூன்றுலகங்களுள்ளும் ; உலகம் முப்பத்தொன்றென்பராலெனின் மஹாராஜிகலோக முதலிய உலகம் இருபத்தாறினையும் மேலுலகென்றும், நரகலோகமுதலிய உலகம்நான்கினையும் கீழுலகென்றுங்கொண்டு அவற்றை நடுநின்ற மனுஷ்யலோகத்துடன் கூட்டி, இந்நூலாசிரியர் உலகம் மூன்றெனக் கொண்டார் போலுமென்க ; "திருமேவு பதுமஞ்சேர் திசைமுகனே முதலாக, வுருமேவி யவதரித்த வுயிரனைத்து முயக்கொள்வா, னிவ்வுலகுங் கீழுலகு மிசையுலகு மிருணீங்க, வெவ்வுலகுந் தொழுதேத்த வெழுந்தனைசழுஞ் சுடரென்ன,..........பெரியோய்நீ" (வீர. யாப்பு. ௩௧, மேற்.) என்பதில் உலகங்கள் மூன்றாகக் கூறப்பட்டிருத்தல் காண்க. உயிராமுலகம் - சேதனப்பிரபஞ்சம்.

௫௬. அலகில - அளவில்லாதன.

௫௬ - அ. மக்களும் தேவரும் பிரமரும் நரகரும் விலங்கும் பேயுமென்று பல்லுயிர் அறுவகைத்தாகும் ; இவ்வறுவகைப்பிறப்பும் ஷட்கதி யெனப்படும்.

௬௨. "விளைவின்கண், வீயா விழுமந் தரும்" குறள். ௨௮௪.

௬0 - ௬௩. (செய்கை). சார்தலையும் இன்பத்தையும் கவலையையுங் காட்டும்.

௬௬. காமத்தீவிழைவு : இருபெயரொட்டு.

(பி - ம்.) ௫௫. 'உயிராகுலமு' ௫௬ - எ. 'வகைத்தாளுந் தேவரும்' ௫எ - அ. 'நரகரும், விலங்கும்பேயுமன்றே' ௫௯ - ௬௧. 'என்றிருபயத்தாற் சொல்லப்பட்டபிறப்பினுட் டோன்றி'

வுலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொற் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
௭௦ வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
றுள்ளந் தன்னி னுருப்பன மூன்றுமெனப்
பத்து வகையாற் பயன்றெரி புலவ
ரித்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயு நரகரு மாகிக்
௭௫ கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்
நல்வினை யென்ப தியாதெனை வினவிற்
சொல்லிய பத்தின் றொகுதியி னீங்கிச்
சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
௮௦ தேவரும் மக்களும் பிரமரு மாகி
மேவிய மகிழ்ச்சி வினைப்பய னுண்குவ

---

௬௮. கடுஞ்சொல் - வன்சொல்.

௭௦. பொல்லாக்காட்சி - மயக்கம்; அஃதாவது உண்மையையறியாமை.

௬௪ - ௭௨. இவ்வடிகளிற் கூறிய பத்துக் குற்றங்களையும் தசதோஷங்களென்பது பௌத்தநூல் வழக்கு.

௭௭. சொல்லியபத்து, "மருடரு மனம்வாய் மெய்யிற் கொலைமுதல் வினைபத் தாமே" ((சித்தாந்தத்தொகை; நீல. புத்த. ௬௫, சமய.) நீங்கலாவது, இப்பத்தினின்றும் நீங்கிக் கொல்லாமை முதலிய பத்தினையும் பெறுதல்; 'பள்ளிவலம்புரிதல் தவஞ்செய்தல் தானஞ்செய்தல் என்னும் காயத்தின்குணம் மூன்றும், மெய்யுரை, நல்வார்த்தை, இனியனகூறல், பயன்படு சொற்கூறல் என்னும் வாக்கின்குணம் நான்கும், அருணினைவு, ஆசையறுத்தல், தவப்பற்று என்னும் மனத்தின் குணம் மூன்றும் ஆகிய நற்குணம் பத்து' என்று கூறுவாருமுளர்; சிவ - சித்தி. சௌத்திராந்திகன்மதம், ௯௦, உரை.

௭௮. சீலத்தின் வகைகளை இந்நூல் ௨௧ - ஆம் காதை, ௫௭ - ஆம் அடிக்குறிப்பிற் காண்க.

௮௧. மகிழ்ச்சி வினைப்பயன் - இன்பம். மகிழ்ச்சிவினை - புண்ணியம்.

௬௪ - ௮௧. இவ்வடிகளிற் கூறியதுபோலவே, "விலங்கு நரகரும் பேய்களு மாக்குங், கலங்கஞர்த் தீவினை கடியின் கடிந்தாற், றேவரு

(பி - ம்.) ௬௮ - ௯. 'பயமில, சொல்லே சொல்லிற் றோன்றுவ நான்கும்' ௭௧ - ௨. 'மூன்றும் பத்துவகை' ௭௩. 'இத்திறப் படாஅர்' ௭௭. 'தொகுதிநீங்கி'

றுணர்வெனப் படுவ துறங்குவோ ருணர்விற்
புரிவின் ருகிப் புலன்கொளா ததுவே
யருவுரு வென்பதவ் வுணர்வு சார்ந்த
அ௫ வுயிரு முடம்பு மாகு மென்ப
வாயி லாறு மாயுங் காலை
யுள்ள முறுவிக்க வுறுமிட ஞகு
மூறெனெ வுரைப்ப துள்ளமும் வாயிலும்
வேறு புலன்களை மேவுத லென்ப
௯௦ நுகர்வே யுணர்வு புலன்களை நுகர்தல்

---

மக்களும் பிரமரு மாகுநி, ராகலி னல்வினை யயரா தோம்புமின்" (உ௫: ௬௧ - ௪) என்று முன்பு வந்திருத்தல் காண்க.

௪௫ - அ௧. பூ. மணி. உ௪: ௧0௫ - ௪0.

அ௨. உணர்வு: இது பஞ்சஸ்கந்தத்துள் ஒன்ருகவும் கூறப்படும். உறங்குவோருணர்வின் - தூங்குவோருடைய உள்ளம் கர்த்ருத்வமும் போக்த்ருத்வமுமின்றி ஸாக்ஷிமாத்திரமாக நிற்றல்போல.

அ௩. புரிவு இன்ருகி - செய்யுந்தொழில் யாதொன்றுமின்றி; புலன் கொளாதது - விஷயங்களை அனுபவியாது ஸாக்ஷிமாத்திரையா யிருத்தலை யுடையது.

அ௨ - ௩. உணர்வு, உள்ளம், விஞ்ஞானமென்பன ஒரு பொருட் சொற்கள்; இதுவே கருமத்தொகுதியோடுகூடிய வியவகாரதசையில் உயிரென்று வழங்கப்படுமென்பதும், முடிவில் ஆன்மாவென்று ஒன்று இல்லையென்பதும் பௌத்தர்கொள்கை; நீல புத்த. ௩௩ - ௬, சமய. ஆன்மா இல்லையென்பதனுல் இவர்கள் அநான்மவாதிகளென்று கூறப் படுவர்; இந்த இரண்டடிகளாலும் உணர்வின் இலக்கணம் கூறப்பட்டது.

அ௪ - ௫. இவ்விரண்டடிகளாலும் அருவுருவின் இலக்கணம் கூறப் பட்டது.

அ௬. வாயில், துவாரம், வழி, ஆயதனம், இடமென்பன ஒரு பொருட்சொற்கள்.

அ௭. உள்ளமுறுவிக்க - விஞ்ஞானத்தில் விஷயங்களையடைவித் தற்கு; உறும் இடஞகும் - உற்ற இடங்களாகும்; இடங்கள்: மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் இந்திரியமைந்தும் மனமொன்றும்.

அ௬ - ௭. இவ்விடிரண்டடிகளாலும் - வாயிலினிலக்கணம் கூறப் பட்டது.

அஅ. ஊறு - ஸ்பரிசம். அ௯. புலன்களை - விஷயங்களை.

அஅ - ௯. ஷடாயதனங்கள் விஷயங்களை ஸ்பரிசித்தல் ஊறெனப் படுமென்பர்; இவ்விரண்டடிகளாலும் ஊற்றின் இலக்கணம் கூறப் பட்டது.

௯0. இதனுல் நுகர்வினிலக்கணம் கூறப்பட்டது.

(பி - ம்.) அ௪ - ௫. 'மருவுணர்வென்பதவவுருவுசார்ந்துயிரு' அ௬. 'வாயிலூறுமாயுங்' அஅ. 'ஊறென்றுரைப்பது' அ௯ - ௯0. 'வேவுத லென்பது நுகர்வெனப்படுவதுணர்வு புலனுக்காதல'

வேட்கை விரும்பி நுகர்ச்சியா ராமை
பற்றெனப் படுவது பசைஇய வறிவே
பவமெனப் படுவது கரும வீட்டந்
தருமுறை யிதுவெனத் தாந்தாஞ் சார்தல்
௯௫ பிறப்பெனப் படுவதக் கருமப் பெற்றியி
னுறப்புண ருள்ளஞ் சார்பொடு கதிகளிற்
காரண காரிய வுருக்களிற் றோன்றல்
பிணியெனப் படுவது சார்பிற் பிறிதா
யியற்கையிற் றிரிந்துடம் பிடும்பை புரிதன்
௧00 மூப்பென மொழிவ தந்தத் தளவுந்
தாக்குநிலை யாமையிற் றாந்தளர்ந் திடுதல்

---

௯௧. வேட்கை - த்ருஷ்ணை; ஆராமை - நிரம்பாமை; "ஆரா வியற்கை யவா" (குறள். ௩எ0.) நிரம்பாமையாவது - தாமேயன்றித் தம்பயனும் நிலையாமையின், வேண்டாதனவாகிய பொருள்களை வேண்டி மேன்மேல் வளர்தல்; இதனால் வேட்கையதிலக்கணம் கூறப்பட்டது.

௯௨. பசைஇய - ஒட்டிக்கொண்ட; இதனாற் பற்றின் இலக்கணம் கூறப்பட்டது.

௯௩. ஈட்டம் - கூட்டம்; ஈண்டுக்கூறியதுபோலப் பவத்தைக் கருமத்தொகுதியென்று பின்னும் கூறுவர்; ௧௪௩, ௧௯௨.

௯௩ - ௪. இந்த இரண்டடிகளாலும் பவத்தின் இலக்கணம் கூறப்பட்டது.

௯௫. கருமப்பெற்றியின் - கருமங்களின் இயல்போடு.

௯௬. உறப்புணருள்ளம் - மிகப்புணர்ந்த விஞ்ஞானம்; சார்பொடு கதிகளில் - சம்பந்தத்தோடு கூடிய பிறப்புவகைகளில்.

௯எ. இங்கே, 'காரண காரிய வுருக்களிற் றோன்றல்' என்பதற்கேற்ப, "அன்புடை யாருயி ரரசற் கருளிய, வென்புடை யாக்கை" (௨௫: ௧எ0 - எ௧) என்று முன்னும் கூறியிருத்தல்காண்க.

௯௬ - எ. உள்ளம் தோன்றலென்க.

௯௫ - எ. இவ்வடிகளால் தோற்றத்தின் இலக்கணம் கூறப்பட்டது.

௯அ. பிணி - வியாதி. பிறிதாய் - வேறாகி.

௯௯. இயற்கை - ஸ்வபாவம். திரிந்து - வேறுபட்டு. இடும்பை - துன்பம்.

௯அ - ௯. இவ்வடிகளாற் பிணியின் இலக்கணம் கூறப்பட்டது.

௧00 - ௧0௧. அந்தம் - மரணம். இவ்வடிகளால் மூப்பின் இலக்கணம் கூறப்பட்டது.

(பி - ம்.) ௯௪. 'தருவதுமுறையென' ௯௬ - எ. 'உறப்புளஞ்சார்பொடுகதிர்களிற றோனறல' ௯அ. 'சார்பிறபிறகாய்' ௯௯. 'திரிந்துடலிடும்பையுறுதன' ௧00 - ௧0௨. 'மூப்பெனப் படுவ...தளவுதாக்குதாந்தெளிவுறுதல் சாகாடென்ப'

சாக்கா டென்ப தருவுருத் தன்மை
யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல்
பேதைமை சார்வாச் செய்கை யாகுஞ்
௧0௫ செய்கை சார்வா வுணர்ச்சி யாகு
முணர்ச்சி சார்வா வருவுரு வாகு
மருவுருச் சார்வா வாயி லாகும்
வாயில் சார்வா வூறா குமமே
யூறு சார்ந்து நுகர்ச்சி யாகு
௧௧0 நுகர்ச்சி சார்ந்து வேட்கை யாகும்
வேட்கை சார்ந்து பற்றா குமமே
பற்றிற் றோன்றுங் கருமத் தொகுதி
கருமத் தொகுதி காரண மாக
வருமே யேனை வழிமுறைத் தோற்றந்
௧௧௫ தோற்றஞ் சார்பின் மூப்புப்பிணி சாக்கா
டவல மாற்றுக் கவலைகை யாறெனத்
தவலி றுன்பந் தலைவரு மென்ப
வூழின்மண் டிலமாச் சூழுமிந் நுகர்ச்சி
பேதைமை மீளச் செய்கை மீளுஞ்
௧௨0 செய்கை மீள வுணர்ச்சி மீளு
முணர்ச்சி மீள வருவுரு மீளு

---

௧0௨ - ௩. சாக்காடு - மரணம். அருவுருத்தன்மையினையுடைய உடம்பு அத்தமிக்குஞ் சூரியனைப்போல மறைந்துபோதல்; இந்தவுவமையே இந்நூலில் முன்பும் (௨௪ : ௧0௧ - ௨) கூறப்பட்டிருத்தல் காண்க; இவ்வடிகளாற் சாக்காட்டின் இலக்கணம் கூறப்பட்டது.

௯௮ - ௧0௩. இவ்வடிகளாற் பிணி மூப்புச் சாக்காடென்னும் வினைப்பயன்களுக்கு இலக்கணங்கூறினார்.

௧௧௬. அவலமுதலியவற்றின் இலக்கணங்களை இப்புத்தகத்தின் ௫௩-ஆம் பக்கத்திற்பார்க்க.

௧௧௫ - ௭. மூப்புமுதலியன துக்கமெனவும் கூறப்படுமாதலின், அவைகள், 'தவலிறுன்பம்' எனப்பட்டன.

௧௧௮. ஊழ் இல் மண்டிலமா - முடிவில்லாத வட்டமாக; ஊழ் - முடிவு; "ஊழ்பாடின்றி" (௩0 : ௩௭) என்றார் முன்னும்; இந்நுகர்ச்சி சூழுமென்க; ஊழின் - முறைமையினையுடைய எனினுமாம்.

௧0௪ - ௧௮. இவ்வடிகளால் துக்கமும் துக்கோற்பத்தியுமாகிய வாய்மைகளிரண்டும் கூறப்பட்டனவென்பர்.

௧௧௯. மீள - நீங்க; இல்லையாகவென்றுமாம்.

(பி - ம்.) ௧0௩. 'மறைந்ததீருதல்' ௧0௭. 'அருவுருசார்வா' ௧௧௩-௪. 'கானமாகி, வருமயாயானைவழி'

மருவுரு மீள வாயின் மீளும்
வாயின் மீள வூறு மீளு
மூறு மீள நுகர்ச்சி மீளு
௧௨௫ நுகர்ச்சி மீள வேட்கை மீளும்
வேட்கை மீளப் பற்று மீளும்
பற்று மீளக் கருமத் தொகுதி
மீளுங் கருமத் தொகுதி மீளத்
தோற்ற மீளுந் தோற்ற மீளப்
௧௩௦ பிறப்பு மீளும் பிறப்புப் பிணிமூப்புச்
சாக்கா டவல மரற்றுக் கவலை
கையா றென்றிக் கடையி லுன்ப
மெல்லா மீளுமிவ் வகையான் மீட்சி
யாறிக் கண்ட மாகு மென்ப
௧௩௫ பேதைமை செய்கை யென்றிவை யிரண்டுங்
காரண வகைய வாத லானே
யிரண்டாங் கண்ட மாகு மென்ப
வுணர்ச்சி யருவுரு வாயி லூறே
நுகர்ச்சி யென்று நோக்கப் படுவன
௧௪௦ முன்னவற் றியல்பாற் றுன்னிய வாதலின்
மூன்றுங் கண்டம் வேட்கை பற்றுக்
கரும வீட்ட மெனக்கட் டுரைப்பவை
மற்றப் பெற்றி நுகர்ச்சி யொழுக்கினுட்
குற்றமும் வினையு மாக லானே

---

௧௩௦. பிறப்பு - ஈண்டுப் புனர்ஜனனம்; இப்படியே பின்னும் வரும்.

௧௩௩. மீட்சி இவ்வகையினையுடைத்து.

௧௧௬ - ௩௩. இவ்வடிகளால் துக்கநிவாரணமாகிய மூன்றுவது வாய்மை கூறப்பட்டதென்பர்.

இனி, நான்குகண்டங்களும் முறையே கூறப்படும்.

௧௩௪ - ௬. பேதைமையும் செய்கையுமாகிய இரண்டும் காரணங் களாகவுள்ளனவாதலின், இவை முதற்கண்டமென்று கூறப்படும்.

௧௩௭ - ௪௦. உணர்ச்சி முதலிய ஐந்தும், பேதைமை செய்கை யென்னும் இரண்டாலும் வந்தனவாதலின், இவை இரண்டாங்கண்ட மென்று கூறப்படும்.

௧௪௧ - ௪. வேட்கை முதலிய மூன்றும் மேற்கூறிய நுகர்ச்சி

(பி - ம்.) ௧௪௧ - ௨. 'பற்று, கருமவீட்டகம்' ௧௪௪. 'பற்றுநுகர்ச்சி'

கசரு நான்காங் கண்டம் பிறப்பே பிணியே
மூப்பே சாவென மொழிந்திடுந் துன்ப
மெனவிவை பிறப்பி னுழக்குபய னாதலிற்
பிறப்பின் முதலுணர் வாதிச் சந்தி
நுகர்ச்சி யொழுக்கொடு விழைவின் கூட்டம்
கரு0 புகர்ச்சியின் றறிவ திரண்டாஞ் சந்தி
கன்மக் கூட்டத் தொடுவரு பிறப்பிடை
முன்னிச் செல்வது மூன்றாஞ் சந்தி
மூன்றுவகைப் பிறப்பு மொழியுங் காலை
யான்றபிற மார்க்கத் தாய வுணர்வே
கருரு தோன்றல் வீடெனத் துணிந்து தோன்றியு
முணர்வுள் ளடங்க வுருவாய்த் தோன்றியு
முணர்வு முருவு முடங்கத் தோன்றிப்
புணர்தரு மக்க டெய்வம்விலங் காகையுங்
கால மூன்றுங் கருதுங் காலை
கசுo யிறந்த கால மென்னல் வேண்டு
மறந்த பேதைமை செய்கையா னவற்றை
நிகழ்ந்த காலமென நேரப் படுமே
யுணர்வே யருவுரு வாயி லூறே

யொழுக்கத்தின்கண் உண்டாகிய குற்றமும் அதனாலுளாதாகும் வினையு மாக இருத்தலின், இவை மூன்றுங்கண்டமென்றும் கூறப்படும்; வேட்கை முதலிய மூன்றனுள் வேட்கையும் பற்றும் குற்றமெனவும் பவம் வினை யெனவுங்கொள்க.

கசரு - எ. பிறப்பும் பிணிமுதலிய கன்மபலனும் முற்கூறிய வினைப் பயனாக இருத்தலின், இவை நான்காங்கண்டமென்று கூறப்படும்.

கசஅ. பிறப்பின் முதல் - செய்கை. செய்கையும் உணர்வும் சேர் தல் முதற்சந்தியாகும்.

கசகூ. கூட்டம் - சேருதல்.

கசகூ - ரு0. நுகர்ச்சியும் வேட்கையும் கூடுதல் இரண்டாஞ்சந்தி யாகும்.

கருக - உ. பவமும் தோற்றமும் சேர்தல் மூன்றுஞ்சந்தியாகும்.

கருகூ - கூஅ. பேதைமையும் செய்கையுமாகிய இவை இறந்தகாலத்

(பி - ம்.) கசசு - எ. 'துன்ப, மிவை யிறபபினூழ்க்குபபயனுதலின்' கசஅ - ரு0. 'உணர்வாதிபெ...வினையினிடை முதற்சந்திநுகர்ச்சியின றிவ திரண்டர்' கருக. 'கன்மக்கூத்தொடு' கருச. 'ஆயுவுணர்வே' கருரு. 'உளடங்கியு முணர்வாய்' கருஎ. 'உடங்கித் தோன்றி' கசுஉ - அ. 'காலமென விசைக்கப்படுமே மூப்பேசாவேபிணியே யவலமொறறுக'

நுகர்வே வேட்கை பற்றே பவமே
௧௬௫ தோற்ற மென்றிவை சொல்லுங் காலை
யெதிர்கா லம்மென விசைக்கப் படுமே
பிறப்பே பிணியே மூப்பே சாவே
யவல மரற்றுக் கவலைகை யாறுகள்
குலவிய குற்றமெனக் கூறப் படுமே
௧௭௦ யவாவே பற்றே பேதைமை யென்றிவை
புனையுமடை பவமும் வினைசெய லாகு
முணர்ச்சி யருவுரு வாயி லூறே
நுகர்ச்சி பிறப்பு மூப்புப்பிணி சாவிவை
நிகழ்ச்சிப்பய னுங்கே நேருங் காலைக்
௧௭௫ குற்றமும் வினையும் பயனுந் துன்பம்
பெற்ற தோற்றப் பெற்றிக ணிலையா
வெப்பொரு ளுக்கு மான்மா விலையென
விப்படி யுணரு மிவைவீட் டியல்பா
முணர்வே யருவுரு வாயி லூறே
௧௮௦ நுகர்வே பிறப்பே பிணிமூப்புச் சாவே
யவல மரற்றுக் கவலைகை யாறெனு
றுவலப் படுவன நோயா கும்மே
யந்நோய் தனக்குப்

---

தனவென்றும், உணர்வுமுதல் தோற்றமீறானவை நிகழ்காலத்தனவென்றும், தோற்றமுதற் கையாறிறுதியாகவுள்ளவை எதிர்காலத்தனவென்றும் கூறப்படும்.

௧௬௬ - ௭௦. அவாவும் பற்றும் பேதைமையுமாகிய இம்மூன்றும் குற்றமென்று கூறப்படும்.

௧௭௧. பவமும் செய்கையும் வினையாகும்.

௧௭௨ - ௪. உணர்ச்சி முதலிய ஆறும் மூப்புப் பிணி சாக்காடென்னும் வினைப்பயனென்றும் ஆகிய எழும் பயனுகக் கூறப்படும்.

௧௭௬. தோன்றிய இயல்பையுடைய பொருள்கள் நிலையா.

௧௭௫ - ௮. இவ்வடிகள் முன்பு, "நிலையில வறிய துன்பமெனநோக்க, வுலையா வீட்டிற் குறுதி யாகி" (௩௦ : ௩௦ - ௩௧) என்றதனை விளக்கி நின்றன.

௧௭௯ - ௮௮. உணர்வுமுதல் வினைப்பயனீறாகவுள்ளவேழும் துக்கமென்று கூறப்படும்; அதற்குப் பேதைமை முதலிய ஐந்தும் காரணமாகும்; ஆதலால் தோன்றுதல் துன்பம்; அதற்குக்காரணம் பற்று; வீடு

(பி - ம்.) ௧௭௫. 'துன்பமும்' ௧௭௮. 'உணருமென்பிவை' ௧௮௦-௮௧. 'பிறப்பே மூப்பேசாவேயவலவாறறுகவலைகையாறென்ன'

பேதைமை செய்கை யவாவே பற்றுக்
கஅ௫ கரும வீட்டமிவை காரண மாகுந்
துன்பந் தோற்றம் பற்றே காரண
மின்பம் வீடே பற்றிலி காரண
மொன்றிய வுரையே வாய்மைநான் காவ
துருவு நுகர்ச்சி குறிப்பே பாவனை
கக௦ யுள்ள வறிவிவை யைங்கந்த மாவன

---

இன்பம்; அதற்குக்காரணம் பற்றின்மையே; என்கிற நான்குரைகளும் நான்கு வாய்மைகளாகும்; "பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம், பிறவா ருறுவது பெரும்பே ரின்பம், பற்றின் வருவது முன்னது பின்ன தற்றோ ருறுவது" (உ: ௬௪ - எ) என்று முன்பும் வந்திருத்தல்காண்க. இவற்றை ஸத்திய சதுஷ்டயமென்பர் நீலகேசியுரையாசிரியர்; இந்நான்கினுள் துக்கநிவாரணமார்க்கம் எட்டுவகைப்படும்; அஃது அஷ்டாங்கமார்க்கமென்றும் விசுத்திமார்க்கமென்றும் பழுதிலாவாழ்க்கையென்றும் கூறப்படும். இவ்வெட்டாவன:—நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்தோர்தலைப்பாடு என்பன; "பழித்திட்டாப் பழுதில் வாழ்க்கையெட்டையும் பாரித்து" (சீவ - சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன் மதம், ௩க); "நற்காட்சி நல்லொழுக்க நல்வாய்மை நல்வாழ்க்கை, நற்செய்கை யோடைந்து நாடு", "நன்முயற்சி நன்காங் கடைப்பிடிநல் லோர்தம்பாற், செல்கையுட னெட்டனைத்துந் தேறு" (பரமததிமிர பானு) என வருவனவற்றாலறிக. இவ்வெட்டும் ஸம்மியக் திருஷ்டி, ஸம்மியக் ஸங்கற்பம், ஸம்மியக் வாக்கு, ஸம்மியக்கருமம், ஸம்மியகாஜீவம், ஸம்மியக்வியாயாமம், ஸம்மியக்ஸ்மிருதி, ஸம்மியக் ஸமாதியென்று பெயர் பெறுமென்றும், இவைகளே ஜனனமரண துக்கத்தை மாற்றுதற்குரிய வழியென்றும் அசுவகோஷபோதிஸத்துவரால் வடமொழியிற் செய்யப்பட்டுள்ள புத்தசரித்திரத்தின் கநு - ஆம் வர்க்கத்தால் தெரிகின்றன.

கஅக. நுகர்ச்சி - வேதனை. கக௦. உள்ளவறிவு - விஞ்ஞானம்.

கஅக - க௦. உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானமென்னும் இவ்வைந்தும் பஞ்சஸ்கந்தமெனப்படும் (சீவ - சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், ௬.) அவற்றுள் உருவக்கந்தம், பூதவுரு உபாதாயவுருவென இருவகைப்படும். பூதவுரு - பிருதுவி, அப்பு, தேயு, வாயு என்னும் நான்குமாம்; உபாதாயவுரு - வலி, இரதம், வன்னம், கந்தமென்னு நான்குமாம். வேதனை - குசலவேதனை (சுகவறிவு), அகுசல வேதனை (துக்கவறிவு), குசலாகுசலவேதனை (சுகதுக்கவறிவு) என்னுமூன்றுமாம். குறிப்பு - மெய் வாய் கண் மூக்குச் செவியென்னுமைந்தும் மனமொன்றும் ஆகிய ஆறுமாம். பாவனையாவது - மனோ வாக்குக் காயங்களினால் உண்டாகும் நல்வினைபத்தும் தீவினைபத்தும் ஆகிய இருபதுமாம். "எட்டிவை யுருவ மூன்று வேதனை யாறு ஞான,

(பி - ம்.) கஅ௫. 'காரணமாகும்' கஅக. 'குறிப்பினை, யுள்ளமறிவிவை'

வறுவகை வழக்கு மறுவின்று கிளப்பிற்
றொகையே தொடர்ச்சி தன்மை மிகுத்துரை
யியைந்துரை யென்ற நான்கினு மியைந்த
வுண்மை வழக்கு மின்மை வழக்கு
௧௧௫ முள்ளது சார்ந்த வுண்மை வழக்கு
மில்லது சார்ந்த வின்மை வழக்கு
முள்ளது சார்ந்த வின்மை வழக்கு
மில்லது சார்ந்த வுண்மை வழக்குமெனச்
சொல்லிய தொகைத்திற முடம்புநீர் நாடு

---

மொட்டிய குறிப்போ ராறு செய்கையு மிருப தாகக், கட்டிய பஞ்ச கந்தங் கணத்தினிற் பங்கமாகுந், தொட்டநாற் பத்து மூன்றுஞ் சுகதநூற் றுணிவுதானே" (சிவ - சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், ௩௦, மேற்.) என்று வருதல் காண்க. இன்னும் இவற்றினிலக்கணங்களை, "ஓங்குருவம் வேதனை யுளக்குறிப்புப் பாவனைமெய், தாங்குணர்வென் றைந்தாங்கந் தம்" எ - ம், "உருவமுடல் பூத முபாதாய மென்னு, மிரு விதத்தி னுலுமெழு மென்" எ - ம், "வேதனை துன்பின் பிவற்றின் விரவலுமென், றோதவொரு மூன்றுமென் றோர்" எ - ம், "பொறிவிதமோ ரைந்தும் பொறியைப் பொருந்தி, யறியுமன முங்குறிப்பென் றாய்" எ - ம், "வாக்குமன மாக்கையிவை பாவனையென் றேமதியா, யாக்கு மிவை தாமறம்பா வம்" எ - ம், "இந்நால் வகையினுமேய்ந் தையமற வெண்ணுமெணம், விஞ்ஞான மென்றே விளம்பு" எ - ம், "இந்தவித மைந்துஞ்சந் தானத் தெழுந்தழிகை, பந்தமென வேநீதான் பார்" எ - ம், "அறக்கெடுதே லேபரம முத்தியிவை யைந்து, மறக்கெடுமா றுங்கூறு வாம்" எ - ம் வரும் திருவாக்காலும் (பரமதத்திமிரபானு) அறிந்துகொள்க. இந்தப் பஞ்சஸ்கந்தக்கூட்டமே உயிரென்பர்; அது, "கவையொப் பனைகை விரலேந் துகளு, மிவையிப் படிகைப் பிடியென் றதுபோலவையப் படிகந் தங்களேந் துகளு, நவையைப் படுநல் லுயிரா மெனவும்" (நீல. புத்த. ௩௦) என்னும் பாடலால் நன்குணர்த்தப்படுகின்றது. இவ்வைந்தினுள்ளே குறிப்பினைக் குறியென்றும், அது வடமொழியில் ஸம்ஜ்ஞாஸ்கந்தமென்று பெயர் பெறுமென்றும் கூறுவாரும், இரண்டொன்றிற்கு வேறு இலக்கணம் கூறுவாருமுளர்.

௧௧௧ - அ. அறுவகை வழக்காவன: தொகை, தொடர்ச்சி, தன்மை மிகுத்துரை, இயைந்துரை யென்ற நான்கொடுஞ்சேர்ந்த உண்மை வழக்கு முதலிய ஆறுமாம். இயைந்துரையைத் தொகையிலடக்கி மூன்றென்பாரு முளர்.

௧௧௯. தொகைத்திறமாவது: உடம்பும் நீரும் நாடுமென்க; என்றது, பலதாதுக்களின்கூட்டம் உடம்பென்றும் பலதுளிகளின்கூட்டம் நீரென்றும்பலவூர்களின்கூட்டம் நாடென்றும் வழங்கப்படுமாறு போலப் பஞ்சஸ்கந்தங்களின்கூட்டமே ஆன்மாவென்று வழங்கப்படுவது தொகையென்ற

(பி - ம்.) ௧௧௫ - அ. 'சார்ந்தவுண்மைவழக்கு, மில்லது சாந்தவின்மை......சார்ந்தவின்மை வழக்கும்'

௨00 தொடர்ச்சி வித்து முளைதா ளென்றிந்
நிகழ்ச்சியி லவற்றை நெல்லென வழங்குத
லியல்பு மிகுத்துரை யிறுடைத் தென்றுந்
தோன்றிற் றென்று மூத்த தென்று
மூன்றி னொன்றி னியல்புமிகுத் துரைத்த
௨0௫ லியைந்துரை யென்ப தெழுத்துப் பலகூடச்
சொல்லெனத் தோற்றும் பலநாட் கூடிய
வெல்லையைத் திங்க ளென்று வழங்குத

வாறு; இனி இத்தொகையினை உண்மைவழக்கு இன்மைவழக்கு என்ப வற்றோடுசேர்த்து 'சுவரும்மரமும் ஆக்கையும் கற்றையுங்கூடின சமுதாயத்தை வீடென்று வழங்குமாறுபோலவும் பலவூருங்கூடின சமுதாயத்தை நாடென்றும் பற்றென்றும் வழங்குமாறுபோலவும் பஞ்சஸ்கந்தக் கூட்டத்தை ஆன்மாவென்று வழங்குவது கற்பனுநாமமெனக்கொள்க' என்றும், 'மரம் கற்றை முதலியவற்றைப் பிரித்தால் வீடில்லையானாற் போலவும் ஊர்களைப்பிரித்தாற் பற்றும் நாடுமில்லையானாற் போலவும் ஐந்துஸ்கந்தங்களையும் பிரித்துணருங்கால் ஆன்மா இல்லையாமெனக் கொள்க' (சிவ-சித்தி. பரபக்கம், உரை) என்றும் விளங்க அவற்றிற்கு உதாரணங்காட்டினருமுளர்; "ஒருவனென் றோதப்பட்டா னுருவாதி யைந்துங் கூடி, வருபவ னென்று ரைத்த றொகையுண்மை வழக்க தாகு, முருவமங் காதியாய வைந்தையு மொருவ னின்று, தருவது தொகையி னின்மை வழக்கதாஞ் சாற்றுங் காலே" சிவ-சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், எ.

௨00 - ௨0௧. தொடர்ச்சியாவது - வித்திலிருந்து முளையும் முளையி லிருந்து தாளுந்தோன்றி நிகழ்ந்து நெல்லென்று வழங்குமாறுபோல எல்லாம் காரணகாரிய சம்பந்தமாகவுள்ளதென்பது; "காரண காரியத்தின் றொடர்ச்சியாய்க் கால மூன்றின், சோர்வறத் தோன்றுங் கெட்டு வழியென்கை தொடர்ச்சி யுண்மை, யோர்தரி னொருவ னேயெக் காலத்து முள்ளா னென்று, தேர்வது தொடர்ச்சி யின்மை வழக்கதாஞ் செப்புங் காலே" (சிவ-சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், அ) என்று இத்தொடர்ச்சியை உண்மை வழக்கு இன்மைவழக்கென்பவற்றோடு சார்த்தி அவற்றிற்கு இலக்கணங்கூறியிருத்தல் காண்க.

௨0௨ - ௪. இயல்பு மிகுத்துரை - தன்மைமிகுத்துரை. தன்மை மிகுத்துரையாவது - ஒரு பொருளினுடைய இறப்புப்பிறப்பு மூப்பு என்பவற்றுள் ஒன்றனியல்பை மிகுத்துச் சொல்லுதல். இதனை உண்மை வழக்கு இன்மை வழக்கென்பனவற்றோடு சார்த்தி, "தோற்றிய பொருள்க ளெல்லா நாசமாமென்று சொல்லு, மாற்றமுன் னுரைத்தன் மற்றை மிகுத்துரை வழக்கினுண்மை, போற்றிய பொருள்கண்கட்குப் போனது போன்மு திர்ந்து, வேற்றுமைப் பட்ட தென்கை மிகுத்துரை யில்வழக்கே" (சிவ-சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், ௯) என்று முறையே அவற்றிற்கு இலக்கணம் கூறியிருத்தல் காண்க.

௨0௫ - எ. தொகைக்கும் இயைந்துரைக்கும் வேற்றுமையாதோவெ

(பி - ம்.) ௨0௧. 'நிகழ்ச்சியிலற்றை'

னுள்வழக் குணர்வில் வழக்கு முயற்கோ
டுள்ளது சார்ந்த வுள்வழக் காகுஞ்
உகo சித்தத் துடனே யொத்த நுகர்ச்சி
யுள்ளது சார்ந்த வில்வழக் காகுஞ்
சித்தமுற் பவித்தது மின்போ லென்கை
யில்லது சார்ந்த வுண்மைவழக் காகுங்
காரண மின்றிக் காரிய நேர்த
உகரு லில்லது சார்ந்த வில்வழக் காகு
முயற்கோ டின்மையிற் றோற்றமு மில்லென
நான்கு நயமெனத் தோன்றப் படுவன
வொற்றுமை வேற்றுமை புரிவின்மை யியல்பென்க

---

னின் பலபொருள்களின் வரையறைப் படாததொகுதி தொகையாமென்றும் பலபொருள்களின் வரையறைப்பட்ட தொகுதி இயைந்துரையாமென்றுங் கூறுவர்.

கககூ - உOஎ. இவ்வடிகளால் தொகை முதலிய நான்கனிலக்கணங்களும் கூறப்பட்டன.

உOஅ - ககூ. இவ்வடிகளால் உண்மைவழக்கு, இன்மைவழக்கு, உள்ளது சார்ந்தவுண்மைவழக்கு, உள்ளதுசார்ந்தவின்மைவழக்கு, இல்லது சார்ந்தவுண்மைவழக்கு, இல்லது சார்ந்தவின்மைவழக்கென்னும் ஆறினிலக்கணங்களும் முறையே கூறப்பட்டன; "அறுவகை வழக்கு நெறிபட வுணர்ந்து" என்பது பௌத்தநூல்; இவ்வறுவகைவழக்கின் பெயரும் அவற்றினிலக்கணங்களும் ஈண்டுக்கூறப்பட்டிருத்தல்போலப் பின்வரும் திருவிருத்தங்களிலும் கூறப்பட்டிருத்தல் காண்க; "உள்வழக் கில்வழக்குள் ளதுசார்ந்த வுள்வழக்கோ, டுள்ளது சார்ந்த வின்மை வழக்குட னின்மை சார்ந்த, வுள்வழக் கின்மை சார்ந்த வில்வழக்கென் றோரா று, முள்வழக் குளதுண்டென்கை முயற்கோடின் றில்வழக்கே", "உணர்வு சார்ந்த துணர்வுதிக்கை யுள்ளது சார்ந்த வுண்மை, யுணர்வுபி னின்று மென்கை யுள்ளது சார்ந்த வின்மை, யுணர்வு முன்பின்றித் தோன்ற வில்லது சார்ந்த வுண்மை, யுணரினில் லதுசா ரின்மை யுள்ளங் கை யுரோம நாணே" சிவ - சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன் மதம், கO, கக.

உகஎ - அ. ஒற்றுமைநயம் வேற்றுமைநயம் புரிவின்மைநயம் இயல்புநயமென நயங்கள் நான்கு வகைப்படும்.

(பி - ம்.) உOகூ - கO. 'வழககேற்குமசிகததிததுடனேயொத்து நுகர்ச்சி' உகஉ - அ. 'உற்பவித்துமினன நான்குநயமென ததோன்றப் படுவதொற்றுமை' உகஅ - கூ. 'இயலபெனக்'

காரண காரிய மாகிய பொருள்களை
௨௨௦ யொன்று வுணர்த லொற்றுமை நயமாம்
வீற்றுவீற் றாக வேதனை கொள்வது
வேற்றுமை நயமென வேண்டல் வேண்டும்
பொன்றக் கெடாஅப் பொருள்வழிப் பொருள்களுக்
கொன்றிய காரண முதவுகா ரியத்தைத்
௨௨௫ தருதற் குள்ளந் தானிலை யென்றல்
புரிவின்மை நயமெனப் புகறல் வேண்டு
நெல்வித் தகத்து ணெண்முளை தோற்றமென
னல்ல வியல்புநய மிவற்றினுங் கொள்பயன்
றொக்க பொருளல தொன்றில்லை யென்று
௨௩௦ மப்பொரு ளிடைப்பற் றாகா தென்றுஞ்

௨௧௯ - ௨௦. இவ்வடிகளால் ஒற்றுமைநயத்தின் இலக்கணம் கூறப்பட்டது. ௨௨௧. வேறுவேறாக அறிதல்.

௨௨௧ - ௨. இவ்வடிகளால் வேற்றுமைநயத்தின் இலக்கணம் கூறப்பட்டது.

௨௨௩. பொன்றக்கெடாப்பொருள் - முற்றக்கெடாதபொருள். வழிப்பொருள் - காரியப்பொருள்.

௨௨௫. உள்ளம் - விஞ்ஞானம்.

௨௨௬. புரிவின்மை - செய்தலில்லாமை.

௨௨௫ - ௬. "உணர்வெனப் படுவ துறங்குவோ ருணர்விற், புரிவின் றாகிப் புலன்கொளா ததுவே" (௩௦ : அ௨ - ௩) என்றார் முன்னும்; விஞ்ஞானத்திலடங்கியிருக்கும் கன்மபீஜமே மறுபிறப்பிற்குக் காரணமென்பர்.

௨௨௩ - ௬. இந்த நான்கடிகளாலும் புரிவின்மை நயத்தின் இலக்கணம் கூறப்பட்டது.

௨௨௭ - அ. இவ்வடிகளால் இயல்புநயத்தின் இலக்கணம் கூறப்பட்டது.

௨௨அ. இவற்றின் நாம் கொள்பயன் - இந்த ஒற்றுமைநயமுதலிய நயங்கள் நான்காலும் நாம் கொள்ளும்பயன் யாவையெனின்.

௨௨௯. தொக்கபொருளலது - சேர்ந்தபொருள்களையல்லாமல். ஒன்று - வேறாகிய ஒன்று.

இவ்வடியாற் கூறப்பட்டது ஒற்றுமைநயத்தாற்போந்த பயனென்க.

௨௩௦. இவ்வடியாற் கூறப்பட்டது வேற்றுமைநயத்தாற்போந்த பயனென்க.

(பி-ம்.) ௨௨௦. 'ஓர்விலனுயொன்று' ௨௨௦ - ௨௧. 'நயம் வீற்று வீற்றுதலெதனை கொள்வது' ௨௨௩. 'பொனகெகொட...' ௨௨௬ - அ. 'புகலல்வேண்டுகென முனையினறு மெவலலவியல்பு' ௨௨அ - ௯. 'பய னுங் கொனபயன, றொழுக்கபொருளதொன்றில்லை'

செய்வா னொடுகோட் பாடிலை யென்று
மெய்துகா ரணத்தாங் காரிய மென்று
மதுவு மன்றத லாதது மன்றென் றும்
விதிமுறை தொகையினல் விரிந்த நான்கும்
௨௩௫ வினவிடை நான்குள
துணிந்து சொல்லல் கூறிட்டு மொழிதல்
வினவின் விடுத்தல் வாய்வா ளாமையெனத்
தோன்றியது கெடுமோ கெடாதோ வென்முற்
கேடுண் டென்ற றுணிந்துசொல லாகுஞ்
௨௪0 செத்தான் பிறப்பா னேபிற வானே
வென்று செப்பிற்
பற்றிறந் தானே வன்மக னேவெனன்
மிகக்கூ றிட்டு மொழிதலென விளம்புவர்

---

௨௩௧. செய்வான் - கருத்தா. இவ்வடியாற்கூறப்பட்டது புரிவின்மைநயத்தாற் போந்த பயனென்க.

௨௩௨ - ௩. இவ்வடிகளாற் கூறப்பட்ட இரண்டும் இயல்புநயத்தாற் போந்த பயன்களெனக்கொள்க; இங்ஙனங்கொள்ளாமல் இந்த இரண்டு பயனையும் பிரித்து முன்னதை முன்னதனேடுகூட்டினும் பொருந்தும்.

௨௩௪. விரிந்த: முற்று. நான்கும் விரிந்தனவென்க; நான்கும் - நான்கு பயன்களும்.

௨௩௫. வினக்களுக்குரிய விடைகளென்க.

௨௩௬. கூறிட்டுமொழிதல் - பகுத்துச்சொல்லல்.

௨௩௭. வாய்வாளாமை - பேசாதிருத்தல்; ஆசிரியர் நச்சினர்க்கினியர், "அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்" (தோல். புறத். ௨0) என்னுஞ் சூத்திரத்தில், 'நாலிரு வழக்கிற் ருபதப் பக்கமும்' என்பதனுரையில், தவஞ்செய்வோர்க்கு உரியனவாக எடுத்துக்காட்டிய, 'ஊணசையின்மை, நீர்நசையின்மை, வெப்பம்பொறுத்தல், தட்பம்பொறுத்தல், இடம்வரையறுத்தல், ஆசனம்வரையறுத்தல், இடையிட்டுமொழிதல், வாய்வாளாமை' என்னும் எட்டினுள் இது வந்திருத்தல் காண்க.

௨௩௫ - எ. துணிந்துசொல்லல், கூறிட்டுமொழிதல், வினவின் விடுத்தல், வாய்வாளாமையென நான்குவிடைகளுள்ளன.

௨௩அ - ௯. தோன்றியது - உண்டான பொருள்; தோன்றிய பொருள். கெடுமென்பது ஒருதலையாதலின், ஈண்டுக்கேடுண்டென்றல் துணிந்துசொல்லலாயிற்று; துணிந்து சொல்லலென்னும் விடையின் இயல்பு கூறப்பட்டது.

௨௪0 - ௪௩. கூறிட்டுமொழிதலென்னும் விடையின் இயல்புகூறப்பட்டது.

(பி - ம்.) ௨௩௧. 'தொடாபாடிலை யெனறும்' ௨௩௨ - ௩. 'காணத்தாங்காரியமென்றுமதுவு மன்ற தாரதுவு மனறெ' ௨௩௪ - ௫. முறைதொகை வினவிடைநான்குள்' ௨௩௯. 'உண்டென்னிற்றுணிந்து'

வினைவின் விடுத்தன் முட்டைமூன் றிற்றே
௨௪௫ பனைமூன் றிற்றே வெனக்கட் டுரைசெ
யென்று லெம்முட்டைக் கெப்பனை யென்றல்
வாய்வா ளாமை யாகா யப்பூப்
பழைதோ புதிதோ வென்று புகல்வா
னுரைக்கு மாற்ற முறையா திருத்தல்
௨௫௦ கட்டும் வீடு மதன்கா ரணத்த
தொட்டிக் தருதற் குரியோ ரில்லை
யாமே யுரைத்த பொருள்கட் கெல்லாங்
காமம் வெகுளி மயக்கங் காரண

---

௨௪௪ - ௬. இந்தவடிகளால் வினைவின்விடுத்தலென்னும் விடையின் இயல்பு கூறப்பட்டது. ௨௪௮. பழைது - பழையது.

௨௪௭ - ௯. இந்தவடிகளால் வாய்வாளாமையென்னும் விடையின தியல்பு கூறப்பட்டது.

௨௩௫ - ௪௯. இவ்வடிகளிற் கூறிய விடைவகை நான்கும் தொல் காப்பிய உரையிற் கூறப்பட்டுள்ளன ; கிளவி. ௬. ௧௩.

௨௫௦. கட்டு - பந்தம். 'அதன் காரணத்தது' என்பதனைக் கட் டினோடும் வீட்டினோடும் தனித்தனியே கூட்டுக.

௨௫௧. காமமுதலிய மூன்றும் முக்குற்றமெனப்படும்.

௨௫௨ - ௩. மேற்கூறிய பொருள்களெல்லாவற்றிற்கும் காமம் வெகுளி மயக்கமென்னும் இம்மூன்றுங் காரணமாகும் ;" காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற, னாமங் கெடக்கெடு நோய்" (குறள், ௩௬௦) என்று வந்திருத்தல்காண்க.

இனி, எல்லாவற்றிற்கும் காரணமாகிய காமவெகுளி மயக்கங்களை முறையே நீக்குதற்குரிய பாவனைகள் கூறுவார்.

மைத்திரீபாவனை கருணைபாவனை முதிதபாவனை அசுபபாவனை உபேக்ஷாபாவனையெனப் பாவனை ஐந்துவகைப்படும் ; அவற்றுள்,

௧. மைத்திரீபாவனை : ஒருதுறவி வசதியான ஓரிடத்தையடைந்து தக்க ஆஸனத்திலிருந்த பின்பு பின்வருமாறு தியானித்தலாம் : 'உத் தமமான பிறப்பினையுடைய பிராணிகளெல்லாம் களிப்புற்றுவாழ்வன வாகுக ; அவையெல்லாம் துக்கம் வியாதி துராசையென்னும் இவைகளி னின்றும் விடுபட்டனவாகுக ; எல்லாமனிதர்களும் எல்லாத்தேவர்களும் நரகவாதையினுற் பீடிக்கப்படுகிறயாவரும் ஸந்தோஷமுடையவர்களாக ஆகுக ; அவர்கள் துக்கம் வியாதி துராசையென்னும் இவற்றினின்றும்

(பி - ம்.) ௨௪௪. 'வினைவின்விடுத்தல் விரிக்குங்காலை முட்டை' ௨௪௫ - ௬. 'கட்டுரையென்றால்' ௨௪௮ - ௯. 'புகல்வானுக்கு' ௨௫௨. 'பொருள்களெல்லாம்'

மநித்தர் துக்க மநான்மா வசுசியெனத்

---

விடுபட்டவர்களாக ஆகுக.' மைத்ரம் ஸ்நேகம் அன்பு என்பன ஒரு பொருட் சொற்கள்; மைத்திரமென்பது க்ரோதத்திற்கு மாறானது; அவ்விரண்டும் ஓரிடத்துநிகழா; மைத்திரமென்பது த்ருஷ்ணையென்னு மாசையன்று; அவித்தை அல்லது மோகம் காரணமாக த்ருஷ்ணை பிறக்கும்; அதனால் துராசைபிறக்கும். மைத்திரமென்னும் ஸ்நேகத்திலிருந்து துராசை யுண்டாகாது. ஒருவனுக்குத் தன் துணைவன்விஷயமாக உண்டாகும் அன்புதான் மைத்திரமென்பது.

௨. கருணாபாவனை: 'வறியவர்கள் வறுமை நீங்கிச் செல்வமுடையவர்களாக ஆகுக' என்று பாவித்தல். கருணையாவது இரக்கமுள்ள எண்ணம். அஃது, ஒருபிராணி துன்பமுறுவதைக்காணின், மனக்கலக்கத்தையும் அத்துன்பத்தை நிவர்த்தி பண்ணவேண்டுமென்பதையும் ஒருவருக்கு உண்டாக்கும்.

௩. முதிதபாவனை: 'ஆக்கமுடையவர்களுடைய நல்ல அதிர்ஷ்டமானது எப்பொழுதும் நீங்காதிருத்தல் வேண்டும்; ஒவ்வொருவரும் தத்தமக்கு அமைந்துள்ள நல்வினைப்பயனை அடைக' என்று பாவித்தல். முதிதையென்பதற்குச் சந்தோஷமென்பது பொருள்; ஆனால் அஃது உலகப்பொருள்களையுடைமையால் உண்டாகுங்களிப்பன்று; அது மைத்திரி, கருணையென்னும் இரண்டுபாவனைகளுக்கும் சம்பந்தமானது. முற்கூறிய மூன்றுவகைப் பாவனைகளுள் ஏதாவதொன்றை அப்பியசிக்குந்துறவி, தான் கருதியபாவனையை முதலில் சிலமக்களிடத்தும் அப்பால் ஒருதெருவில் வாழ்பவர்களிடத்தும் அப்பால் ஊராரிடத்தும் அப்பால் ஒரு தேயத்தாரிடத்தும் முறையே செலுத்திப் பயிலுதல்நலம்.

௪. அசுபபாவனை: அசுபமென்பதற்குப்பொருள் அமங்கலம்; நல்ல அதிர்ஷ்டமென்பதன் எதிர்மொழியாயிருப்பதோடு மகிழ்ச்சியின்மை வெறுப்பு என்பனவற்றையுண்டாக்குவதாகவுமுள்ளது. இதைப் பயிலும் ஒருதுறவி, சரீரமானது முப்பத்திரண்டு குற்றத்தாலாக்கப்பட்டதென்றும் சாணியின் குவியலில் தோன்றிவளரும் புழுக்கள்போலக் கருப்பப்பையில் உண்டாகின்றதென்றும் மலங்கழிக்குமிடத்தைப்போல அசுத்தத்தின் கொள்கலனாயிருப்பதென்றும் அருவருப்பான கசிவு அதிலுள்ள நவத்துவாரங்களின் வழியே ஓயாமற் பெருகுகின்றதென்றும் ஜலதாரையைப்போல் வெறுத்தற்குரிய நாற்றத்தை அது வெளிப்படுத்துகின்றதென்றும் பாவித்தல். 'சரீரத்தின் கால அளவை ஒரு நிமிஷமே; மின்னலையும் நுரையையும் நீரிற்போகட்ட உப்பையும் காய்ந்த புல்லிற் பற்றிய நெருப்பையும் கடலின் அலையையும் ஆகாயத்திற் சஞ்சரிக்கிற ஜுவாலையையும் புன்னுனியிற்பட்ட பனித்துளியையும் போலப் பிறந்தபோதே அதுநாசமாம்' என்று சரீரத்தின் நிலையின்மையைப் பாவித்தலும் அசுபபாவனையின்பாற்படும்.

௫. உபேக்ஷாபாவனை: எல்லாவுயிர்களையும் சமமாகப் பாவித்தலும் விருப்புவெறுப்பின்றி யிருத்தலுமாம். இது, மற்ற நான்குபாவனைகளைக் காட்டிலும் மிகவுயர்ந்தது; அருகத்துக்களால் அனுட்டிக்கப்படுவது; இது சமசித்தத்துவமென்றும் கூறப்படும்.

(பி - ம்.) ௨௫௩ - ௪. 'காரண, மனித்தநதுககமாறபாசுசியென'

உ௫௫ தனித்துப் பார்த்துப் பற்றறுத் திடுதன்
மைத்திரி கருணை முதிதையென் றறிந்து
திருந்துநல் லுணர்வாற் செற்றமற் றிடுக
சுருதி சிந்தனை பாவனை தரிசனை
கருதி யுய்த்து மயக்கங் கடிக

மைத்திரி, கருணை, முதிதம், உபேக்ஷையென்னும் நான்கு பாவனைகளும் உயர்வுபற்றிப் பிரஹ்மவிகாரபாவனையென்று கூறப்படும்; இவை மஹாப் பிரஹ்மாக்களால் அநுஷ்டிக்கப்படுவன.

உ௫௫. பார்த்து - அசுபபாவனை பண்ணி. பற்று - காமம்.

உ௫௪ - ௫. அசுபபாவனையாற் காமத்தையொழிக்கவென்றவாறு. உடம்பினை அநித்தியம் துக்கம் அநான்மா அசுசியென்றுபாவித்தல் அசுபபாவனையெனப்படுவதன்றி ஸ்ரீலக்ஷணபாவனையென்றுங் கூறப்படும். இதனைச் சிவஞானசித்தியார், பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், உ - ஆம் திருவிருத்தத்துரையிற்காண்க; இவ்வசுபபாவனை, "நன்கெனநாறுமி தென்றிவ் வுடம்பு நயக்கின்ற தாயி, னொன்பது வாயில்கடோறு மூண்ணின் றழுக்குச் சொரியத், தின்பதோர் நாயு மிழுப்பத் திசைதொறுஞ் சிப்பில்கு போழ்தி, னின்பநன் றுற்ற மிதன்க ணெவ்வகையாற்கொள லாமே" எனவும், "உறுப்புக்க டாமுடன் கூடி யொன்றாயியைந்த பெரும்பை, மறைப்பில் விழைவிற்குச் சார்வாய் மக்குவதேலிவ் வுறுப்புக், குறைத்தன போல வழுகிக் குறைந்து குறைந்து சொரிய,வெறுப்பிற் கிடந்த பொழுதின் வேண்டப் படுவது முண்டோ" எனவும்,"எனதெனச் சிந்திந்த லான்மற் றிவ்வுடம் பின்பத்துக் காமேற், றினைபெய்த புன்கத்தைப் போலச் சிறியவு மூத்தவு மாகி, வினையப் புழுக்குந் தமாவி காணவும் வாழவும் பட்ட, வினைய வுடம்பினைப் பாவியானென தென்னலு மாமோ" எனவும் வருங் குண்டலகேசிச் செய்யுட்களாலுமுணர்த்தப்பட்டது; "வினையின் வந்தது வினைக்கு விளைவாயது,.........மிக்கோ யிதனைப் புறமறிப் பாராய்" (௪ : ௧௧௩ - உ௧), "என்புந் தடியு முதிரமும் யாக்கையென்........காய்ந்தபசி யெருவைகவர்ந்து ணுதையும்" (௬ : ௧0௭ - ௧௭) என இந்நூலுள்ளே வந்தன அசுபபாவனையின்பாற்படும்.

உ௫௬ - ௭. மைத்திரீபாவனை முதலிய மூன்றாலும் கோபத்தைப் போக்குக.

உ௫௮. சுருதி - ஞானநூற்பொருளைக் கேட்டல். சிந்தனை - சிந்தனை, சிந்தித்தல். பாவனை - பாவனை, பாவித்தல்; இது தெளிதலென்றுங் கூறப்படும். தரிசனை - அறிதல்; மேற்கூறிய பாவனையைந்தனுள் ஈண்டுக்கூறிய சுருதிமுதலியன உபேக்ஷாபாவனையின்பாற்படும்.

உ௫௯. உய்த்து - ஆராய்ந்து.

உ௫௮ - ௯. உபேக்ஷாபாவனையால் மயக்கத்தைப் போக்குகவென்றவாறு.

(பி - ம்.) உ௫௫. 'தம்மிற்பார்த்து' உ௫௬ - ௮. 'மயிரிறறிரி... திதையு பிகையென றிருதருறற செறறமறறிடுக சுருபசிந்தனைபாவனை' உ௫௮ - ௯. 'பாவனைதெசசனை கருதியுய்தலுமயககு'

௨௯0 இந்நால் வகையான் மனத்திரு ணீங்கென்று
முன்பின் மலையா மங்கல மொழியின்
ஞான தீப நன்கனங் காட்டத்
தவத்திறம் பூண்டு தருமங் கேட்டுப்
பவத்திற மறுகெனப் பாவைநோற் றனளென்.

௩0. – பவத்திறமறுகெனப் பாவைநோற்றகாதை முற்றிற்று.

---

௨௯0. இந்நால்வகையென்றது, மேற்கூறிய சுருதிமுதலிய நான்கினையும். மனத்திருள் - மயக்கம்; 'இந்நால்வகையான மனத்திருணீங்கு' என்றது அனுவாதம்.

௨௯௧. முன்பின்மலையா - பூர்வோத்தரவிரோதமில்லாத; மணி. ௨௮ : ௧00, ௩0 : ௯.

௨௯௧ - ௨. மொழியினாற் காட்டவென்க.

௨௯௪. பவத்திறம் - பிறப்பின் வகைகள். பாவை - மணிமேகலை.

௧ - ௨௯௪. உணர்ந்தோர் வணங்கிச் சென்று அடைந்தபின் மொழிவோர் காட்டப் பாவைகேட்டுப் பூண்டு நோற்றனளென்க.

(பி - ம்.) ௨௯0 - ௯௨. 'இருணீங்கனனமொழியினதீபநனகனங'

மணிமேகலை முற்றுப்பெற்றது.



## மணிமேகலைப்பாட்டு

# முதற்குறிப்பு அகராதி.

| காதை. | பாட்டு. | | பக்கம். |
|---|---|---|---|
| ௨௬ | அணியிழையந்தரம் | ... | ௨௧௩ |
| ௬ | அந்திமாலைநீங்கிய | ... | ௬௬ |
| ௨௦ | அரசனாணையினாயிழை | ... | ௨௧௭ |
| ௨௫ | அரசனுரிமையோடு | ... | ௨௭௬ |
| ௧௦ | அறவோனாசனத்து | ... | ௧௦௭ |
| ௯ | ஆங்கதுகண்டவாயிழை | ... | ௧௦௧ |
| ௧௮ | ஆங்கதுகேட்டாங்கு | ... | ௧௮௬ |
| ௧௨ | ஆங்கவர்தம்முடன் | ... | ௧௩௪ |
| ௧௪ | ஆங்கவற்கொருநாள் | ... | ௧௫௨ |
| ௨௮ | ஆங்குத்தாயரோடு | ... | ௩௨௬ |
| பதி. | இளங்கதிர் ஞாயிறெள்ளும் | ... | ௧ |
| ௫ | இளங்கோன்கண்ட | ... | ௫௪ |
| ௨௯ | இறைஞ்சியவிளங்கொடி | ... | ௩௪௬ |
| ௧௫ | இன்னுங்கேளாயிளங்கொடி | ... | ௧௬௩ |
| ௧௬ | ஈங்கிவள்செய்தி | ... | ௧௬௯ |
| ௮ | ஈங்கிவளின்னணம் | ... | ௯௬ |
| ௧ | உலகந்திரியா | ... | ௧௧ |
| ௨௨ | கடவுண்மண்டிலம் | ... | ௨௪௦ |
| ௨௧ | கடவுளெய்தியநெடுநிலை | ... | ௨௨௬ |
| ௩௦ | தானந்தாங்கிச் | ... | ௩௬௫ |
| ௨௭ | நவையறுநன்பொருள் | ... | ௩௦௩ |
| ௨ | நாவலோங்கிய | ... | ௧௯ |
| ௧௭ | பத்தினிப்பெண்டிர் | ... | ௧௭௮ |
| ௪ | பரிதியஞ்செல்வன் | ... | ௪௨ |
| ௧௧ | மணிமேகலாதெய்வம் | ... | ௧௧௭ |
| ௭ | மணிமேகலைதனை | ... | ௮௫ |
| ௨௪ | மன்னகுமரனை | ... | ௨௬௫ |
| ௨௩ | மன்னவனருளால் | ... | ௨௫௩ |
| ௧௩ | மாபெரும்பாத்திரம் | ... | ௧௪௨ |
| ௧௯ | முதியாடிருந்தடி | ... | ௨௦௨ |
| ௩ | வயந்தமாலைக்கு | ... | ௨௭ |

# மணிமேகலைப் பிரயோகவிளக்கம்.

பழையநூல்களின் உரைகளில் உரையாசிரியர்களால் மணிமேகலையிலிருந்து உதாரணங்களாக எடுத்துக்காட்டப்பட்ட மூலங்களுள் இதுவரையில் கிடைத்தவை வருமாறு:—

## இலக்கணக்கொத்து உரை.

| சூத்திர எண். | | மணிமேகலை. |
|---|---|---|
| ௯௬. | "மன்னகுமரன்" | ... ௪ : ௬௩, ௨௪ : ௧. |

## இலக்கண விளக்கவுரை.

| | | |
|---|---|---|
| ௭௧. | "எட்டி குமர னிருந்தோன் றன்னை" | ... ௪ : ௫௮. |
| ,, | "எட்டிப்பூ" | ... ௨௨ : ௧௧௩. |
| ௨௪௪. | "மாமறை மாக்கள் வருகுலங் கேண்மோ" | ... ௧௩ : ௯௩. |
| ,, | "முதுமறை யந்தணிர் முன்னியதுரைமோ" | ௧௩ : ௫௬. |

## சிலப்பதிகாரம்.

### அடியார்க்குநல்லாருரை.

| பக்கம். | உரைப்பாயிரம். | |
|---|---|---|
| ௮. | "நாடகக் காப்பிய நன்னூ னுனிப்போர்" | ... ௧௯ : ௮0. |
| ௯. | "நாடகக் காப்பியம்" | ... ,, |
| | பதிகம். | |
| ௧௯. | "இறும்பூது சான்ற" | ... ௨0 : ௫௫. |
| | ௪.—அந்திமாலைச் சிறப்புச்செய்காதை. | |
| ௧௨௯. | "எற்கெடுத் திரங்கி" | ... ௫ : ௩௬. |
| | ௫.—இந்திரவிழவூரெடுத்தகாதை. | |
| ௧௬0. | "வசித்தொழி லுதவ மாநிரங்கொழுப்ப" | ... ௧௪ : ௫௭. |
| | ௬.—கடலாடுகாதை. | |
| ௧௯௪. | "சுரியற் றாடி......பேடுகாண் குநரும்" | ... ௩ : ௧௧௯-௨௫. |
| | ௯.—கனாத்திறமுரைத்தகாதை. | |
| ௨௫0. | "கரந்துரு வெய்திய கடவு ளாளரும்" | ... ௧ : ௧௫. |
| ,, | "தேவருமக்களும்...நாளினும்" | ... ௧ : ௬௬-௭. |
| | ௧0.—நாடுகாண்காதை. | |
| ௨௬௯. | "நாலேழ் நாளினும்" | ... ௧ : ௮. |
| ௨௭௧. | "இலவந் திகை......யாங்குளர்" | ... ௩ : ௪௫-௬. |
| | ௧௬.—கொலைக்களக்காதை. | |
| ௪௨௬. | "நினக்கிவன் மகனா........காரிகை" | ... ௨௧ : ௨௯-௩௨. |
| | ௧௭.—ஆய்ச்சியர்குரவை. | |
| ௪௫௯. | "முத்தை முதல்வி யடிபிழைத் தாயென" | ... ௧௯ : ௧௩. |
| | ௧௯.—ஊர்சூழ்வரி. | |
| ௪௭௭. | "ஊழ்வினை வந்திவ னுயிருண்டு கழிந்தது" | ௬ : ௧௫௨. |

## சிவஞானசித்தியார் பரபக்கம்.

### திருவொற்றியூர் ஞானப்பிரகாசருரை.

| செய்யுள் எண். | சௌத்ராந்திகன்மதம். | மணிமேகலை. |
|---|---|---|
| ௯. | "பேதைமை செய்கை ...நரகிருப்பர்" | உச : ௧0௫ - ௧0. ; ௩0 : ச௫ - ௧. |
| ௩0. | "தீவினையென்பது ......பிரமரு மாகி" | உச : ௧உ௩ - ௩௧. ; ௩0 : ௬௯ - அ0. |

### சீவகசிந்தாமணி, நச்சினார்க்கினியருரை.

உ௧0எ. "வேத்தியல் ............நங்கை" ... உ : ௧அ - ௩௧.

### திருக்குறள், பரிமேலழகருரை.

௫ச௩. "மாதவர் நோன்பு............தங்கா" உஉ : உ0அ - ௧, ௫ - ம்.

௧0ச௩. "குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்" ... ௧௯ : எ௬.

### தொல்காப்பியம், இளம்பூரணருரை.

சூத்திர எண்.

(எழுத்ததிகாரம்.)

௧௫ச "எட்டிப்பூ" ... ... ... ... உஉ : ௧௧௩.

(பொருளதிகாரம்.)

உவம. ௧. "பாசடைப்......காணாய்" ... ச : அ - ௧௩.

செய். எ. "பேதைமை......தெளிதல்" ... ௩0 : ௫௧ - ச.

### தொல்காப்பியம், நச்சினார்க்கினியருரை.

(எழுத்ததிகாரம்.)

௧௫ச. "எட்டிப்பூ" ... உஉ : ௧௧௩.

,, "எட்டி குமர னிருந்தோன் றன்னை" ... ச : ௫அ.

(சொல்லதிகாரம்.)

௫எ. "ஐம்பெருங் குழுவு மெண்பே ராயமும்" ... ௧:௧எ, உ௬:௩அ.

(சொல்லதிகாரம், வேறுரை.)

ச௬. "கலைப்புற வல்குல் கழுகு குடைந்துண்டு" ... ௬ : ௧௧உ.

சச௧. "குருகு......மணிக்காஞ்சி" ... ௧அ : ௫௫ - ௬.

### நன்னூல், சங்கரநமச்சிவாயருரை.

௧௬௫. "எட்டிப்பூ" ... உஉ : ௧௧௩.

௧அச. "சுருப்புநாண்" ... ௧அ : ௧0௫.

,, "கருப்புவில்" ... ௧அ : ௧0௫.

௩ச௧. "மாமறை மாக்கள் வருகுலங் கேண்மோ" ... ௧௩ : ௬௩.

,, "முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ" ௧௩ : ௫௬.

### நன்னூல், மயிலைநாதருரை.

உ௩அ. "வேணவா" ... பதி. ௧அ.

### நீலகேசி, சமயதிவாகரவாமனமுனிவருரை.

செய்யுள் எண்.

மொக்கல. ௧௬௦. "இத்திறம் ..தோன்றுவர்" ... உச : ௧௩உ - ச.

,, ,, "சீலந்தாங்கி...பிரமருமாகி" ... உச : ௧௩எ - ௧.

புத்தவாத. ௨அ, ௬௫. " தீவினை ...பிரமருமாகி " { ௨௪ : ௧௨௩ - ௩௧ ; ௩௦ : ௬௬ - அ௦.

மேற்கூறிய உரையாசிரியர்களுட் சிலரும் பிறரும் மணிமேகலையின் மூலவாக்கியங்களையே தமது உரைநடையாகவும் தழுவியெழுதிப் பாராட்டியிருக்கின்றனர்:—

## பரிமேலழகர்.

குறள், ௨௦ - ஆம் அதிகாரத்தின் அவதாரிகை - 'பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல்லென வாக்கின்கண் நிகழும்பாவம் நான்கனுள்' : மணிமேகலை, ௨௪ : ௧௨௭-அ, ௩௦: ௬அ-௯ - " பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில், சொல்லெனச் சொல்லிற் றோற்றுவ நான்கும்."

௨௦அ-ஆம் திருக்குறளின் விசேடவுரை-'தன் காலம் வருந்துணையும் புலனாகாது உயிரைப்பற்றிநின்று அது வந்துழி உருப்பதாய தீவினை' : மணிமேகலை, ௨௬ : ௩௨ - " உம்மை வினைவந் துருத்தலொழியாது"

௩௬௨ - ஆம் திருக்குறளின் விசேடவுரை - 'பிறப்புப் பிணி மூப்பு இறப்புக்களாற் றுன்பமுற்று' ; ௩௭௦-ஆம் திருக்குறளின் விசேடவுரை- 'பிறப்புப் பிணிமூப்பு இறப்புக்கள்': மணி ௩௦ : ௧௫ - ௧௦௩ - " பிறப்பெனப் படுவதக் கருமப் பெற்றியி, னுறப்புண ருள்ளஞ் சார்பொடு கதிகளிற், காரண காரிய வுருக்களிற் றோன்றல், பிணியெனப் படுவது சார்பிற் பிறிதா, யியற்கையிற் றிரிந்துடம் பிடும்பை புரிதல், மூப்பென மொழிவ தந்தத் தளவுந், தாக்குநிலை யாமையிற் றூந்தளர்ந் திடுதல், சாக்கா டென்ப தருவுருத் தன்மை, யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல்" ; மணி. ௩௦ : ௧௧௫ - அ - " தோற்றஞ் சார்பின் மூப்புப்பிணி சாக்கா, டவல மரற்றுக் கவலைகை யாறெனத், தவவிறுன்பந் தலைவருமென்ப" ; மணி. ௩௦ : ௧௩௦ - ௩௨ - " பிறப்பு மீளும் பிறப்புப்பிணி மூப்புச், சாக்காடவல மரற்றுக் கவலை, கையா றென்றிக் கடையி றுன்பம்" ; மணி. ௩௦ : ௧௪௫ - ௬ - " நான்காங் கண்டம் பிறப்பே பிணியே, மூப்பே சாவென மொழிந்திடு துன்பம்" ; மணி. ௩௦: ௧௬௭ - அ - "பிறப்பே பிணியே மூப்பே சாவே, யவல மரற்றுக் கவலைகை யாறுகள்"

## அடியார்க்கு நல்லார்.

சிலப். ௧ : ௨௭. 'தீது - பிறர்நெஞ்சு புகுதல்' : மணி. ௨௨ : ௪௬ - "பெண்டி ராயிற் பிறர் நெஞ்சுபுகார் "

சிலப். ௧௫ : ௯ - ௧௦. " பசியும் பிணியும் பகையும் " மணி. ௧ : ௭௦.

## தெய்வச்சிலையார்.

தொல். சொல். சூ. ௧௩. 'செப்பு நான்குவகைப்படும்; துணிந்து கூறலாவது தோன்றியது கெடுமோ என்றவழிக் கெடுமென்றல்.........வாய்வாளாமையாவது ஆகாயப்பூ நன்றோ தீதோ என்றார்க் குரையாடாமை' : மணி. ௩௦ : ௨௩௫ - ௪௧.

## வேறு உரையாசிரியர்.

ஷை ஷை சூ. ௧௫. 'கும்மாயத்திற்குப்பயறு' : மணி. ௨௭ : ௧அ௫.

## நச்சினார்க்கினியர்.

சீவக. ௧௬௨௫. 'மணிமேகலையிற்கூறிய கலைகள்' மணி. ௨: ௧அ-௩௧.

## மயிலைநாதர்.

நன். சூ. ௨௯௯. 'பயற்றதுகும்மாயம்' ; மணி. ௨௭ : ௧அ௫.

### மணிமேகலையில் வந்துள்ள

# வேறுகதைகள்.

அடி எண். **பதிகம்.**

க - அ. சம்புத்தீவத்தெய்வமாகிய சம்புவென்பவள், பூமிதேவிக்கு அரக்கரால் வரும் துயரத்தைப் போக்குதற்கு நாவல்மரத்தின்கீழேநின்று தவஞ்செய்தது.

கo - கஉ. காந்தனென்னுஞ் சோழனொருவனுடைய வேண்டுகோளால், அகத்தியமுனிவர், தமது கமண்டலத்திருந்த காவிரியைப் பெருகச்செய்தது.

உசு - ஙக. சம்பாபதி, புகார்நகரத்திற்குக் காவிரிப்பூம்பட்டினமென்று பெயரளித்தது.

**க - ஆவது காதை.**

க - கூ. அகத்தியமுனிவர் கட்டளையின்படி, தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியனென்னுஞ் சோழனொருவன், காவிரிப்பூம் பட்டினத்தில்இந்திரனுக்கு விழாச்செய்தது.

**உ - ஆவது காதை.**

சக - ருரு. கண்ணகி மதுரையம்பதியை அழித்தது.

**ங - ஆவது காதை.**

ருங - ச. சூரியனுடையகிரணத்தாற் சிறையிழந்த சம்பாதி காவிரிப்பூம்பட்டினத்தைச்சார்ந்த ஒருவனத்தில் இருந்தமையால் அவ்வனம், சம்பாதிவனமென்று பெயர்பெற்றதென்பது.

ருரு - கூ. காவிரியின் தந்தையாகிய கவேரமுனிவர் இருந்தமையால், காவிரிப்பூம்பட்டினத்தைச்சார்ந்த ஒருவனம், கவேரவனமென்று பெயர்பெற்றதென்பது.

கஉங - ச. பிரத்தியும்னன் பேடிக்கோலம்பூண்டுவாணாசுரனுடையநகரவீதியிற்சென்று ஆடியது.

கசகூ - எ. அருச்சுனன் பேடிவடிவங்கொண்டு விராடநகரஞ்சென்றது.

**ச - ஆவது காதை.**

கoஎ - அ. கரிகாற்பெருவளத்தான் முதுமைவேடம்பூண்டு வழக்குத்தீர்த்தது.

**கக - ஆவது காதை.**

அங - கூக. வறட்காலமொன்றில் உணவுகிடையாமையால் கௌசிகமுனிவர் நாயூனைக்கவர்ந்து தின்னத்தொடங்கியபொழுது இந்திரன்கட்டளையால் மழைபெய்ததென்பது.

**கங - ஆவது காதை.**

கூங. அசலமுனிவர் பசுவின் புதல்வரென்பது.

ஷை சிருங்கிமுனிவர் சமீகமுனிவருக்குப் பசுவினிடம் பிறந்தவரென்பது.

கூச. விரிஞ்சிமுனிவர் புலியின் புதல்வரென்பது.

கூரு. கேசகம்பளரென்பவர் நரியின் புதல்வரென்பது.

௬௪ - ௬. முனிவரிருவர் பிரமதேவருடைய முன்னிலையில் தெய்வ கணிகை யொருத்திபால் தோன்றினரென்பது.

## ௧௫ - ஆவது காதை.

௯௧ - ௬. பிரச்சோதனனாற் சிறைவைக்கப்பட்ட உதயணனைச் சிறை மீட்டற்கு யூகியென்பவன் வேறுவடிவங்கொண்டு சென்றது.

## ௧௭ - ஆவது காதை.

௯ - ௧௨. அணைகட்டுதற்பொருட்டு வானரங்கள் மலைகளைக்கொணர்ந்து கடலிற் போகட்டது.

## ௧௮ - ஆவது காதை.

௯0 - ௯௧. அகலிகையை விரும்பிய இந்திரன் கௌதமமுனிவருடைய சாபத்தால் ஆயிரங்கண்பெற்றது.

௯௨ - ௬. அக்கினிதேவன் முனிவரெழுவர்களுடைய மனைவியரை விரும்பியதை அவன்மனைவி அறிந்து, அம்மங்கையர் வேடத்தைத் தனித்தனியே ஒவ்வொருகாலத்துப்பூண்டு, அவன்வேட்கையைத்தணித்தது.

## ௧௯ - ஆவது காதை.

௫௧ - ௨. திருமால் வாமனவடிவங்கொண்டு மாவலிபாலிரந்து பின்பு பேருருவெடுத்து அடியிற் படியை அடக்கியது.

## ௨௨ - ஆவது காதை.

௨௫. பரசுராமர் அரசர்களுடைய பரம்பரையை வேரறுத்தது.

௨௧0. மனுவென்னுஞ் சோழராசன், தன்மகன்மேலே தேர்க்காலைச் செலுத்தி முறைசெய்தது.

## ௨௩ - ஆவது காதை.

௧0௫ - ௧௧. காருகமடந்தையொருத்தியின் வரைவிலொழுக்கத்தால், அவளுடைய மகன் மரணமுற்றது.

௧௧௨ - ௮. வேடனொருவன், அறிவில்லாமல்,சூல்முதிர்ந்தமானொன்றை எய்து, அதன்வயிற்றினின்றும் நழுவிய குட்டியைக்கண்டு உயிர் நீத்தது.

## ௨௪ - ஆவது காதை.

௭ - ௧௬. தேவகணிகையர் நூற்றிருபத்தொருவர் காவிரிப்பூம்பட்டினத்தில் மானிடக்கணிகையர்மரபில் முன்பு பிறந்தார்களென்பது.

## ௨௬ - ஆவது காதை.

௧௫ - ௩௧. கற்பின்மிக்க நீலியென்பவளுடைய சாபத்தால், கோவலன் கொலையுண்டிறந்தானென்பது.

௭௭ - ௯0. சேரன்செங்குட்டுவன், கண்ணகியின் படிமம் சமைத்தற்கு வடநாட்டரசர்களை வென்று இமயமலையிலிருந்து கல் கொணர்ந்தது.

# புத்ததேவனுடைய பெயர்கள்

சூ - சூடாமணிநிகண்டு.
தி - திவாகரம்.
நா - நாமலிங்காநுசாஸநம்.
பி - பிங்கலம்.
ம - மணிமேகலை.
வே - வேறுநூல்கள்.

[இப்பெயர்களுள் ஒருபொருட் பல்பெயராய் வருவனவுமுள.]

அகளங்கமூர்த்தி, சூ.
அகளங்கன், தி.
அண்ணல், சூ. தி.
அத்வயவாதி, நா.
அநந்தலோசனன், தி.
அர்க்கபந்து, நா.
அரசுநிழலிருந்தோன், சூ.
அருங்கலைநாயகன், தி.
அருணெறிகாக்குஞ்செல்வன், தி.
அருளறம்பூண்டோன், ம.
அறத்தகைமுதல்வன், ம.
அறம்பகர்ந்தகோன், வே.
அறவாழியாள்வோன், ம.
அறவியங்கிழவோன், ம.
அறவோன், ம.
அறிவன், பி.
ஆதி, சூ. தி.
ஆதிதேவன், சூ.
ஆதிபுங்கவன், பி.
ஆதிமுதல்வன், ம.
ஆதிமுனிவன், ம.
ஆரியன், ம.
இயல்குணன், ம.
உரகர்துயரமொழிப்போன், ம.
உலோகஜித், நா.
எண்ணில்கண்ணுடையோன், சூ.
எண்பிறக்கொழியவிருந்தோன், ம.
ஏகதேவன், தி. ம.
ஒருவன், ம.
கண்பிறர்க்களிக்குங்கண்ணோன், [ம.
கந்தன், வே.
கலைகட்கெல்லாம்நாதன், சூ.
காமற்கடந்தோன், ம.
கௌதமன், நா.
சாக்கியமுனி, நா.
சாக்கியன், சூ.
சாக்கியஸிம்ஹமன், நா.
சாந்தன், சூ. தி. பி.
சாஸ்தா, நா.
சினந் தவிர்ந்தோன், சூ.
சினன், சூ. தி. பி.
சினேந்திரன், ம.
செல்வன், சூ.
சைனன், சூ. தி.
சௌத்தோதனி, நா.
தசபலன், நா.
ததாகதன், சூ. நா.
தயாவீரன், ம.
தர்மராஜன், சூ. நா.
தருமதலைவன், ம.
தருமன், பி.
தன்னுயிர்க்கிரங்கான், ம.
தீநெறிக்கடும்பகைகடந்தோன், ம.
தீமொழிக்கடைத்தசெவியோன், ம
துறக்கம்வேண்டாத்தொல்லோன், [ம.
நரகர்துயர்கெடநடப்போன், ம.
நல்லறம்பகர்ந்தோன், வே.
நற்றவமூர்த்தி, தி.
நாதன், ம.
பகவன், சூ. தி. பி. ம.
பகவான், நா.
பஞ்சதாரைவிட்டவுணர்க்கூட்டிய
பெருமான், சூ. தி.
பரதுக்கதுக்கன், வே.
பார், வே.
பார்மிசைநடந்தோன், பி.
பாரின்மிசையோன், தி.
பிடகன், பி.
பிணிப்பறுமாதவன், ம.
பிறர்க்கறமருளும்பெரியோன், ம.

பிறர்க்கறமுயலும்பெரியோன், ம.
பிறர்க்குரியாளன், ம.
பிறவிப்பிணிமருத்துவன், ம.
புங்கவன், தி.
புண்ணியமுதல்வன், சூ. தி.
புண்ணியமூர்த்தி, சூ. தி.
புத்தஞாயிறு, ம.
புத்தன், தி. நா.
புலவன், ம.
புனிதன், தி. பி.
பூமிசைநடந்தோன், சூ. நா.
பெரியவன், ம.
பெருந்தவமுனிவன், ம.
பெருமகன், ம.
பேரறிவாளன், ம.
பொதுவறிவிகழ்ந்து புலமுறுமாத[வன், ம.
போதித்தலைவன், ம.
போதிநாதன், ம.
போதிப்பகவன், ம.
போதிமாதவன், ம.
போதிமூலத்துநாதன், ம.
போதியுரவோன், ம.
போதிவேந்தன், தி. பி. வே.
பௌத்தன், வே.
மன்னுயிர்முதல்வன், ம.
மாயாதேவீசுதன், சூ. நா.
மாரனைவென்றவீரன், ம.
மாரஜித், நா.
மிக்கோன், ம.
முக்குற்றங்கடிந்தோன், தி.
முக்குற்றமில்லோன், தி.
முத்தன், தி.
முழுதுமுணர்ந்தோன், ம.
முற்றவுணர்ந்தமுதல்வன், ம.
முன்னவன், ம.
முனி, நா.
முனீந்திரன், சூ. நா.
முனைவன், பி.
வரதன், வே.
வரன், சூ. தி. பி.
வாமன், சூ. தி. பி. ம.
வாய்மொழிசிறந்தநாவோன், ம
விநாயகன், சூ. நா.
ஜினன், நா.
ஸ்ரீகனன், நா.
ஷடபிஜ்ஞன், நா.
ஸர்மார்க்கநாதன், வே.
ஸமந்தபத்ரன், நா.
ஸர்வஜ்ஞன், நா.
ஸர்வார்த்தஸித்தன், நா.
ஸித்தார்த்தன், வே.
ஸுகதன், நா. ம.

இன்னும் பலவுள.



## மறுப்புக்கள்.

புத்தர், பரதுக்க துக்கியாகிப் பிறர்க்கே உறுதிக்குழந்தாராயி னும், ஈசனுண்டென்றுவது ஆன்மாக்களுண்டென்றுவது யாதொ ன்றும் விளங்கக்கூறுமையாற் பெரியோர்கள், அவருடைய கொள் கைகளை எடுத்தெடுத்துக்கூறிப் பலவகையாக மறுத்து உரைப்பா ராயினர்; அம்மறுப்புக்களுட் சில வருமாறு:—

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர்
அருளிச்செய்த

## தேவாரங்கள்.

திருச்சிற்றம்பலம்.

கோயில்.

பட்டைத் துவராடைப் படிமங் கொண்டாடு
முட்டைக் கட்டுரை மொழிவ கேளாதே
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
நட்டப் பெருமானை நாளுந் தொழுவோமே.

வெற்றரையுழல்வார்துவராடையவேடத்தாரவர்கள்ளுரைகொள்ளன்மின்
மற்றவருலகின்னவலம்மவைமாற்றகில்லார்
கற்றவர்தொழுதேத்துசிற்றம்பலங்காதலாற்கழற்சேவடிகைதொழ
வுற்றவருலகின்னுறுதிகொளவல்லவரே.

திருநெல்வாயில்.

குண்ட மண்டுவர்க் கூறை மூடர்சொற்
பண்ட மாகவை யாத பண்பினர்
விண்ட யங்குநெல் வாயிலார் நஞ்சை
யுண்ட கண்டரெம் முச்சி யாரே.

திருக்கழிப்பாலை.

செய்ய நுண்டுவ ராடையி னுரொடு
மெய்யின் மாசு பிறக்கிய வீறிலாக்
கையர் கேண்மைய ஞெகழிப் பாலையெம்
மையன் சேவடி யேயடைந் துய்ம்மினே.

திருமகேந்திரப்பள்ளி.

உடைதுறந் தவர்களு முடைதுவ ருடையரும்
படுபழி யுடையவர் பகர்வன விடுமினீர்
மடைவளர் வயலணி மகேந்திரப் பள்ளியு
ளிடமுடை யீசனை யிணையடி பணிமினே.

திருவெண்காடு.

போதியர்கள் பிண்டியர்கண் மிண்டுமொழி பொருளென்னும்
பேதையர்க ளவர்ப்பிரிமி னறிவுடையீ ரிதுகேண்மின்
வேதியர்கள் விரும்பியசீர் வியன்றிருவெண் காட்டானென்
றோதியவர் யாதுமொரு தீதிலரென் றுணருமினே.

திருவையாறு.

குண்டாடு குற்றுடுக்கைச் சமணரொடு சாக்கியருங் குணமொன் றில்லா
மிண்டாடு மிண்டருரை கேளாதே யாளாமின் மேவித் தொண்டீர்
எண்டோளர் முக்கண்ண ரெம்மீச ரிறைவரினி தமருங் கோயில்
செண்டாடு புனற்பொன்னி செழுமணிகள் வந்தலைக்குந் திருவையாறே.

---

திருவாசகம்.

[திருத்தோணோக்கம்.]

புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயந்
தத்த மதங்களிற் றட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கு
மத்தன் கருணையினாற் றோணோக்க மாடாமோ.

திருச்சிற்றம்பலம்.

---

திவ்யப்ரபந்தம்.

முதலாயிரம்—திருமாலை, எ.

புலையற மாகி நின்ற புத்தொடு சமண மெல்லாங்
கலையறக் கற்ற மாந்தர் காண்பரோ கேட்ப ரோதான்
தலையறுப் புண்டுஞ் சாவேன் சத்தியங் காண்மி னையா
சிலையினா லிலங்கை செற்ற தேவனே தேவ னாவான்.

பெரியதிருமொழி—கக - ஆம் பதிகம், ரு.

பொங்குபோதியும்பிண்டியும்முடைப்புத்தர்நோன்பியர்பள்ளியுள்ளுறை
தங்கடேவருந்தாங்களுமேயாகவென்னெஞ்சமென்பாய்
எங்கும்வானவர்தானவர்நிறைந்தேத்தும்வேங்கடம்மேவிநின்றருள்
அங்கணாயகற்கின்றடிமைத்தொழில்பூண்டாயே.



1233
(1240)
T41.100+01
624



# அரும்பத முதலியவற்றின் அகராதி.

சப்தகௌஸ்துபம் - ஒரு வடநூல்; இது பாணினி சூத்திரங்களைப் பின்பற்றிப் பதஞ்சலி மஹாபாஷ்யத்தை விளக்கிப்பட்டோஜி தீக்ஷிதரென்பவராலியற்றப் பட்டதொரு வியாகரண க்ரந்தம், 310.
சபக்கத்தொடர்ச்சி, 351.
சபக்கம், 353.
சபக்கைகதேசவிருத்தி, 356.
சபதம், 189.
சம்பங்கோழி-சண்பென்னும் கோரைகளில் தங்கியிருக்கும் ஒருவகைக் கோழி, 43. [ச்சி, 369.
சம்பந்தம்-காரணகாரியத் தொடர்
சம்பவவளவை, 304, 307.
சம்பவித்தது, 260, 305.
சம்பாதி-சடாயுவினுடன் பிறந்தவன், 31, 198. [இடம், 31.
சம்பாதிபுரம் - சம்பாதி பூசித்த
சம்பாதிவனம் - காவிரிப்பூம்பட்டினத்தைச்சார்ந்துள்ள ஒரு சோலை; மேலே பறந்து சென்றபொழுது சூரிய கிரணத்தாற் சிறையிழந்து விழுந்த சம்பாதியென்னும் பறவை இருந்தற்கிடமானதுபற்றி இப்பெயர் பெற்றது, [31.
சம்பாநகரம் - சண்பை, 93.
சம்பாபதி-சம்புத்தீவத்தின் அதிதேவதை; இஃது இவளுக்கு இயற்பெயர்; சம்புமரத்தின் கீழிருந்து நோற்றமையின் இவள் சம்புவெனவும் பெயர் பெறுவாள்; சிவந்த நிறமும் சடையுமுடையவள்; இவளிருந்தமைபற்றி ஆதிகாலத்தே சம்பாபதியென்று பெயர் பெற்றிருந்த நகரம், காவேரி நதியின் சம்பந்தத்தாற் பின்பு காவிரிப்பூம்பட்டினமென்று பெயர்பெற்றது; புத்திரசோகமுற்ற கோதமைக்கு இந்தச் சக்கரவாளத்துள்ள எல்லாத் தேவர்களையும் வருவித்துக் காட்டி அச்சோகத்தை மாற்றி அவளைத்தேற்றுவித்தவள்; இவளுடைய கோயில் குச்சரக்குடிகையென்று கூறப்படும்; அருந்தவமுதியோள், கன்னி, குச்சரக்குடிகைக்குமரி, சம்பு, சம்புத்தீவக் காவற்றெய்வம், சம்புத்தீவத்தெய்வம், தொன்மூதாட்டி, பொன்னிறப்பொலிந்த நிறத்தாள், முந்தை முதல்வி, முதியாள், முதுமூதாட்டியென இந்நூலில் இவள் வழங்கப்படுவாள், 2-3, 19, 78-9, 81-2, 92, 184, 198, 201-3, 205, 227, 237, 240-41, 274.
சம்பாபதி கோயில் - இது சாயாவனத்தின் கோயிலின் தென்பக்கத்திலுள்ளது; சம்பாபதியம்மன் கோயிலென்று வழங்கப்படுகின்றது; ஸந்நிதி வடக்கு முகம்; பிடாரி கோயிலென்று இக்காலத்தவர் சொல்கிறார்கள், [199.
சம்பிரதாயம், 155.
சம்பு - சம்பாபதி யென்னுந் தெய்வம், நாவன் மரம், 1-2.
சம்புத்தீவக்காவற்றெய்வம், 19.
சம்புத்தீவு - நான்கு மகாதீவினுள் ஒன்று; இது நாவலந்தீவெனவும் வழங்கப்படும், 1, 19, 83, 103, 130, 164, 183, 212.
சம்புமரம், 181.
சம்பை, 29. [வனை, 388.
சமசித்தத்துவம் - உபேக்ஷாபா
சமணமதத்தின்பாகுபாடு இரண்டு- ஆசீவகம் நிகண்டமென்பன, 311. [ணர், 110, 268.
சமணரில் இருத்திபெற்றோர்-சார
சமணீர்காள் - சமணர்களே, 58.
சமதண்டம் - ஓரூர்; இதில் ஆசீவக மதம் பரவியிருந்ததாக நீலகேசி ஸமயதிவாகரத்தால் தெரிகிறது, 311.
சமந்தகூடம் - இலங்கைத்தீவிலுள்ள ஒருமலை; சமனொளியென்றும் சமந்தமென்றும் பெயர்